உ

சிவமயம்.

சைவசமயசிரோமணியாகிய

வரதுங்கராமபாண்டியர்

அருளிச்செய்த

# பிரமோத்தரகாண்டம்.

---

இதற்கு

ஸ்ரீசந்திரசேகரகவிராசபண்டிதர்

அவர்களாலியற்றிய

பொழிப்புரையுடன்

ஷையார் குமாரர்

திருத்தணிகைமுதலியாரால்

பலர்வேண்டுகோளின்படி

சென்னை.

இந்து தியலாஜிகல் யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1897

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# பிரமோத்தரகாண்டம்.

## பாயிரம்.



### கடவுள் வாழ்த்து.

**விநாயகர்துதி.**

*நல்லசொற்பொருணானநடாத்தவும்*
*எல்லைகாணரும்பேரின்பமெய்தவும்*
*வெல்லுமானைமுகத்தினைமேவிவாழ்*
*வல்லபைக்குரியானைவழுத்துவாம்.*

### இதன்பொழிப்புரை.

சொன்னயமும் பொருணயமுங்கொண்டு சோர்வின்றி விற்பன்ன முறவும், இவ்வளவென்று எல்லைகாணுதற் கருமையாகிய பேரின்பத்தையடையவும், வெற்றிகொள்ளும் யானைமுகத்தைப் பொருந்தி சிறப்புறும், வல்லபையென்னுஞ் சத்திக்குரியானைத் துதிசெய்வாம். எ - று.

கவிசெய்யவும் எழுதவும் சொல்லலங்காரமும் பொருளலங்காரமும் பொருந்தக்கொண்டாலல்லது சோபிக்காதென்பதை யுணர்த்துதற்பொருட்டே, **சொற்பொருள்** என்பதற்கு **நல்ல** வென்னுமடை கொடுத்துக்கூறினர்.

சிற்றின்பம் பேரின்பமென இன்பமிருவகைத்ததாய், அனுபவத்திற்கு சமமாகத்தானே நின்றதானாலும், முன்னது அளவினைப்பெற்று மதிக்கக்கூடிய நிலையினின்றும், பின்னது எல்லைகாணுதற்கு மிவ்வளவென்று மனத்தினாலுமறிதற்குங் கூடாததாய் ஒருதரமிதனையடையின் காந்தயத்தின் தன்மைபோலும் அதற்கப்பால் தீபமுண்ட நெய்யைப்போலும் நேர, இடைவிடாது சுகித்தற்கிடனாயுற்றதாகலின் ஆசிரியரிதனை "எல்லைகாணரும் பேரின்பம்" என்றனர்.

கயமுகாசுரனை வென்றவராகலின் "வெல்லுமானைமுகத்தினை" என்றனர்.

"சிவமெனும்பொருளுமாதிசத்தியொடுசேரினெத்தொழிலும்வல்லதாம்" என்றபடி சத்தியோடுகூடிய முகூர்த்தத்திற்கே சகலத்தையும் நடாத்தும் வல்லமையுண்டாமென்பதுதோன்ற **வல்லபைக்குரியானை** என்றனர்.

நூலைச்செய்யுமொவ்வொருகவியும் அந்நூலின் முகப்பிற்றானே கடவுள் வாழ்த்துக் கூறுதன்முறையாம். இதற்கு ஏற்படுகடவுளையாவது வழிபடுகடவுளையாவது கொள்ளலாம். இங்கு நூலாசிரியர் சைவராதலானும் நூலுமப்படியே யாகலானும் இவருக்குவழிபடுகடவுளு மேற்படு கடவுருமாகிய விநாயகனைக் கொண்டனர்.

## நடேசர்துதி.

வேறு.

பூமேவுசதுமுகனுந்திருமாலும்போற்றிசெய்யத்
தேமேவுகுழலுமையாள்செழுங்குவளைவிழிகளிப்ப
மாமேவுமிதழிநறுமமைதுளிப்பமணிமன்றந்
தாமேவிநடம்புரியுந்தனிப்பொருளைவணங்குவாம்.

(இ-பொ.) தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரமதேவனும் திருமாலும் போற்றிசெய்யவும், இயற்கையாகவே வாசனையுள்ள அளகபாரத்தையுடைய சிவகாமித்தாயாருடைய வளமையுள்ள நீலோற்பலமலர்போன்ற திருக்கண்கள் களிப்படையவும், அழகுபொருந்திய கொன்றைப்பூமாலையானது தேன்மழையைத் துளிக்கவும் சிற்சபையைவிரும்பி நடனஞ்செய்கின்ற ஒப்பில்லாத மெய்ப்பொருளாகிய நடேசமூர்த்தியை யாம் வணங்குவாம். எ - று.

"பூவெனப்படுவது பொறிவாழ்பூவே" என்பதனால் இங்கு பூவென்றது தாமரைப்பூவை. காதளவும்நீண்டு விசாலித்துசெவ்வரிபரந்த கண்களாதலின் "செழுங்குவளைவிழி" என்றனர். அன்றலர்ந்த புட்பத்தாலாயமாலையாதலின் "நறுமமைதுளிப்ப" என்றனர். நவரத்தினகசித சோபிதாலங்காரமுடைய சபாமண்டபமாதலின் "மணிமன்றம்" என்றனர். முதலீறில்லாது ஒப்புவமையில்லாமையால் "தனிப் பொருள்" என்றனர். இந்நூலின் பயன் தமக்கேயன்றி யுலகத்துற்றாரியாவர்க்கும் பயன் படவேண்டுமென்ற எண்ணங்கொண்டவராகலின் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைவினையாகிய "வணங்குவாம்" என்பதால் முடித்தனர். (௩)

## சிவகாமித்தாயார்துதி.

வேறு.

பூரணியைத்தனுகரணபுவனபோகங்கடமைப்புரக்குமாயா
காரணியைப்பசுபாசமலமகலமெய்ஞ்ஞானக்கண்ணிற்றோன்றும்
ஆரணியைப்பரமசிவனனந்தநடத்தினைவைத்தவருட்கண்ணைச்
சீரணிகொள்பொழிற்றில்லைச்சிவகாமசுந்தரியைச்சிந்தைசெய்வாம்.

(இ-புரை.) எல்லாவுயிர்களிடத்தும் நிறைந்திருப்பவரும், தநுகரண புவன போகங்களை ஆன்மகோடிகளுக்குத்தந்து முறைதவறாமல் காத்துக்கொண்டிருக்கிற மாயைக்கு அதிஷ்டானமாயிருப்பவரும், பக்குவப்பட்டுள்ள ஆத்துமாக்களுடைய ஆணவமலம் நீங்கினவிடத்துவிளங்குகின்ற மெய்ஞ்ஞானப்பார்வைக்குத் தரிசனமாகின்ற வேதங்களால் துதிக்கப்பட்ட பரமசிவன் நிருத்தஞ்செய்கின்ற ஆனந்தநடனத்தை இடைவிடாது பார்த்துக்கொண்டிருக்கும் கிருபாநோக்கத்தையுடையவருமாகிய சிறப்பினையும் அழகினையும் பொருந்திய சோலைசூழ்ந்த தில்லைவனமென்னும் திவ்வியக்ஷேத்திரத்தில வீற்றிருக்கும் சிவகாமிந்தாயாரை யெப்போதும் யாம் தியானிப்பாம். எ - று.

தநு - சரீரம். கரணம் - தத்துவங்கள். புவனம் - உ௨௪. போகம் - போகங்கள். பசு - ஆன்மா. பாசம் - ஆணவமலமாம். எனவே - ஆன்மாக்களுக்குச் சரீரத்தைக் கொடுத்துப புவனங்களிற் பிறப்பித்துப் போகங்களை அனுபவிக்கச் செய்வது மாயையென்றும், அந்த மாயையைத் தொழில்படுத்துவது பராசத்தியென்றுஞ்சொல்லப்படும். யோகிகளாலும் ஞானிகளாலும் மனக்கண்ணால் நோக்குதற்குரிய பூரணம் என்னும் ஸ்தானத்திலே பொருந்தி வாழ்பவளாதலின் "பூரணியை" என்றனர். மாயைக்கு முற்பட்டு பராசத்தியென்னும்பெயரோடு விளங்குபவளாதலின் "மாயாகாரணி" என்றனர். ஆரணியை யென்பதற்கு வேதரூபியை என்றும் பொருள்கொள்ளலாம். மனத்தின்கண் அகலாது தியானிப்பதுதோன்ற "சிந்தைசெய்வாம்" என்றனர். (௨)

## கணபதிதுதி.

### வேறு.

பிஞ்சுமதிச்சடாமகுடப் பெருமானைப்பிரியாத,
வஞ்சியிமவான்றவத்தின்வருபேடைமயிலுதவும்
அஞ்சிறைவண்டினைத்துவிழுமருவிமதமொழுகுகவுட்
குஞ்சரவெம்புகர்முகத்துக் குரிசிலடியிணைதொழுவாம்.

(இ-புரை.) இளந் திங்களையணிந்த சடாமகுடத்தையுடைய பரமசிவனை விட்டு நீங்காத பூங்கொடிபோன்ற திருமேனியையுடையவரும், மலையரையன் தவத்தினால் அவனுக்குப் புத்திரியாகத் திருவவதாரஞ்செய்த மயிற்பேடை போன்றவருமாகிய பார்வதியார் அருளும் புத்திரராகிய அழகியசிறகுகளையுடைய வண்டுகள் இசைபாடிக்கொண்டு உண்ணுதற்காக ஒன்றின்மேலொன்றாக விழுகின்ற மதநீர் மலையருவிபோலொழுகும்படியான கவுட்குழியையுடையதாய்ப் புகர்நிறந்தங்கிய வெவ்விய யானைமுகத்தையுடைய கணபதியின் இரண்டு திருவடிகளையும் யாம்தொழுவோம். எ - று.

முதலில் விநாயகரைத்துதிசெய்து மறுபடியும் அவரைத் துதிசெய்வதற்குக் காரணமென்னவென்றால்:—விநாயகர்திருவவதாரமானபோது, அவருக்குப் பரம

சிவன் கணங்களுக்கெல்லாம் பதியாயிருக்குஞ் சிறப்டருளித் தேவர்கள்முதலாகிய எவர்களேயாஞலும் ஆரம்பத்தில் உன்னைத்துதிசெய்து பின்பு ஒருகருமஞ்செய்யத்தொடங்குவார்களாஞல் அக்கருமம் இடையூறின்றி முற்றுப்பெறுமென்று வரமருளிச்செய்த நாள்முதல் ஆரம்பத்தில் விநாயகரைத்துதிசெய்து ஒருகருமஞ் செய்யத் தொடங்குவது சைவசமயத்தில் நியதியாகவருகின்றதாதலால், இந்நூலாசிரியரும் தாம்செய்யத்தொடங்குநூ லிடையூறின்றி யினிதுமுடியும் பொருட்டு ஆரம்பத்தில் விநாயகரைத்துதிசெய்து, தந்தை - தாய்-மக்கள் - என்னு முறைமைபற்றிச்-சிவம்-சத்தி-இருவரையுந்துதிசெய்து பின்னும் விநாயகரைத் துதிசெய்தனர். இதுவே காரணமென்றறிக.

இளஞ்சந்திரன் என்பது தோன்ற "பிஞ்சுமதி" என்றனர். மயில்போலுஞ் சாயலையுடையராகலின் பார்வதிதேவியாரை "பேடைமயில்" என்றனர். புள்ளிகளையுடைய முகமென்பதுதோன்ற "புகர்முகம்" என்றனர்.

மும்மதத்தினுஞ் சிறந்த கன்னமதம் அத்திமுகத்திற் குரித்தாகலானும் அதை விநாயகமூர்த்தி சிறந்ததாகக் கொண்டதனுலும் அம்மதம் அமிர்தத்தினும் சிறந்ததாக அறுகாற்பறவைக ளிசைபாடிக்கொண்டு விழவாரம்பித்தன. அம்மதமிடைவிடாது பொழிவதுதோன்ற "அருவிமதம்" என்றனர். (௬)

சுப்பிரமணியர்துதி.

வேறு.

இறுதியெனத்தகுவியர்போய்க்கைமையெய்தவயிராணியின்பமெய்தப்
பிறைகளொருநான்கனையதிறன்மருப்புவெள்ளானைப்பிடரினேறி
மறுகுதொறும்பொன்னுலகின்வானவர்கோன்பவனிவரச்சூரன்மாயச்
சிறிதுகடைக்கண்சிவந்தசேவகன்கிங்கிணிச்சரணஞ்சென்னிவைப்பாம்.

(இ-புரை.) அசுரர்சக்கதியென்ப திந்தமட்டில் அழிந்துபோயதென்றுசொல்லும்படி அந்த அசுர மாதர்களெல்லாம் கைம்பெண்களாகவும், இந்திராணி முதலாகிய தேவஸ்திரீகள் சந்தோஷத்தையடையவும், நான்குபிறைகளிருந்து அவைகளையொன்ருக வைத்ததுபோலிராநின்ற வன்மைபொருந்திய தந்தங்களையுடைய வெள்ளையானையாகிய ஐராவதத்தின் பிடரியின்மேல் ஆரோகணித்துக் கொண்டு பொன்னுலகத்தின் வீதிகள்தோறும் தேவேந்திரன் பவனிவரவும், சூரபன்மன் இறந்துபோகும்படி நேத்திரங்களினிடமாகக் கோபக்குறியைச் சிறிது காட்டிய சுப்பிரமணியருடைய கிங்கிணியணிந்த திருவடிகளை யெமது சிரத்தில் சூட்டிக்கொள்வாம், எ - று.

செம்மையும் கறுப்பும் கோபக்குறியென்று சூத்திரமிருப்பதினுல் "கடைக்கண்சிவந்த" என்பதற்குக் கோபக்குறியெனப் பொருள்கூறப்பட்டது. நான்கு கொம்புகளையுந் தவளநிறத்தையும்பெற்று தேவேந்திரனுக்கு பட்டத்து யானை

யாகவமைந்த இது பாற்கடலி லமிர்தங்கடைந்தபோது ஸ்ரீ இலக்குமி தேவியா ரோடும் உதித்தது. (௪)

திருஞானசம்பந்தசுவாமிகள்துதி

வேறு.

சுழியும்புனற்செஞ்சடையாளர்பங்கிற்றேகைதுணைமுலைக்கண்
வழியுங்கொழும்பாற்கடலுண்டுபாவக்கோடைமலிந்துசுட
ஒழியும்பசும்புல்லெனவுலகமொடுங்காதோங்கத்தண்ணளியாற்
பொழியுங்கவிதைக்காளிமுகில்பொன்னங்கமலத்தாடொழுவாம்.

(இ-புரை.) சுழிகளைச்சுழிக்கும் நீருருவமாகிய கங்கையையணிந்த செஞ் சடையையுடைய பரமசிவன் இடப்பாகத்தில் வீற்றிருக்கும் மயிற்சாயலையுடைய பார்வதிதேவியாரின் இரண்டுதிருமுலைகளிடத்தினின்றும் பெருகாநின்ற வளமை யுள்ள ஞானப்பாற்கடலையுண்டு, பாவமாகிய கோடைமிகுந்துசுட அக்கோடையி னால் கருகிப்போம் புல்லைப்போல இவ்வுலகமானது நரகத்தில்விழுந்து வெம்பா மல் மோக்ஷத்தையடையும்படி அதிசாந்தமாகிய கிருபையினாலே தேவாரமாகிய மழையைப்பொழிந்த காளமேகமென்று சொல்லத்தக்க சீகாழியிற் றிருவவதாரஞ் செய்தருளிய திருஞானசம்பந்தசுவாமிகளுடைய பொன்னிறமுள்ள திருவடித் தாமரைகளை யாம்தொழுவோம். எ - று.

காளிமுகில் என்பதில் காளி என்று மேகத்தைக் குறிக்கும்போது கருமை நிறமுள்ளதாகவும், திருஞானசம்பந்தசுவாமிகளைக் குறிக்கும்போது காளியென் னும் பெயருள்ள தலமாகவும் பொருள்கொள்ளப்படும். காளிதனென்கிற ஒரு நாகராசனால் பூசிக்கப்பட்ட தலமாதலால் அது சீகாளியெனவோர் பேர்பெற் றுச் சீகாழியென வழங்கப்படுகின்றது. (ரு)

திருநாவுக்கரசுசுவாமிகள்துதி.

வேறு.

ஆரணநன்னிலையறியாச்சாக்கியர்களருங்கற்றூண்
பாரறியமருங்கசைத்துப் படுநீரிற்புகவுந்த
வாரணநல்லுரியானை யேத்திமுநீர் வடதளிரின்
நாரணன்போலினிதமர்ந்த நாவலன்பொற்றாடொழுவாம்.

(இ-புரை.) வேதத்தி னுண்மைப்பொருளையறியாத சமணர்கள் சுமப்பதற் கரிய கற்றூணை இவ்வுலகத்தாரெல்லாருமறியும்படி அரையிற்கட்டிச்சமுத்திரத்தி னுக்குளாழும்படிபோட யானையினதுதோலை நல்லபோர்வையாகப் போர்த்திருக் கும் பரமசிவனைத் துதிசெய்து அந்தக்கற்றூணே தெப்பமாக மிதக்கும்படி (திருப்பாற்கடலில் ஆலிலைத்தளிரிற் பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணுவைப்போல)

மகிழ்ச்சியுடனிருந்து திருப்பாதிரிப்புலியூர்க்கடுத்த கெடிலநதியில் கரையேறிய திருநாவுக்கரசுசுவாமிகளுடைய அழகியதிருவடிகளை யாம்தொழுவாம். எ-று.

ஆழ்ந்த நீர் என்பதுதோன்ற "படுநீர்" என்றது. "முந்நீர்" என்றது கடலை.

### சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி

வேறு.

தாதுநிறைக்கும்பசுந்துளபத்தாமத்தோனுஞ்சரோருகச்செம்
போதினகத்துச்சகமீன்ற புத்தேடானுமறியானை
மாதினிடத்தின் முனிவொழிய வாரூர்ச்செம்பொன் மணிமறுகிற்
றூதுநடத்துங்கவிராசன் றுணைத்தாட்கமலந் தொழுதிடுவாம்.

(இ-புரை.) மகரந்தங்களால் நிறையப்பட்டிருக்கும் பசியதுளபமாலையணிந்த திருமாலும், செந்தாமரைப் பூவிலிருந்துகொண்டு உலகங்களைப்படைக்கும் பிரமதேவனும் அறியக்கூடாத பரமசிவனைப் பரவை நாச்சியார் கொண்டிருந்த வூடல் நீங்கும்படி அவரிடத்திற்குத் திருவாரூரின் செம்பொன்களும் ரத்தினங்களும் நிறைந்துள்ள திருவீதியில் தூதுபோம்படி அனுப்பிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய இரண்டு திருவடித்தாமரைகளையும் யாம் வணங்குவாம். எ-று.

இங்கு "மாது" என்றது பரவைநாச்சியாரை. (எ)

### மாணிக்கவாசகசுவாமிகள் துதி.

வேறு.

சீதவார்பொழிற்றில்லைப்பரமனுக்
கோதுநற்றமிழ்க்கோவையுரைசெய்த
நாதன்மாணிக்கவாசகனுண்மலர்ப்
பாதபங்கயமேத்திப்பரவுவாம்.

(இ-புரை.) குளிர்ச்சிபொருந்தியதாய் வானளவு மோங்கிய சோலை சூழ்ந்த தில்லை யென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் ஆனந்த நிர்த்தனஞ் செய்கின்ற நடேசமூர்த்திக்கு யாவருந் துதிசெய்கின்ற நல்ல தமிழினால் திருக்கோவையாருரைசெய்தநாதனாகிய மாணிக்கவாசகசுவாமிகளுடைய விடியற்காலத்தில் மலர்ந்த தாமரைமலரை யொத்த திருவடிகளை யாந் துதிசெய்து புகழ்வோம். எ-று.

"நாண்மலர்" என்றது அன்றலர்ந்த மலரை. (அ)

### குருவணக்கம்.

வேறு.

தேசான சிவஞானச் செழுஞ்சுடரான் மும்மலமா
மாசான விருளகற்றி மன்னுயிரைப் புரந்தளித்துத்
தூசானை யுரியசைத்தோன் றொல்சமய நிறுத்துநிம்பை
யீசான மாமுனிவ னிணையடியை யிறைஞ்சுவாம்.

(இ-புரை.) சோதிமயமான சிவஞான மென்னுஞ் செழுமையுள்ள சூரியனால் ஆணவம் கன்மம் மாயை என்கின்ற மும்மலமாகிய குற்றமுள்ள அஞ்ஞான இருளை நீக்கி நிலைபெற்ற உயிர்களை ரக்ஷித்து யானைத்தோலைப் போர்வையாகப் போர்த்தருளிய பரமசிவனது பழமையாகிய சைவசமயத்தை நிலை நிறுத்திய பெருமை பொருந்திய நிம்பை ஈசானமுனிவருடைய இரண்டு திருவடிகளையும் யாம் பணிவாம். எ-று.

நிம்பை யென்பது வேப்பத்தூர். தொல்சமய நிலை நிறுத்து மெனவும் பாடம். சிவம் இத்தன்மைய தென்றும், சீவன இத்தன்மைய தென்றும் ஆணவமலம் இத்தன்மையதென்றும் யாவருக்குந் தெரிவித்துச் சைவப்பற் றுண்டாகச் செய்தலால் சைவசமயத்தை நிலை நிறுத்துகின்றவரெனச் சொல்லப்பட்டது. (கூ)

## அவையடக்கம்.

### வேறு.

அஞ்சனமிடற்றிறைய்நின்னிலைமுற்றுமளவிட்டன்றிச்
செஞ்சொலின்வழுத்தொணாதேல்விதியும்வாய்திறக்கொணாதாம்
விஞ்சையரெவருந்தத்தமதியினின்விபுலங்காறும்
வஞ்சமற்றுரைக்கலாமேலடியனும்வழுத்தலாமால்.

(இ-புரை.) காளகண்டத்தையுடைய பரமசிவனே தேவரீருடைய நல்ல நிலைமை முழுவதையும் சாஸ்திரங்களினாராய்ச்சியினால் அளவிட்டறிந்து பாடல்களாற் சொல்லவேண்டுமே யல்லது அளவிட்டறிவதற்குமுன் சொல்லவொண்ணாதே யென்றால் வேதங்களை யெல்லா மோதியுணர்ந்த பிரமனும் தேவரீருடைய நிலைமை முழுவதையுஞ் சொல்லுகிறேனென்று வாயைத்திறக்க வொண்ணாது. ஆனால் அப்படி வேண்டுவதில்லை; புலவர்களெல்லாரும் தங்கள் புத்தியின் விசால மட்டும் வஞ்சகமின்றிச் சொல்லலாமென்றால், அடியேனுந் தெரிந்தமட்டிற் சொல்லலாம் அன்றோ. எ-று. (க0)

தொல்லையமுனிபாற்கேட்டுச்சூதமாமுனிவன்சொன்ன
நல்லமுற்கதைதன்னைநான்றமிழ்வழிநடாத்தல்
கொல்லுலைவயிரவூசிகுருமணிகுழித்தவாயின்
மெல்லியபஞ்சிநூல்போம்விழுத்தகவுடையதம்மா.

(இ-புரை.) பழமையாகிய வியாதமுனிவரிடத்தில் கேட்டுப் பெருமை பொருந்திய சூதமுனிவர் முன்பு சொல்லிய பழைய நல்ல சிவசரித்திரத்தைப் பின்பு நான் தமிழினாற் சொல்லுதல் கொல்லனுலை முகத்தில் செய்யப்பட்ட கூர்மையுள்ள ஊசியினால் துவாரஞ் செய்யப்பட்ட வழியில் மிருதுவாகிய பஞ்சுநூல் நுழைகின்ற மேன்மையையுடையதாயிருக்கின்றது. எ-று.

கொல்ல னுலையிற் செய்யப்பட்ட கூர்மையான ஊசிபுகுந்த துவாரத்தில் மெதுவாகிய நூல் நுழையாதென்பது கருத்து. (கக)

பற்றியவரவம்பாரார்முள்ளெண்ணார்பங்கந்தேரார்
பொற்றுணர்க்கைதைசார்ந்துபொலிவெண்ணிமலர்கொள்வார்போல்
உற்றுணர்வில்லேன்செய்தபனுவலுறூறுதவோரார்
கற்றுணர்மாந்தர்கொள்வர்கடவுடன்சரிதமென்றே.

(இ-புரை.) பாம்பிருக்குமென்று எண்ணாதவர்களாயும், முள்ளுகள் கைகளில் தைக்குமேயென நினையாதவர்களாயும், சேற்றிலிருக்கின்றதே யென்று யோசியாதவர்களாயும், வாசனையின் மிகுதியைக்கருதிப் பொன்னிறமுள்ள கொத்துகளையுடைய செந்தாழையினிடத்துச் சென்று அதன் மலரைப் பறிப்பவர்போல், அறிவில்லாதயான் செய்தபாடலினிடத்துக் குற்றங்களை யெண்ணி நீக்கிவிடாமல் கற்றுணர்ந்த முன்னோர்கள் இது சிவசரிதமென்று மனம் பொருந்தி ஏற்றுக் கொள்வார்கள், எ-று. ஏகாரம் சிறப்புப் பொருள். உறூத - பொருந்தாத - குற்றங்கள். (கஉ)

---

## சிறப்புப்பாயிரம்.

கறங்குதிரைப்பெருங்கடல்சூழவனிபுரந்திகல்கடிந்துகலியைமாற்றி
மறந்திகழவிலங்கிலைவேல்வரதுங்கராமனியன்மதுரைச்சங்கஞ்
சிறந்தவறுகாற்பீடந்தனிற்பிரமோத்திரகாண்டந்தென்சொலாக்கி
யறந்தழைக்குங்கவிஞர்செவிக்காரமுதமாகவரங்கேற்றினனே.

(இ-புரை.) ஒலிக்காநின்ற அலையையுடைய பெரியதாகிய சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தைக்காத்துப் பகைவரைப் போர்முகத்தில்வென்று (பாவங்களை நீக்கி) வீரம்விளங்கப் பிரகாசிக்கும் தகட்டுவடிவாகிய வேலேந்திய வரதுங்கராமபாண்டியமகாராசன் பிரமோத்தரகாண்டத்தைத் தமிழாற்செய்து இயற்றமிழ்பயின்ற மதுரைச்சங்கத்தில் சிறப்புற்றிருக்கும் அறுகாற்பீடத்திருந்து தருமகுணமிகுந்த புலவர்கள் காதுகளுக்குக் கிடைப்பதற்கரிய அமுதம்போல மதுரிக்கும்படி அரங்கேற்றினன், எ-று.

முதற்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கம் என சங்கம் மூன்றும். இவைகளில் சிறந்த அனேக வித்துவான்களெல்லாம் அமைந்துளர். (கங)

## பாயிரமுற்றிற்று.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முதலாவது

# பஞ்சாக்ஷரமகிமையுரைத்த அத்தியாயம்.

வேதபாரகர்முனிவரர்வேள்வியாங்கியற்றப்
போதிறன்முகத்திறையுரைசென்னியிற்புனையாச்
சீதவார்பொழினைமிசாரணியத்தைச்சேர்ந்தாங்
காதிவேள்வியைவிதிமுறையியற்றுவானமைந்தார்.

(இ-ள்.) வேதபாரகராகிய முனிவர்கள் வேள்விசெய்ய விரும்பித் தாமரைப்பூவிலிருக்கும் நான்குமுகங்களையுடைய பிரமதேவனுடைய உத்தாரத்தைச் சிரசில் ஏற்றுக்கொண்டு, நைமிசாரணிய மென்னும் குளிர்ச்சிபொருந்தி மேலுயர்ந்தபொழிலிடத்தைச்சேர்ந்து, அவ்விடத்தில் வேதவிதியாற்சிவயாகமொன்று செய்யத்தொடங்கினார்கள். எ-று. முதலிலிருக்கும் ஆங்கு-அசை. (க)

ஆயகாலையிற்புராணமீரொன்பதுமறைந்த
தூயமாதவச்சூதமாமுனிவந்துதோன்ற
ஏயமாதவர்முனிவனுக்கிருக்கையீந்தெமக்கு
நேயமாகியசிவகதைநிகழ்த்துதியென்றா.

(இ - ள்.) அவர்கள் வேள்விசெய்துகொண் டிருக்கும்போது பதினெண் புராணங்களையும் முனிவர்களுக்கெடுத்துச் சொன்ன பரிசுத்தமானபெருமை பொருந்திய தவமுள்ளசூதமுனிவர்வந்துதோன்ற அவ்விடத்திலிருந்தமுனிவர்கள் அவருக்கு ஆசனங்கொடுத்து வீற்றிருக்கச்செய்து எங்களுக்கு அன்பைவிளைவிப்பதாகிய சிவகதையையருளிச்செய்யுஞ் சுவாமீ யென்றார்கள். எ-று. ஆகிய என்பது ஆய எனவாயிற்று.

பதினெண்புராணங்களாவன:—மச்சியம்-கூர்மம்-வராகம்-வாமனம் - பிரமம்-வைணவம்-பாகவதம்-சைவம்-இலிங்கம்-டௌடிகம்-நாரதீயம் -காருடம்-பிரமகைவர்த்தம் - காந்தம்-மார்க்கண்டேயம்-ஆக்கினேயம்-பிரமாண்டம்-பதுமம்-என்பவைகளாம். தாங்கள் சைவர்கள் என்பது தோன்ற "நேயமாகியசிவகதை" என்றனர். (உ)

நன்றுநன்றுநீர்மொழிந்ததுநானிலத்தவர்போற்
பொன்றநேரன்றுதலொழிவிலாத்தேவனைப்போற்றல்
அன்றிநாயகன்காதையைவிரும்பினீரதனுள்
ஒன்றுகேட்பினுமதன்பயனளவையாருரைப்பார்.

(இ-புரை.) முனிவர்களே? நீங்கள் சொல்லியவார்த்தை மிகவும்நன்று, மிகவும் நன்று, இவ்வுலகத்திலிருப்பவர்கள்போல இறப்பதும் பிறப்பதும் ஒழியாத மற்றைத்தேவர்களைப் போற்றுதல்செய்யாமல், ஆதியந்தமில்லாத பரமசிவன் சரித்திரத்தைக்கேட்க விரும்பினீர்கள், அந்தச் சிவசரித்திரம் அநந்தமாம்; அதனுள் ஒரு சரித்திரங் கேட்டாலும், அதனால் வரும் பயனிவ்வளவென்று யார் அளவிட்டுச் சொல்லுவார்கள். எ-று.

நன்றுநன்றென இரட்டித்தது மிகுதிதோன்ற. நானிலம் நெய்தல், முல்லை குறிஞ்சி, மருதம். மனித சஞ்சாரமில்லாததாற் பாலைநிலம் நீக்கப்பட்டது.

ஆசில்சீர்க்கதைபற்பலவறைந்தனமினியாம்
பேசுநன்கதைபிஞ்ஞகன்றிருவுருவான
மாசிலஞ்செழுத்தடைவுசொன்மான்மியமுதலா
யீசனன்கதைகேட்பதேயறமென்பதீரு.

(இ-புரை.) குற்றமில்லாத புகழுடைய அநந்தமாகிய சரித்திரங்களை உங்களுக்கு முன்னஞ்சொன்னோம். இப்பொழுது நாம் உங்களுக்குச் சொல்லும் நலலசரித்திரமாவது, பரமசிவனுடைய திருவுருவமாகிய பழுதகன்ற பஞ்சாக்ஷரத்தின் முறைமையைச் சொல்லுகின்ற மான்மிய முதலாகப் பரமசிவனது நல்ல சரித்திரத்தைக்கேட்பதே அறமென்று சொல்லுவதீருக. எ-று. (ச)

இந்துசேகரன்றனமுஞ்சிவநிசியியல்பும்
பந்தந்தீர்பிரதோடத்தின்பூசையின்பலனும்
வந்தனைக்குறுசோமவாரத்தின்மான்மியமும்
அந்தமர்றியிலாதவனடியவர்திறமும்.

(இ-புரை.) சந்திரசேகரனாகிய பரமசிவன் வீற்றிருக்கும் ஸ்தலமான்மியமும், சிவராத்திரி மான்மியமும், பாசபந்தத்தை நீக்குகின்ற சனிப்பிரதோஷ பூசையினால் வரும் பலனும், ஆராதனைக்குரிய சோமவார விரதமான்மியமும், ஆதியந்தமில்லாத பரமசிவனுடைய அடியவர் மான்மியமும். எ-று.

பிரதோஷம் என்பது இராத்திரியின்முன்காலம்; அது அஸ்தமிப்பதற்கு முன் (கூஙு) நாழிகையும், அஸ்தமித்தபின் (கூஙு) நாழிகையுமுள்ள காலமாம்.

தெரிவருஞ்சிவகவசமும்பூதியின்செயலும்
புரியும்பத்தியினியதிசெய்பூசனைப்பொலிவும்
ஒருவுகற்பினள்பழியகற்றுமாமகேச்சுரமும்
அரனெனத்தகுமக்கமாமணியினதடைவும்.

(இ - புரை.) எளிதாக அறிதற்கரிய சிவகவசமான்மியமும், விபூதிமான்மியமும், விரும்புகின்றபத்தியினால் நியதியாகச்செய்கின்ற சிவபூசைமான்மியமும்,

கற்புநீங்கியவனுடைய பழிநீக்கிய உமாமகேசுவரவிரத மான்மியமும், சிவனென்றேசொல்லத்தக்க பெருமைபொருந்திய உருத்திராக்ஷமணியின் மான்மியமும். எ-று. (சு)

வேதநான்கினும்விளங்குசீருருத்திரவீறும
ஓதுகேனிவைகேண்மின்களெனத்தொகுத்துரையா
ஆதியஞ்செழுத்தமைவருமான்மியமுதலாச்
சூதமாமுனிமுனிவர்முன்வகுத்தனன்சொன்னன்.

(இ-பொ.) நான்கு வேதங்களாலும் சொல்லப்படுகிற சிறந்த உருத்திரமான்மியமுஞ் சொல்லுகின்றேன், இந்தச்சரித்திரங்களைக் கேளுங்களென்று தொகுத்துச்சொல்லிப் பின்பு வாக்குக்கடங்காத சிவசொரூபமாகிய பஞ்சாக்ஷரமான்மியமுதலாச் சூதமாமுனிவரானவர் நைமிசாரணியமுனிவர்களுக்கு வகுத்துச் சொன்னார். எ-று. (எ)

தவங்கள்வேள்விகண்முதலவாந்தருமவேள்விகளில்
அவங்கணீக்குமெய்ஞ்ஞானமாவேள்வியேயதிகம்
பவங்கணீக்குமவ்வேள்வியின்பாற்படுசெபமாஞ்
சிவங்கலப்புறுமந்திரவேள்வியைச்செப்பின்.

(இ-பொ) தவங்கள் வேள்விகள் முதலாகிய தருமவேள்விகளில் (பிறவிக்குக்காரணமாகிய) பயனில்லாதமுயற்சிகளை நீக்கத்தக்க பெருமையுள்ள மெய்ஞ்ஞான வேள்விகளே அதிகம்; செனனங்களை நீக்குகின்ற அந்தவேள்விகளை யடுத்த செபமாகிய மங்களம்பொருந்திய மந்திரவேள்வியைச் சொன்னார். எ-று.

முக்கணாயகனமரருண்முதல்வனுமதுபோற
றக்கமந்திரமெவற்றினுந்தலைமையைந்தெழுத்தே
தொக்கநான்மறைப்பிரணவமாதியாத்தொடங்கி
யொக்கவோதியேபரகதியளப்பிலருற்றார்.

(இ - பொ.) திரிநேத்திரங்களையுடையபரமசிவன் தேவர்களுக்குள்தலைவராம்; அதுபோல் தகுதியுள்ள எல்லாமந்திரங்களிலும் பஞ்சாக்ஷரமே முதன்மையாம்; (இந்தப் பஞ்சாக்ஷரத்தை) வியாசமுனிவரால் நான்காகத்தொகுக்கப்பட்டவேதங்களிற்சொல்லப்படுகிறபிரணவமாதியாகத் தொடங்கிச்சேர்த்தோதி அனந்தம்பேர் மோக்ஷமடைந்தார்கள், எ - று. ஏகாரம் தேற்றப்பொருள்.(அ)

இன்னமந்திரத்தோரெழுத்தின்பயனெல்லை
யன்னவூர்தியுந்திருமறுமார்பனுமறியார்
முன்னைநான்மறைதனித்தனிமொழிவதுமிதுவே
மன்னியெங்கணுஞ்சிவன்றிருவுருவமாய்வயங்கும்.

(இ - புரை.) இத்தன்மையுள்ள பஞ்சாக்ஷரத்தில் ஒரு அக்ஷரத்தின் பய னை வினைப் பிரமதேவனும் திருமாலுமறியார்கள். பழைமையாகிய நான்கு வேதங்களி லொவ்வொன்றுஞ் சொல்வது மிந்தமந்திரத்தையே. இது அண்ட பிண்டமெங்கும் நிலைபெற்றுப் பரமசிவத்தின் திருவுருவமாய்விளங்கும். எ-று.

ஐந்தெழுத்தினுண்ணெறிவினுமாருயிர்சென்று
சிந்தைகாணருஞ்சிவபதஞ்சேர்ந்திடுந்திறத்தால்
இந்தமந்திரநிலைபரப்பிரமமேயென்பர்
வந்தனைத்தொழிற்சச்சிதானந்தசின்மயத்தோர்

(இ - புரை.) இப்பஞ்சாக்ஷரத்தின் அதிசூட்சுமமுறைமையை (குருமுன்னி லையில்) வினுவும் அழிவில்லாத வுயிரானதுசென்று மனதுக்கெட்டாத சிவபதத் தைச் சேர்ந்திடுந் தன்மையால் இந்த மந்திரத்தினுண்மை பரப்பிரமமேயாகு மென்று வந்தனைத்தொழிலையுடைய சச்சிதானந்த சின்மயர்களாகிய பெரியோர் கள் சொல்லுவார்கள். எ - று. வினுவென்பதனீற்றில் உம் தொகுத்தல் விகாரம்.

சத்து, சித்து, ஆனந்தம், சின்மயம் என்னும் நான்கு பதத்தினுமுற்ற பெரியோர் என்றனர். (கக)

கருப்பயோனியிற்சுழிப்படுபவக்கடல்கடப்பப்
பொருப்பினெம்பிரானுயிர்க்கெலாம்புணையெனப்புகன்ற
விருப்பஞான்வஞ்செழுத்தினையுளத்திடைவித்திற்
றருப்பைசுட்டிடும்வேள்வியேன்றானமேன்றவமேன்.

(இ - புரை.) கருத்தங்கும் எண்பத்துநான்குலக்ஷ யோனிபேதமாகிய (இரு வினையென்னும்) சுழிபொருந்திய ஜெனனசாகரத்தைக் கடக்க உயிர்க்கெல் லாம், தெப்பமாக கயிலாயகிரியில் வீற்றிருக்கும் நங்கடவுளாகிய பரமசிவனரு ளிச்செய்த விருப்பமுள்ள ஞானமயமான பஞ்சாக்ஷரமென்னும் விதையை மனமென்கிறநிலத்தில் விதைத்தால் (மோக்ஷமாகிய பயனைத்தரும்) ஆதலால் தருப்பையைச்சுடும் வேள்வியேன் தானமேன் தவமேன் (வேண்டுவதில்லை.) எ - று.

வித்தின் எனக் கூறினமையால்-விதையும் நிலமுங் கூறப்பட்டன. விதை த்தலாவது தியானித்தல். ஆழ்ந்தநீரின் சுழியிலகப்பட்டது அற்பமாகிய துரும்பா னாலும் அதனிடத்தில் சதா சுழன்றுசுழன்றுழல்வதுபோல ஜெனனசாகரத்தி லகப்பட்ட ஆன்மாவானது அதினின்றும் நீங்குவது அருமை என்பதுதோன்ற "சுழிப்படுபவக்கடல்" என்றனர். (கஉ)

பருதிவந்தெழாவளவுநீடிருளெனப்பவமுஞ்
சுருதியஞ்செழுத்துணர்கலாநாளெலாந்தொடருங்

கருதினுன்மறையந்தத்தும்வேதத்தின்கண்ணும்
ஒருதனிப்பெருங்கடவுளஞ்செழுத்தலாதுளதோ.

(இ-புரை.) சூரியனுதயமாகாதவரையில் இருள் நீடித்திருப்பதுபோல, வேதத்திற்சொல்லுகிற பஞ்சாக்ஷரத்தை யறியாதாளெல்லாம் ஜெனனமானது தொடரும். எண்ணுமிடத்தில் வேதாந்தமாகிய உபநிடதத்திலும் வேதங்களினிடத்தும் ஒப்பற்ற பெருங்கடவுளாகிய பரமசிவனது பஞ்சாக்ஷரயல்லது வேறொன்றுண்டோ (இல்லை). எ - று.

புண்ணியத்துக்குமுன் பாவநில்லாதென்பதுதோன்ற "பருதிமுன்னிருள்" என்றனர். (கந)

முத்திநன்னெறிக்கொருதுணைமோகவாரிதிக்கு
வைத்தசெஞ்சிகைவடவனல்வினைவனத்திற்குப்
பொத்திநங்குவெங்கதழெரிபுனைமதிக்கண்ணி
யத்தனெந்தையஞ்செழுத்திதுகடைப்பிடித்தறிவீர்

(இ-புரை.) திங்களாகிய மாலையைத்தரித்த அத்தனுகிய எம்மையனது பஞ்சாக்ஷரமானது நல்ல மோக்ஷவழிக்கு ஒப்பற்றதுணையாம். மோகமாகிய சமுத்திரத்துக்கு அமைத்துவைத்த சிவந்தசுவாலையையுடைய வடவாமுகாக்கினியாம். இருவினையாகிய வனத்திற்கு வியாபித்துக்கொண்டு மிகுந்த வேகமாக எரிக்காநின்ற வெப்பமுள்ள தீயாம். இதனைத் தெளிவாகக் கொண்டறிவீர்கள். எ - று.

வடவாமுகாக்கினியானது பெட்டைக்குதிரையின் முகம்போல் உருவமுள்ளதாகச் சமுத்திரத்தினிடத்திலிருந்துகொண்டு அதில் நீர் அதிகரிக்காதவண்ணம் சுவறச்செய்வதாகிய அக்கினியாம். (கச)

ஊனநீக்கியசிவமுன்னர்நமவினையுரைக்கின்
ஞானமெய்திடுமனைவர்க்குநம்பனுர்நயக்குந்
தானமெய்திநற்குரவராற்பெற்றவர்தங்கட்
கானசித்தியுமுத்தியுமக்கணத்தாமால்.

(இ-புரை.) மும்மலங்களையும் நீக்கிய சிவ என்பதன்முன் நம என்பதைச் சேர்த்துச் செபித்தால் அவர்களுக்கெல்லாம் ஞானபாதங்கிடைக்கும். பரமசிவன் விரும்பித் (திருக்கோவில்கொண்டுவீற்றிராநின்ற) ஆலயத்திற்சென்று நல்ல குருவினுல் உபதேசஞ்செய்துகொள்ளப்பெற்றவர்களுக்கு விரும்பியவைகளையெல்லாங்கொடுக்கத்தக்கதான அஷ்டமாசித்திகளும், மோக்ஷமும், அப்பொழுதே கிடைக்கும். எ-று. ஆல்- அசை. (கரு)

வேறு.

தாதவிழ்கடுக்கையஞ்சடிலநாயகன்
ஆதியினவின்றநல்லஞ்செழுத்தையு

மேதகுகுரவனுலுணர்ந்தோர்வேந்தன்றன்
றீதறுத்துய்ந்தமைசெப்புவாமரோ.

(இ-புரை.) மகரந்தத்தோடுமலர்ந்த கொன்றைப்பூமாலையணிந்த சடாமகுடத்தையுடைய பரமசிவன் ஆதியில்அருளிச்செய்த நல்ல அஞ்செழுத்தையும் மேன்மைபொருந்திய குருவினலறிந்து, ஒருராசனுனவன் பாவங்களைநீக்கிக் கடைத்தேறியசரித்திரத்தை யாம் சொல்லுகிறோம் (என்று சூதமுனிவர் சொல்லுகின்றார்) எ-று. அரோ-அசை.

மகரந்தம் என்பது புட்பத்திடத்துத்தங்கிய ஒருவித பொடியாம். (கசு)

தேங்குபேராழியுந்திகிரிக்குன்றுமொத்
தோங்குநீரகழியொடுயருமூதெயில்
பாங்கர்சூழ்மதுரையம்பதிக்குமன்னவன்
வாங்குவிலெதுகுலமரபிற்றேன்றினன்

(இ-புரை.) நிறைந்துள்ள பெரும்புறக்கடலையும் சக்ரவாளகிரியையுமொத்துமிகுந்த நீரையுடைய அகழியுடன் உயர்ந்த பழமையாகிய மதிலானது புறத்தில் சூழ்ந்திருக்கும்படியாகிய அழகிய மதுரைமாநகரத்துக்கிறைவன்போர்முகத்தில்வளைக்கும் வில்லையுடைய எதுகுலமரபிற் பிறந்தவன். எ-று.

தியங்கு என்பது எதுகை நோக்கி தேங்கென மருவியது. இங்கு "மதுரை" யென்றது வடமதுரையை. (கஎ)

வடுவிலாப்பெரும்புகழ்வயங்கவையகத்
திடுபெயர்த்தசாருகனென்னுமாண்பினன்
றெடுகழற்றெளினன்புலவுச்சோரிவேல்
அடுகடற்றனையானரிமொய்ம்பினன்.

(இ - புரை.) குற்றமில்லாத பெரிய புகழானது உலகமெங்கும்விளங்கத் தசாருகனென்றுசொல்லப்பட்ட பெயர்கொண்ட மாட்சிமையையுடையவன், வீரகண்டையணிந்தகாலையுடையவன், பகைவருடலின்உதிரத்தில் தோயத்தக்கவேலால் எதிர்த்தவரைக்கொல்லுகிற சமுத்திரம்போன்றசேனையையுடையவன், சிங்கத்தை யொத்த பலமுள்ளவன். எ-று. (கஅ)

நாளினின்மனுமுறைநடாத்துமாணையான்
வாளினிற்றெவ்வர்தம்வலியைமாற்றினேன்
றோளினில்வரைகளைத்துளக்குமாற்றலான்
வேளினின்வனப்பினன்றவத்தின்மேன்மையான்.

(இ - புரை.) தன்காலத்தில் மனுமுறைதவருதபடி நீதிசெலுத்திய ஆக்கினையுள்ளவன், தன்கைவாளினுல் பகைவருடையபலங்களை யொடுக்கினவன், தன்

தோள்களால் மலைகளையசைக்கத்தக்க பராக்கிரமத்தையுடையவன், மன்மதனையொத்தஅழகுள்ளவன், தவத்திலு மேன்மைபொருந்தியவன். எ-று. (கக)

இத்தகைமன்னவனிளநிலாநகை
முத்தணிமுகிழ்முலைமுளரிவாண்முகக்
கொத்தலர்நறுங்குழற்கோதைவேல்விழி
மெய்த்தவக்கொடியினைவிதியின்வேட்டநாள்.

(இ - புரை.) இப்படிப்பட்ட பெருமையுள்ள அரசனானவன், நிலவினது இளங்கிரணப்பரப்புகின்ற ஒளிபொருந்திய முத்துமாலையணிந்த தாமரையரும்பையொத்த தனங்களையும், செந்தாமரைமலர்போன்ற ஒளிபொருந்திய முகத்தையும், கொத்துகளாகியமலர்களையணிந்த வாசனைபொருந்திய அளகத்தையும், வெற்றிமாலையணிந்த வேல்போன்றகண்களையுமுடைய உண்மையாகிய தவத்தினால்பிறந்த ஒருகன்னிகையை வேதவிதிப்படி விவாகஞ்செய்துகொண்ட நாளில். எ - று. (உ0)

நல்கியதூமமுநானத்தீபமு
மல்கியமணவறைமலர்ப்பெய்பாயலிற்
பல்கியவிருப்பினான்வளைக்கைபற்றலும்
ஒல்கியகொடியினிலொதுங்கிக்கூறுவாள்.

(இ - புரை.) நாதிகளாலூட்டப்பட்ட அகிற்புகையும், கஸ்தூரிச்சேர்ந்த தீபமும், நிறைந்துள்ள மணவறையுள், மலர்கள்பரப்பிய சயனத்திலிருந்துகொண்டு, மிகுந்தவிருப்பமுள்ளவனாகி வளையணிந்தகையைப்பற்றவும், அவள் அசைகின்ற பூங்கொடிபோலப்பின்னொதுங்கிச் சொல்லுகின்றாள். (உக)

நின்னெடுந்தோள்வரைநெருங்கப்புல்லுதற்
குன்னருங்காதலென்னுளத்தின்றுதலான்
மன்னகேளொருதலைக்காமமன்னினர்க்
கின்னலேயன்றிமற்றின்பமில்லையே.

(இ புரை.) உன்னுடைய மலையொத்தபுயங்களை அழுந்தப்புல்லுதற்கு நினைந்தற்கருமையாகிய ஆசையானது என்மனதிலில்லை, ஆகையினால் மன்னவனே கேளு, ஒருதலைக்காமத்தைப் பொருந்தினவர்களுக்குத் துன்பமுண்டாகுமேயன்றி இன்பமுண்டாவதில்லை. எ - று. மற்று-அசைநிலை. ஏ-ஈற்றசை.

காமமிருவரிடத்தும் சமமாகத்தானே இருக்கவேண்டுமென்பதுதோன்ற "உன்னருங்காதலென்னுளத்து" என்றனள். மன்ன என்பது அண்மைவிளி. ஒருதலைக்காமம் என்பது - ஒருவரிடத்துண்டான ஆசை. ஈண்டு அரசனிடத்துமாத்திரமுண்டானமையால் "ஒருதலைக்காமம்" எனப்பட்டது. (உஉ)

சிந்தைவேறுயினார்பிணியிற்றேய்பினர்
புந்தியின்விருப்பிலார்விரதம்பூண்டுளார்
உந்தியிற்கருவினரொருவுபூப்பினர்
முந்துறுவலியினான்முயங்கற்பாலரோ.

(இ - புரை.) மனதுவேறுகிய மாதர்களும், வியாதியினால்வருந்திய மாதர்களும், உள்ளத்தில் விருப்பமில்லாத மாதர்களும், விரதங்கொண்டிருக்கு மாதர்களும், வயிற்றிற் கருப்பமுள்ள மாதர்களும், சூதநீங்கிய மாதர்களும், முந்துகின்ற பலாத்காரத்தினால் அணையுந்தன்மையை உடையவர்களல்லர் எ - று. ஓகாரம் எதிர்மறை. (உங)

கயங்கெழுநறுமலர்கயங்குறுவகை
பயங்கெழுதேனுகர்சுரும்பின்பான்மைபோல்
வயங்கிழைமகளிர்மனந்திருத்தியே
முயங்கினர்க்கன்றிமற்றின்பமுற்றுமோ

(இ-புரை.) தடாகங்களிற் பொருந்திய வாசனையுள்ள மலர்கள் கசங்காமல் வண்டுகள் தங்களுக்குப் பிரயோசனமாயுள்ள தேனைக் காலமறிந்துண்ணுந் தன்மைபோல் விளங்குகின்ற ஆபரணங்களையணிந்த தங்கட்குரிய மனைவிகளுடைய மனதைத்திருத்திப் புணர்ந்தவர்க்கல்லது இன்பமுண்டாகுமோ உண்டாகாது. எ-று. மற்று - அசைநிலை. (உச)

என்றவள்கூறலுமெழுந்தகாமநோய்
தன்றலைமீக்கொளத்தாங்கலாதவன்
குன்றெனவீங்கியகுவவுத்தோளினாற்
பொன்றிகழ்வனமுலைவலிதிற்புல்லினான்.

(இ-புரை.) என்றவள்சொல்லவும், தன்மனத்துண்டாகிய காமநோயானது தலைமட்டுமேறுதலால், அந்தக்காமத்தைச் சகிக்கமாட்டாதவனாய், அவ்வரசனானவன் மலைபோல உயர்ந்த திரண்ட தன்தோள்களால் அவளுடைய பொன்னிறமுள்ளதாய்விளங்குகின்ற அழகியதனங்களை வலிவில் புல்லினான். எ-று. (உரு)

புல்லியகாலையிற்பொறாதுமாதவ
மெல்லியல்குளிர்தளிர்மேனிவெம்பியே
கொல்லுலையழல்புகக்கொளுந்திரும்புபோல்
வல்லழலிறைத்ததுமகிணன்மேனிமேல்.

(இ-புரை.) அப்படிபுல்லியகாலத்தில் பொறாமல் மாதவத்தையுடைய அந்த மாதின் குளிர்ந்ததளிர்போன்றமேனியானது; வெதும்பிக் கருமான் உலைக்களத்திற் சேர்ந்ததினால் அக்கினிமயமாய்ச்சுடுகின்ற இரும்புபோல் கணவன்மேனிமேல் மிகுந்தவெப்பமுள்ள தீயையிறைத்தது. எ-று. (உசா)

சாந்தமும்பொரிந்ததுதாமந்தீந்தது
தோய்ந்தொளிராரமுஞ்சுண்ணமானதால்
ஏந்தலும்வெருவிமெய்பிறகப்புல்லிய
நாந்தகத்தடக்கைகணடுங்கிவாங்கினன்.

(இ - புரை.) அந்தவெப்பத்தினால் அரசன்மார்பிலணிந்திருந்த சந்தனக் குழம்புங்பொரிந்துதிர்ந்தது, பூமாலையுங்கருகியது, அணியப்பட் டொளிர்கின்ற முத்துமாலையுந்நீருகியது, (இவைகளெல்லாமிப்படியானதினால்), அந்தஅரசன் பயந்து தன்மனைவியுமேனியை யிறுகப்புல்லிய வாள்பிடிக்கும் நீண்டகைகள் நடு ங்கி வாங்கிக்கொண்டான். எ-று. ஆல்-அசை. (உஎ)

வாங்கியமன்னவன்மாதைநோக்கிநின்
தேங்கமழ்தளிர்புரைசெய்யமேனியின்
ஓங்கழல்வெதுப்பவென்னுடலம்வெந்ததால்
ஈங்கிதனிமித்தம்யாதெனவினவினன்.

(இ-புரை,) கைகளைவாங்கிக்கொண்ட மன்னவனானவன், தன்மனைவியைப் பார்த்து, வாசனைகமழ்கின்ற செந்தளிரையொத்த உன்னுடைய செவ்விதாகிய மேனியிலிருந்துண்டாகிய மிகுந்ததீயானதுசுட, என்னுடல்வெந்தது; இதனு டையகாரண மென்னென்றுவினவினன். எ-று. ஆல்-அசை.

இங்கு தளிர் என்றது, மாந்தளிரை. (உஅ)

ஆயிழைமுறுவலித்தரசகேள்பவ
மாயிருடெறந்துருவாசரீசனார்
நேயவஞ்செழுத்தினைநிசழ்த்தலால்வினை
போயதென்னுடலமும்புனிதமாயதே.

(இ - புரை.) அழகுள்ளதாகச்செய்யப்பட்ட ஆபரணங்களணிந்த அந்த மாது நகைத்து ராசாவேகேளும், பிறவிக்கேதுவாகிய பெருமையுள்ள ஆணவமல இருளைகெடுத்த தூருவாசமுனிவரானவர் பரமசிவன் அன்புறந்தக்க பஞ்சா க்ஷரத்தை எனக்குபதேசித்ததினால், இருவினையும்நீங்கியது; என்னுடலும் பரிசு த்தமாகியது. எ-று. ஏ-அசை. அரச, அண்மைவிளி. (உகூ)

புண்ணியம்பாவத்தைப்பொருந்தலின்றிது
திண்ணமிப ;னிதமாஞ்செய்யமேனியை
யண்ணலஞ்செழுத்தினையறியலாதநின்
தண்ணியமேனியாற்றழுவற்பாலையோ.

(இ-புரை.) புண்ணியமானது பாவத்தைச்சேராது; இது நிச்சயம்; (ஆதலால்) புனிதமாகிய இந்த நல்லவுடலைப் பரமசிவனுடைய பஞ்சாக்ஷரத்தையறியாதவும்முடைய குளிர்ச்சிபொருந்திய மேனியால் நீர்தழுவத்தக்கவரோ எ-று. ()

இந்நிலைவிரைந்துநீயிறைவன் மந்திர
தின்னுடைச்செவிப்புலநிறைத்துத் தூய்மையாய்ப்
பின்னரென்மெய்நலம் பெறுதியென்றனள்
அன்னமந்திரமெனக்கருளென்றோதினான்.

(இ - புரை.) நீர் இப்பொழுதே விரைவாகப் பரமசிவனுடையபஞ்சாக்ஷரத்தை, உம்முடையகாதினிடத்தில் உபதேசஞ்செய்யப் பெற்றுக்கொண்டு, பரிசுத்தமாகி, அதன்பின்பு, என்மெய்யின்பத்தைப் பெற்றுக்கொள்ளுமென்றுசொன்னாள். (அப்படியானால்), அந்தமந்திரத்தை நீயெனக்குபதேசஞ் செய்யென்று சொன்னான். எ-று. (௩௧)

மாதர்பான்மெய்ம்மொழிமகிழ்நர்கேட்பது
நீதியன்றானருணிறைந்ததேசிகன்
மேதகுகார்க்கர்பால்விழைவினற்பெறப்
போதுகவென்றனள்பொருந்தினானரோ.

(இ - புரை.) கணவர்கள் தங்கள்மனைவியரிடத்தில் உண்மையானமந்திரோபதேசம் பெற்றுக்கொள்வதுநீதியல்லவே! சிவனதுகிருபையைப் பூரணமாகப்பெற்றுள்ள குருவாகிய மேன்மைபொருந்திய கர்க்கமுனிவரிடத்தில் விருப்பமுடன் பெற்றுக்கொள்ள நீர் என்னுடன் வாருமென்றாள். (அவ்வரசன்) அதற்குச் சம்மதித்தான். எ-று. அரோ-அசை. (௩௨)

குரவவார்குழலொடுங்கொழுநனக்கணந்
திரைபுணர்யமுனையந்நீரமெய்தியே
வரைமுனிகார்க்கர்தாள்வணங்கிவந்தவா
றுரைசெய்துபின்னுமோருரைவிளம்பினான்.

(இ-புரை.) குரவம்பூவணிந்த நீட்சியாகிய அளகத்தையுடைய தன்மனைவியோடும் கணவனானவன், அப்போதே அலைகள்மோதுகின்ற அழகிய யமுனாநதியின்கரையிலடைந்து, சிரேஷ்டம்பொருந்திய கர்க்கமுனிவருடைய பாதங்களைப் பணிந்து, தான் வந்தகாரியத்தைச்சொல்லிப் பின்னுமொருவார்த்தை சொல்லுகின்றான். எ - று.

யமுனாநதியானது சமுத்திரம்போலகன்று விசாலித்தது என்பதுதோன்ற "திரைபுணர்" என்றனர். (௩௩)

மருளுறுபவக்கடற்முழும்வஞ்சனே
யருடருமஞ்செழுத்தம்பியாகநீ
தெருடருதேசிகமுத்தித்தீரமேல்
இருளறவேற்றுதியென்னவேத்தினன்.

(இ-புரை.) தெளிவைத்தருகின்ற குருவே? (யாவரும்) மயங்கத்தக்கதாகிய செனனசாகரத்தில் முழுகியிராகின்ற பாவியாகிய அடியேனை, அருளைத்தருகின்ற பஞ்சாக்ஷரமானது தெப்பமாகும்வண்ணம் (உபதேசித்து), மயக்கந்தீரும்படிச்செய்வித்து மோக்ஷமாகிய கரையிலேற்றுமென்று துதிசெய்தான். எ-று. ()

அம்முனிநிருபன்மேலருளுநோக்குடன்
எம்மையாளிறைவனையுளத்திருத்தியே
செம்மலர்சிவகரஞ்சென்னிசேர்த்துபு
மெய்ம்மையஞ்செழுத்தையும்விதியிற்கூறினன்.

(இ-புரை) அந்த முனிவரானவர் அரசனிடத்திற் கிருபைசெய்யும் நோக்கத்துடன், நம்மையாட்கொள்ளும் பரமசிவனை யிருதயத்தில்தியானித்துச் செந்தாமரைமலர்போன்ற தம்முடைய நல்லகையை அவன்சிரசில்வைத்து, உண்மையாகிய ஐந்தெழுத்தையும் விதிப்படி உபதேசித்தார். எ-று. (கரு)

வேறு.

ஓகைபுரிதேசிகனுரைத்தபொருள்கொண்ட
வாகைவடிவேலிறைமயிர்க்குழிகணின்றும்
வேகவினையாவையும்விரைந்துசதகோடிக்
காகவுருவாய்மிசைபறந்தனகரிந்த.

(இ-புரை.) சந்தோஷத்தைச் செய்கின்ற தேசிகராகிய கர்க்கமுனிவருபதேசித்த பஞ்சாக்ஷரத்தைப்பெற்றுக்கொண்ட வெற்றிபொருந்திய வடிவேலையுடைய அந்தஅரசனுடைய ரோமத்துவாரங்களினின்றும், கடுமையுள்ளவினைகளெல்லாம் நூறுகோடிகாக்கைரூபமாய் மேலெழுந்து பறந்துகரிந்ததுகள் எ-று.

இங்கு நூறுகோடியென்றது, அநேகங்கோடியை. புண்ணியத்திற்கு முன் பாவமானது பஞ்சாய்ப்பறக்கு மென்பது இதனாற் பெறப்பட்டது. (கசு)

மேனியினெழுங்கொடிகள்வெந்துவிழல்கண்ட
மானவடிவேலரசர்மன்னவன்வணங்கி
யூனுடலினிக்கொடிகளூற்றெழலெனீருய்ப்
போனதெவனென்னமுனிபுங்கவனுரைத்தான்.

(இ-புரை.) தன்னுடலினின்று மேலெழுந்த காக்கைகள் வெந்துவிழுவதைக் கண்ட பெருமைபொருந்திய வடித்தவேலையுடைய அரசர்க்கரசனானவன் வணங்கி அடியேனுடைய ஊன்சம்பந்தமாகியசரீரத்தினின்று மிந்தக்காகங்கள்

உண்டாகி மேலெழுந்த காரணமென்ன? அவைகள் நீறாய்ப்போன காரணமென்ன வென்று வினவ, முனிசிரேஷ்டராகிய கர்க்கர் சொல்லுகின்றார். எ-று. (௩எ)

நல்வினையுழந்துபலநல்லுருவெடுத்தும்
அல்வினையுழந்துபலவல்லலுருவுற்றுந்
தொல்வினைதொடர்ந்ததருசூழ்பிறவியென்னும்
வல்வினையொழித்தனையிம்மந்திரநலத்தால்

(இ-புரை.) நல்வினையைச்செய்து பலவாகிய நல்லஉருவமெடுத்தும், தீவினையைச்செய்து துன்பமனுபவிக்கத்தக்க பல தீயவுருவமெடுத்தும், பழையவினையாகிய சஞ்சிதந்தொடர்ந்ததருவதால், சூழ்கின்றபிறப்பாகிய வலியவினையை இந்தப் பஞ்சாக்ஷரத்தினன்மையால் ஒழித்தாய். எ-று

ஊழ்வினைக்கிடனாய் சனனம் உண்டென்றனர். (௩அ)

ஒழிந்தவினைகாகவுருக்கொடுடனின்றும்
எழுந்தெனவருந்தொடர்பிலாதவைகணீறாய்
விழுந்தனவருந்தலுளம்வென்றிபுனைவேலோய்
செழுந்திருவெழுத்தினிலைசெப்பவெளிதன்றே.

(இ - புரை.) வெற்றிகொண்ட வேலாயுதத்தையுடைய அரசனே? ஒழிந்த வினைகள், உன்னுடலினின்றும் வலியகாகருபங்கொண்டெழுந்து இனி தொடருந் தொடர்ச்சியில்லாமையினால், வெந்துநீறாய்விழுந்தனுகள். நீ மனம்வருந்தாதே மேன்மையுள்ளபஞ்சாக்ஷரத்தி னிலைமைசொல்லவெளிதல்ல. எ - று. ஏ-அசை.

பாவமானது கரிய வுருவென்பதுதோன்ற "காகவுரு" என்றனர். (௩௯)

கண்டனைவிளைந்தபடிகாமர்நகரிற்போய்
ஒண்டொடியுநீயுநலனுண்டுடலொழிந்தால்
அண்டர்பதம்யாவையுமடைந்தவைதுறந்து
தெண்டிரைவிடத்தைநுகர்செம்மலடிசேர்வீர்.

(இ-புரை.) அரசனே? நடந்தகாரியங்களையெல்லாங்கண்டனையல்லவா இனி நீயுமுன்மனைவியும் அழகியநகரத்திற்போய் இன்பமனுபவித்துக் கொண்டிருந்து இந்தச்சரீரமொழிந்தால் பின்பு முறையே தேவர்பதவிகளையடைந்து (அவைகளிலுள்ள இன்பங்களையுமனுபவித்து), அவைகளையும்நீங்கித் தெளிவான அலைகளையுடைய சமுத்திரத்திலுண்டாகிய விஷத்தையுண்டபரமசிவனுடைய திருவடிகளைச் சேர்வீர்கள்.—எ - று. (௪௦)

என்றவனியம்பலுமெழுந்துவடிவேலோன்
குன்றனையமாடமணிகோனகரமெய்தித்

தன்றுணைவியின்னலநுகர்ந்துடறணப்ப
மன்றன்மனையோடுமொன்வாழ்பதமடைந்தான்,

(இ-புரை.) இப்படியாகக் கர்க்கமுனிவர் சொன்னமாத்திரத்தில் வடித்தவே லையுடைய அவ்வரசனுனவன் எழுந்து மகமேருவையொத்த வீடுகளுள்ள சிறப்பு ப்பொருந்திய நகரத்திற்சேர்ந்து, தன்மனைவியினிடத்தில் இனிதாகிய இன்பமனு பவித்து, உடலநீங்க, விவாகஞ்செய்துகொண்ட அம்மனைவியுடன் பரமசிவன் வீற்றிராகின்ற சிவலோகஞ்சேர்ந்தான். எ-று. (சுக)

வேறு.

மன்னுயிர்க்குயிராமீசன்வடிவெனுமஞ்செழுத்தின்
றன்னிலையறிந்தவாறுசாற்றினேனென்றுனென்ற
பின்னரேதலத்தின்வீறுஞ்சிவநிசிப்பீடுஞ்சொல்வேன்
றொன்னெறிமுனிவர்கேண்மினென்றனன்சூதன்சொன்னன்.

(இ - புரை.) நிலைபெற்ற உயிர்க்குயிராகிய பரமசிவனுடையசொரூபமான பஞ்சாக்ஷரத்தினிலைமையை நானறிந்தமட்டிற் சொன்னேனென்றுசொல்லினுர். அப்படிச் சொன்னவுடனே, சிவதலமான்மியமும், சிவராத்திரிமான்மியமும், கொண்ட பெருமையைச் சொல்லுகிறேன் பழமையாகிய நன்னெறிதவறுத முனி வர்களே? கேளுங்களென்று சூதமுனிவர்சொன்னுர். எ-று. (சுஉ)

முதலாவது
பஞ்சாக்ஷர மகிமையுரைத்த அத்தியாயம்
முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௬௨.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இ ர ண் டா வ து

# சிவதானமகிமையுரைத்த அத்தியாயம்.

சூரியகுலத்திற்றோன்றறொன்னகரயோத்திவேந்தன்
வாரணிபெறுமென்கொங்கைமதயந்திவிரும்புதோளான்
வேரியந்தொடையன்மார்பன்மித்திரசகநாமத்தோன்
ஆரணியத்தின்வேட்டையாடுவான்விரும்பிப்புக்கான்.

(இ-புரை.) சூரியகுலத்தரசனும் பழமையாகிய அயோத்திநகரத்து வேந்தனும், கச்சினையும் ஆபரணங்களையும்பொருந்திய மிருதுவாகிய தனங்களையுடைய மதயந்தியென்னும் பெயர்கொண்டமனைவியினால் விரும்பப்பட்ட புயங்களையுடையவனும், தேனிறைந்த அழகியபூமாலையணிந்த மார்பையுடையவனும், மித்திரசகன் என்னும்பெயரையுடையவனுமாகிய அரசனானவன், அரசாட்சிசெய்துகொண்டிருக்குநாளி லொருநாள், வேட்டையாடவிருப்பங்கொண்டு, ஆரணியத்திற்சென்றான். எ-று. (க)

பூட்டுவெஞ்சிலையிற்காலும்பொங்கழற்பகழிதூர்த்துக்
காட்டினுள்வல்விலங்கின்கணமெலாந்தொலைக்குங்காலை
வேட்டஞ்செய்விருப்பினான்முன்னிருவரோர்வயிற்றின்மேய
வாட்டிறலரக்கரங்கிவனாயெனவந்தெதிர்த்தார்.

(இ-புரை.) நாண்பூட்டிய கொடியசிலையில்வைத்து வெப்பமிகுந்த தீயைக்கக்கும்படியான பாணங்களைப்பிரயோகஞ்செய்து, காட்டினிடத்திருக்கு மிருகக்கூட்டங்களையெல்லாம் அழிக்கும்போது, வேட்டையாடும்விருப்பமுள்ள அவ்வரசன் முன் ஒருதாய்வயிற்றிற் பிறந்தவர்களாய், வாட்போரில்வல்லவராகிய இரண்டுராக்ஷதர்கள் அக்கினிமலைபோலவந் தெதிர்த்தார்கள். எ-று. (உ)

அவ்வரக்கர் கரிய வுருவினரேயாயினும் கோபத்தின் வேகத்தைப்பற்றி "அக்கினிமலை" என்றனர்.

முன்புறவெதிர்ந்துபோர்செய்முன்னவன்றன்னைவாளாற்
றுன்புறமாய்த்தான்முன்னோன்றொலைவுகண்டிளையநீசன்
வெந்புறங்காட்டியேகிமீண்டுவஞ்சனையால்வெல்வான்
அன்புடைமனிதனாய்வந்தரசனதடியிற்றாழ்ந்தான்.

(இ-புரை.) தன்னெதிரில்முனைந்து போர்செய்கின்ற மூத்தவனைஅந்தஅரசனானவன் வாளாயுதத்தினால் துன்படையக்கொன்றான், அண்ணனிறந்ததைக்கண்டு தம்பியாகியநீசனானவன், முதுகுகாட்டியோடிப்போய், வஞ்சனையால் வெல்ல எண்ணங்கொண்டு, அன்புள்ளமனிதவுருவங்கொண்டு வந்து, அந்தமன்னவன்பாதத்தில் வணங்கினான். எ-று.

இங்கு நீசனென்றது இராக்ஷசனை. (௩)

அரசனும்வரவேதென்னவரக்கனுமண்ணலேயுன்
குரைகழற்கேவல்செய்யுங்கொள்கையினடைந்தேனென்று
ளிறபனுங்குவந்துவஞ்சனிலையினைச்சிறிதுந்தேரான்
வரிசையினடிசினல்குமடைத்தொழிலவனுக்கீந்தான்.

(இ - புரை) அரசனவனைக்கண்டு நீவந்தகாரண மென்னவென்றுவினவ, அந்தராக்ஷசன் மகாராசாவே? உம்முடைய வீரகண்டையணிந்த பாதங்களுக்குக் குற்றேவல்செய்யு மெண்ணத்துடன்வந்தேனென்றான்; அதைக்கேட்ட அரசன் சந்தோஷித்து அவன்மோசநினைப்பைக் கொஞ்சமுமறியாமல்கிரமமாகச் சமயல்செய்யு மடைத்தொழிலை அவனுக்குக்கொடுத்தான். எ - று. மடை சோறு. (௪)

வெருக்கொளவிலங்குமாய்க்கும்வேட்டையங்கானநீங்கி
யரக்கனுமுடன்வந்தெய்தவயோத்தியினடைந்துவேந்தன்
மருக்கமழ்குமுதச்செவ்வாய்மதயந்தியோடும்வாழ்நாள்
உருக்களினகன்றிறந்தோர்க்கூட்டுநாளுற்றதன்றே.

(இ - புரை.) பயங்கொள்ளும்படி மிருகங்களைக்கொல்லும் வேட்டையாடுகின்ற அழகியகாட்டினைவிட்டு நீங்கி அந்தராக்ஷசனுங்கூடவரும்படி ராசனானவன், அயோத்தியிற்போய்ச்சேர்ந்து, வாசனைகமழ்கின்ற செவ்வல்லிமலரையொத்த வாயையுடைய மதயந்தியுடன் வாழ்கின்றநாளில், உடலை விட்டிறந்த பிதிர்களுக்குச் சிரார்த்தஞ்செய்யுநாள்வந்தது. எ - று. அன்று-ஏ-இவ்விரண்டுமசை. (௫)

தென்புலவாணர்க்கோகைசெய்யுநாளிதுநாளென்ன
மன்பதைபுரக்கும்வேந்தன்வசிட்டனைவரித்துப்பூசித்
தன்பினூண்மிசைகவென்றானரக்கன்றனெண்ணந்தீர்ப்பா
னன்கலத்தமுதத்தோடுநரருடையூனிட்டானே.

(இ-புரை.) தெற்குத்திசையில்வாழ்கின்றவர்களாகிய பிதிர்க்களுக்குச்சந்தோஷத்தையுண்டாக்கும் நாளாகிய சிரார்த்தநாள் இந்நாளென்று புரோகிதன் சொல்ல, மனிதர்களைக்காக்கும் அரசனானவன், வசிஷ்டமுனிவரைஅழைப்பித்து

அன்புடன் ஆராதனைசெய்து அமுதுகொள்ள வேண்டுமென்றான் (வஞ்சித்து வந்திருக்கின்ற) அந்த ராக்ஷசனானவன், தன்எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள வசிஷ்டமுனிவருக்குப் பொற்பாத்திரத்தில் *நல்லஅமுதத்துடன் நரமாமிசத்தைப்படைத்தான். எ-று ஏ-அசை. (கூ)

உயத்தவூன்மனிதரூ'ஒனன்றுள்ளத்திடுனோர்ந்துதூய
மெய்த்தவன்கனன்றுசீறிவெய்யவன்வஞ்சமோரான்
வைத்துறுசினத்தானக்கமன்னனையிதுநீசெய்தாய்
அத்தவைநரரூன்றின்னுமரக்கனேயாதியென்றான்.

(இ - புனா.) படைத்தமாமிசம் நரமாமிசமென்று தம்முள்ளத்திலறிந்து பரிசுத்தமுள்ள மெய்யானதவத்தையுடைய வதிஷ்டமுனிவர், அந்த அரக்கன் செய்தவஞ்சகத்தை யறியாதவராய், மனங்கொதித்துச்சீறிப், பொருந்தியகோபத்தினையுடையவராய், அந்தமன்னவனைப்பார்த்து, (சிரார்த்தகாலத்தில், அஜமாமிசம் படைக்கவேண்டுவது வேதவிதியாயிருக்க அதைவிட்டு) இப்படியக்கிரமமானகாரியம் நீசெய்ததினாலே, காட்டினிடத்திற்சஞ்சரித்து நரமாமிசத்தை உண்ணும அரக்கனுகக்கடவையென்று சபித்தார். எ-று.

அஜம்-ஆடு. எவ்வளவு ஞானிகளானாலும் ஞானதிருஷ்டியாலறிந்தாலன்றி, உண்மை விளங்குவ தருமையென்பது இதனால் தெள்ளிதிற் புலப்படும். (எ)

சாபத்தைநவின்றமேலோன்றன்னுளத்தினின்மேய
கோபத்தினின்றுநீங்கிக்கொடியவல்லரக்கன்செய்த
ஆபத்தென்றறிந்துவேந்தேயறிகிலேன்சபித்தவிந்த
பாபத்தின்றகைமைதீர்ப்பாய்பன்னிருபருவத்தென்றான்

(இ-புனா.) சாபமிட்ட வதிஷ்டரானவர், தம்முள்ளத்திலுண்டாகிய கோபத்தினின்றும் நீங்கிக் கொடுந்தொழில் செய்கின்ற வலியஅரக்கன்செய்த ஆபத்தென்றறிந்து, அரசனே! உன்னாலே நேரிட்ட தல்லவென்றுணராமல், நான் சபித்த இந்தப்பாபத்தின்தன்மையைப் பன்னிரண்டுவருஷத்தில், தீரப்பாயென்று சொன்னார். எ - று. (அ)

வரிசிலையுழவன்றானுமறைமுனிதன்னைநோக்கிப
பெருகியசினத்தனாகிப்பிழைபுரியாதேன்றன்னை
நிருதனாகென்னச்சொன்னநின்னையும்வெய்யசாபம்
புரிகுவனென்றுசாபப்புனலினைக்கையிற்கொண்டான்.

(இ - புனா.) நீண்ட வில்லின்தொழில்பழகினவனாகிய அவ்வரசன் வேதமுணர்ந்த வசிஷ்டமுனிவரைநோக்கி மிகுந்தகோபமுடையவனாய்க் குற்றஞ்செய்யாத என்னை அரக்கனுகக்கடவையென்றுசபித்த உனக்கும் நான்

கொடிய சாடமிடுகிறேனென்று சாபநீரைக் கையில்ஏற்றுக்கொண்டான். எ-று. தான்குற்றமிலனாதலின் மறுசாபமிடத்துணிந்தனன். (௯)

கண்டனன் கலங்கித் தேவிமதயந்திகாவல் வேந்தே
எண்டருமன்னர் தம்முட் குரவனைக் காய்ந்தார் யாரே
விண்டெடுமெவருளிதீர் வாயென்றவளை விளம்பவேலோன்
கொண்டசாபநீர் தன்றனை கழற்றுளிற்பெய்தான்.

(இ புனா.) மதயந்தியென்னும் அவன் மனைவி யானவள் அதைக்கண்டு மனங் கலங்கி (மன்னுயிரைக்காக்கும்) காவல் பூண்ட அரசனே? யாவரும் எண்ணும்படி யான மேன்மையுள்ளமன்னர்களுக்குள் ஆசாரியனைக கோபித்தவர்கள் யாரு மிலலையே, ஆதலால அதிகரித்து வருகின்ற கோபத்தைத் தணிப்பாயாகவென்று அவள்சொல்ல, வேலேந்துமவ்வரசன் தன்கையிலேற்றுக்கொண்ட சாபநீரைச் சந்தியாகின்ற வீரகண்டையணிந்த தன்காலில விட்டுக்கொண்டான். எ - று. ஏகாரம் - எதிர்மறை. (௧௦)

தீக்குறுசாபநீராற் செமமலரெரிந்தே பொன்னப்
பூங்கழற்கால் களாங்கேயொள்ளொனக்கறுத்தலோடும
பாங்குவோர் காமைமன்னன் கன்மாடபாதனாகி
வாங்கருங்குருசாபத்தாலரக்கனாய்வனத்திற்புக்கான்.

(இ - புனா.) நிமையுள்ளசாபநீரினால செந்தாமரைமலர் தீயிற்படிந்தது போல் பொலிவுள்ளதாய வீரகண்டையணிந்த கால்கள் அப்பொழுதே கறுத்த மாத்திரத்தில பக்கத்திலிருப்பவர்களெல்லாங்காண அம்மன்னவன் கன்மாட பாதனாகி நீக்குதற்கரிய குருவின்சாபத்தால் ராக்ஷதருபங்கொண்டு ஆரணியத் திற்போய்ச் சேர்ந்தான். எ - று. கன்மாஷம்-என்பது கறட்டு. (௧௧)

வேறு.

நெடிமுழங்கிச்செவிடுபடும்போடவியிடந்தோறுநெடுவேய்தேய்ந்து, படுகனலிற்சிகையணைச்சுறுநாறுமயிர்க்கவிகள்பதறிப்பாயப், புடைகளக்கத்தனினங்கள்பகன்மதியையிருளென்னப்புகுந்துமொய்க்கும், குடுமிவரையிடந்தோறும்பலவிலங்கின்குலமனைத்துங்கொலைசெய்துண்டான்.

(இ புனா.) காட்டுத்தீ சடசடவென்றொலிக்கக் கேட்போர்காதுகள் செவிடு படும்படியான பெரியகாடுகள்தோறும், நீட்சியையுடைய மூங்கிலகளொன்றோ டொன்று தேய்ந்து உண்டாகாநின்ற தீயின் சிகைபொருந்தச் சுறுநாறும்படி யான உரோமங்களுள்ள வானரங்கள் பதறி மரங்களில்பாயவும், அம்மரங்களி னிடத்திலிருக்கும் வண்டுக்கூட்டங்கள் பகலில்தோன்றுஞ் சந்திரனைத் தேன்கூ

டென்றுசுருதி அதனிடத்திற்சென்று மொய்க்கவுமாக இராநின்ற சிகரங்களை யுடைய மலையிடங்கள்தோறுஞ் சஞ்சரித்துக்கொண் டிராநின்ற பலவகையாகிய மிருகக்கூட்டத்தையெல்லாங் கொன்று புசித்தான். எ - று.

வானமளாவிய மலையென்பதுதோன்ற பசுன்மதியை "இருலென்னப் புகுந்துமொய்க்கும்" என்றனர். (கஉ)

மாயிருஞாலப்பரப்பின்மன்னுமுடலனைத்தினுக்குமயானமென்னக்
காயுமிரும்பசியுதரக்கனற்குழியைநிணந்தூர்த்துக்கழிக்குநாளில்
தூயவொருமுனிபுதல்வன்புதுவதுவைபுரிந்தவிளந்தோகையோடுந்
தீயதிறல்வாளரக்கன்வரவறியானவ்வனத்திற்சென்றான்மன்னோ.

(இ-புரை.) மிகுந்த பெருமையையுடைய இவ்வுலகத்தில் அகன்ற இடமெங்கும் பொருந்தியசரீரங்களுக்கெல்லாஞ் சுடுகாடு என்றுசொல்லும்படிசுடுகின்ற மிகுந்தபசியுள்ளவயிறாகியதீக்குழியை மாமிசங்களால்நிறைத்துக் காலங்கழிக்கு நாளில், பரிசுத்தமுள்ள ஒரு ரிஷிகுமாரன், புதிதாக விவாகஞ்செய்துகொண்ட இளமைப்பருவமுடைய தன்மனைவியுடன் கொடியவலியுள்ள கொலைத்தொழில் செய்யும் அந்தராக்ஷதன் வருவதையறியாமல் அந்தக்காட்டிற்போனான். எ - று. மன் - ஓ - இவ்விரண்டுமசைகள். (கஙு)

வந்தவனைக்கண்டரக்கன்வாளெயிறும்பிலவாயும்வயங்கநக்காங்
குந்தியுறுபசிதணிக்கவந்தானென்றுன்னுதொறுமுவகைபொங்கக்
கொந்துமலர்ச்சிறுகுடுமிமறைமுனிவன்காளைதனைக்குருதிவேட்டு
முந்துசினப்புலிசேதாவிளங்கன்றைக்கவர்ந்ததெனமுனிந்துபற்றா.

(இ-புரை.) வந்த அந்தரிஷிபுத்திரனைக்கண்டு, ராக்ஷதனானவன், வாள்போன்றகோரப்பல்லும், பிலத்துவாரம்போன்றவாயும், பிரகாசிக்கும்படிநகைத்து, அப்போது தன்வயிற்றில் மிகுந்திருக்கின்ற பசியைத்தணிக்கவந்தானென்று நினைக்குந்தோறும் சந்தோஷம் தனக்குள்ளேபொங்க உதிரத்தைக்குடிக்கவிரும்பி முன்னதாக உண்டாகின்றகோபத்தையுடைய புலியானது ஒருபசுவினிளங்கன்றைப் பிடித்துக்கொண்டதுபோலக் கொத்தாகியபூமாலையணிந்த சிறுகுடுமியை யுடைய வேதமுணர்ந்த அந்தரிஷிபுத்திரனைக் கோபங்கொண்டுபிடித்து எ - று.

எதுகைநோக்கி கொத்து என்பது கொந்தென்றாயது. பற்றா என்பது செய்யாவென்னும் வாய்பாட்டு வினைமுற்று. (கச)

கொலைபுரிவானுறுகாலையதுகண்டுவெருவிமலர்க்கொம்பரன்னாள்,
நிலைகளர்ந்துகைநெரித்துநெடுங்கண்ணீர் முலைமுன்றினிறைப்பச்சோர்ந்து, தொலைவில்புகழ்ப்பரிதிகுலத்தொல்வேந்தேமதயந்திதோயுஞ்
செம்பொன், மலைபொருவுமணிமார்பாவென்றேத்தியினைந்தினையமாற்
றஞ்சொன்னாள்.

(இ-புரை.) கொலைசெய்யத்தொடங்கும்போது, அதைக்கண்டு ரிஷிபுத்திரனுடையமனைவியாகிய பூங்கொம்பையொத்த அழகுள்ளவள்பயந்துநிலைதளர்ந்து, கைகளைநெரித்துக்கொண்டு, நெடியகண்ணீரானது முலையினிடத்தை நிறைக்கும்படியாகச்சோர்ந்து, பழமையாகிய சூரியகுலமன்னவனே? மதயந்திஆணையும் பொன்மலையையொத்த அழகியமார்பனே என்று துதிசெய்து மெலிந்து இந்த வசனங்களைச்சொன்னாள். எ-று. (கடு)

வல்வினையாலிவ்வுருவம்வாய்ந்தனைநீநிருதர்குலவழியானல்லை
சொல்வதுனக்கடாதுபிறருயிர்க்குதவிபுரிவதுங்கள்கொள்கையாமால்
வெல்கதிர்வேற்படைவேந்தேயிவனிறக்கில்யானுமுயிர்விடுவேனென்று
மல்குவிழிப்புனல்பாயத்தொழுதிரந்தோருயிர்ப்பலிநீவழங்குகென்றாள்.

(இ-புரை.) யாவராலும்விலக்கக்கூடாத வலியையுடைய வினையினால் இந்த உருவம்பெற்றனை; நீராக்ஷசகுலச்சந்ததியிற்பிறந்தவனல்லை; ஆதலால் கொல்வதுனக்குத்தகுதியல்ல; பிறருயிருக்கு தவிசெய்வது உங்கள்குணமாம், பகைவரைவெல்லுகின்ற ஒளிதங்கிய வேலாயுதமேந்தும் அரசனே! இவனிறந்தால் நானுமுயிர்விட்டுவிடுவேனென்று நிறைந்தகண்ணீர்பாயும்படித் தொழுதிரந்து ஒப்பற்றதாகிய உயிர்ப்பிச்சை நீதாவென்றாள். எ-று.

குருசாபம்கொடியது என்பதுதோன்ற "வல்வினை" என்றார்.

தனக்குமேலோரானால் ஈ எனறும், சமனானவரானால் தாவென்றும், கீழ்ப்பட்டவரானால் கொடுவென்றுஞ் சொல்லவேண்டும். (கசு)

மனமறுகுற்றிவ்வாறுகவன்றுரைக்குமுரைநிருதன்மனக்கொள்ளானாய்ப், பூமலர்த்தார்வேதியனையுயிர்செகுத்துத்தசைசுவைத்துப்புண்ணீர்மாந்திக், கனநிணங்கண்மூளைகுடர்மென்றருந்தியென்பனைத்துங்கழித்துவாயால், இனவளோடாண்முன்னுமிழ்ந்தானென்செய்வாளுமிழ்ந்தவெலாமெடுத்துக்கொண்டாள்.

(இ-புரை.) மனம் உடைந்து இப்படியாக வருந்திச்சொல்லுகின்றவார்த்தையை அந்தராக்ஷதன் மனதிலேற்றுக்கொள்ளாதவனாய்ப், பூமாலையணிந்திருக்கும் ரிஷிபுத்திரனுடைய உயிரைக்கொன்று, மாமிசத்தையுண்டு, உதிரத்தைக்குடித்துக்கொழுத்திருக்கும் நிணங்களையும் மூளைகளையுங் குடல்களையு மென்றுதின்று எலும்புகளையெல்லாங்கழித்து வாயினால் ரிஷிபுத்திரன் மனைவியெதிரில் துப்பிவிட்டான் (அதைக்கண்டு எதிர்செய்யும்வலிதனக்கில்லாமையினால்) என்னசெய்வாள் அவன் துப்பிவிட்டதையெல்லாம் எடுத்துக்கொண்டாள். எ - று.

சதைஎன்பது தசையென்றாயிற்று. (கஎ)

எழுந்துபடர்கதழெரியினவ்வென்பையிட்டிறைஞ்சியின்னசெய்தோன், செழும்பதியிற்புகுந்துரிமைமதயந்திமுதலாயதேவிமாரைத்,

தழும்பொழுதிலாருயிர்மாண் டொழிகவெனக்கொடுஞ்சாபஞ்சாற்றித்
தாறும்,கொழுந்தெரியிற்புக்கவிந்தாளாண்டகையுமவ்வனத்திற்குலவு
நாளில்.

(இ-புரை.) சிகைவிட்டெழுந்து சுவாலைவீசுகின்ற மிருந்த காட்டு அந்த எலும்பையெல்லாம்போட்டு அக்கினிதேவனை வணங்கி இப்படிக்கொத்த பாவமானகாரியத்தைச்செய்த இந்தப்பாதகனவன் சாபர்தீர்ந்து வளப்பமுள்ள தன்பதியிற்சேர்ந்து தனக்குரிய மதயந்திமுதலான தேவிமார்களைத் தழுவும் போது பெறுதற்கரிய உயிமாண்டுபோகக் கடவனென்று கொடியசாபஞ்சொல்லித்தாளும் சிகைபடர்ந்தெரிகின்ற அநதத்தீயில்விழுந்திறந்துபோனாள்; அதன் பின்பு ராக்ஷதனாகிய அரசன் அந்தவனத்திற் சஞ்சரிந்துக்கொண்டிருக்கும் போது. எ - று. தழுவும் என்பது எதுகைநோக்கித் தழுமென்றாயது.

பெறுதற்கரிய உயிரென்றது, உயிர்களுக்கு மானிடசரீரம் கிடைத்தலரிதென்பதுகருத்து. (கஅ)

வேதமுனிசாபநீர்ந்தரக்கவுருவகலவிறல்வேந்தன்வேளுங்
காதலுறுமுருவெய்திமுன்புபோலயோத்திநகர்கடிதினெய்திச்
சீதமதிவாண்முகத்துமதயந்திகலவிகலத்தேறலுண்பான் [னோ.
போதகமொனறதனபிடியின்சேவகம்புகவெனக்கோயில்புக்கான்மன்

(இ-புரை.) வேதமுணர்ந்த வதிஷ்டருடைய சாபநீங்கி ராக்ஷசருபமாறவே வெற்றியுள்ள அரசனானவன் முன்போல மன்மதனும் ஆசைகொள்ளத் தக்க தன் பழையவுருவத்தைஅடைந்து விரைவாக அயோத்திநகரிற்சேர்ந்து குளிர்ச்சிதங்கிய சந்திரனையொத்த ஒளிபொருந்திய முகத்தையுடைய மதயந்தியென்னும் தன்மனைவியிடத்தில் மதுரமுள்ள தேன்போல இனிமையைத்தருகின்றகலவியின்பம் அனுபவிக்க ஒருஆண்யானையானது கிரீடையைவிரும்பித் தன் பெட்டையானை நித்திரைசெய்யு மிடத்திற் சென்றதுபோல் தன்மனையிற்போனான், எ - று. மன்-ஓ-அசை.

முகம் சந்திரனுக்குவமையானதால் அம்முகத்திலுள்ள இதழினமுரதேறல் சந்திரனிடத்துற்ற அமிர்தத்துக்கொப்பாம். (கக)

வேறு.

கோயில்புக்குநற்குருமணிநெடுமுடிக்குரிசில்
வேயின்மிக்கநல்லுருவமைவெள்வளைத்தோளி
யாயமைக்கணண்மதயந்தியணிமுலையவாவில்
தோயுவுற்றனன்மறுத்தனளிவைவிவைசொன்னாள்.

(இ-புரை.) தனமனையறச்சார்ந்து நல்ல சிவந்தநிறமுள்ள ரத்தினங்கள் பதிக்கப்பட்ட நெடியமகுடத்தை யணிந்திருக்கும் அரசனானவன் பசியமூங்கிலி

னழகைப்பார்க்கிலும் மிகுந்த நல்ல அழகமைந்த சங்குவளையலணிந்த தோளை யுடையவளாகிய மையிட்டகண்களையுடைய மதயந்தியின் ஆபரணங்களணிந்த தனத்தை ஆசையுடன் அணையப்போனான். அவள் தடுத்துச் சிலவசனங்களை வகுத்துச் சொன்னாள், எ - று. (உ௦)

உற்றவாறொன்றுமுணர்ந்திலைபோலுநீயுயர்கான்
முற்றநாடிவல்லரக்கனாய்முனிவரன்சேயைப்
பற்றிநுங்கினைகண்டவன்பார்ப்பனிசீறிச்
சொற்றவாசகங்கேளெனவிளைந்தவைசொல்வாள்

(இ - புரா.) உனக்குச்சம்பவித்தமுறைமையை நீசிறிதும் அறிந்திலையோ (அது என்னவெனில்) நீ ராக்ஷதனாய் உயர்ந்தகாடுகளெங்கும் ஆகாரத்தைவிரும் பித்திரியும்போது அவ்விடத்தில நேரிட்ட ஒரு ரிஷிபுத்திரனைப்பற்றிக்கொண்டு கொன்றுதின்றாய், அப்போது அவன் மனைவியானவள் கோபித்துச் சாபங்கூறிய தைக் கேளெனச் சம்பவித்த காரியங்களைச் சொல்லுகின்றாள், எ-று போலுமெ ன்பது-முன்னிலையசை. (உ௧)

இணையிலாதவென்கொழுநனையின்னுயிருண்ட
பணைநெடும்புயமன்னவபதியினிற்புகுந்துன்
துணைவிமார்கடந்துணைமுலைச்சுவடுமார்பிறுக
அணையுநாளுயிரிறத்தியென்றழல்புகுந்தவிந்தாள்.

(இ-புரா.) ஒப்பில்லாத என கணவனுடைய இனிய உயிரைநீக்கிய பருத்து நீண்டபுயங்களையுடைய மன்னவனே ? அயோத்திநகரிற் சேர்ந்து உன் மனைவிய ருடைய இரண்டுதனங்களின் தழும்புகள் மார்பில்அழுந்தும்படி அணையுநாளில் உயிரிறந்துபோகக்கடவையென்று தீயில் விழுந்திறந்தாள். எ-று.

உலகத்துற்றவை எல்லாவற்றினுஞ் சிறந்துள்ளது உயிராதலின் "இன்னு யிர்" என்றனர். (உஉ)

அன்னதாலெமையணைவதற்கடாதுனக்கென்றாண்
மன்னர்மன்னனும்பசியினால்வருந்தியவொருவன்
பொன்னினன்கலத்தமுதுபெறறுணப்பொறியிலான்போல்
இன்னலெய்தினன்காமவேள்கணையினாலிடைந்தான்.

(இ-புரா.) அப்படிக்கொத்தசாப நேரிட்டிருக்கிறபடியினாலே எங்களை யணைவதற்கு உனக்குத்தகாதென்று சொன்னாள்; அதைக்கேட்ட மன்னர்மன்ன னாகிய கன்மாடபாதவரசனானவன் பசியினால்வருந்திய ஒருவன் பொன்னாலாகிய நல்லபாத்திரத்தில் அன்னமிடப்பெற்றும் உண்ணுதற் குபயோகமானஉறுப்புகளி ல்லாதவனாகியதுபோல் முன்மதயானைத்தினால் துன்பமுடைந்து இடைந்து நின் றான், எ - று.

பெண்ணலத்தினைப்பெறுதவர்மகவினைப்பெறுதார்
பெண்ணலத்தினைப்பெற்றவரேமகப்பெற்றார்
பெண்ணலத்தினன்மகவுபெற்றிருமையும்பெறுவார்
பெண்ணலத்தினலன்றியோர்பெறும்பொருளின்றே.

(இ-புரை.) பெண்ணின்பத்தை அனுபவிக்கப்பெறுதவர்கள் புத்திரர்களைப் பெறுதவர்களாவார்கள்; பெண்ணின்பத்தை அனுபவிக்கப்பெற்றவர்களே புத்திரர்களைப்பெற்றவர்களாவார்கள்; பெண்ணின்பத்தை அனுபவிப்பதினால் புத்திரர்களைப்பெற்று இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் அடைவார்கள்; பெண்ணின்பத்தினலன்றிப்பெறும்பொருள் யாதொன்றுமில்லை. எ-று. ஏ-அசை. (உச)

உந்துநீர்க்கடலுடுத்தபார்முழுவதுமொருங்கே
வந்துதாடொழுமரசியல்வளமெலாம்பெறினும்
இந்திராதியர்பெறும்பதத்திருக்கையெய்திடினு
மைந்தரின்றியேவாழ்வதுவாழ்வுமற்றன்றே.

(இ-புரை.) அலைவீசுகின்ற நீரையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த பூமியிலுள்ள எல்லாரும் ஒருகூட்டமாகவந்து பாதங்களிற்பணியத்தக்க அரசுக்குரிய வளங்களெல்லாம்பெற்றிருந்தாலும், (அல்லது) தேவேந்திரன்முதலானதேவர்கள்பதங்களி லிருக்கும் பேறுகள்பெற்றாலும் புத்திரரில்லாமல் வாழ்வதுவாழ்வல்ல எ-று. மற்று-அன்று-ஏ-அசைநிலைகள். (உரு)

என்றுபற்பலசிந்தையிலெண்ணிவேலிறைவன்
குன்றுமாண்புடைத்தரசியலினியென்றுங்குறியா
னின்றுமாதவம்புரிவதேகடனெனநினைந்து
சென்றுகானடைந்தருந்தவஞ்செய்தனனிப்பால்.

(இ-புரை.) என்று பலவாகத்தன்மனதிலெண்ணிக்கொண்டு வேலாயுதமேந்தும் அரசன் நாம்துறந்துவிட்டால் இனி அரசியல்குன்றுந்தன்மையையுடையதாகுமேயென்பதையுங்குறியாதவனாய், வனத்திற்போயிருந்துகொண்டு பெருமைபொருந்திய தவஞ்செய்வதே நமக்குமுறைமையென்றெண்ணி இல்வாழ்க்கையைத்துறந்துபோய்க் காட்டிற்சேர்ந்து அரியதவத்தைச் செய்தான், இப்பால் நடந்ததென்னவெனில். எ-று. (உசு)

வேறு.

காவலன்றனக்குப்பின்னோர்காண்முளையில்லையென்று
பூவலயத்திலுள்ளோர்புகல்வதும்பொருந்தாரீறும்
யாவையுமுணர்ந்த[illegible]
பாவருந்துயரந்தீர்க்கும்படிநினைந்தினையசெய்தான்.

(இ-புரை.) நம்முடைய அரசனுக்குப்பின்பு (இந்தராச்சியத்தை தக்காப்பதற்கு) ஒருபுத்திரனுவதில்லையேயென்று இவ்வுலகத்திலுள்ளவர்களிரக்கமுற்றுச்சொல்வதும்,பகைவருடையகீருப்புமாகிய இவைகளையெல்லாம் அப்போது அறிந்த நீதியுள்ள வசிஷ்டமுனிவரானவர் தருமசந்தானமுண்டாக்கலாம் என்கிற வாக்கியத்தை ஆராய்ந்துணர்ந்து நேரிட்டிருக்கிறதுயரத்தை நீக்கும்படியெண்ணி யிந்தக்காரியத்தைச் செய்தார். எ-று. (உஎ)

அருந்ததியனையகற்பின்மதயந்தியணங்கனுள்பாற்
பொருந்தியின்கலவிதுய்த்தோர்புதல்வனைத்தந்துதீரா
இருந்துயருலகந்தீரவியற்றினன்முனிவனிப்பாற்
பெருந்தகைதவஞ்செய்வானைப்பேய்மகளொருத்திபற்றி.

(இ - புரை.) அருந்ததியையொத்த கற்பினையுடைய மதயந்தியென்னும் தெய்வபெண்ணை யொத்தவளிடத்திற்சேர்ந்து இனியகலவிசெய்து ஒருபுத்திரன் உற்பத்தியாகும்படிபுரிந்து உலகத்துககுநேரிட்டிருந்த மிகுந்ததுயரந்தீரும்படி வசிஷ்டர்செய்தார்; (அங்கப்படியிருக்கக் காட்டில்நடந்ததென்னவெனில்,) தவஞ்செய்கின்ற பெருந்தகையாகிய அரசனை ஒருபேய்மகள்தொடர்ந்து. எ-று.

அரசனில்லாததேசம் உயிரில்லாதசரீரத்தையொக்குமாதலால், தர்மசந்தானமுண்டாக்குதல்சாஸ்திரவிதியே. இப்படித்தர்மசந்தானமுண்டாக்குகிற முனிவருக்காவது ஸ்திரிகளுக்காவது தவத்திலும் பதிவிரதாதருமத்திலும் பழுதில்லை; அவ்வாறுசெய்ய இசையாவிட்டால், பட்டத்துயானையைக்கண்கட்டிச் செல்லவிட்டு அதனால் எடுத்துக்கொண்டுவரப்பட்டவனுக்குப் பட்டங்கட்டத்தக்கது. ()

பிறையெயிறிலங்கக்கண்கள்பிறங்கெரிகதுவச்சீறிக்
கறைவிடமுருத்துவல்லேதொடர்தல்போற்றொடரக்கண்டாங்
கறைகழற்குரிசிறுனுமலகைமாதொருத்திபற்று
முறைமையேதென்னவேதமுனிவரைவினவினனே.

(இ - புரை.) பிறைபோல வளைவாகிய தந்தங்கள்பிரகாசிக்கவும், கண்களிலிருந்து மிகுந்ததீப்பொறியானதுசிந்தவும், சீறிக்கரியவிடமானது கோபித்து விரைவாகத் தொடர்தல்போலத் தன்னைத்தொடரக்கண்டு ஒலிக்காநின்ற வீரகண்டையணியும் அந்தமன்னவன் ஒரு பேய்மகளானவள் என்னைப்பற்றுதற்குக் காரணமென்னவென்று அங்கிருக்கும் வேதமுணர்ந்த முனிவர்களை வினவினன். எ - று. ஏ அசை. (உகூ)

கேட்டலுமுனிவரெல்லாங்கிளியெனமிழற்றுமாதர்
மோட்டிளமுலைகள்பாய்ந்துமுருகுகொப்பளிக்குந்தாரோய்
காட்டினிலரக்கனும்முன்காளைவேதியனைநீகொன்
றீட்டியபாவங்கண்டாயலகையாயெய்திற்றென்றார்.

(இ - புரை.) அவன் சொன்னவார்த்தையைக் கேட்டமாத்திரத்தில அந்த முனிவர்களெல்லாரும் (அவனைப்பார்த்துக்) கிளியைப்போல வசனிக்கின்ற மாதர்களுடைய உயர்வாகிச் சாயாத தனங்கள்பட்டுத் தேனைகொப்பளிக்கும்படியான (பக்குவமுள்ள அரும்புகளால்தொடுக்கப்பட்ட) பூமாலையணிந்த மன்னவனே? நீமுன்னே ராக்ஷதனுய்க் காட்டில்சஞ்சரிக்கும்போது அங்குநேரிட்டவாலிபனாகிய ஒரு ரிஷிபுத்திரனைக்கொன்று சம்பாதித்துக்கொண்ட பாவங்கண்டாய் இப்போதுபேயாகவந்து உன்னைப்பற்றிக்கொண்டதென்றார்கள். எ - று. (கூ0)

மாதவரிசைப்பக்கேட்டேமன்னனுமிதனைநீக்கச்
சேதுவேமுதலாயுள்ளபுனிதமாந்தீர்த்தம்யாவுங்
காதலான்மூழ்கிமூழ்கிக்கடவுளாலயங்களேத்திப்
பாதகவினைகடீர்க்குமபதிபலவணக்கஞ்செய்தான்.

(இ - புரை.) முனிவர்சொல்லக்கேட்ட மன்னவனும் இந்தப்பாவத்தைநீக்கச் சேதுமுதலாயுள்ளபுனிதமாகிய தீர்த்தங்களிலெல்லாம் ஆசையுடன் தனித்தனியே மூழ்கியும், சிவாலயங்களிற் போய்ப் பரமசிவனைத் துதிசெய்தும் இப்படியாகப் பாவவினைகளைத் தீர்க்கத்தக்க அனேகம் ஸ்தலங்களிற்போய் வணங்கினான். எ - று. (கூக)

அங்கண்மாஞாலவட்டத்தாலயந்தலங்கடீர்த்தம்
எங்கணுமுழன்றும்பாவந்தீரகலாதிருத்தலாலே
வெங்கதிர்பபுரவிமான்றேர்விலங்கெயின்மிதிலைஞாங்கர்
மங்குறோய்பொழிலின்மேவிவருத்தமுற்றிருந்தான்மன்னோ.

(இ-புரை.) அழகிய இடத்தையுடைய பெரியபூமியினிடத்திலுள்ள ஆலயங்கள், ஸதலங்கள், தீர்த்தம் எங்குமுழன்றுதிரிந்தும் தனக்குநேரிட்ட பாவந்தீராமலிருப்பதினாலே வெப்பம்பொருந்திய சூரியனுடைய குதிரைகட்டியதேரானது ஒதுங்கிப்போகத்தக்கதாக உயர்வையுடைய மதில்சூழ்ந்த மிதிலைநகரத்துச்சமீபத்திலிருக்கும் மேகமண்டலத்தையளாவிய ஒருசோலையிற்சேர்ந்து வருத்தங்கொண்டிருந்தான் எ-று. மன்-ஓ அசைகள்.

பாடல்களினிறுதியில்வரும் மாது-மன்-ஆல்-அரோ-ஓ-அன்று-ஏ இவைகள் அசையெனக்கொள்க. இவைகளிற்சிலபாடலின்மத்தியில் ஏகதேசமாகவருவதுமுண்டு. (கூஉ)

ஆண்டவையிருந்தகாலையருந்தவமுனிவர்சூழ
ஈண்டுசெங்கதிரோன்றோன்றிவருவதேயெய்ப்பவொல்லை
காணடருவியபயிரேறுகெவுதமனவந்துதோன்றப்
பூண்டபேருவகைபொங்கப்புரவலன்வணங்கினின்றான்.

(இ-புரை.) அரசனப்படியிருந்தபோது அரியதவத்தையுடைய முனிவர்கள் அருகிற்சூழ்ந்துவரச் சூரியன்உதயமா யிவ்வுலகத்தில் வருவதையொப்பாக யாவருந்தரிசிக்கத்தக்க வியப்புள்ள (தவவேடத்துடன்) கவுதமரிஷிவிரைவாகவந்து

தோன்றக்கண்டு தனக்குண்டாகிய பெரியசந்தோஷம் அதிகரிக்க, அம் மன்னவன் வணங்கிநின்றான். எ - று. (௩௩)

நின்றமன்னவனை நோக்கிநீ பெருவளங்கண் மேவி
நன்றிருந்தனையோ வென்றுமுனிவரனவிலவன்றான்
என்றுநின்னருளைச்சேர்ந்தோர்க்கெய்திடா தீமையேனும்
ஒன்றுளதுரைக்கக்கேட்டியுத்தமவென்றுசொன்னான்.

(இ - புரை.) வணங்கிநின்றவேந்தனைக் கவுதமரிஷியானவர்பார்த்து ராசனே? மிகுந்தசெல்வத்தைப்பொருந்திச் சுகமாக இருக்கின்றனையோ வென்று வினவ அவ்வரசனானவன் (சுவாமீ) உம்முடைய கிருபையைப்பெற்றவர்களுக்கு ஒருகாலத்துந் துன்பங்கள்நேரிடாவாகிலும், ஒன்றுண்டு அதனைச்சொல்லுகிறேன் உத்தமரே கேளுமென்றுசொன்னான். எ - று. (௩௪)

எங்குலக்குரவன்முன்னாளியம்பியசாபந்தன்னால்
வெங்கொலையரக்கனாகிவேதியற்கொன்றபாவந்
தங்கியோரலகையாகித்தமியனைத்தொடர்தலாலே
அங்கதுதணிப்பானெண்ணியளவிலாவேள்விசெய்தேன்.

(இ-புரை.) எங்கள்குலக்குருவாகிய வசிஷ்டர் முன்னாள்கூறியசாபத்தினால் நான்கொடிய கொலைத்தொழில்செய்யும்ராக்ஷதனாகி ஒரு பிராமணனைக்கொன்ற பாவமானது ஒருபேயாகி ஆதரவில்லாத எளியேனைப்பற்றித்தொடர்தலினாலே அந்தப்பாவத்தைத்தீர்க்கஎண்ணி அளவில்லாத யாகஞ்செய்தேன், எ - று. (௩௫)

எண்ணினல்லறங்கள்செய்தேனெண்ணின்மந்திரநவின்றேன்
புண்ணியதலங்கடீர்த்தமாலயம்பலவும்போனேன்
நுண்ணியசாகமூலபலங்களைநுகர்ந்தியான்முன்
பண்ணினேன்விரதங்கோடிபாவகமனந்தஞ்செய்தேன்.

(இ - புரை.) அளவில்லாத நல்லதருமங்கள்செய்தேன்;அளவில்லாதமந்திரங்கள்செபித்தேன்; அனேகமாகிய ஸ்தலயாத்திரையும் தீர்த்தயாத்திரையும் செய்தேன்;சிவாலயங்களும்போனேன்;(அவைகளுமல்லாமல்) நுட்பமாகிய இலைகளும்கிழங்குகளும் உண்டு, நான்முன்னே அனந்தம்விரதங்களும் அனுஷ்டித்தேன்; அனந்தந்தியானமுஞ்செய்தேன். எ - று. (௩௬)

இவ்வணம்பலபலகாலந்தானந்துடலளர்த்தனனாய
வவ்வியபாவநீங்கப்பெற்றிலேன்மறைக்குமெட்டாத்
திவ்வியமுனைவர்ந்தோயின்றுன்றிருமுகக்கருணைபெற்றேன்
அவ்வியமகன்றேனுய்வானருளெனவடியில்வீழ்ந்தான்.

(இ - புரை.) இவ்வாறு அநந்தங்காலந்திரிந்து உடலினைத்தேனல்லது, என்னைப்பற்றிய பாவத்தொலையப்பெற்றிலேன்; வேதத்துக்குமெட்டாத மெய்ஞ்ஞானப்பொருளையுணர்ந்தவரே! இன்றுதேவரீருடைய திருமுகக்கிருபையைப்பெற்றேன்; அதனால் பாவத்தை நீங்கினவனானேன்; இனி நான் கடைத்தேறும்படி கிருபைசெய்யுமென்று அவர்பாதத்தில்வணங்கினான். எ - று. (௩௭)

முனிவனுமிரங்கியஞ்சேன்மொய்ம்மலர்த்தாரோய்முக்கட்
டனிமுதலொருவனுண்டத்தகவினெனருளால்யார்க்கு
நனியிருவினைகடீர்ப்பானயந்தகோகன்னமுண்டென்
றினிதுணர்ந்தில்லைபோலுமத்தலத்தியல்புகேண்மோ.

(இ-புரை.) கவுதமருமனமிரங்கி நெருங்கியபூமாலையணியு மன்னவனே? நீபயப்படாதே. திரிநேத்திரங்களுடைய ஒப்பற்ற முதலாகிய பரமசிவனொருவனுண்டு; கிருபையுள்ள அந்தக்கடவுளின் அருளால் மிகுத்த இருவினைகளைத்தீர்ப்பதற்குயாவரும் விரும்புகின்ற கோகன்னமென்னு மொரு தலமுண்டென்று இனிதாக நீ யறிந்ததில்லையோ? அந்தத்தலத்தின் மகிமையைக்கேள். எ-று. போலும்-மோ-அசைச்சொல். (௩௮)

மந்தரகிரியும்வெள்ளிமால்வரையிடமும்போல
எந்தைவாழிட்முமஃதேயிந்திரனயன்மால்விண்ணோர்
சந்திராதித்தர்வேண்டுந்தவம்புரியிடனுந்தானு
மைந்துபாதகத்தோரேனுமடையின்வீடளிக்கும்வேந்தே.

(இ-புரை.) அரசனே? மந்தரகிரியில் வீற்றிருப்பதுபோலவும் பெரியவெள்ளிமலையாகிய கயிலாசகிரியினிடத்தில் வீற்றிருப்பதுபோலவும் நம்மையனைய பரமசிவன் வீற்றிருக்குந்தானமும் அந்தக்கோகன்னமாம். அந்தத்தலமானது தேவேந்திரன்,பிரமன்,திருமால், தேவர்கள், சந்திரன், சூரியன் என்னும் இவர்கள் வேண்டுந் தவஞ்செய்யுமிடமுந்தானகிப் பஞ்சமாபாதகரேயானாலும் தன்னிடத்தில்வந்து சேர்வார்களானால் (அவர்களுக்கும்) மோக்ஷத்தைக் கொடுக்கும். எ-று. பொய், கொலை, களவு, கள், காமம், எனப் பாதகம்ஐந்து. (௩௯)

எத்தலஞ்சென்றுந்தீராவிடும்பைநோய்வினைகளெல்லாம்
அத்தலநினைக்குமுன்னரகன்றிடுமுடிக்கோனாலுஞ்
சித்திரபானுவாலுமகன்றிடாத்திமிரவீட்டந்
தத்துவாம்புரவிமான்றேர்த்தபனனாலகலுமாபோல்.

(இ-புரை.) சந்திரனாலும்,அக்கினிதேவனாலும், நீங்காத இருட்கூட்டமானது தாவிச்செல்லுகின்ற பச்சைக்குதிரைகள்கட்டிய தேரையுடைய சூரியனால் நீங்கு

மாறுபோல எந்தத்தலத்திற்சென்றும் தீராத துன்பமுள்ள பிறவிநோயைத்தருகின்ற வினைகளெல்லாம் அந்தத்தலத்தை நினைக்குமுன்னமே நீங்கிவிடும். எ-று.

ஒன்றுமுற்றுணராரேனுமொப்பில்சீர்க்கோகன்னத்திற்
சென்றொருநிமிடம்வைகிற்சிறந்தவேறொருதலத்திற்
கன்றுமைம்புலனுமோப்பிக்கற்பகாலஞ்செந்தீயி
னின்றருந்தவங்கள்செய்யுநெடும்பயன்பெறுவர்கண்டாய்.

(இ-புரை.) யாதொன்றையுமாராய்ந்தறியுந் தன்மையில்லாதவர்களாயிருந்தாலும் ஒப்பில்லாத பெருமையையுடைய கோகன்னத்திற்சேர்ந்து ஒருநிமிஷப்பொழுது தங்கியிருந்தாலும், சிறப்புப்பொருந்திய வேறொருதலத்திலே ஐம்புலன்களையும் அடக்கிக் கற்பகாலம் அக்கினிமத்தியிலிருந்து அருமையாகிய தவங்கள் செய்தலால் வரத்தக்க அழியாதபயனைப்பெறுவார்கள். எ-று. (சக)

வேறு.

அப்பதிதன்னிலலங்கிலைவேலோய்
வைப்பெனவாழ்வருண்மாபலலிங்கம்
ஒப்பிலதாகியுறைந்துவிளங்கு
மெய்ப்பழிகாதைவிரித்திடின்முன்னாள்.

(இ-புரை.) பிரகாசியாநின்ற தகட்டுவடிவுள்ள வேலாயுதமேந்தும் அரசனே? அந்தக்கோகன்னத்தில் புதையலிட்டதனம் (கண்டெடுத்தவனுக்கு வாழ்வைத்தருவதுபோல் தன்னைத்தரிசித்தவர்களுக்குப்) பெருவாழ்வையருளுகின்ற மாபலலிங்கமானது, ஒப்பில்லாததாய் விளங்கிக்கொண்டிருக்கின்றது. அதனுடைய உண்மையான சரித்திரத்தை விவரித்துச்சொல்லில் முன்னாளில். எ-று.

ஒருவன் பாடுபட்டுத்தேடாது யாரிற்புதையுண்ட திரவியங்கிடைத்தால் சுகமடைவதுபோல யாதொருதவமும் செய்யாமலே சிவலிங்கத்தைத் தரிசித்தவர்கள் எளிதில் சிவத்தையடையலா மென்பதுகருத்து. (சஉ)

விலங்கலின்மாதவமெய்துதல்கண்டு
நலங்கெழுநாதனயந்தொருலிங்கம்
வலங்கொளநல்கிமகிழ்ந்துரைசெய்வான்.

(இ-புரை.) இலங்கைக்கு மன்னவனாகிய இராவணனானவன் வெள்ளிமலையாகிய கயிலாசகிரியில் தவஞ்செய்துகொண்டிருந்ததை அருள்மிகுந்த பரமசிவன் கண்டு இருபைகூர்ந்து உறுதிகொள்ளும்படி ஒருலிங்கங்கொடுத்தருளி மகிழ்ச்சியுடன் திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (சங)

மானவரக்கநின்வாழ்பதிதன்னுள்
யானுதவுஞ்சிவலிங்கமிருப்பின்
ஈனமுறாதவ்விலங்கையமர்க்காய்
வானவர்மாலயன்வந்தெனமலைந்தென்.

(இ-புரை.) பெருமையுள்ள இராவணனே! உன்னுடைய வாழ்வுள்ள இலங்கைப்பட்டணத்தினிடத்தில் இப்போது நாமருளிச்செய்த இந்தச்சிவலிங்கமிருந்தால், அந்த இலங்கைப்பட்டணமானது ஒருகாலத்துமழியாது (இதுவுமல்லாமல்) தேவேந்திரன்முதலாகிய தேவர்களும் விஷ்ணுவும் பிரமனும் போர்செய்யவந்து எவ்விதப்போர் செய்தால்தானென்ன (அந்தப்பட்டணத்துக்கொரு குறையும் நேரிடாது.) எ-று. (௩௪)

ஊர்தியினேறலொழிந்தனையேகிச்
சீர்பெறுநின்பதிசேர்த்துதிமற்றோர்
பார்மிசைவைத்திடல்பார்மிசைவைத்தால்
ஒதருலிங்கமெடுக்கவொணாதால்.

(இ - புரை.) தேரின்மேலேறிக்கொண்டு போவதைவிட்டு(நடந்துபோய்ச்) செல்வமிகுந்துள்ள உன்னூரில் (இந்தச சிவலிங்கத்தை) ஸ்தாபனஞ்செய், அவ்விடம்விட்டு மற்றொரு பூமியினிடத்தில் வைக்காதே. வேறொரு பூமியினிடத்தில் வைத்தால் சொல்லுதற்கரிதாகிய மகிமையுள்ள இந்தச்சிவலிங்கம் மறுபடியெடுக்கவொண்ணாது. எ -று. (௩௫)

என்னநிகழ்த்தியளித்தலிங்கந்
தன்னொடரக்கன்வழிக்கொடுசாரப்
பொன்னகர்வானவர்பொள்ளெனமேவி
மன்னினரைங்கரவாரணமுன்னர்.

(இ - புரை.) இவ்வாறு திருவாய்மலர்ந்து கொடுத்தருளிய சிவலிங்கத்தை யேந்திக்கொண்டு இராவணன்வழிநடந்தான். அதையறிந்த பொன்னுலகத்திலுள்ள தேவர்கள் ஐந்துகரங்களையுடைய யானைமுகக்கடவுளாகிய விநாயகரிடத்தில் அதிசீக்கிரமாகப் போய்ச்சேர்ந்தார்கள். எ - று.

பொள்ளென ஒலிக்குறிப்பு இடைச்சொல். என் என்பது என்ன என்பதன் குறைவ. (௩௬)

[illegible] துகாலமரக்கன்

முக்கண்ணனு [illegible]
திக்கணமேயிடைபூ [illegible] ர்.

(இ - புரை.) துதிக்கையையுடைய யானைமுகவிநாயகமூர்த்தியே! இராவண னைவனிப்போது (பரமசிவன்கொடுத்தருளிய) சிவலிங்கத்தைக்கொண்டுபோய் அந்தவிசாலமான இடமுள்ள இலங்கைப்பட்டணத்தில் ஸ்தாபிப்பானேயானால் திரிநேத்திரங்களையுடைய அந்தப்பரமசிவனாலும்அழிப்பதுமுடியாது (ஆகையால் இலங்கைப்பட்டணத்தில் கொண்டுபோகவொட்டாமல்) இப்பொழுதே அதற்கு இடையூறுசெய்தருளென்றார்கள். எ-று. (௪௭)

உம்பர்வருந்தியுரைப்பதுகேளா
நம்பனளித்தகையானனநாதன்
பம்புபுனற்கிறைவாபடர்செய்வோன்
வெம்புவயிற்றைநிறைக்கெனமேலோன்.

(இ - புரை.) தேவர்கள் இப்படியாகவருந்தி விண்ணப்பம்பண்ணிக்கொள் ளுங்குறையைப் பரமசிவனின்றருளிய (மூத்தநாயனாராகிய) துதிக்கைபொருந் திய யானைமுகத்தையுடைய விநாயகக்கடவுள் நிறைந்துள்ள நீர்க்கிறைவனாகிய வருணனைப்பார்த்து, வருணனே? தேவர்களுக்குத் துன்பஞ்செய்யத்தக்கவனாகிய இராவணனுடையவயிற்றில் நீர்நிறையச்செய்யென்று கட்டளையிட்டருள, அந்த வருணதேவனனவன். எ - று.

எங்கும்பரவுந் தன்மைத்தாதலின் "பம்புபுனல்" என்றனர். (௪௮)

ஆமிஃதென்றவரக்கனகட்டில்
நீர்மிகுவித்தலினீர்தொடுகிற்பான்
போமலன்முன்னரெதிர்ந்துபுழைக்கை
மாமுகன்வந்தனன்மாமறையோனாய்.

(இ - புரை.) அதைக்கேட்ட வருணதேவன், இந்தக்காரியம் அடியேனு லாகுமென்று அந்த இராவணனுடையவயிற்றில் நீர் அதிகரிக்கும்படி செய்ததி னால் நீர்தொட்டுக்கொள்ளுதற்குப் போகாநின்ற இராவணனுக்குமுன்னே துவா ரம்பொருந்திய துதிக்கையையுடைய யானைமுகவிநாயகரானவர் பெருமைபொ ருந்திய ஒருபிராமணரூபங்கொண்டு எதிரேவந்தார். எ-று.

துவாரத்தையுடையதுதிக்கையென்பதுதோன்ற "புழைக்கை." என்றனர்.

மல்லணிதோளவன்மாமறையோயில்
வெல்லையினீர்பெய்தியான்வருகாறும்
அல்லமர்கண்டனையங்கைதரித்தே
நில்லெனவந்தனெடுத்தகையோனும்.

(இ - புரை.) பலம்பொருந்திய தோளையுடைய இராவணன் (எதிரில்வந்தவரைக்கண்டு) பெருமையுள்ள பிராமணரே! நீர்தொட்டுக்கொண்டு இவ்விடத்தில் நான்வருமளவும்,கருமைநிறந்தங்கிய கண்டத்தையுடைய சிவசொரூபமாகிய சிவலிங்கப்பெருமானை உம்முடைய அழகிய கையில்வைத்துக்கொண்டிருமென்று சொல்ல மிருந்தபெருமையுள்ள அந்தப்பிராமணர் சொல்லுகிறார். எ - று.

இங்கு அல் என்றது, இருண்ட ஆலகாலவிஷத்தை. (௫௦)

இச்சிவலிங்கமெடுத்திவணிற்பா
னச்சிலேவேலவநான் வலியில்லேன்
முச்சொல்விளித்திடுமுன்னனுகாயேற்
கைச்சிவனைப்புவிகாட்டுவனென்றான்.

(இ - புரை.) விஷம்போலக்கொடுமையுள்ள தகட்டுவடிவமான வேலேந்தும் இராவணனே! நான் இந்தச்சிவலிங்கத்தையேந்திக்கொண்டிருக்கும்படியான சக்தியில்லாதவன்;(ஆதலால்)மூன்றுசொல்அழைப்பதற்குமுன் நீவராவிட்டால், என் கையிலிருக்குஞ் சிவலிங்கப்பெருமானைப் பூமியில்வைத்து விடுவேனென்றார்.

செங்கணரக்கனிசைந்தயல்சென்றான்
வெங்கதவேழவிநாயகன்முக்கால்
இங்கணைவாயெனவெய்திலனாக
அங்கையிலிங்கமகன் புவிவைத்தான்.

(இ - புரை.) கோபக்குறியாகிய செம்மைநிறமுள்ளகண்களையுடைய இராவணன் அதற்குச்சம்மதித்து, அப்புறம்போனான். வெவ்வியகோபங்கொள்ளும் யானைமுகத்தையுடையவிநாயகமூர்த்தியானவர்,இராவணா! இங்கேவா, இராவணா! இங்கேவா,இராவணா!இங்கேவாவென்று மூன்றுதரம் அழைத்து அவன்வராமையினாலே தம்முடைய அழகியகையினிடத்தில் வைத்துக்கொண்டிருந்த சிவலிங்கத்தை விசாலமாகிய பூமியினிடத்தில்வைத்துவிட்டார். எ - று. (௫௨)

அவ்வழியோடியடைந்தவரக்கன்
திவ்வியமண்மிசைசேர்ந்ததுகாணு
எவ்வமிலாதவிலிங்கமெடுத்தான்
வவ்வலுறாமையின்மாபலமென்றான்.

(இ - புரை.) அந்தவிடத்தில் அதிகவிரைவாக ஓடி நீர்தொட்டுக்கொண்டு வந்த இராவணன் சிவலிங்கம் பூமியினிடத்திருப்பதைக்கண்டு குற்றமில்லாத அந்தச்சிவலிங்கத்தையெடுத்தான்.அது தன்னாலெடுக்கக்கூடாததாயிருந்ததினாலே இதுமகாபல லிங்கமென்றான், எ - று. (௫௩)

காசிலரக்கனுரைத்ததுகண்டே
பேசினர்மாபலவீசனெனும்பேர்
வீசியகைகொடுமீட்டுமெடுத்தா
னேசவிலிங்கநிமிர்ந்ததுநைந்தே.

(இ-புரை.) சிவநேசத்தில்பழுதில்லாத இராவணனானவன் சொன்னதை அறிந்து அந்தச்சிவலிங்கத்துக்கு மாபலலிங்கமென்று பெயரிட்டார்கள். இராவணனானவன் மறுபடியும்நீண்டகையினால் தன்பலங்கொண்டமட்டும் எடுத்தான். (அப்படி யெடுத்தபோது) அன்பைந்தருகின்ற அந்தச்சிவலிங்கமானது குழைந்துநீண்டது.

வேறு.

ஆவினதுசெவிபோலவவ்விலிங்கநிமிர்வுறலான்
மேவினதுகோகன்னமெனும்பெயரவ்வியன்பதிக்குக்
காவலனையகைத்திரளாற்கனன்றரக்கன்மறைமதலைத்
தேவனதுகுடுமிமுடிப்புடைத்தனன்றன்சினமிகவால்.

(இ-புரை.) அந்தச்சிவலிங்கமானது பசுவின்காதுபோல நீண்டபடியினாலே, பெருமையுள்ள அந்தத்தலத்துக்குக் கோகன்னமென்னும்பெயர் பொருந்தியது, இராவணனானவன், மனங்கொதித்துச்சோலையையொத்த இருபதுகைகளாலும் பிராமணப்பிள்ளை வடிவங்கொண்டிருக்கும் விநாயகமூர்த்தியின் சிகையுள்ள சிரசில் தன்கோபமிகுதியினால் குட்டினான். எ - று. (௫௫)

புடைத்தவுடனுருத்தெழுந்துபொழிமதவாரணமுகத்தோன்
அடித்தலமுமணிமுடியுமகலிடமும்விசும்புமுறப்
படைத்தவுருவெனநிமிர்ந்துபணைக்கரத்தாலிராவணனைப்
பிடித்துமணிக்கழங்கெனவெறிந்தெறிந்துபிடித்திடலும்.

(இ-புரை.) குட்டினவுடன் மதநீரைப்பொழிகின்ற யானைமுகத்தையுடைய விநாயகமூர்த்தியானவர், கோபித்தெழுந்து திருவடியும் அழகியதிருமுடியும், விசாலமுள்ள பூமியிடத்தும் ஆகாசத்தினிடத்துமாகப் பொருந்தப்படைத்த சொரூபம்போல ஓங்கி (விசுவரூபங்கொண்டு) பனைபோன்ற துதிக்கையினால் இராவணனைப்பிடித்து அழகியகழற்சிக்காயபோல் (பூமியில் விழவொட்டாமல்) பலதரமேலெறிந்து பிடித்திடவும். எ - று. (௫௬)

மறையோனென்றுறநினைந்துமடமையினாலீதிழைத்தேன்
பிறையோங்குமணிமகுடப்பெருங்களிறேபிழைசெய்தேன்
இறையோனேபொறுப்பதுனக்கியல்பென்றென்றிரந்தேத்த
பொறையோடுமுமைபுதல்வன்புவியிலரக்கனைவிடுத்தான்.

(இ-புரை.) என்னுடைய பேதைமையினாலே பிராமணப்பிள்ளையென்றெண்ணி இந்தக்காரியத்தைச் செய்தேன். பிறையணிந்தோங்கிய மணிமகுடத்தையுடைய பெரியயானைமுக விநாயகமூர்த்தியே? அடியேன் பிழைசெய்தேன் இறைவனே? பொறுத்துக்கொள்வது தேவரீர்க்குத் தகுதியென்று பலதரஞ்சொல்லி யிரந்து, துதிசெய்யப் பார்வதிபுத்திரராகிய விநாயகமூர்த்தியானவர் பொறுமையுடையவராய், இராவணனைப் பூமியில் விட்டார். எ - று. (௩௭)

நிருதர்குலத்திகல்வேந்தேநின துபிழையாம்பொறுக்கற்
கிருபதுசெங்கரத்தாலுமெழின்மலரோனுனக்களித்த
ஒருபதுமாமுடித்தலையுமுறப்புடைத்தியெனவோடுங்
குருதிநிறங்கொளப்புடைத்துக்குனித்தாடியுவப்பித்தான்.

(இ-புரை.) பலமுள்ள ராக்ஷதகுலத்தரசனாகிய இராவணனே! நீ செய்த குற்றத்தை நாம்பொறுத்துக்கொள்வதற்கு, அழகிய செந்தாமரைமலரிலிருக்கும் பிரமன் உனக்குக்கொடுத்த இருபதுசிவந்தகைகளாலும், பெருமையுள்ள மகுடமணிந்திருக்கும் பத்துத்தலைகளிலும், பொருந்தக்குட்டிக்கொள்ளென்று சொன்னவுடன், சிவப்பு நிறங்கொள்ளும்படி குட்டிக்கொண்டு குதித்துக் குதித்துக் கூத்தாடி (விநாயகமூர்த்திக்குச்) சந்தோஷம் வரச்செய்தான். எ - று. (௩௮)

அன்னதுகண்டுவந்தருளியைங்கரத்தோனின்றுமுதல்
என்னதருணலம்வேண்டினினைப்போலவிருகரத்தாற்
சென்னியுறப்புடைத்தவர்பாற்சிந்தைமகிழ்குவனென்று
மின்னின்மறைந்தனனிருதன்வேலையிலங்கையிற்புக்கான்.

(இ-புரை.) அவன் குட்டிக்கொண்டு கூத்தாடுவதைக்கண்ட ஐந்துகரங்களையுடைய விநாயகமூர்த்தியானவர், சந்தோஷங்கொண்டருளி, இன்றுமுதல் எம்முடைய கிருபைநலத்தை விரும்பினால், உன்னைப்போலத்தங்களிரண்டுகைகளாலும் சிரத்திற்பொருந்தக் குட்டிக்கொள்ளுகிறவர்களிடத்தில், நாம் மனமகிழ்ச்சியடைவோமென்றுசொல்லி, மின்னல்மறைவதுபோல மறைந்துவிட்டார். (அதன்பின்பு) ராக்ஷதனாகிய இராவணன், சமுத்திரத்தின்மத்தியிலிருக்கும் இலங்கையிற்போய்ச்சேர்ந்தான். எ-று. (௩௯)

தென்னிலங்கையிராவணன்பாற்சிவனுதவத்திறலரக்கன்
பின்னிலங்குமொருமருப்புப்பெருந்தகைதன்கைக்கொடுப்பப்
பொன்னிலங்குமுடியோயப்புகர்வேழம்புனலாடை
மின்னிலங்கவல்விலிங்கம்விருப்பத்தாலமைத்ததால்.

(இ-புரை.) பொன்னாற்செய்யப்பட்டுப் பிரகாசிக்கும் கிரீடமணிந்த அரசனே? தெற்கிலுள்ள இலங்கைக்கரசனாகிய இராவணனிடத்தில் பரமசிவன்

கொடுக்க வெற்றியுள்ள அந்தராக்ஷதன் பின்பு ஒளிவிளங்காநின்ற ஒற்றைக்கொம்பையுடைய விநாயகக்கடவுளிடத்திற் கொடுக்கப் பின்பு பொறிகள் தங்கிய யானைமுகத்தையுடையஅந்தவிநாயகரானவர் சமுத்திரமாகிய வஸ்திரமணிந்த பூமிதேவிவிளங்கும்படி அந்தச்சிவலிங்கத்தை விருப்பத்துடன்ஸ்தாபித்தார். எ-று

கோகன்னனாலயத்திற்குலவுதிசையிருநான்கு
நாகவணைத்துயினெடுமாலுஞ்ன்முகனிந்திரன்முதலா
மாகமுறுமமரர்குழாமருத்துவர்விஞ்சையர்முனிவர்
நாகருலகத்தவரெநாளுநிறைந்தடிதொழுவார்.

(இ - புரை.) கோகன்னநாதருடைய ஆலயத்தில் சர்ப்பத்தில் அறிதுயில் கொள்ளும் விஷ்ணுவும், நான்குமுகங்களையுடைய பிரமதேவனும், பிரகாசியாநின்ற அஷ்டதிசையிலுமுள்ள இந்திரன்முதலாகிய சொர்க்கலோகவாசிகளான தேவகூட்டமும், மருத்துவர்களும், விஞ்சையர்களும், முனிவர்களும், நாகலோகத்தாரும் எந்நாளும் திருவடிகளைத்தொழுவார்கள். எ-று. மாகம்-ஈண்டுசொர்க்கம்; மருத்துவர் - அசுவனிதேவர். (சுக)

வேறு.

தும்புருநாரதர்மகதிவிபஞ்சிநரம்புளரவழிசுருதித்தேறல்
பம்புமொருபால்வீணைத்தந்திரியுமிடறுமொன்றுய்ப்பயின்றகான
நம்புசதிமுறைநிறுச்குங்கின்னரர்தம்பாடலெனுநவையிறீந்தேன்
கும்பமுலையரம்பையர்தநடநவிலுமெய்யிலொன்றிக்குழையுமோர்பால்

(இ - புரை.) தும்புரு நாரதர் என்னுமுனிவர்கள் மகதி விபஞ்சி என்னும் வீணையினரம்பைத்தெறித்து வாசிப்பதினால் பெருகாநின்ற இசைத்தேனானது ஒருபுறத்தில்நிறைந்திருக்கும்;ஒருபுறத்தில் கின்னரர்கள் வீணைத்தந்திரியினாதமும் கண்டத்தினாதமும் ஒன்றுபடப் பாடுகின்ற மாறுபடுதலிலாத தாளப்பிரமாணத்தை வகுத்துக்காட்டும் குற்றமில்லாதமதுரமுள்ள தேன்போலச்சுவையுள்ள இசைப்பாடலானது பொற்குடம்போன்ற தனங்களையுடைய அரம்பைமாதர்களாடுகின்றகூத்தின் விகற்பத்தைக்காட்டும் அங்கங்களுக்கொத்துப் பேதமில்லாமலிருக்கும். எ - று அங்கம் என்றது அபிநய உறுப்புக்களை. (சுஉ)

ஆடுமுனிக்கணமொருபாலரன்புகழைக்கானத்திலமையவோதிப்
பாடுமருந்தவரொருபாற்பரமானுபூதியினிற்பழுத்துநெஞ்சங்
கூடுசமாதியரொருபாற்கோகன்னநாயகனைக்கும்பிட்டேத்தி [மோ.
வீடுபெறுவாரொருபால்விணையொழிப்பார்க்கத்தலம்போல்வேறுண்டா

(இ - புரை.) ஆனந்தத்தினால் கூத்தாடுமுனிவர்களொருபுறத்திலிருப்பார்கள்; பரமசிவன்புகழை இசையிற்பொருந்தும்படிச்சொல்லிப்பாடும்அரியமுனிவரொருபுறத்திலிருப்பார்கள்; சிவலீலையில் மனங்கனிந்து நிஷ்டைகூடியிருப்பவர்

கள் ஒருபுறத்திலிருப்பார்கள்;கோகன்னக்கடவுளாகிய பரமசிவனைக்கும்பிட்டுத் துதிசெய்து மோக்ஷமடையத்தக்கவர்கள் ஒருபுறத்திலிருப்பார்கள்; ஆதலால் வினைகளை யொழிப்பவர்களுக்கு அந்தத்தலத்தைப்போல வேறொருதலமுண்டாமோ இல்லை. எ - று. ஓகாரம்-எதிர்மறை. (சுஙு)

ஆயிடையிற்சிலையனைத்துஞ்சிவலிங்கம்புனல்யாவுமரியதீர்த்தம்
மேயநரர்யாவோரும்புத்தேளிர்மகளிரெல்லாம்விண்ணின்மாதர்
தூயபசுநிரையெல்லாம்வான்சுரபிபொழிலெல்லாஞ்சுரர்பூந்தாரு
மாயிருஞாலப்பரப்பிற்கோகன்னஞ்சிவலோகமன்னமாறே.

(இ - புரை.) பகைகொள்ளு மன்னவர்களாகிய யானைகளுக்குச் சிங்கம் போலிருக்கும் வேந்தனே! அந்தத்தலத்திலிருக்கும் கற்களெல்லாம் சிவலிங்கம்; நீரெல்லாம் சிவதீர்த்தம்; அவ்விடத்தில் வாசஞ்செய்கின்ற மனிதர்களெல்லோரும் தேவர்கள்; மாதர்களெல்லாம் தேவமாதர்கள்; பரிசுத்தமுள்ள பசுக்களெல்லாம் காமதேனு; சோலையெல்லாம் கற்பகச்சோலை; இத்தகுதியால் பெருமைபொருந்திய பெரிய இவ்வுலகத்தினிடத்தில் கோகன்னமானது சிவலோகமாம். எ-று. (சுச)

கூறுபலபெருந்தீர்த்தம்யாவுக்குமேலாகுங்கோடிதீர்த்தம்
பேறுதருமிலிங்கங்களனைத்தினுக்குமதிகமாபலவிலிங்கம்
வீறுதலமனைத்தினுக்குமேலாகுங்கோகன்னம்வேந்தர்வேந்தே
தேறுவரோவேறுமொன்றைவிளக்கிருக்கத்தீத்தேடுந்தெருளிலார்போல்

(இ - புரை.) அரசர்க்கரசனாகிய மித்திரசகராசனே! அந்தத்தலத்திலிருக்கும் கோடிதீர்த்தமானது பலவாகச்சொல்லுகின்ற எல்லாத்தீர்த்தங்களுக்கு மேலானதாகும்; மாபல இலிங்கமானது மோக்ஷந்தரத்தக்க எல்லா இலிங்கங்களுக்கு மேலானதாகும்; கோகன்னமானது விளங்குகின்றஎல்லாத்தலங்களுக்குமேலானதாகும். ஆகையால், விளக்கிருக்க நெருப்புத்தேடும் அறிவில்லாதவர்கள்போல விவேகமுள்ளவர்கள் வேறொருதலத்தைத் தேடுவார்களோ? தேடார்கள். எ - று.

இத்தகையநகர்மேவிமாகசதுர்த்தசியினரனிரவின்வைகி
யத்தனைமாபலவிலிங்கநாயகனைவிதிமுறையாமருச்சித்திந்நாள்
வித்தகனாஞ்சனகன்முயல்வேள்விக்குமிதிலைநகர்மீளுங்காலை
சித்தமுறுமிறும்பூதுகண்டனமித்திரசகனேசெப்பக்கேண்மோ.

(இ-புரை.) மித்திரசகனே! இப்படிக்கொத்த மகத்துவமுள்ள கோகன்னத்திற்போய் மாசிமாசச் சதுர்த்தசியாகிய சிவராத்திரியிலிருந்து, நம்முடைய அத்தனாகிய மாபலவிலிங்கநாயகனை வேதமுறைப்படி யாம் அருச்சனைசெய்து, இன்றையதினம் ஞானவானாகிய சனகராசன் செய்கின்ற யாகத்தைக்குறித்து மிதிலைநகருக்குவரும்போது, ஞாபகத்தில்வைக்கத்தக்க ஒரு அதிசயங்கண்டோம்; அதனைச் சொல்லக்கேட்பாய். எ - று. மோ - முன்னிலையசை. (சுரு)

இரண்டாவது சிவதானமகிமையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.
ஆக திருவிருத்தம் கஉஉ.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது

# சிவராத்திரியில் கன்மாடபாதராசன்

## முத்திபெற்ற அத்தியாயம்.

என்றுமுனிகூறிடலுமிகல்வேந்தனகமகிழ்வோடிறைஞ்சியேத்தி
நன்றுபுதிதப்புதுமையுரைத்தியெனவுரைத்திடலுநவைதீர்வேதத்
தொன்றியநாவினனுயபெருந்தவனுங்கண்டபரிசுரைப்பேனென்னத்
துன்றுநறுந்தொடைப்புயத்துமன்னவனைமுகநோக்கிச்சொல்லினனே

(இ - புரை.) கவுதமருஷியானவர் இப்படியாகச் சொல்லவே வலியுள்ள அரசனானவன் மகிழ்ச்சியுடன்பணிந்து, துதிசெய்து மிகவும் புதியதாகிய அவ் வாச்சரியத்தைச் சொல்லுமென்று கேட்கவும்; குற்றமில்லாத வேதங்களிற்பழகிய நாவினையுடையவராகிய மேன்மைபொருந்திய அந்தமுனிவர் தாங்கண்ட முறைமையைச் சொல்லுகிறேனென்று, நல்லமணந்தங்கிய பூமாலையணிந்த புயங்களையுடைய அந்த வேந்தன்முகத்தைநோக்கிச் சொல்லுகின்றார். எ - று. (க)

அருங்கானில்வருந்துயரான்மலர்த்தடத்துணீரருந்தியதன்றீரத்தோர்
மருங்காலநிழலடைந்துசூழ்ந்தவருந்தவரோடும்வதிந்தகாலைக்
கருங்காகம்போனிறமுங்காயமெலாம்புழுநெளியக்கவிந்தபுண்ணுஞ்
சுருங்காதகுட்டமுதற்பலநோயுமுடையாண்மெய்துளங்குநீராள்.

(இ - புரை.) சொல்லுதற்கரிய வனத்தில்நடந்துவந்த இளைப்பினால் ஒரு மலர்த்தடாகத்தினிடத்தில் நீருண்டு, அதன்கரையி லொருபக்கத்திலிருக்கும் ஆலமரத்தினிழலிற்சேர்ந்து, நம்மைச்சூழ்ந்த அரியமுனிவர்களுடன் நாம் இருந்தபோது, கரியகாகம்போலநிறமும் சரீரமெங்கும் புழுவானது நெளியும்படி வியாபித்திராநின்றபுண்ணும் குறையாத குஷ்டமுதலாகியவியாதியாதியும் உடையவளாயும் அவைகளால் உடல்நடுங்குந் தன்மையையுடையவளாயும் எ - று. (உ)

புண்டாரைமுடைநாறவணங்குறுவாள்வெப்பநோய்புகையச்சூலை
கொண்டாவிவருந்துவாள்கண்ணில்லாளொருபுலைச்சிகொடியமூப்பாள்

கண்டோர்தங்கண்புதைப்பவழிவருவாளுளோங்கெழுந்தகயரோய்சீற
விண்டோயுமாதவத்தாலெரிகொளுந்துநிலத்தினிடைவீழ்ந்தாண்மன்னோ

(இ - புரை.) புண்களிலிருந்தொழுகாநின்ற இரத்தந்தாரையானது துர்க்கந்தமாககாற வருத்தமடைகின்றவளாயும், சுரநோய்மேலெழுந்து அனல்வீச அதனுடன் சூலைநோய்கொண்டு உயிர்வருந்துகின்றவளாயும், பார்வையில்லாதவளாயும், கொடிய கிழத்தன்மையுள்ளவளாயும், பார்த்தபேரெல்லாம் (அருவருப்பினால்) தங்கள் கண்களைமூடிக்கொள்ளும்படியாக வழிநடந்துவருகின்ற ஒருநீசஸ்திரியானவள் வருத்தி அதிகரித்த க்ஷயநோயானது துன்பப்படுத்த, ஆகாயத்தில் பொருந்திய சூரியவெப்பத்தினால் அக்கினிமயமாய்ச்சுடுகின்ற பாலைநிலத்தினிடத்தில் விழுந்தாள். எ - று. (௩)

வீழ்ந்தவுடன்புலைமுதியாளாவியுடல்விடுமவத்தைதவிதங்களெல்லாஞ்
சூழ்ந்தவருந்தவரோடுங்கண்டயனின்றனமாங்கோர்சோதிவானம்
போழ்ந்தொளிர்பொன்விமானமுடனிழிந்துபலகணநாதர்புவியிற்போதத்
தாழ்ந்தவரையடிவணங்கிவரவென்கொலென்னவவர்சாற்றலுற்றார்.

(இ - புரை.) விழுந்தவுடன் அந்தப்புலைச்சியாகிய கிழவியின் உயிரானது உடலைவிட்டு நீங்கும்போது உண்டான அவஸ்தையின் வகைகளையெல்லாம் நம்மைச்சூழ்ந்திராநின்ற முனிவர்களும் நாமும் பார்த்துக்கொண்டு அயலிலிருந்தோம்; அப்படியிருக்கும்போது அவ்விடத்தில் இருளைநீக்கிப் பிரகாசியாநின்ற சோதியுள்ள ஒரு பொன்விமானமுடன் பலகணநாதர்கள் ஆகாயத்தினின்றும் இழிந்து பூமியினிடத்தில்வர; அவர்களைநாம்கண்டு பாதத்திற்றாழ்ந்துபணிந்து நீவிர் இவ்விடத்திற்கு வந்தகாரணமென்னவென்றுவினவ, அவர்கள் சொல்லத்தொடங்கினார்கள். எ - று. (௪)

மலைமகளையொருபாகம்வைத்தபிரானேவமணிமானமீதில் [ன்
புலைமகளைக்கொடுபோவானணைந்தனமென்றாரென்றபோழ்தின்வானி
நிலகுசுடர்விமானத்தையிவளடைதன்மறைவேள்வியியற்றுசாலை
யுலகினிழிபுடைக்குரைவாய்ஞமலிபுகுந்தேறுமதையொக்குமாதோ.

(இ - புரை.) மலையரையன் புத்திரியாகிய பார்வதியை இடப்பாகத்தில் வைத்தருளிய பரமசிவன் கட்டளையிட்டனுப்பியதினால், இரத்தினங்கள்பதித்த விமானத்தின்மேல் இந்த நீச ஸ்திரியைக்கொண்டுபோக வந்தோமென்றார்கள்; அவர்களப்படிச் சொன்னபோது விண்ணுலகத்திலிருந்துவந்து பிரகாசியாநின்ற ஒளியுள்ள இந்தவிமானத்தில் இவளேறுவது எத்தன்மைத்தெனில், உலகத்திலிருக்கும் (சென்துசனுள்) இழிவையுடைய குரைக்காநின்ற வாயுள்ளநாயானது வேதவிதிப்படிச்செய்கின்ற யாகசாலையிற்சென்று (சுவர்க்கலோகத்துக்குப்போக விமானத்திலேறுவதை யொப்பாகும். எ - று. (௫)

எனப்புகன்றேம்பின்னரும்பார்த்திழிபிறப்பினுள்கண்களிரண்டுமி ல்லாள், நினைத்துணையுஞ்சிவனிலையுஞ்சிவனடியார்நிலையுமுளஞ்சிந்தித் திலாள், வினைத்திறனுன்மிகுபிணியாளெழுபிறப்பினல்வினையின்வி ழைவொன்றில்லாள், தனைச்சிவலோகத்தினிடைக்கொடுபோவான்ச மைந்ததுநீர்சாற்றுகென்ன.

(இ - புரை) என்றுசொல்லிப் பின்னும் அவர்களைப்பார்த்து இழிவாகிய பிறப்பினையுடையவளும், இரண்டு பார்வைகளுமில்லாதவளும், பரமசிவனுடைய நிலையினையும் சிவனடியார்கள்நிலையினையும் நினையளவுபொழுதாவது தியானியாத வளும், வினைவலியால்மிகுந்த பிணியையுடையவளும், எழுவகைப்பிறவியினிடத் தும் புண்ணியத்தில் எவ்வளவேனும் விருப்பமில்லாதவளுமாகிய இவளை நீங்கள் சிவலோகத்துக்குக் கொண்டுபோகச் சம்மதித்துவந்த காரணமென்ன சொல் லுங்களென்றுகேட்க. எ - று.

எழுவகைப்பிறப்பாவன :—தேவர்,மனிதர், மிருகம், பக்ஷி, ஊர்வன, நீர்வாழ் வன, தாபரம் என்பவைகளாம். (தாபரம்-மலைமரமுதலான அசையாப்பொருள் கள். (௬)

இருந்தவத்தின்மாமுனியேயிப்புலைச்சிதிறங்கேட்கினிறும்பூதெய் தும், திருந்துபுகழ்க்கேகயநாட்டொருமறையோனளித்தவருஞ்செம் பொற்பாவை, சரிந்தமலர்க்கருங்குழலாள்சவுமினியென்னும்பெயரா ள்சம்பராரி, வருந்துவனப்பிரதியெனுமணங்கினையுமழகழிக்கும்வனப் பின்மிக்காள்.

(இ - புரை.) பெருமைபொருந்திய தவத்தினால் மகத்துவாகிய முனியே! இந்தப்புலைச்சியினுடைய செய்திகளைக்கேட்கில் ஆச்சரியமுண்டாகும்; என்ன வென்றால், நல்லபுகழையுடைய கேகயநாட்டிலிருக்கும் ஒருபிராமணன்பெற்ற கிடைத்தற்கரிய செம்பொன்னினாற் செய்யப்பட்ட பிரதிமையொத்தவளும், பூமாலையணியப்பட்டுக் கருமைநிறமுள்ளதாய் நெரிந்து படிப்படியாய்த்தாழ்ந்த அளகபாரத்தையுடையவளும், சவுமினியென்னும் பெயரையுடையவளும் மன்ம தன்கண்டு (மோகமடைந்து) வருந்துதற்கேதுவாக அழகுள்ள தெய்வப்பெண் ணாகிய இரதியினுடைய சவுந்தரியத்தின்பெருமையுங்கெடச்செய்யத்தக்க சுந்தர த்தில்மிக்கவளுமாயிருந்தனள். எ - று. இறும்பூது-ஆச்சரியம். (எ)

கொங்கையடிகொண்டிளகிப்பணைத்திறுகியிறுமாந்துகுரும்பை யேய்ப்ப, மங்கையெழிற்பருவமிவளெய்துதலுமிவடாதைமனத்தினே ர்ந்து,பங்கயமாமுகத்தாளையொருமறையோன்விதியின்விழாப்பண்ண நல்கி, வெங்கயமும்பிடியுமெனக்கலவிநுகர்ந்திருவோரும்விழையுநா ளில்,

(இ-புரை.) இத்தன்மையான அழகுள்ள சவுமினியென்பவள் இரண்டுதனங்களும் அடிபரந்து இளகலாய்ப் பருத்து இறுகிப் பூரித்துத் தென்னங்குரும்பையை யொப்பாகும்படியான மங்கைப்பருவத்தை யடைந்தமாத்திரத்தில், இவள்தகப்பன் இனிவிவாகஞ் செய்விக்கவேண்டுமென்று மனதில் உணர்ந்து, செந்தாமரை மலர்போன்ற முகத்தையுடையவளை ஒருபிராமணன் வேதவிதிப்படி விவாகஞ் செய்துகொள்ளக் கன்னிகாதானமாகக்கொடுக்க; வெவ்விய ஆண்யானையும் பெண்யானையும் இணைபிரியாமல் கூடிக்கொண்டிருப்பதுபோல இவ்விருவருங் கலவியின்பம் அனுபவித்துக்கொண்டு விருப்பமுற்றிருக்குநாளில். எ - று.

பெண்களுக்குப்பருவம் ஏழு:—அவை பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம்பெண் என்பவைகளாம். பேதைப்பருவமானது ஐந்து வயதுமுதல் ஏழுவயதுவரைக்குமுள்ளது. பெதும்பைப்பருவமானது எட்டு வயதுமுதல் பதினொருவயதளவுமுள்ளது. மங்கைப்பருவமானது பன்னிரண்டு வயதுமுதல் பதின்மூன்றுவயதளவுமுள்ளது. மடந்தைப்பருவமானது பதினான்குவயதுமுதல் பத்தொன்பதுவயதளவுமுள்ளது. அரிவைப்பருவமானது இருபதுவயதுமுதல் இருபத்தைந்துவயதளவுமுள்ளது தெரிவைப்பருவமானது இருபத்தாறுவயதுமுதல் முப்பத்தொருவயதளவுமுள்ளது. பேரிளம்பெண் பருவமானது முப்பத்திரண்டுவயதுமுதல் நாற்பதுவயதளவுமுள்ளது. (அ)

தன்னுயிர்போனீங்காதகொழுநனுக்குவினைதூரப்பசார்ந்தநோயால், இன்னுயிர்விட்டவனிறப்பத்துணையிழந்தவன்றிலெனவிரங்கி மாழ்கிக், கன்னன்மொழிக்குயிலனையாள்கைம்மையுற்றபின்னரும் வெங்காமநோயான், மன்னுபெருநிறையொருவிக்கரவின்கண்யாவரையுமருவுநாளின்.

(இ - புரை.) தன்னுயிர்போல விட்டுப்பிரியாத கணவனுக்கு ஊழ்வினையானதுகூட்ட நேரிட்டவியாதியினால் இனிய உயிரைவிட்டு அவனிறந்துபோகவே, துணையாகிய ஆண் அன்றிற்பறவையைப்பிரிந்த பெட்டை அன்றில் இரங்குவதுபோலக் கரும்பையொத்த மதுரமுள்ள சொல்லினால் குயில்போன்றவள் அழுது சோர்ந்து, கைம்பெண்ணானபின்பும் வெவ்விதான காமநோயினால் நிலைபெற்ற பெரிய கற்பினின்றும் நீங்கிச் சோரத்தனமாக எல்லாரையும் புணர்ந்துகொண்டிருக்குநாளில். எ - று. (கூ)

வேறு.

உற்றாரயலாருரைக்குமுறைகொள்ளாள்
கற்றார்முதியார்கழறுவதுங்கைக்கொள்ளாண்
முற்றாமுகிழ்முலைப்பான்முற்றிமுகங்கறுப்பப்
பற்றாநுகப்பாள்கருப்பம்படைத்தனளே.

(இ - புரை.) (இவள்விபசரிப்பதையறிந்து) சுற்றத்தாரும் அன்னியரும் (நீநடக்கும் நடத்தையோக்கியமான தல்லவென்று) சொல்லும் வார்த்தையைக் கேளாதவளாயும், கல்விகற்றவர்களும் முதிர்ந்தவயதுள்ளவர்களும் சொல்லும் வார்த்தையை யேற்றுக்கொள்ளாதவளாயும், (தன்னிஷ்டப்படி நடந்து)உண்டென்று நிச்சயித்துக்குறிக்கக்கூடாத, நுட்பமாகிய இடையையுடையவள் முதிர்ந்து சாயாமல் குவிந்திருக்குந் தனங்கள் பால்நிறைந்து காம்புகள் கருமைநிறங் கொள்ளும்படிக் கருப்பம் அடைந்தாள். எ - று. (௧௦)

அங்கதுகண்டுற்றாரயலாரிவர்குழீஇ
யெங்குலத்துக்கெல்லாமிருந்துபழியீட்டுவாள்
தங்குதலிவ்வூர்க்குத்தகாதென்றுநீக்குதலுஞ்
செங்கண்புனல்கொழிப்பச்சேயிழையாள்கான்சென்றாள்.

(இ - புரை.) இந்தமாதானவள் கருப்பம் அடைந்ததையறிந்து சுற்றத்தாரும் அயலாருமாயிருப்பவர்கள்கூடி, இவளிவ்விடத்திலிருந்து நம்முடைய குலத்துக்கெல்லாம் பழிசம்பாதிப்பவளாயிருக்கிறாள்; (ஆதலால்) இவள் இவ்வூரிலிருப்பது தகாதென்று நீக்கிவிடவும், கண்கள்நீர்சொரியும்படி (அழுதுகொண்டு) காட்டிற்போய்விட்டாள். எ - று. (௧௧)

அத்தலையோர்வேளாண்மரபிலடுகாளை
சித்தமயல்கொண்டவடோள்சேர்ந்துமனையிற்செறிப்பப்
புத்தமுதமென்னத்தணியலணிபுழுக்கல்
துய்த்தங்கவன்மார்பிற்றோய்ந்தநலனுண்டிருந்தாள்.

(இ - புரை.) அவ்விடத்தில் வேளாளகுலத்தானாகிய துர்நடத்தையுள்ள ஒருவிடபுருஷன்கண்டு மனதில் காமமயக்கங்கொண்டு, அவள்தோளைச்சேர்ந்து தன்வீட்டிற் கொண்டுபோய் வைத்துக்கொள்ள, புதியஅமுதம்போல் கள்ளும் இறைச்சியுடன் சோறும் உண்டு, அவன் மார்பிற்சேர்ந்து கலவியின்பம் அனுபவித்துக்கொண்டிருந்தாள், எ - று. தணியல்-கள்; புழுக்கல்-அன்னம். (௧௨)

பண்டைக்குலனொருவிவேளாளன்பன்னியாய்க்
கண்டின்சுவைக்கலவிக்காமபானுதியெல்லாம்
உண்டின்புறுமகப்பேறுற்றுநெடுநாட்கழிப்பத்
திண்டிறலான்வேற்றூர்க்ககறலுமிச்சேயிழையாள்.

(இ - புரை.) தான்பிறந்த பிராமணகுலாசாரத்தை நீங்கி (சூத்திரகுலத்தானாகிய) வேளாளன்மனைவியாய்க் கற்கண்டுபோல இனியமதுரத்தைத் தருகின்ற கலவிக்குரிய அதரபானமுதலாகியவைகளை அனுபவித்து, இன்புறத்தக்ககுழந்தைகளையும்பெற்று, நெடுங்காலஞ்செல்லும்படி இருக்கும்போது (ஒருநாள்)

மிகுந்த பலமுள்ள அந்தவேளாளனானவன் அயலூருக்குச்செல்லவும் இந்தப் பெண்பிள்ளையானவள். எ-று. கண்டு - கற்கண்டு. (கஙு)

மற்றொருவரில்லாமனையிற்றமியளாய்
அற்றையிருட்கங்குல்வராவாற்றாதுகாமத்தீ
யுற்றுமதுவருந்தியூன்றடிதின்பான்விரும்பிப்
பொற்றொடியாளங்கிலையோர்தோழத்திடைபுகுந்தாள்.

(இ - புரை.) வேறொருவரு மில்லாதவீட்டில் தான்மாத்திரம் தனியளா யிருந்து அன்று இருள்சூழ்ந்த இராப்பொழுதுவரச் சகித்துக்கொள்ளமாட்டா மல் காமாக்கினியைப்பொருந்தி, மதுபானஞ்செய்து மாமிசந்தின்னவும் இச்சை கொண்டு, அந்தவீட்டின் ஒருபுறத்திலிருக்கும் ஒருதோழத்திற்சென்றாள். எ - று. ஊன் தடி - இருபெயரொட்டு. (கச)

வெள்ளாடுஞ்சேதாவெடிவாற்குழக்கன்றும்
உள்ளாதருந்துமதுவாலுணர்வழிந்து
தள்ளாடியான்கன்றைப்பற்றித்தலையரியாப்
புள்ளாடுவேற்கண்ணாளில்லிற்கொடுபுகுந்தாள்.

(இ - புரை.) பருந்து காக்கைமுதலாகிய பக்ஷிகள்கண்டு மேலேவட்ட மிட்டுக்கொண்டு பறக்கத்தக்கதாய்ச் (சுத்தவீரன்கையிலிருக்கும்) வேலாயுதம் போல நீட்சியுங் கூர்மையுமுள்ள கண்களையுடையவள் கள்ளுண்டவெறியால் அறிவழிந்து, தள்ளாடிக்கொண்டுபோய் வெள்ளாடு இதுவென்றும் அச்சந்தரும் வாலையுடைய பசுவின் இளங்கன் றிதுவென்றும் பகுத்துப்பாராமல் ஒருபசுவின் கன்றைப்பற்றி அதன்தலையை அரிந்து வீட்டிற்கொண்டுவந்தாள். எ - று. (கரு)

வெந்ததடிநுகர்வானெண்ணிவிளக்கொளியின்
முந்துதசையரியவேண்டிமுயல்போதின்
அந்திப்பிறைநுதலாளான்கன்றெனவறிந்து
சிந்தித்தயர்ந்துசிவசிவவென்றோதினாள்.

(இ - புரை.) அந்திப்பொழுதில் தோன்றுகின்ற பிறையையொத்த நெற்றி யை யுடையவள் வெந்தமாமிசத்தைத் தின்னவெண்ணி, ஒளிவிளங்குந்தீபவெளிச் சத்தில் அந்தப்பசுவின்கன்றை அரியவிரும்பி எத்தனிக்கும்போது, பசுவின்கன் றென அறிந்து, (தகாதகாரியஞ்செய்தோமேயென்று) நினைத்துச்சோர்வையடை ந்து சிவசிவ என்று சொன்னாள். எ - று. (கசு)

கைதவமேசெய்யுமதுவின்களியென்று
வெய்துயிர்த்துமுப்புரமும்வேவக்குறுமூரல்
செய்தபெருமானடியையுள்ளந்தியானிபப
எய்துபடாலங்கிருகடிகைப்போதிருந்தாள்.

(இ-புரை.) மதுவின்மயக்கமானது துன்பத்தையேசெய்யுமென்றெண்ணி நேரிட்டவருத்தத்தினுல் பெருமூச்சுவிட்டு, திரிபுரங்கள் வேகும்படிபுன்னகை செய்த பரமசிவனுடையதிருவடிகளை மனமானது தியானஞ்செய்யக் கன்றை யரியவுட்கார்ந்தவிடத்தில் இரண்டு நாழிகைவரைக்கும் அசைவற்றிருந்தாள். எ-று. படர்-துன்பம். (௧௭)

ஊனருந் தும்வேட் கைதனை யூழின்வலி தூரப்பக்
கானிருந்த கோதையந்தக்கன்றின் றசைமீட்டுந்
தானரிந் துநல்லகருனை சமைத்தருந்தி
யேனையெ லும்புந்தசையும்வீதியினிட் டிதிசைப்பாள்.

(இ - புரை.) மாமிசந்தின்னும் இச்சையை விதிவலியானது எழுப்ப, வாசனைதங்கிய பூமாலையணிந்த அவள் பின்னும் அந்தப்பசுவின்மாமிசத்தை நீக் கிவிடாமல், அரிந்து நல்லபொரிக்கறியாகச்சமைத்துண்டு, உண்பதற்கு உதவாத மற்றை எலும்பையும் மாமிசத்தையும் தெருவிற்கொண்டுவந்துபோட்டு இந்த வார்த்தையைச் சொல்லுகின்றாள்- எ - று. கருனை-பொரிக்கறி. (௧௮)

அந்தோகொடுவினையேனுவினிளங்கன் றுதனை
வந்தோருழுவைவதைத் துண்டொழிந்ததிது
நந்தோரணமறுகினம்மினத்தீர்காண்மினென
நொந்தோலமிட்டுநுணுகிடைபோல்வாடினுள்.

(இ-புரை.) ஐயோ? கொடியபாவியாகிய என் பசுவின் இளங்கன்றை ஒரு புலியானதுவந்து கொன்று உண்டுபோய்விட்டது; இந்தக்கொடுமையை தோர ணங்கள்கட்டியிருக்கும் நம்முடைய வீதியிலிருக்கும் நம்மினத்தவர்களே பாரு ங்களென்று வருந்தி யோலமிட்டுத் தனது நுண்ணிய இடைபோலவே தானும் வாடினுள். எ-று. உழுவை-புலி. (௧௯)

அவ்வளவிற்கங்குல்கழியவவள்கேள்வன்
செவ்வியிளங்கன்றிறந்ததீவினையைக்கேட்டேங்கி
நவ்விவிழிச்சேயிழைமாட்டெய்திநடுநடுங்கி
வெவ்வினையாளோடுமனையகத்தின்மேவினுன்.

(இ-புரை.) அப்படி அவள்வாடுங்காலத்தில் இராப்பொழுது நீங்கியது; (அது நீங்கினவுடன்) அவள் கணவன்வந்து, அழகிய இளங்கன்றிறந்துபோன பாவத்தைக்கேட்டிரங்கி, மான்பார்வைபோன்ற பார்வையையுடையவளிடத்திற் சென்று, (அப்பாபத்திற்காக) நடுநடுங்கி, அந்தக் கொடியவளோடு வீட்டினிடத் திருந்தான். எ-று. நவ்வி-மான். (௨௦)

ஆங்கணிருவோருமதனுமணங்குமெனத்
தாங்கரியவின்பந்தணவாதருந்துநாள்

பூங்குழலாளுளிழப்பப்போமாருயிர்பிணித்து
வீங்குபுயத்தூதுவர்போய்வெங்கூற்றின்முன்விடுத்தார்.

(இ-புரை.) அவ்விடத்தில் அவ்விருவரும் மன்மதனும் இரதியும்போல (ஒருவரையொருவர்விட்டுப் பிரியாமல்) பிறரொருவருக்குக் கிடைப்பதற்கரிய கலவியின்பத்தை நீக்கமிலாது அனுபவித்துக்கொண்டிருக்கும்நாளில், பூவணித்த குழலையுடையாளுக்கு வாழ்நாள் முடிவாகிவிட, அவள் உடலைவிட்டுப்பிரிகின்ற உயிரைப் பருத்ததோள்களையுடைய யமதூதர்கள் (பாசத்தினால்) கட்டிக்கொண்டு போய்க் கொடுமையானதோற்றமுள்ள நமனெதிரில்விடுத்தார்கள். எ-று. வெற்றிகொள்ளுமாற்றல்தோன்ற "வீங்குபுயம்" என்றார். தணத்தல் - நீங்கல். (உக)

கண்டநமன்பேதைமுகநோக்கியிக்கயத்தி
பண்டிழைத்தவல்வினைதானூன்முகத்தாற்பார்த்தெண்ணிச்
சண்டநிரயம்புகுத்தத்தக்காய்நீயல்லைநெறி
விண்டபுலைமகளாய்மேதினியின்மேவுகென்றான்.

(இ-புரை.) தூதுவர்கொண்டுவரக்கண்டநமன் அவள் முகத்தைப்பார்த்து, இந்தக்கீழ்மையுள்ள புலைச்சி முன்செய்த வலியவினைகளைச் சாஸ்திரத்தின் முன்னிலையில் விசாரித்தெண்ணி, நீ கொடுமையுள்ள நரகத்தில் விழுந்தத் தக்கவளல்லை; ஆகிலும் முறைமைநீங்கிய புலையர்மகளாய்ப் பூலோகத்திற்பிறக்கக்கடவையென்று சொன்னான் எ-று. பசுவின்கன்றை யரிந்தபோது சிவசிவவென்று சொன்னதினால், நரகத்தில் விழுத்தத்தக்கவளல்லளென்றது. (உஉ)

அவ்வண்ணந்தண்டத்தான்கூறவதுகேட்டவளு
மைவண்ணமேனியளாய்வாட்கண்ணிலளாகி
இவ்வண்ணம்பாரினெழிலிழந்தாரில்லையெனச்
செவ்வண்ணமின்றிப்புலைமகளாய்ச்சென்றுதித்தாள்.

(இ-புரை.) யமதருமராசன் அவ்வாறுசொல்ல அதைக்கேட்ட அவள்கருமைநிறமுள்ளவளாயும் ஒளிபொருந்திய பார்வையில்லாதவளாகியும், இப்படி அழகிழந்தவர்கள் உலகத்திலில்லையென்று (கண்டவர்களெல்லாம்) சொல்லும்படி, நல்ல அழகில்லாமல் நீச ஸ்திரியாகவந்து பிறந்தாள். எ-று. (உந)

அன்னவளையீன்றோருமவ்வயின்றமிச்சில்
கன்னியிளஞ்சேதாவினூனோடுங்கள்ளூட்டி
மன்னிவளர்க்கவளர்வதெலாம்வன்பிணியாய்த்
துன்னிவளரமயத்தீன்றோருந்துஞ்சினார்.

(இ-புரை.) அத்தன்மையுடையவளைப்பெற்ற தாய்தந்தையர்கள் நாய்தின்று மிகுதியானஎச்சிலூனையும்,மிகுந்த இளமையாகிய பசுவின்கன்றிறச்சியையும் கள்

லையும் ஊட்டி, ஆசைபொருந்திவளர்க்க; வளர்வதெல்லாம் திராப்பிணியாய்ப் பொருந்தி வளருங்காலத்தில், பெற்றவர்களும் இறந்தார்கள். எ-று. இறந்தாரைத் "துஞ்சினர்" என்பது மங்கலவழக்கு. (உச)

அக்காலைநோயாலயர்ந்துமணஞ்செய்யத்
தக்காரிலராகவெம்பசிநோய்தாங்கலளா
யெக்காலமும்புலையர்சேரிதொறுமேற்றுண்ணப்
புக்காவிதேய்வாளைமூப்பும்பொருந்திற்றே.

(இ-புரை.) தாயுந் தந்தையு மிறந்தபின்பு (முன்னமே தனக்குச்சம்பவித்திருக்கிற) வியாதியினால் சோர்வடைந்து, தன்னை விவாகஞ்செய்துகொள்ளத்தக்கவர்களுமில்லாமையாக நேரிட, கொடிய பசியாகிய நோயைத்தாங்கமாட்டாதவளாய், எப்போதும் புலையர் சேரிதோறும் இரந்துண்ணச்சென்று, உயிர்மெலிகின்றவளைக் கிழத்தன்மையும் பொருந்திற்று. எ-று. தன்னை விவாகஞ் செய்விக்கத் தக்கவரும் இல்லையாக என்பதும் ஒரு பொருள். (உரு)

அத்தகையநோயாலுமூப்பாலுமல்லலுற்றுச்
சித்தம்பசிகவற்றத்தேய்ந்தநடையினளாய்
முத்தன்சிவநிசியிற்கோகன்னமூர்ந்துறுவார்
தத்தங்குழுவோடுமெய்நகரிற்சார்ந்தனளே.

(இ-புரை.) அப்படிக்கொத்த நோயினாலுங் கிழத்தன்மையினாலுந் துன்பம் பொருந்திப் பசியானதுமனதைவருத்தப்படுத்தச் சோர்ந்தநடையையுடையவளாகிப் பரமசிவனுக்குரிய சிவராத்திரியில் கோகன்னத்துக்குச் செல்லுகின்ற கூட்டத்தாருடன் தானும் அந்தக்ஷேத்திரத்துக்குப் போனாள். எ-று. (உசா)

தீயபசியாலொருமறுகைச்சேர்ந்திருந்து
தூயவிழியில்லேற்களித்திடுமின்சோறென்னக்
கூயகுரல்கேட்டொருவன்கொழுங்களியன்
ஏயுமவள்கைத்தலத்தின்வில்வமுணவென்றளித்தான்.

(இ-புரை.) (கோகன்னத்திற் போனவள்) ஒரு வீதியிற்போயிருந்துகொண்டு, பரிசுத்தமான கண்களில்லாத எனக்குச் சோறுகொடுங்களென்றுகொடிய பசியினால் அரற்றியகுரலைக்கேட்டு, மிகுந்த இறுமாப்புள்ளவனாகிய ஒருவன் தன் கையிலிருந்த வில்வத்தை அவள் கையினிடத்தில் சோறென்று கொடுத்தான்.

உண்ணவதையுணவென்றோர்ந்தாளுணவன்மை
எண்ணியயலேயெறிந்ததழைகாளியிட
நண்ணுபழையசிவலிங்கநாயகன்றன்
வண்ணமுடியின்மரகதம்போல்வாய்த்ததுவே.

(இ-புரை.) அவன்கொடுத்த வில்வத்தை (அவள்) சோறென்று உண்ண நினைத்துப் பின்பு சோறல்லவென்று தெரிந்துகொண்டு, பக்கத்திலெறிந்துவிட; அவ்வில்வத் தழையானது பார்வதியாரை இடப்பாகத்திலுடையராய் அங்கெழுந்தருளியிருந்த பழமையாகிய சிவலிங்கப்பெருமானுடைய அழகிய திருமுடியில் மரகதமணிபோலப் பொருந்திற்று. எ-று. (உஅ)

அற்றைமுழுநாளுமுணவிலளாயவ்விரவிற்
பற்றுதுயினீத்துப்பனித்தண்புனறோய்ந்த
பெற்றியளெண்ணாதெறிந்தவில்வமேபிஞ்ஞகன்றன்
பொற்புசிசிப்பூசனையேபோன்றதிருணீங்கிற்றால்.

(இ-புரை.) (அவளெறிந்த வில்வஞ் சிவலிங்கப்பெருமான் முடியில் தங்கினதுமல்லாமல்,) அன்று முழுதும் ஆகாரமில்லாதவளாய், அந்தச்சிவராத்திரியில் ஒருபோதும் நீங்காத நித்திரையை நீங்கிக் குளிர்ச்சிபொருந்திய பனியாகிய நீரில்படிந்த முறைமையையுடையஅவள் இன்னதெனஎண்ணாமலெறிந்தவில்வமே பரமசிவனுடைய அழகுள்ள சிவராத்திரிபூசை அருச்சனைபோலாகியது; இராப்பொழுதும் நீங்கிற்று. எ-று. (உகூ)

வெய்யபசிமூப்புநோயிவற்றான்மெய்வருந்த
உய்யுமுணவிலளாயோர்புலைச்சிதோள்பற்றிக்
கையிற்றடியூன்றிக்காறளரமீள்போழ்தி
னையுங்கருத்தாணடுக்குற்றிவண்வீழ்ந்தாள்.

(இ-புரை.) (இராப்பொழுது நீங்கினவுடன்) கொடியபசியாலும் கிழத்தன்மையாலும் உடலானது வருத்தத்தைப்பொருந்த, பிழைத்திருப்பதற்கேதுவான ஆகாரமில்லாதவளாய், ஒரு நீச ஸ்திரீயின் தோளை ஆதரவாகப்பற்றி ஒரு கையில் தடிபிடித்தூன்றிக்கொண்டு, கால்தளரும்படி நடந்து வரும்போது வருந்துகின்றமனதையுடைய அவள் உடல்நடுங்கி இவ்விடத்தில் விழுந்தாள். எ-று. (௩0)

வேதமுனியேயிவளிறக்கும்வேலையினிற்
பாதிமதிவேணிப்பரமனெமைநோக்கிக்
கோதில்குணத்தாளைக்கொணர்வான்விமானமொடும்
போதிரெனப்பணிப்பயாமிங்குப்புக்கேமால்.

(இ-புரை.) ஓ பிர்ம்மருஷியே! (இவ்விடத்தில்விழுந்த) இவள் இறக்குங்காலத்தில், அருத்த சந்திரனையணிந்த சடாமகுடத்தையுடைய பரமபதியானவர் எங்களை நோக்கி, குற்றமில்லாத குணத்தையுடைய இவளைக் கொண்டுவரும்படித் தேவவிமானங் கொண்டுபோங்களென்று கட்டளையிட்டருள நாங்களிங்கேவந்தோம். எ-று. ஆல் அசை. (௩க)

ஈங்கெநம்பரமனிடருழந்தோர்யாவரையுந்
தாங்குங்கருணைத்தலைவனெனுந்தகைமை
பாங்கொன்றறியாதிழைத்தவருச்சனையாற்
றீங்கின்புலைச்சிக்கருளத்தெளிந்தோமே.

(இ-புரை.) இன்று சிவராத்திரியென்றும், இதுசிவலிங்கமென்றும் இந்நாளில் ஆகாரம் நித்திரைநீங்கிச் சிவார்ச்சனைசெய்தால் இன்னபலன்வருமென்றும், தெரியாமற்செய்த அருச்சனையால், பாவத்தினையுடைய இந்தப்புலைச்சிக்குக் கிருபைசெய்ததினால், எம்முடையகடவுளானவர் இவ்வாறு துன்பம் அனுபவிக்கின்றவர்களையெல்லாம் இரக்ஷிக்கின்ற கிருபையையுடைய தலைவரென்னுந் தன்மையை நாங்கள் ஐயமறக் கண்டு தெரிந்துகொண்டோம். எ - று. (கஉ)

வேறு.

இனையளித்துயருறலென்னையென்றியேன்
முனிவரகேளிவண்முற்பிறப்பினில்
நினைவினுமடிசிலிட்டுண்டிநேர்ந்திடா
வினையினாற்பசிதருதுன்பமேயினாள்.

(இ-புரை.) சிவலோகத்துக்கு அழைப்பித்துக்கொள்ளும்படி பரமசிவங்கிருபைசெய்தருளத் தக்கதாகிய இவ்வகைத்தன்மையையுடையஇவள் இப்படிக்கொத்த துன்பத்தைப் பொருந்துதற்குக் காரணமென்னவென்று கேட்பீரோயானால் சிரேஷ்டமுள்ள முனிவரேகேட்பீராக; இவள் முன்சென்மத்தில் நினைப்பினாலும் அன்னபிக்ஷையிட்டுப் பின்புதான் உணவுகொள்ள எண்ணாதபாபத்தினால் பசிமிகுந்து, (ஆகாரங்கிடையாமல்) அப்பசியினாலேயே துன்பத்தைஅடைந்தனள். எ - று. (கங)

தீயகள்ளுண்டறனல்லசெய்தலால்
தூயகண்ணிழந்தனள்சுரபிக்கன்றென
ஆயிடையறிந்துய்வள்ளூரமருந்தலால்
நாயினுமிழிபவப்புலைமைநண்ணினாள்.

(இ - புரை.) கொடிய கள்ளுண்டு பாபமானகாரியங்களைச் செய்தமையால், பரிசுத்தமுள்ள பார்வையை யிழந்தாள்; (தீபவெளிச்சத்தின்முன்கொண்டுவந்து) பசுவின் கன்றென்று அறிந்தும், அந்தப்பசுவிறைச்சியை உண்டதினாலே நாயைப்பார்க்கிலும் இழிவுள்ள சண்டாளப்பிறவியை அடைந்தாள். எ - று.

கள்ளுண்ணுதலால் ஒழுக்கம் அறிவு நாணம் புகழ் செல்வம் முதலாகிய நன்மைகள் கெடும், இகழ்ச்சி தன்னைமறத்தல் நல்லவர்களை யவமதித்தல் முதலாகிய தீமைகள் நேரிடும், என்பதுபற்றித் "தீயகள்" என்றார். வள்ளூரம்-பசுவிறைச்சி.

கைம்மையிற்பலரொடுங்கலர்ந்தீமையால்
இம்மையிற்குட்டநோய்முதலயாவையும்
வெம்மையினலிதரவேட்டல்வேண்டுவார்
தம்மினத்தொருவருமின்றிச்சாம்பினுள்.

(இ-புரை.) கைம்பெண்ணான பின்பும் பலபேரோடுசேர்ந்த பாபத்தினால், இப்பிறப்பில் குஷ்டரோகம் முதலான பலநோய்களும் வெப்பத்துடன் வருத்த; தங்களினத்தில் தன்னை விவாகஞ்செய்துகொள்ள விரும்புகின்றவர்கள் ஒருவருமில்லாமல் சோர்ந்தாள். எ - று. (ருரு)

உரைத்தவிக்குறிபலவுற்றுத்தோன்றினோர்
திரைப்புவியிடத்துச்செய்தீமையாளவென்
றிரைத்திடுமறையெனவெண்ணுந்தூயவர்
விரைத்துணரிதழியாற்கடிமைவேண்டுவார்.

(இ-புரை.) சொல்லிய பலவாகிய இவ்விதக் குறிகளைப்பொருந்திப் பிறந்தவர்கள் அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த இப்பூலோகத்தினிடத்து பாவத்தைச்செய்தவர்களென்று வேதமுறையிடுமென அறிந்தபரிசுத்தர்கள் வாசனை பொருந்திக் கொத்துக்களாக மலர்ந்திருக்கும் கொன்றைப்பூமாலையணிந்த பரமசிவனுக்கு அடிமைத் திறஞ்செய்யவிரும்புவார்கள். எ - று. (ருசு)

அன்றியுமறலிதன்னுலயத்திவள்
சென்றநாளும்மையிற்சிவனையுன்னிய
நன்றியாலெரியழனரகம்புக்கவிந்
தொன்றிடுந்தீவினைக்குரியளல்லளால்.

(இ-புரை.) பரமசிவனுக்கு அடிமைத் திறஞ்செய்ய வேண்டுமென்கிற விருப்பங்கொண்டவளல்லாமலிருந்தும், யமதருமராசன்சபையில் இவள்போன நாளில் முற்சென்மத்தில் பரமசிவனை நினைத்தபுண்ணியத்தினால்,எரிகின்ற நரகத்தில்விழுந்து அவிந்துகிடக்கும் படியான பாவத்துக்குரியவளல்லள்; (என்று சொல்லி) எ - று. (ருஎ)

ஆயினுமவனியினிழிபிறப்படைந்
தோயும்வல்வினைப்பயனுண்டொழிந்தபின்
ஏயுநல்வினையினுலீசன்பூசனை
மேய்முத்தியுமதான்மேவுவாளென்றான்.

(இ-புரை.) அப்படி நரகத்துக்குப்போகத்தக்கவளல்லாதவளாயிருந்தாலும் பூலோகத்தில் நீசப்பிறப்படைந்து, ஓயும்படியான பாவத்தின்பயனை அனுபவித்தொழிந்தபின்பு, பொருந்திய நல்வினையால் சிவபூசையும் அந்தப்பூசையினால் அழியாத மோக்ஷத்தையும், அதனால் அடைவாளென்று சொன்னான். எ - று.

அதால் என்பது அன்சாரியைபெறாது வந்தது. (ருஅ)

இன்னதன்மையளிவளென்றிப்பாவையைப்
பன்னகமவுலியான்பதத்தினேற்றுதும்
அன்னதுங்காண்டியென்றவடனுவியை
யுன்னருந்திவ்வியவுருவஞ்சேர்த்தியே.

(இ-புரை.) இவளித்தன்மையுள்ளவளென்று சொல்லி, (முனிவனே!) இந்த மாதினைச் சர்ப்பங்களணிந்திருக்கும் சடாமகுடத்தையுடைய பரமசிவன் பதமாகிய சிவலோகத்துக்குக் கொண்டுபோகிறோம்; அதையும்பார்ப்பீரென்று அவளுயிரை நினைத்தற்கரிய திவ்வியதேகத்திற்சேர்த்து, எ - று. (௩௯)

விண்ணகம்போமொளிவிமானமீக்கொடு
பண்ணிசைவிஞ்சையர்பாடநாடகம்
எண்ணருமரம்பையரியற்றவேகினார்
அண்ணறன்றூதுவரவளைக்கொண்டரோ.

(இ-புரை.) ஆகாயத்தினிடத்துள்ள இருளைநீக்குகின்ற ஒளியையுடைய விமானத்தின்மேல் அவளை ஏற்றிக்கொண்டு, வித்தியாதரர்கள் பண்ணுடன் கூடிய இசையைப்பாடிவரவும், இந்தன்மையானதென்று மனதினாலும் நினைத்தற்கரிய அழகு முதலியகுணங்களையுடைய அரம்பை முதலிய மாதர்கள் நடனஞ் செய்துவரவும், (ஆகாசமார்க்கமாகப்) போனார்கள். எ - று (௪0)

இனி ௪௧-வது பாடல்முதல் ௬௫-வது பாடல்வரையில்
சிவலோகத்தின் பெருமையைச் சொல்லுகின்றது.

முக்குணவழிசெலுமுயற்சித்தீமையின்
எக்குணமுங்கடந்தின்பமவேட்டவர்
தொக்குடனிருப்பதஞ்ஞானத்துன்னிருள்
புக்கவர்யாவரும்பொருந்தொணாததே.

(இ-புரை.) முக்குணங்களின்வழியே செல்லுகின்ற முயற்சியாகிய பொல்லாங்கினையுடைய எவ்விதகுணங்களையுங்கடந்து பேரின்பத்தை விரும்பினவர்கள் கூட்டமாகச்சேர்ந்திருக்கத்தக்கது; நிலைபெற்றதாகிய அஞ்ஞானஇருளிற்சேர்ந்தவர்களெல்லாரும் பொருந்தக்கூடாதது. எ - று.

முக்குணம்-சத்துவம் இராசதம் தாமதம். (௪௧)

பானுமின்மினியொளிகெடுக்கும்பான்மைபோல்
வானமுச்சுடர்களுமழுங்கவெங்கணுந்
தானிமிரொளியதுசதுர்மறைத்தரு
மேனிமிர்சாகைக்கோர்வித்துமாயதே.

(இ - புரை.) சூரியன் மின்மினிப்பூச்சியின் ஒளியைக் கெடுக்குந் தன்மைபோல மேன்மைபொருந்திய முச்சுடர்களும் ஒளிமழுங்கும்படி எவ்விடத்

தம்பிரகாசிக்கும் ஒளியையுடையது; மேலுயர்ந்த சாகைகளையுடைய நான்குவேதமாகிய விருக்ஷத்துக்கு ஒருவிதையாயிருப்பது. எ-று. சாகை என்பது, வேதத்தினுட்பிரிவுக்கும் மரக்கொம்புக்கும் சிலேடை. (சஉ)

திருமறுமார்பனுங்கமலச்செல்வனும்
அருமையிற்பெறவின்பவாழ்வளிப்பதாங்
கிருமையுமிகந்ததுமாயையாலெழுங்
கருமமுங்கடந்துநின்றருள்களிப்பதே.

(இ-புரை.) திருமாலும் பிரமதேவனும் அருமையாகப் பெற்றுக்கொள்ளப் பேரின்பவாழ்வையளிப்பது; இவ்வுலகவாழ்விலுல்வருஞ் சுகதுக்கங்களையும் சுவர்க்கபோகத்தினுல்வருஞ் சுகதுக்கங்களையும், தன்னிடத்திலில்லாமல் இயல்பாகவே நீங்கியிருப்பது; மாயையினுல் உண்டாகிறகருமங்களையும் இயல்பாக நீங்கி எக்காலத்தும் அழிவின்றித் திருவருட்களிப்படைந்திருக்கின்றது. எ-று. ஆங்கு-அசை. ஸ்ரீவத்ஸமென்னும் மறு உண்மையின் திருமறுமார்பனென்றார். (சங)

வேறு.

விஞ்சையரியக்கர்சித்தர்விண்ணவர்முனிவர்முத்தர்
வஞ்சிநுண்ணுசுப்பிற்றெய்வமடந்தையரமுதகானம்
பஞ்சமத்தியற்றும்வீணைநாரதர்முதலோர்பாங்கின்
அஞ்சலித்துவக்கும்வேதத்தந்தமுமஃதேயாமால்.

(இ-புரை.) வித்தியாதரர்களும் யக்ஷர்களும் சித்தர்களும் தேவர்களும் முனிவர்களும் முத்திபெற்றவர்களும் பூங்கொடிபோல நுண்மையாகிய இடையினையுடைய அரம்பாஸ்திரீகளும் அமுதம்போலமதுரத்தைத்தருகின்ற இசைப்பாடலைப் பஞ்சமம் என்னும் சுருதியில்வாசிக்கும் வீணையையுடைய நாரதர் முதலாகியவர்களும் உரிமையுடன் நமஸ்கரித்துச் சந்தோஷிக்கும்படியான வேதத்தின் முடிவும் அதுவேயாம். எ-று. (சச)

எம்மையாளுடையமாதுமிளம்பிறையமுதங்காலச்
செம்மையார்பவளவேணிச்செம்மலுமெடுத்ததாளச்
சும்மையானந்தஞானநடனத்தின்சுவைகனிந்த
திம்மையினெம்மனோராற்புகல்வதோவீசலோகம்.

(இ-புரை.) எங்களை அடிமையாகவுடைய பார்வதிதேவியார் திருக்கரங்களில் எடுத்துத்தாக்கும் தாளத்திலுண்டாகின்ற நாதத்தின் மதுரமும், இளந்திங்களானது அமுதகிரணமாகிய வெண்ணிலவைப் பொழிந்துகொண்டிருக்கச் செம்மைநிறம் பொருந்திய பவளம்போன்ற சடைமுடியினையுடைய பரமசிவம் தாண்டவஞ்செய்கின்ற ஆனந்த நடனமதுரமும், முதிர்ந்திருக்கின்றது. (ஆதலால்) இந்தப்பிறப்பினையுடைய எம்போல்புவர்களால் புகழ்ந்து சொல்

லத்தக்கதோ? சிவலோகமானது. எ-று. பார்வதியார் தாளந்தட்டப் பரமசிவம் தாண்டவஞ் செய்தது சங்காரகாலத்தில். சும்மை-நாதம். (சரு)

அன்னதன்மைத்தாயென்றுமடைந்தவர்மீள்கலாத
நன்னெறியுடைத்தாயார்க்குநணுகருஞ்சிவலோகத்திற்
பன்னகமவுலியானும்பாவையுமுவந்துகாணப்
பொன்னொளிவிமானத்தோடும்பூவையைச்சேர்த்தினோ.

(இ-புரை.) அப்படிக்கொந்த தன்மையையுடையதாகியும், தன்னிடத்தில்அடைந்தவர்கள் எக்காலத்தும் நீங்காத நல்லமுறைமையையுடையதாகியும், யாவர்க்கும்பொருந்துதற்கரியதுமாகிய சிவலோகத்தில், பாம்பணிந்த சடாமகுடத்தையுடைய கயிலாயபதியும் (அவரிடப்பாகத்திலிருக்கும்) உமாதேவியாரும் திருவுளத்தில்மகிழ்கூர்ந்து நோக்கும்படிப் பொன்னொளியையுடைய விமானத்தோடும் அப்புலைமாதினைச் சேர்த்தார்கள். எ-று. (சசு)

அருந்தவமன்னகேளாயவணிலையிஃதுநீயும்
வருந்தல்கோகன்னமென்னும்வளநகர்மருவியீசன்
திருந்துபூசனைபுரிந்துசிவநிசித்துயிலைநீக்கி
யிருந்துபைந்தளிர்வில்லந்தாலருச்சிநின்னினனீங்கும்.

(இ-புரை.) அருமையாகிய தவஞ்செய்த மன்னவனேகேட்பாயாக; அந்தப் புலைச்சியினிலைமை யித்தன்மையது; நீயும்வருந்த வேண்டுவதில்லை; கோகன்னமென்கிற வளப்பம்பொருந்திய தலத்திற்சேர்ந்து, நம்மிறைவனாகிய மாபலலிங்கேசன் ஏற்றுக்கொள்ளத்தக்க பூசையினைச் சிவராத்திரியிற்செய்து, நித்திரை நீங்கியிருந்து, பசுமை நிறமுள்ள வில்வத்தளிரினால் அருச்சனை செய்வாயாக; அங்ஙனம் செய்யில் உன்னுடைய துன்பம் நீங்கும். எ-று. பில்வத்தின் திரிபு வில்வம். (சஎ)

என்றுவீறுயர்கோகன்னமான்மியமியம்பிக்
கொன்றைவேணியன்சிவநிசிவிரதமுங்கூறி
வென்றிவேன்மனுவேந்துக்குவிடைகொடுத்தருளிச்
சென்றுகோதமன்மிதிலையங்கடிநகர்சேர்ந்தான்.

(இ-புரை.) இவ்வாறு இன்பமிகுந்த கோகன்னமான்மியத்தைச் சொல்லி, பின்னுங் கொன்றைமாலையணிந்த பரமசிவனுடைய சிவராத்திரி விரதமான்மியமுஞ்சொல்லி, வெற்றிபொருந்திய வேலாயுதத்தையுடைய மனுவையொத்த அரசனுக்கு உத்தரவு கொடுத்தனுப்பிவிட்டுக் கோதமரானவர் அவ்விடம்விட்டுச்சென்று காவலைக்கொண்ட அழகியமிதிலைப்பட்டணத்துக்குப் போனார். எ-று.

ஓகைவாரிதிபடிந்தகமகிழ்ந்துவேலூரவோன்
பூகவார்பொழிற்கோகன்னமாநகர்பொருந்தி

மாகமாமதிச்சிவநிசிவரன் முறைநோற்றுச்
சோகமேதருபழவினைமுழுவதுந்தொலைத்தான்.

(இ-புரை.) கவுந்தமர்போனபின்பு வேலாயுதத்தையுடைய திண்மைவாய்ந்த அவ்வரசனானவன் ஆநந்தசாகரத்தில் மூழ்கி அகமகிழ்ந்து, கமுகமா முதலாகிய விருக்ஷங்கள் நெருங்கி நீண்டசோலைகள்சூழ்ந்த வளப்பம்பொருந்திய கோகன்னமென்னுந் தலத்திற்போய்ச்சேர்ந்து, பெருமைதங்கிய மாசிமாதச் சிவராத்திரியில் முறைமைப்படி விரதமனுஷ்டித்து, ருஷிபுத்திரனைக்கொன்ற பாதகத்தை நீக்கியதுமல்லாமல், முன்செனனங்களிற்செய்த சோகத்தையே தருகின்ற வினைகளையெல்லாமும் நீக்கினான், எ று. பூகம் கமுகம்-பாக்குமரம் (சுகூ)

மூன்றாவது

சிவராத்திரியிற்கன்மாடபாதராசன்முத்திபெற்றஅத்தியாயம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம், ௱எக.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நான்காவது

# சிவராத்திரியில்விமரிசன்முத்திபெற்ற

## அத்தியாயம்.

---

கருமணியனையகண்டன்கதையினையிவ்வாறென்று
தெருளுறச்சூதன்சொன்னான்றெளிந்தனர்கேட்டுப்பின்னும்
இருவினைதொலையவின்னுமீசனதருளிற்கேய்ந்து
வருகதைபுகறியென்னமுனிவரர்வழங்கலோடும்.

(இ - புரை.) நீலரத்தினம்போன்ற கண்டத்தையுடைய மகாபலவிலிங்கநாதன் சரித்திரமாகிய சிவராத்திரிமான்மியம் இம்முறைமையையுடையதென்று தெளிவுறும்படிச் சூதமுனிவர் சொன்னார். அதை நைமிசாரணிய முனிவர்கள் கேட்டுத்தெளிந்தவர்களாய்ப் பின்னும், முனிவரே! எங்களிருவினைகளும் நீங்கும்படிப் பரமசிவனுடைய கிருபையைப் பெறத்தக்கதாக நடந்திருக்குஞ் சரித்திரங்களைச்சொல்லவேண்டுமென்று விண்ணப்பித்துக்கொள்ளவும் சூதமுனிவர் சொல்லத்தொடங்கினார். எ - று. (க)

சிவகிரியளவையுமன்பர்செய்கையு
நுவலருந்தகையவாமெனுநுவன்றனம்
புவனியிலரன்றிருப்பூசைகண்டொரு
தவமிலான்பெற்றமைசாற்றுவாமரோ.

(இ-புரை.) சிவராத்திரி மான்மியமும் அந்தவிரதம் அனுஷ்டித்தஅடியார்கள் செய்கையுஞ் சொல்லுதற்கரிய பெருமையை யுடையனவாயிருந்தாலும், தெரிந்தமட்டில சொன்னோம்; இனி இந்தவுலகத்தில் பரமசிவனது சிவராத்திரி பூசையைக்கண்டு தவமில்லாதவனாகிய ஒருவன் அடைந்த நற்கதித்தன்மையைச் சொல்லுகிறோம். எ - று. அரோ-அசை. (உ)

பாரிடைக்கிராதர்தம்பதிக்குநாயகன்
பேரிகல்விமரிசனென்னும்பெற்றியோன்
சோரிவேற்றானையான்றுரகத்தேரினன்
மாரியினிருநிதிவழங்கும்வண்கையான்.

(இ-புரை.) இவ்வுலகத்திலிருக்கும் வேடருக்கு நாயகனாயிருப்பவன்; மிகுந்தவலியையுடைய விமரிசனென்னும் பெயரையுடையவன் ; பகைவர் உதிரக்கறைதோய்ந்த வேலேந்துஞ்சேனையை உடையவன் ; குதிரைகட்டிய தேரையுடையவன் ; இரப்பவர்க்கு மேகம்போல மிகுந்த திரவியங்களைச் சொரியும் வளப்பம் பொருந்திய கையையுடையவன். எ - று. (இன்னும் எத்தன்மையுள்ளவனென்றால்,) சோரி - உதிரம். (௩)

தீதுறுதசைவரைவின்றித்தின்பதாற்
கோதறுவேட்டையிற்புரிந்தகொள்கையான்
வேதியர்மகளிரேமுதலவெம்புலை
மாதரீறனுதினமருவும்வேட்கையான்.

(இ-புரை.) குற்றம்பொருந்திய மாமிசங்களை அளவில்லாமல் தின்பதினால், பழுதுபடாத வேட்டையில் விருப்பங்கொண்ட செய்கையை யுடையவன் ; (இதுவுமல்லாமல்) பிராமண ஸ்திரீகள்முதல் கொடிய நீசஸ்திரீகளிறுதியாகச் சொல்லப்பட்ட (எல்லாச்சாதி ஸ்திரீகளையும்) நாள்தோறும் புணருகின்ற ஆசையையுடையவன். எ - று. வரைவு - அளவு. (௪)

ஏழிரண்டாந்திதியெதிர்ந்தஞான்றெலாஞ்
சூழியங்கடகரியுரித்ததோன்றலை
வாழியவெனவிசேடித்துமாட்சியாற்
பாழியம்புயத்தவன்பூசைபண்ணுவான்.

(இ - புரை.) பலம்பொருந்திய அவ்வேடவரசன் மேற்கூறிய கொடிய செய்கையை யுடையனாயிருந்தாலும், சதுர்த்தசிவருகின்ற நாளிலெல்லாம் முக படாங்கட்டத்தக்கதாகிய கபோலமதத்தையுடைய யானையையுரித்த பரமசிவனை (சங்கரவாழ்க சம்புவாழ்க சதாசிவவாழ்க என்று சிவநாமங்களை யெடுத்துத்) தோத்திரஞ்செய்து மாட்சிமையுடன் பூசைசெய்வான். எ - று.

சூழி-யானைமுகபடாம்; கடம்-மதம்; பாழியம் என்பதில் அம் சாரியை; மாட்சியாற் பூசைசெய்தலாவது பூசாத்திரவிய முதலாகிய உபகரணங்களிற் குறைவில்லாமற் செய்தல். (௫)

பூசனையிறுதியிற்புளகமீக்கொள
ஈசனையேத்துநின்றுடுமேழிசை
மாசறப்பாடும்பின்வணங்குமற்றவ
னேசமித்துணையெனநிசழ்த்தற்பாலதோ.

(இ - புரை.) இவ்வாறுசெய்யும் பூசையின்முடிவில் உடலில் புளகமுண் டாம்படி பரமசிவனைத் தோத்திரஞ்செய்வான்; நின்றுகொண்டு (பரதசாஸ்த் திரத்தின்கிரமப்படி) திருத்தஞ்செய்வான்;சத்தசுரங்களும் வழுவாமல் கீதங்கள் பாடுவான்; பின்பு (அஷ்டாங்க பஞ்சாங்கத்துடன்) பணிகுவான்; அவனுடைய சிவநேசமிவ்வளவென்று அளவிட்டுச்சொல்லும் பான்மையையுடையதன்று. எ-று.

ஏழிசையாவன:— சக்ஷமம் ரிஷபம் காந்தாரம் மத்திமம் பஞ்சமம் தைவ தம் நிஷாதம் என்பவைகள்; இவற்றின் முதலெழுத்துக்களால் ச ரி க ம ப த நி என்றும் கூறுவர். (௬)

இன்னணம்புரிந்தவனிறைமைபூண்டுதன்
செங்நெறிச்செய்யகோறிசைகண்மீச்செல
நன்னெறியாவருநடப்பநன்கிலாப்
புன்னெறிதுரந்தறம்புரக்குநாளினே.

(இ - புரை.) இம்முறைமையாகப் பூசைசெய்கின்றவன் அரசாட்சிசெய் யுந்தன்மையினையு முடையவனாய்ச் செவ்வையான முறைமையை நடத்துகின்ற தன்செங்கோலானது திக்குகளெங்குஞ் செல்லவும், எல்லாரும்நன்மார்க் கத்தில் நடக்கவும், நன்மையில்லாத தீயநெறிகளை யெல்லாம் நீக்கித் தருமத்தை ப்பாதுகாக்கும் நாளில். எ - று. செங்கோல்-அரசநீதி; புரத்தல்-காத்தல். (எ)

வேறு.

ஆண்டகைதருமுதவதியெனுமனைவியவனடிதொழுதிகல்வேலோய்
காண்டகுவனப்பினீதியிற்றவத்திற்கல்வியினறிவினேரில்லாய்
சேண்டருபிறையான்பூசனைவழாதுசெய்யுநீதீவினைக்கிடமாய்ப்
பூண்டவூனருந்திநெறியிலாமடவார்போகமேநுகர்வதுபுகலே.

(இ - புரை.) யாதொன்றினுக்கும் அஞ்சாத வீரத்தன்மையையுடைய அவ்வரசன் மனைவியாகிய குமுதவதி யென்பவள் (ஒருநாள்) தன்கணவன்பாதத்தைத்தொழுது, பகைவரைப் பகைக்கும் வேற்படையும் யாவரும் (வியப்புடன்) பார்க்கத்தக்க கட்டழகும் நீதியும் தவமும் கல்வியும் அறிவும் மிக்குடைத்தாய் ஒப்பில்லாத என் நாயகரே! (தேய்வதும் வளர்வதுமில்லாமல்) எக்காலமும் ஓரேதன்மையாயிராநின்ற இளந்திங்களை யணிந்திருக்கும் சந்திரசேகரனாகிய பரமசிவனுடைய பூசையை ஆகமவிதிப்படி செய்கின்றநீர் பாவத்துக்கிடமாய்ப் பொருந்திய மாமிசங்களைத்தின்று, முறைமையில்லாமல் ஸ்திரீகள் போகங்களையே அனுபவிக்கின்றது (என்னகாரணம்) அடியாளுக்குச் சொல்லவேண்டுமென்றனள். எ - று. (அ)

என்றவளுரைத்தவாசகங்கேளாவிறைமகன்குறுநகைகோட்டிக்
குன்றெனவுயர்ந்தகுவிமுலைமடவாய்கூறுவல்கேட்டிநீயென்ன
முன்றவப்பயனாலிறந்ததுநிகழ்வுமுன்வருங்காலமுமுணர்ந்தேன்
அன்றுமுற்பவத்தோர்ஞமலியாய்ப்பம்பையணிநகரதனின்வந்துதித்தேன்

(இ - புரை.) (இப்படிக்கொத்த பாவ கிருத்தியங்களைச் செய்வதற்குக் காரணமென்ன) சொல்லுமென்று தன்மனைவிசொன்ன வார்த்தையைக்கேட்டு அவ்வரசன் புன்னகைசெய்து, பொன்மலைபோல் உயர்ந்து குவிந்த ஸ்தனங்களையுடையபெண்ணே! நான்சொல்லுவது கேட்பாயாக; பூர்வஞ்செய்த தவப்பயனால் இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும் அறிந்தேன்; முற்பிறப்பில் நான் ஒருநாயாய்ப்பிறந்து அழகுள்ளதாகிய பம்பைநகரத்தில்வாசமாயிருந்தேன். எ-று.

கேளா செய்யா என்னும் வாய்பாட்டுவினையெச்சம். ஞமலி-நாய். (௯)

மாலயன்காணுவடிமுடிக்குரிசின்மதியணிபம்பைநாயகன்றன்
ஆலயங்குறுகிப் பலிக்கிடுமடிசிலருந்துவான்புகுந்திடுமளவிற்
காலவன்றூதரிவனெனக்கண்டோர்கல்லினுற்கதையினுற்றுரப்பவ [ன்.
ஓலொடுவெருவியாலயம்வலங்கொண்டோடினேனுயிர்பிழைத்துய்வா

(இ - புரை.) (பம்பைநகரத்தில் வாசமாயிருக்கும்போது) விஷ்ணு பன்றியுருவங்கொண்டு பாதாளத்தைப் பிளந்துகொண்டுபோய்த் தேடியுங்காணப்படாத திருவடிகளையும், பிரமன் (அன்னமாக உருவங்கொண்டு பறந்துமேலுலகம்போய்த்தேடியுங்காணாத) திருமுடியையுமுடைய இறைவனும் சந்திரசேகரருமான பம்பையென்னுந்தலத்தில் வீற்றிராநின்ற பரமசிவனது ஆலயத்திற்சேர்ந்து, பலிக்காக வைக்கும் அன்னத்தை உண்ணச் சென்றகாலத்தில், யமனுடை தூதரிவர்களென்றுசொல்லும்படி என்னைக்கண்டவர்கள் கல்லினாலும் தடியினாலும் அடித்துத்துரத்த நான்பயந்து குரைத்துக்கொண்டு உயிர்தப்பிப்பிழைக்க அந்த ஆலயத்தை வலமாகச்சுற்றிக்கொண் டோடினேன். எ - று. ஓல் - ஓலம். (௰)

சினகரமொருவிப்போகுவான்வழிகணேடினேன் கண்டிலேன்றிகைத்
மனவலியிளைத்தும்பலிசொரிபீடமருங்குநின்றீசனைநோக்க [தேன்
அனகனுக்கன்றுசிவநிசியாகவருஞ்சுடர்த்திபமோடெடுத்தல் [தேன்.
வினையறக்கண்டேன்கண்டிழியொருவன்வெஞ்சரந்துரத்தலும்விளிந்

(இ - புரை.) (ஓடியநான்) அந்த ஆலயத்தை நீங்கிப்போவதற்கு வழிகள் தேடிக்காணமல் திகைத்து, மனவலியும் இளைத்துப் பலிபோடுகின்ற பீடத்தின் அருகில்நின்று சிவலிங்கப்பெருமானைப் பார்த்தேன்; அன்றுசிவராத்திரி யாதலினால் நிர்மலனாகிய அந்தச்சிவலிங்கப்பெருமானுக்கு (யாவரும் தரிசனஞ்செய்யக்) கிடைப்பதற்கரிய சுடரினையுடைய தீபாராதனை முதல் சில ஆராதனை செய்வதை என்பாவங்களெல்லாம் நீங்கும்படிக்கண்டேன். அப்படிக்கண்டவளவில் (ஒருவன் வில்லைவளைத்து) கொடியபாணத்தை பிரயோகஞ்செய்ய (அதுஎன்மேல்தைத்தவுடன்) இறந்தேன். எ - று. அனகன் - பாவமற்றவன்; அகம்-பாவம் மலம். ()

அருஞ்சுடர்த்தீபமெடுத்தபூசனையினமலனைமாலையம்போது
விரிஞ்சனுங்காணுமணிமுடிதமியேன்விளிந்திடும்வேலைகண்டதனாற்
பரஞ்சுடர்கோயில்வலங்கொளப்புகுந்தபண்பினுற்பாரினிற்பகைஞ
ருரஞ்சுடுநெடுவேலிறைவனுயுதித்தேன்காலமூன்றினையுமுற்றுணர்ந்தேன்.

(இ - புரை.) அந்திப்பொழுது (செய்யுஞ் சோடசோபசாரங்களில் ஒன்றாகிய) அரியசுடர்த்தீபமேந்திய பூசாகாலத்தில் பிரமனாலுங்காணப்படாத அப்பரமபதியினுடைய திருமுடியைத் தமியேனாகிய நான் இறக்குஞ்சமயத்தில் தரிசித்ததினாலும், அந்தப்பரஞ்சுடர் வீற்றிருக்கும் ஆலயத்தைப் பிரதக்ஷணம் வந்த தன்மையினாலும், இந்தவுலகத்தில் பகைவருடைய மார்பைச் சுடத்தக்க நெடியவேலாயுதத்தையுடைய அரசனாகப்பிறந்தேன். (அவ்வாறு பிறந்ததிலும்) திரிகாலங்களையும் அறிந்தவனானேன். எ - று. (கஉ)

ஆதலானிந்தநல்வினைப்பலத்தையளித்ததுசிவநிசியென்னு
மாதராயின்றும்வருமதிதோறும்வளர்பிறைதேய்பிறையிரண்டிற்
போதுமப்பக்கமேழிரண்டெய்திற்பொருந்துமச்சிவநிசிபோல
மேதகுபூசையனுதினந்தன்னின்விசேடமாய்வழிபடுகின்றேன்.

(இ-புரை.) ஆதலால் பெண்ணே! சிவராத்திரியானது (உலகத்தில் இழிவுள்ள செந்நாயாகிய நாயாகப் பிறந்திருந்த எனக்கும் இப்படிக்கொத்த அரசபோக

பிறப்பிலும் மாதமாதம் வருகின்ற பூர்வபக்ஷம் அபரபக்ஷம் என்னுமிரண்டு பக்ஷங்களிலும் பதினான்காந் திதியாகிய சதுர்த்தசியில் மாசிமாதத்தில் பொருந்துகின்ற அம்மகாசிவராத்திரியில் பூசைசெய்வதுபோலவே மேன்மை பொருந்திய சிவபூசனை நித்யத்திலும்விசேஷமாகச் செய்துவருகின்றேன், எ-று.

இன்னணம்புரியும்பூசையிற்றீமையகற்றுமோவெனவினவுதியேன்
மன்னனைக்கயிலைவரதனைவழுத்தின்மலையெனக்குவித்தவிந்தனத்தைச்
செந்நிறப்பொறித்தீநுழைந்துநீறுக்குஞ்செய்கைபோற்பவமெலாந்தீர்க்கும்
அன்னதானீயுமரனடிக்கமலத்தருச்சனைபுரிதியாரணங்கே.

(இ-புரை.) தெய்வப்பெண்ணை யொத்தவளே! இவ்விதமாகச்செய்யும் பூசையினால் பாபங்கள் நீங்குமோ? என்று கேட்பையாகில், சொல்லுகிறேன் கேட்பாய்; தேவர்களுக்கெல்லாம் இறைவனும், ஸ்ரீகயிலாசத்தில் வீற்றிருந்து வேண்டுவார்க்கு வேண்டிய வரங்களை ஈவோனுமாகிய சாம்பசிவமூர்த்தியை ஒருதரம் தோத்திரஞ்செய்தால், மலைபோலப் போரிட்ட விறகுகளைச் செம்மை நிறமுடைய தீப்பொறியானது நுழைந்து சாம்பராக்கிவிடுந் தன்மைபோலப் பாபங்களையெல்லாம் நீக்கிவிடும். ஆகையால், நீயும் பரமசிவனுடைய திருவடித் தாமரைகளை அருச்சனைசெய்யக்கடவாய். எ-று. இந்தனம்-விறகு. (கச)

என்றதுகேட்டதுடியிடைமடவாளிளநிலாமுறுவன்முன்றோன்ற
மன்பதையுள்ளுங்காலமூன்றுணரவல்லையேலெனக்குமுற்பிறப்பின்
வன்புறுதோற்றமுழுதுரையென்னமல்லிகார்ச்சுனவரன்மன்னி
யின்புறுகோயிற்புறவதாயுதித்தாங்கிருந்தநீயிரைகவர்ந்துண்பான்.

(இ-புரை.) இவ்வாறு தன்கணவன் சொன்னவார்த்தையைக்கேட்ட தமருகம்போன்ற இடையினையுடைய அம்மாதானவள் சந்திரனது இளங்கதிர் போற்புன்சிரிப்புவிளங்க, நீர் மனிதர்கள் நினைக்கும் திரிகாலங்களையும் அறியமாட்டுவீரானால்,எனக்கு முன்பிறப்பில் என்ன சென்மம் நேரிட்டிருந்ததோ? அந்தச்சென்மத்தையும் அதில் நடந்த செய்திகள் யாவையும் சொல்லுமென்று வினவ, மல்லிகார்ச்சுனேஸ்வரர் அன்புடன் வீற்றிராநின்ற கோயிற்புறாவாகப் பிறந்து, அவ்விடத்திலிருந்த நீ ஒருநாள் இரைதேடியுண்ணுவதற்காக. எ-று. துடியிடை-உடுக்கைபோன்ற இடை. மன்பதை-மனிதர். (கரு)

செந்நிறத்தசையொன்றெடுத்துநீவரலுஞ்சினவிழியெருவைவந்தணுகி
யன்னதுவலிதிற்கவர்வனென்றுன்னையழன்றுபின்றொடர்தலும் வெருவிப், பொன்னெடுங்கோயில்வலங்கொடுபறந்துபொருவிடைக்கொடி நெடுங்கம்பர், துன்னுபுகரந்தங்கொதுங்கிநீயிருப்பத்தொடர்ந்தவக்கங் கமுங்கண்டே.

(இ-புரை.) செம்மை நிறத்தையுடைய ஒரு மாமிசத்துண்டினை நீ யெடுத்துக்கொண்டு வரும்போது, கோபத்தால் சிவந்தகண்களையுடைய ஒரு பருந்து வந்துசேர்ந்து, அந்த மாமிசத்தைக் கிரகித்துக்கொள்ளுவனென்று கோபித்து உன்னைப்பின் தொடரவே நீ பயந்து, பொன்னாற்செய்யப்பட்ட அந்தப் பெரிய கோயிலைப் பிரதக்ஷிணமாகப் பறந்துபோய்ப் போர் செய்யத்தக்க ருஷபக்கொடி கட்டும் பெரிய கம்பத்தில் தங்கி, மறைந்தொருபக்கத்திலிருக்க; அப்படிமறை

ந்திருந்தும் உன்னைத்தொடர்ந்துவந்த பருந்தும் உன்னைக்கண்டு. எ-று. எருவை கங்கம்-பருந்து. (கசு)

சூழிமால்கரியின்றேட்டியிற்கூர்ந்ததுண்டவெம்படையினாற்கொத்தி
வாழியவுன்னையுயிர்செகுத்தந்தவன்றசைகழுகுகொண்டேக
வீழுநீயீசன்சன்னிதிப்பட்டுவிளிதலான்முன்வலஞ்செயலால்
ஆழிநீருடுத்ததராபதிமகளாயவதரித்தெம்மையுமடைந்தாய்.

(இ-புரை.) அப்படிக் கண்ட பருந்தானது முகபடாங்கட்டிய யானையைக் கொத்துகிற அங்குசத்தைப்போலக் கூர்மையுள்ள தன் அலகாகியவெவ்விய ஆயுதத்தினால் உன்னைக்கொத்தி உயிரைக்கொன்று, (நீ கொண்டுவந்த கொழுத்த) அந்தவலிய மாமிசத்தைக் கவர்ந்துகொண்டு போய்விட; துசஸ்தம்பத்திலிருந்து விழுகின்ற நீ சிவசந்நிதிக்கெதிரில் விழுந்து இறந்ததினாலும், முன்னே பிரதக்ஷிணஞ் செய்தலினாலும், சமுத்திரஞ்சூழ்ந்த பூமிக்கிறைவனாகிய அரசன் புத்திரியாகப் பிறந்து என்னையும் விவாகஞ்செய்து கொண்டாய். எ-று, வாழிய என்பது முன்னிலையசை. (கஎ)

வேறு.

இவ்வாறுகொற்றமுடிமன்னனிறுத்தலோடுஞ்
செவ்வாய்மழலைக்கிளியன்னவள்செப்பலுற்றாள்
ஒவ்வாதவும்மையுடனிம்மையுமுற்றுணர்ந்தேன்
எவ்வாறினிமேலிருவோருமுதிப்பதென்றாள்.

(இ-புரை.) வெற்றியுள்ள மகுடவர்த்தனனாகிய அரசன் இப்படிச் சொன்னவுடன் சிவந்தவாயையும் மழலைச் சொல்லையுமுடைய கிளியொத்தவள் சொல்லுகின்றாள்; ஒவ்வாததாகிய முற்பிறப்பும் இப்பிறப்பும் நன்றாக அறிந்துகொண்டேன், இனிமேல் நாமிருவரும் எவ்விதப்பிறப்பாகச் செனிப்போமென்றாள். எ-று. முன்பிறப்பின் றன்மை மிருகமாகவும் பக்ஷியாகவும் நேரிட்டமையின் ஒவ்வாத வும்மையெனப்பட்டது. இறுத்தல்-சொல்லல்; உம்மை-முற்பிறப்பு. (கஅ)

கேளாயிரண்டாம்பவத்தன்மைகிளத்துவன்யான்
வாளார்விழியாய்புகழ்ச்சிந்துநன்னாட்டுவந்து
தாளார்கழன்மாமுடிமன்னவர்தாழ்ந்திறைஞ்சுந்
தோளாடல்வேந்தாயரசாள்வனித்தொல்லைஞாலம்.

(இ-புரை.) வாளொத்த கண்களையுடைய பெண்ணே! இனிவரும் இரண்டாம்பிறப்பின் தன்மையை நான் சொல்லுகிறேன் கேட்பாய்; புகழ்தங்கிய நல்ல சிந்து தேசத்தில் பிறந்து வீரகண்டைகட்டிய காலையும் பெரிய கிரீடம் அணிந்த முடியையுமுடைய அரசர்கள் தாழ்ந்து வணங்கும்படியான வெற்றிபொருந்திய தோள்வலியையுடைய மன்னவனாகிப் பழையதாகிய இந்தப்பூமியை என்னுக்கினைக்குட்படுத்தி அரசாட்சிசெய்வேன். எ - று. (கக)

செல்லார்நறும்பூங்குழற்காமருசெல்வி நீயு
மல்லார்புயன்றனஞ்சயன்றந்தமடந்தையாகித்
தொல்லாரணத்தின்முறையேதொடைசூட்டியெற்கே
யில்லாகிமுல்லைவடமீனினியைந்துவாழ்வை.

(இ-புரை.) நீருண்டமேகம்போற் கறுத்து வாசனைதங்கிய பூமாலையணிந்த அளகபாரத்தையுடைய அழகிய பெண்ணே! நீயோவென்றால், பலம்பொருந்திய தோளையுடைய தஞ்சயனென்னும் அரசன் புத்திரியாகிப் பழைய வேத விதிப்படி யெனக்கே மணமாலைசூட்டி மனைவியாகி, கற்பிற்சிறந்த அருந்ததி போல வாழ்குவை. எ-று. முல்லை - கற்பு. வடமீன் - அருந்ததி. (௨0)

வேறு.

பாசிழைப்பரவையல்குற்பனிமொழியணங்குகேளா
யாசின்மூன்றும்பவத்திலணிசவுராட்டிநாட்டில்
வாசவன்றிருவின்மிக்கமன்னனாய்த்தோன்றியந்தக்
காசினிமுழுதும்யானேபொதுவறக்காவல்பூண்பேன்.

(இ-புரை.) பைம்பொன்னாற் செய்யப்பட்ட மேகலாபரணம் அணியும பரந்த அல்குலையும், குளிர்ச்சிதங்கிய வசனத்தையுமுடைய பெண்மணே! கேட்பாயாக; குற்றமில்லாத மூன்றும்பிறப்பில் அழகிய சவுராட்டிரநாட்டில் இந்திர செல்வத்தினுமிக்க செல்வமுள்ள மன்னவனாய்ப்பிறந்து, அந்தத் தேச முழுவதும் பொதுவின்றி நானே அரசு செய்வேன். எ - று. (௨க)

கொங்குடைந்தொழுகும்பைந்தார்க்குவிமுலையணங்கே நீயு
மங்குல்கண்படுக்குந்தண்காவளந்திகழ்கலிங்கநாட்டிற்
செங்கைவேற்கலிங்கர்கோமான்றிருமகளாகத்தோன்றி
யங்கெனக்குரிமையாகிவைகுவையளப்பில்காலம்.

(இ-புரை.) முருக்குடைந்து தேனொழுகாநின்ற பசிய பூமாலையணிந்த தனங்களையுடைய பெண்ணே! நீயும் மேகம் கண்வளரும்படி (உயர்வாகிக்) குளிர்ச்சிபொருந்திய சோலைகள்சூழ்ந்த வளப்பமிகுந்த கலிங்கதேசத்தில் வேலேந்திய செங்கையையுடைய கலிங்கராசன் திருமகளாய்ப்பிறந்து, அந்தச் சென்மத்திலும் எனக்குரிமையுள்ள மனைவியாகி, அளவில்லாதகாலம் வாழ்ந்துகொண்டிருப்பை. எ - று. மேகம் கண்வளர்தலாவது - நீங்காமல் சூழ்ந்துகொண்டிருத்தல். (௨௨)

குழலினிற்பாகிற்றேனிற்குயிலினிலமிழ்திற்றோய்ந்த
மழலையஞ்சொல்லாய்நாலாம்பவத்தினின்மணிசெய்மாட

நிழலிருள்சீக்குஞ்செவ்விநிறைந்தகாந்தாரநாட்டிற்
கழல்புனைதுணைத்தாள்வைவேலிறைவனுயுலகங்காப்பேன்.

(இ-புரை) (அந்த மூன்றும்பிறப்பு நீங்கினபின்பு) வேய்ங்குழலினிசையிடத்தும் வெல்லப்பாகினிடத்தும் தேனினிடத்தும் குயிலோசையினிடத்தும் தேவாமிர்தத்தினிடத்தும் தோய்ந்ததுபோல மிகுந்த மதுரம்பொருந்திய மழலைச்சொல்லை யுடையவளே! நாலாவது பிறப்பில் யான் அரதனங்கள் பதித்திருக்கும் மாளிகைகளின் ஒளியானது இருளைக்கெடுக்கும்படியான அழகுநிறைந்த காந்தாரதேசத்தில் வீரகண்டையணியுங் கால்களையுடைய கூர்மைபொருந்திய வேலாயுதமேந்தும் அரசனுகிப் பூலோகத்தை ரக்ஷிப்பேன். எ - று

வை - கூர்மை. (உ௩)

நஞ்சினிலமிழ்திற்றோய்ந்துநலந்திகழ்நெடியவாட்கண்
வஞ்சிநுண்ணிடையாய்நீயுமகதர்கோன்மகளாய்த்தோன்றி
யஞ்சனக்கடல்சூழ்வையமளிக்குமென்மனைவியாகிப்
பஞ்சின்மெல்லடியார்போற்றப்பரிவுடன்வாழ்வைமாதோ.

(இ-புரை) விஷத்திலும் அமிர்தத்திலுந் தோய்ந்து அழகுடன் விளங்குகின்ற நெடியவாள்போன்ற கண்களையும், பூங்கொடிபோன்ற இடையினையுமுடையவளே! நீயும் மகததேசாதிபதி மகளாய்ப்பிறந்து, கருமைநிறமுள்ள கடல்சூழ்ந்த இவ்வுலகத்தை இரக்ஷிக்கும் என்மனைவியாகி, பஞ்சினைப்போல மிருதுவாகியபாதங்களையுடைய மாதர்கள்போற்றப் பரிவுடன்வாழ்குவை. எ-று.

ஆடவருக்குப் பொதுப்பார்வையால் வருத்தத்தையும், சிறப்புப்பார்வையால் இன்பத்தையும் தருதலின், நஞ்சிலும் அமிழ்திலும் தோய்ந்த கண்களென்றார். (உ௪)

வேறு.

பண்ணியன்மகரவீணையுங்குழலும்பழுத்தமுதளவியகுதலைப்
பெண்ணணங்கைந்தாம்பிறப்பினிலவந்திப்பெயருடைப்பெரியநாடளிக்கும்
அண்ணலஞ்செங்கோலரசன்மாருகவருவனீதசாருகன்மகளாய்
மண்ணியவிழவில்மாலையென்புயத்தில்வனைகுவைமணந்தினிதிருப்போம்

(இ-புரை.) (அந்தநாலாம்பிறப்பு நீங்கினபின்பு) முழங்குஇசைபாடு மியல்பினையுடைய மகரவீணையைப் போலவும் வேய்ங்குழலைப்போலவும் மதுரமுதிர்ந்து, தேவாமிர்தத்தைக் கலந்ததுபோலிராநின்ற குதலைச்சொற்களையுடைய பெண்ணணங்கே! ஐந்தாம்பிறப்பில் அவந்தியென்னும்பெயருள்ள பெரியதேச

த்தையளிக்கும் பெருமைபொருந்திய அழகிய செங்கோற்செலுத்தும் அரசனாக நான்பிறப்பேன்; நீ தசாருகனென்னும் அரசன்மகளாய்ப் பிறந்து, அலங்காரஞ்செய்த கல்யாணமண்டபத்தில் என்புசங்களில் மாலைசூட்டுவை; அதற்குமேல் நாமிருவருங்கூடி வாழ்குவோம். எ - று வீணைகள் பெரும்பான்மை நால்வகைப்படும். அவை பேரியாழ் மகரயாழ் சகோடயாழ் செங்கோட்டியாழ். பேரியாழிற்கு நரம்பு (உக.) மகரயாழிற்கு (கள.) சகோடயாழிற்கு (கசு.) செங்கோட்டியாழிற்கு (எ.) (உ௫)

வெண்பா.

பேரியாழ்பின்னுமகரஞ்சகோடமுடன்
சீர்பொலியுஞ்செங்கோடுசெப்பினர்— தார்பொலிந்து
மன்னுந்திருமார்பாவண்கூடற்கோமானே
பின்னுமுளவோபிற.

ஒன்றொடிருபதுமோரேழ்மேற்பத்துடனே
நின்றபதினாறேழுநேடுங்காற்— குன்றாத
நால்வகையாழிற்குநன்னரம்புசொன்முறையே
மேல்வகைநூலோர்விதி.

குழலானது மூங்கில் சந்தனம் வெண்கலம் செங்காலி கருங்காலி என்னுமிவைகளில் ஒன்றால் செய்யப்படுவது.

வாங்கியமூங்கிலுமாசந்தும்வெண்கலமும்
பாங்குடைச்செங்காலிகருங்காலி— பூங்குழலாய்
கண்ணனுவந்தகழைக்கிவைகளாமென்பார்
பண்ணமைந்தநூல்வல்லோர்பார்த்து.

மூங்கிலினாற்செய்வதே உத்தமம்; இவை சிலப்பதிகாரத்திற்காண்க.

வாளெனத்துளங்கிக்குருதிதோய்வேலின்வரிபரந்தமுதொடுவிடத்தின்
கோளுறப்பிறழுநெடுங்கணுயாறுங்குலப்பிறப்பதனின்யானத்தின்
னீள்பெயர்நாட்டிற்கரசனாய்வருவனீயும்போயயாதிகன்னிகையாய்
நாளணிவிழவினல்லணியணிந்தென்னன்மனையாகிவாழ்குவையால்.

(இ - புரை.) வாளாயுதம்போல ஒளிபொருந்தியும், பகைவருதிரந் தோயத்தக்க வேலாயுதம்போல வரிபொருந்தியும், அமுதம்போல நன்மையைத் தருவதும், விஷம்போலத் தீமையைத்தருவதுமாகப் பிரகாசிக்கும் நெடியகண்களையுடைய நாயகியே! சிரேட்டமான ஆறாம்பிறப்பில் நான் அஸ்தினாபு

யினுக்கு மன்னவனுய் வருவேன் ; நீயும் யயாதிராசன்மகளாய்ப்பிறந்து அலங்காரஞ்செய்யும் கலியாணத்தில் நல்லமுகூர்த்தத்தில் மாங்கலியசூத்திரந் தரித்துக்கொண்டு எனக்கு நல்லமனைவியாய் வாழ்குவை. எ-று.

அந்த ஆறும்பிறப்பு நீங்கின பின்பு. (உசு)

வேறு.

வம்பைமுனிந்துமுகங்கறுத்துமணிவாரறுத்துமதவேழக்
கொம்பைவெகுண்டதுணைமுலையாயேழாம்பிறப்பிற்கூடற்கோ
னிம்பமணியுந்தமிழ்ப்பாண்டிநிருபன்றனக்குமகனுகி
யம்பைந்தொழிந்தகாமனிவனென்னவுலகினவதரித்தே

(இ - புரை.) கச்சினைமீறியும் முகங்கறுத்தும் அந்தக் கச்சினைச்சேர்த்து முடியப்பட்ட வாரினையறுத்தும் மதமுள்ள யானைக்கொம்பையுங் கோபித்துப் பூரித்த உபய தனங்களையுடைய நாயகியே ! ஏழாம்பிறப்பில் மதுரைக்கிறைவனுகி வேப்பம்பூமாலையணியும் தமிழ்விளங்கும்பாண்டியதேயவரசன் புத்திரனுகி ப்பஞ்சபாணங்களையும் (கருப்புவில்லையும்) ஒழித்துவந்திருக்கு மன்மதனிவனே யென்று யாவருஞ்சொல்லத்தக்க அழகுடன் வுலகத்திற்பிறந்து. எ-று.
நிம்பம் - வேப்பு. (உஎ)

பதுமவருணனெனும்பெயரும்படைத்துப்படைக்குங்கொடைதனக்கு
முதியவெண்ணெண்கலைக்குநிகர்மொழியினிணையிலிவற்கென்ன
மதியம்வளரும்படியெனயான்வளருநாளின்மாமயினீ
நதியம்வளங்கூர்விதேகவளநாட்டிற்கரசன்மகளாக,

(இ - புரை.) பதுமவர்ணன் என்கிற பெயரும்பெற்று, ஆயுதப்பயிற்சியிலும் தியாகத்திலும் பழமையாகிய அறுபத்துநாலு கலைகளிலும் இவனுக்கொப்புச் சொல்லத்துணியில் வேறொருவருமில்லை யென்னும்படி, பிறைவளருந் தன்மைபோல நான்வளருநாளில், பெருமைபொருந்தியமயில்போன்றவளே! நீ ஆற்றின் வளப்பத்தைத்தரத்தக்க விதேகநாட்டரசன் புத்திரியாக. எ - று.
நதியம் - நதி; அம் சாரியை. (உஅ)

முளரிப்பொகுட்டுவெட்டவணைமுருகுநாறுமலர்க்கோயின்
விளரிக்குதலைச்செந்திருவும்விழையுமழகினுடன்பிறந்து
வளருநீயும்வசுமதியென்றொருபேர்புனைந்துவாழுநாள்

(இ - புரை.) வட்ட வடிவமுள்ள பூங்கொட்டை ஆசனத்தில், வாசனைகமழ்கின்ற செந்தாமரைப் பூங்கோயிலில் வீற்றிராநின்ற இராகத்தையொத்த

குதலைச்சொல்லையுடைய மகாலட்சிமியும் (ஆண்மைத் தன்மைகொள்ளும்படி) விரும்பத்தக்க அழகுடன்பிறந்து, வளருகின்ற நீ வசுமதியென்கிற ஒப்பற்ற பெயர்பெற்று வாழும்நாளில், மெலிகின்ற (நுண்ணியதாகிய) இடையினையுடைய உன்னைப்பெற்ற சிறப்புள்ள பிதாவானவன் மந்திரிகளுடன் சொல்லுவான். எ-று. ஆடவர்கள் சவுந்தரியமுள்ள மற்றோ ராடவனைக்கண்டால் தாஙகள் ஸ்திரிகளாகப்பிறந்து அந்த ஆடவர்களைச் சேரவேண்டுமென்று ஆசைகொள்வதும், மாதர்கள் அழகுள்ள மற்றொரு மாதினைக்கண்டால் அவ்வாறு எண்ணுவதும் இயல்பு. "ஆடவர் பெண்மையவாவுந் தோளினாய்" என்று கம்பர் கூறினதும் இதுபற்றியே என்க. மேற்செய்யுளிற்றிலுள்ள மகளாக என்ற எச்சம் இச்செய்யுளில் பிறந்து என்பதைக்கொண்டு முடிந்தது. (உகூ)

பாலையனையமொழிக்குமங்கைப்பருவம்வந்ததிதுபோழ்தின்
மாலையணியுஞ்சுயம்வரஞ்செய்மணிமண்டபமுங்கடிதினமைத்
தோலையெழுதித்திசைமன்னர்க்கும்பினென்னவாங்கவரும்
காலைமணிமண்டபமியற்றித்தூதினோலைகடிதுய்த்தார்.

(இ - புரை) (மந்திரிகளை) பாலின் மதுரத்தையொத்த சொல்லையுடைய நம்முடைய புத்திரிக்கு இப்போது மங்கைப்பருவம் வந்தது; (ஆதலால்) பூமாலைசூட்டும் சுயம்வரஞ்செய்யும்படியான அழகியமண்டபமும் விரைவாக ஏற்படுத்தி, கல்யாண வோலையெழுதி ஐம்பத்தாறு தேசத்தரசர்களுக்கும் அனுப்புங்களென்று சொல்ல; (அந்தவார்த்தையைக்கேட்ட) மந்திரிகள் (அவ்வரசன்சொன்ன மறுநாள்) வைகறைப்போதில் இரத்தினங்கள் பதித்த கல்யாண மண்டபம் அலங்காரஞ்செய்து, விரைவாகத் தூதர்களிடத்தில் மண வோலையும் அனுப்பினார்கள், எ - று. (௬0)

முடங்கற்பொருளையுற்றுணர்ந்துமூரித்தேரின்முடங்குளைய
மடங்கல்வருவதெனத்தமதுநிகமுங்கடல்போன்மருங்குவரக்
கடங்கள்கடந்துநதி+டந்துகாடுநாடுங்கழியப்போய்த்
தடங்கொள்விதேகநாடடையுந்தார்வேன்மன்னர்திறம்புகல்வாம்.

(இ - புரை.) அந்தக்கல்யாண வோலைவந்து சேர்ந்தவுடன் அதிலெழுதியிருக்குஞ் செய்தியை நன்றாகக்கேட்டுணர்ந்து, (தங்கள் தங்கள்) பலம்பொருந்திய தேர்களிலேறிக்கொண்டு, வளைந்த பிடரி மயிரினையுடைய சிங்கங்கள் வருதல்போலத் தங்கள் நகரத்திலிருப்பவர்களுடன் சைந்நியங்களும் கூடிக்கடல்போலவர; அருநெறிகள்கடந்தும் காறாறுகள் கடந்தும் காடுகளும் நாடுகளும் பின்னிடப்போய் விசாலமுள்ள விதேகநாட்டினை யடைகின்ற வேலாயுதமேந்தும் அரசர்கள் திறத்தினை இனிச் சொல்வாம். எ - று. (௬க)

கள்ளக்கருங்கட்கடைசியர்வாண்முகம்போற்கமலங்கவின் காட்டி
யள்ளற்பழனந்தொறுமலருமயோத்திநகரமரசாளும்
வெள்ளைக்கவிகைத்தனிச்செங்கோல்வேந்தன்வேந்தர்முடியுழுதாள்
வள்ளற்றகையாங்குருகுலத்தோர்மருமானரசர்பெருமானே.

(இ-புரை.) கள்ளத்தன்மையையுடைய கருமையாகிய கண்களுள்ள பள்ள ஸ்திரிகளின் ஒளிபொருந்திய முகங்களைப்போலச் செந்தாமரைமலர்கள் அழகுகாட்டிக் குழைசேற்றினையுடைய வயல்கள்தோறும் மலரும் அயோத்தி நகரத்தில் அரசாட்சிசெய்கின்ற வெள்ளைக்குடையினையும் தனிமையான செங் கோலையுமுடைய அரசனும், மறுதேசத் தரசர்களணிந்த மகுடங்கள்படும்படி யான பாதத்தையும், இரப்போர்க்கு இல்லையென்று சொல்லாமற்கொடுக் கின்ற பெருமைப்பாட்டினையுடையவனும், கௌரவகுலத்தாருக்கு மருகனு மாகிய மன்னர் மன்னவனும், எ - று. அயோத்திநகரமரசாளும் அரசர்பெரு மான் எனக்கூட்டிமுடிக்க. மருமான் - மருகன். (௩௨)

(வேறு.)

வருகுலமகளிர்தங்கண்மனமெனத்திருந்துகோலான்
பெருகுலம்பொருததிண்டோட்பிறங்கலானிறங்கொள்வேலான்
முருகுலவாதசெங்கேழ்முண்டகமடந்தைகேள்வன்
குருகுலந்தழையவந்தகுனிசிலைவயப்போர்வேந்தன்.

(இ - புரை.) தாய்மரபு தந்தைமரபு என்னும் இரண்டுமரபிலும் சந்ததி பரம்பரையாய்க் கற்புநிலை தவறுமல் வருகின்ற குலஸ்திரீகள் மனம்போல நீதியிற்றவறாத செங்கோலையுடையவனும், பெரிய திரண்ட கல்லுகளின் வலி கெடச் செய்யத்தக்க மலையொத்த பலம்பொருந்திய தோளையுடையவனும், ஒளிபொருந்திய வேலையுடையவனும், வாசனைகொடாத செம்மைநிறமுள்ள தாமரைமலரில் வீற்றிருக்கும் இலக்குமியின் கணவனாகிய மகாவிஷ்ணுவைப் போல ரக்ஷிக்குஞ் செய்கையுடையவனும், வளைந்த வில்லைக்கொண்டு போர் செய்து ஜெயம்பெறுகின்றவனுமாகிக் குருகுலம் பெருமைபெற்றோங்க உதித்த அரசனும், எ - று. உலம் - திரண்டகல், உலத்தல் - கெடுதல். (௩௩)

மன்னவர்மகுடகோடிமணித்தொகையுழுததாளான்
கன்னவில்வயிரத்தோளான்கருணையங்கமலக்கண்ணான்
பொன்னவிர்சுணங்குபூத்தபொங்கிளமுலையினார்தம்
மின்னகுவார்விற்செங்கைகமீளிகாந்தாரவேந்தன்

(இ-புரை.) அரசர்களுடைய மகுடங்களில் பதித்திருக்கும் ரத்தினங்கள் உரையப்பெற்ற தாள்களை யுடையவனும், மலைக்கொப்பாகச் சொல்லுகின்ற

பலம்பொருந்திய தோளையுடையவனும், கிருபைதங்கிய அழகிய செந்தாமரை மலர்போன்ற நேத்திரங்களை யுடையவனும், பொன்போலப் பிரகாசியாநின்ற தேமல்பரந்த விளங்குகின்ற இளமைதங்கிய தனங்களையுடைய ஸ்திரீகள்கண்டு தமக்குள் சந்தோஷிக்கத்தக்க (அழகுள்ளவனாகி) நீண்டவில்லையேந்திய செங் கையினையுடைய வீரனுமாகிய காந்தார தேசத்தரசனும். எ - று. (௬௪)

வேறு.

உதையகிரிக ளோரிரண்டினுதிக்குமுபயதபனரெனச்
சிதைவின்மகர குண்டலங்கடிளைக்கக்கவினுந்திணிதோளான்
புதைகொள்பகழி யூழிமுறைபொழியுமுகிலிற்சொரியுமிகற்
குதைகொணெடியவரிசிலைக்கைக்குந்திபோசன்குணமிக்கான்.

(இ - புரை.) இரண்டு உதயகிரிகளிருந்து இரண்டு சூரியர்கள் உதயமா னாற்போலக் கெடுதலில்லாத ரத்தினமகரகுண்டலங்கள்பொருந்தலால், அழகு செய்யுந் தோள்களையுடையவனும், கட்டுகள்கட்டப்பட்ட பாணங்களை ஊழிக் காலத்தில் முறையாக மழைபொழிகின்ற மேகம்போலப் பிரயோகஞ்செய்யும் படியான வயிரம்பற்றிய குதையினையுடைய நீண்டபெரிய விற்பிடிக்குங் கையி னையுடையவனும், நல்லகுணத்தினால் உயர்ந்தவனுமாகிய குந்திபோசனென் னும் அரசனும், எ-று. குதை - வின்னுனி. (௬௫)

விலைவரம்பறியலாகாவெயின்மணியிமைக்குமார்பன்
கலைவரம்பறிந்தவுண்மைக்கருத்தினனறத்தின்மிக்கான்
மலைவரம்பாயஞாலவலயத்தில்வரிகொள்வேழச்
சிலைவரங்கொண்டவேளுநங்காமுறுஞ்சிந்துவேந்தன்.

(இ - புரை.) விலையினளவை அறியக்கூடாதவைகளாய் ஒளியினையுடைய இரத்தினாபரணங்கள் பிரகாசிக்கும் மார்பினையுடையவனும், சாஸ்திரங்களி னளவை அறிந்த மெய்ம்மையான சித்தத்தையுடையவனும், தருமத்தில் மிகு ந்தவனும், சக்கரவாளகிரியை எல்லையாகவுடைய இவ்வுலகவட்டத்தில் வண்டுகளாகும் நாணிபொருந்திய கரும்புவில்லினால் மேன்மைகொண்டிருக் கும் மன்மதனும் (பெண்ணுருவங்கொண்டு புணரவேண்டுமென்று) விருப்பங் கொள்ளத்தக்க சவுந்தரியமுள்ளவனுமான சிந்துதேசத்தரசனும், எ - று.

மலையை எல்லையாகவுடைய உலகம் என்றமையால் சக்கிரவாகமலையென் னும்; வரி - வண்டு; வேழம் - கரும்பு. (௬௬)

கோளுறுமதியநாண்மீன்குழாத்திடைவருவதேய்ப்ப
வாளுறுந்சடக்கைமன்னர்புடைவரவருதிண்டோரான்

வேஞறுவனப்பின்மிக்கான்விரிதிரைவேலைஞாலந்
தோளுறப்பரிக்குமாணைத்துருபதன்சுடர்செய்பூணன்.

(இ - புரை.) நவக்கிரகங்களி லொன்ருகப்பொருந்திய சந்திரன் நக்ஷத்திரக்கூட்டங்களினடுவில் வருவதைப்போல, வாள்பொருந்திய கையையுடைய அரசர்கள் சூழ்ந்துவரும்படி வருகின்ற திண்ணிய தேரையுடையவனும், மன்மதன் பெற்றிருக்கும் அழகிலும் மிகுந்த அழகுள்ளவனும், பரவிய அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த பூமிபாரத்தைத் தனதுதோளிற்பொருந்தத் தாங்கும்படியான ஆக்கிஞசக்கரத்தையுடைய துருபதன் என்னும் பேருள்ளவனுமாகிய பிரகாசியாநின்ற ஆபரணங்களணிந்திருக்கும் அரசனும், எ - று. (கஎ)

குடைநிழலிருளைக்காட்டக்குரைகழன்மன்னர்செங்கைப்
படைநிழல்வெயிலைக்காட்டச்செல்லுவம்பரித்திண்டேரான்
மடைவளர்சங்கமீன்றமணியினைக்கருவென்றன்னம்
அடைகிடந்துலவுநன்னட்டவந்தியனரசாகோமான்.

(இ - புரை.) குடைகளினிழ லிருளைக்காட்டவும் ஒலிக்காநின்ற வீரகண்டையணிந்த காலினையுடைய அரசர்கள் செங்கையிலிருக்கும் (வாளாயுதமுதலிய) ஆயுதங்களின் ஒளி (அவ்விருள்நீங்கும்படி) வெய்யிலைக்காட்டவும் (நால்வகைச்சேனையுடன்) செல்லும்படியான தாவுகின்ற குதிரைகள் பூட்டிய வலுத்த தேரையுடையவனும், வயல் மடைகளில் தவழ்கின்ற சங்கங்களீன்ற முத்துக்களை அன்னங்கள் தங்கள் முட்டைகளென்றெண்ணி அடைகிடந்து சஞ்சரிக்கும்படியான நல்ல அவந்திதேசத்தை யாளுகின்றவனும், மன்னர் மன்னவனுமான ராசனும், எ - று. (கஅ)

கண்ணகன்ஞாலமெல்லாங்கலிகடிந்தருளிற்காத்தோன்
வண்ணநீளலத்தினுன்றன்பின்வந்தமழையாம்வண்ணத்
தண்ணுறுதித்ததொல்சீரெதுகுலமதனிற்ருேன்றும்
புண்ணுறுபுலவுவாட்கைப்புரவலனறிவின்மிக்கான்.

(இ - புரை ) பாபத்தைநீக்கி (உயிர்களிடத்திற்) கிருபைவைத்து இடமகன்ற பூமியெல்லாம் காத்தவனும், அழகிய நீண்ட கலப்பை ஆயுதத்தையுடைய பலபத்திரருக்குப் பின்வந்த நீருண்டமேகம்போலும் கருமைநிறம் வாய்ந்த கிருஷ்ணமூர்த்தி திருவவதாரஞ்செய்த கீர்த்திப்பெற்ற பழமையாகிய எதுகுலத்திற்பிறந்து மாமிசப்பற்ருல் புலவுநாற்றம்வீசும் வாள்பிடிக்குங் கையையுடையவனும் அறிவில் மிகுந்தவனுமாகிய அரசனும், எ - று.

புண் - மாமிசம். (கக)

புல்லடுவெகுளிவேகப்புழைக்கைமேற்புலரிக்காலை
யெல்லொளியுதயத்தும்பரின யவதேபோலத்தோன்றுங்
கல்லடுதிரடோளாற்றற்காவலன்கரும்பின்வேலிப்
பல்லவதேசமாளும்பார்த்திபன்பகைவர்ச்செற்றோன்.

(இ - புரை.) விடியற்காலத்தில் சூரியன் ஒளியையுடைய உதயகிரியில் பொருந்துவதுபோல, புலியையுங் கொல்லுகின்ற கோபமும் வேகமுமுள்ள யானையின்மேல் தோன்றுகின்ற மலைகளையும் பிளக்கத்தக்க திரண்ட புஜவலி யையுடைய காவலனும், பகைவர்களை (யுத்தத்தில்) கொன்றவனுமாகிய கரும் பஞ்சோலைகளே வேலியாகச் சூழ்ந்திருக்கத்தக்க பல்லவதேசத்தையாளும் அரசனும். எ - று. புல் - புலி. யானையின்மேற் றோன்றுகின்ற காவலனும், அரசனும், எனமுடிக்க. (சு0)

காரணங்கடந்தஞானக்கண்ணுதல்சடையின்வாழும்
நீரணங்கூழிகாறுநீத்தறுவளங்கூர்நாடன்
ஆரணம்புகலுநாவினந்தணர்தகளிக்குங்கையான்
வாரணம்பொருந்துதானைவாரணவாசிமன்னன்.

(இ புரை) தனக்குமேலொரு முதலில்லாமல் (யாவர்க்கும் யாவைக்குந் தானே முதலாயிராநின்ற) நெற்றிக்கண்ணையுடைய பரமசிவன் சடைமுடியில் வாழ்கின்ற நீருருவமாகிய கங்காதேவியானவள், ஊழிகாலம் வரைக்கும் நீங்கா மல் பெருகிக் கொண்டிராநின்ற வளப்பமிகுந்த நாட்டினையுடையவனும், வேதமோதும் நாவினையுடைய பிராமணர்க்குத் தானங்கொடுக்குங் கையை யுடையவனுமாகிய யானைப்படைகளுடைய வாரணசிப் பட்டணத்திலிருக் கும் அரசனும். எ - று. பிராமணர்கள் அழகிய சாந்தகுண முள்ளவர்களாத லால் அந்தணரெனக்கூறினர். இதை 'அந்தண ரென்போரறவோர், என்னும் திருக்குறளினால்' அறிக. வீரர்கள் போர்க்களத்தில் சண்டை செய்திறந்தாலும் வீரசுவர்க்கம் அடையலாமென்கிற அபேக்ஷைகொண்டு போர்செய்கின்றவர் கள்; யானை அப்படிக்கொத்த அபேக்ஷையில்லாமல் கோபமிகுதியால் சண் டை செய்யத்தக்கதாகையால், அரசருக்குள்ள நால்வகைப்படையுள் யானைப் படையை விசேஷமாகச் சொல்வது. (சுக)

கொல்லுலையகத்திற்காய்ந்துகுருதிதோய்கொடியவேற்கண்
அல்லுருவமைந்தகோதையணங்கனார்க்கமுதமன்னன்
எல்லுயர்கனகக்குன்றத்தெழுதியபழுதிலாற்றல்
வில்லுயர்துவசத்திண்டேர்வில்லவன்கொல்லிவேந்தன்.

(இ - புரை.) கொல்லன் உலைக்களத்திற் காய்ந்து பகைவருதிரத்திற் படிகின்ற கொடிதாகிய வேலாயுதம்போலக் (கூர்மையாகிய) கண்களையும்

இருளை உருவு கொண்டிருப்பதுபோலக் கருமை நிறந்தங்கிய அளகத்தையு முடைய தெய்வப்பெண்களையொத்த மாதர்களுக்கு (அழகினால்) அமுதம்போ லிருப்பவனும், ஒளியுடனுயர்ந்திராநின்ற பொன்மலையாகிய மகமேருவினிடத் திற்றீட்டிய குற்றமில்லாத பலமுள்ள உயர்ந்த விற்கொடிகட்டிய தேரையுடை யகொல்லிமலைக் கரசனுமாகிய சேரராசனும். எ - று. மகமேருவில் கொடிதீட் டினவ னென்பதினால் அரசர்களையெல்லாம் வென்றவனென்பதாயிற்று. விற் கொடி சேரனுக்குரியது. கொல்லிமலை சேரராஜ்ஜியத்திற் சிரேட்டமானமலை.

பண்டையமனுநூல்காட்டிப்படையெடுத்தடுபோர்வென்று
சண்டனைத்தனதுதேயத்தடைவதுதவிர்த்தவீரன்
கொண்டலையிபங்களென்றுகோளரிமுழங்கிச்சீறி
மண்டமர்புரியுநேரிமலையினன்வளவர்கோமான்.

(இ - புரை.) பழமையாகிய மனுநூலின் முறையைக்காட்டிப் படை யெடுத்துப்போய், கொல்லுந்தொழிலையுடைய போர்செய்துவென்று, யமதரும ராசனைத்தன்னுடைய தேசத்தில் வரவொட்டாமல் தடுத்தவனும் மேகங்களை யானைகளென்றெண்ணி ஆரவாரித்துச்சீறியெதிரேற்றுப் போர்புரியும்படியான சிங்கங்கள் வாசஞ்செய்கின்ற நேரிமலையை யுடையவனுமாகிய சோழராசனும். எ-று. நேரிமலை சோழராஜ்ஜியத்திற் சிரேட்டமலை. (சங)

என்றிவர்முதலவேந்தர்யாவருஞ்சுயம்வரத்தின்
பொன்றிகழ்மண்டபத்தேபுகுதயான்புகுதலோடு
மன்றலந்தண்டார்நீயென்மணிப்புயத்தணிதல்கண்டு
கன்றியமனத்தராகிக்காவலர்வெகுளிமிக்கார்.

(இ-புரை.) ஆகிய இந்த அரசர்கள் முதலாகிய அரசர்களெல்லாரும் பொன்னாற் செய்யப்பட்டுப் பிரகாசியாநின்ற சுயம்வரமண்டபத்தில் வந்து சேர; நானும் வந்து சேர்ந்தவளவில், நீ வாசனையும் குளிர்ச்சியுமுள்ள பூமாலையை என்னுடைய அழகிய புஜத்தில் சூட்டினதை அங்கு வந்திருந்த அரசர்களெல்லாரும் பார்த்து, மனம் வெம்பினவர்களாய் மிகுந்த கோபங் கொண்டார்கள். எ - று. மன்றலத்தண் எனபதியின் இடையிலிருக்கும் அம் - சாரியை. அழகெனவுங் கூறப்படும். (சச)

வேறு.

யாம்பலரொருவனீண்டிவன்மணஞ்செய்து
போம்பழிக்கியாமுளம்பெருந்திலோமென
வாம்பரித்தேர்கடாய்வந்துமற்றவர்
பாம்பினங்கருடனைப்பகைக்கும்பண்பினே.

(இ-புரை.) (இப்படிக் கோபங்கொண்ட அந்த அரசர்கள் யாம் பல பேரா யிருக்கின்றோம் ; இப்போது மாலைசூட்டிக்கொண்ட இவ்வரசன் ஒரு வன் ; (அப்படியிருக்க நமக்கெல்லாம் இகழ்ச்சி நேரும்படி) இவன் விவா கஞ் செய்துகொண்டுபோம் பழிக்கு நம்முடைய மனம் ஒருமையுடையா தென்று (தங்களில் ஆலோசனைபண்ணித்,) தாவுகின்ற குதிரைகள் பூட் டிய தேர்களைச் செலுத்திப் பாம்புக்கூட்டங்கள் கருடனுடன் சண்டை செய்ய விரும்பிபகைத்து எதிர்க்குந் தன்மைபோல என்னெதிரில்வந்து எ-று. பாம்பினம் கருடனை வளையும்பண்பினே என்றும்பாடம். (சரு)

வேறு.

அவரமரெதிர்தலுமழலெழவிழியா
இவருயிர்பருகுவனெளிதினினெனவே
யுவர்படுகடனிலமுவறுறவடுதேர்
பவனனில்விசையுறுபரிகொடுகடவா.

(இ-புரை.) அந்த அரசர்கள் சண்டைசெய்யும்படி எதிர்க்க நான் என் கண்களில் அக்கினிப்பொறிபரவும்படி அவர்களை உறுக்கி விழித்து, இவர் களுயிரை யெளிதாக இப்போது வாங்கி விடுகிறேனென்று, உவர்க்கடல் சூழ்ந்த பூமியும் வாடும்படிப் பிளந்துகொண்டு செல்லுகின்ற என்னுடைய தேரை வாயுவைப்பார்க்கிலும் விசையுடன் செல்லுகின்ற குதிரைகளைக்கொ ண்டு அவர்களெதிரிற் செலுத்தி. எ-று. பவனன் - வாயுதேவன். (சசு)

தேரணிபரியணிசிறுதுகளுறவுந்
தாரணிபடையணிதரைமிசைகெடவுங்
காரணியெனமதகளிறுகள்விழவும்
போரணிகருவிகள்பொடிபொடிபடவும்.

(இ-புரை.) தேர்ப்படை வகுப்பும் குதிரைப்படை வகுப்பும் சிறியது கள்போலாகவும், தும்பைப்பூ மாலையணிந்த காலாட்படை வகுப்பு (கால் வேறு கைவேறு தலைவேறாக அறுபட்டுப்) பூமியில் விழவும், மேகவொழுங்கு போல யானைப்படை வகுப்புகள் அறுபட்டு விழவும், போர் செய்வதற்காகச் சாணை பிடித்திராநின்ற ஆயுதவர்க்கங்கள் பொடிப்பொடியா யுதிர்ந்து விழ வும், எ-று. தார் என்றது படை விகற்பங்களுள் ஒருவகை பேதமென்றும், பின் படை என்றது பெரும்படையென்றும் கூறுவர்.

மன்னவர்தேர்மிசைமந்திரமொழிவார்
சென்னிகள்விழவவர்தேர்மிசையிறையோர்
பொன்னவிர்முடிவிழுபூசலின்வெருவா
அன்னவரொடுமவரடவிகள்புகுவார்.

(இ-புரை.) (இவ்வாறு நடக்கின்ற போர்க்களத்தில்) ஒருபுறத்தில் அரசர்களிருக்குந் தேர்களினிடத்தில் மந்திரிகளுடைய தலைகள்விழ, மற்றொரு புறத்தில் மந்திரிகளிருக்குந் தேர்களினிடத்தில் அரசர்களின் பொற்பிரகாசமுடைய கிரீடம் அணிந்திருக்குந் தலைகள்விழும்; இத்தகைய அச்சண்டையிற் பயந்து. (இறாதவர்கள்போகப் பிழைத்திருக்கும்) அரசர்களும் மந்திரிகளும் காட்டிற்போ யொளித்துக்கொள்ளுவார்கள். எ-று. (சஅ)

வேறு

சுயமரத்தெதிர்ந்தோர் தம்மைத் துருபதன்றனையைக்காக
வயமலிசிலைபால்வென்றவாகைவேல் விசயனேபோற்
சுயமலர்க்கண்ணிநிற்காக்காவலர் தம்மைவென்று
புயமுறுபுரிசைக்கூடனின்றொடும்புகுந்தபின்னர்.

(இ - புரை) (இத்தன்மையாகப் போரில் தோற்று ஓடிப்போகும்படி) சுயம்வரத்தில் எதிர்த்தஅரசர்களைத் துருபதராசன் புத்திரியாகிய துரோபதைக்காக, வெற்றிமாலையணியும் வேலாயுதத்தையுடைய அருச்சுனனென்பவன் வென்றிமிகுந்த காண்டீபத்தினால் செயங்கொண்டதுபோல், தடாகத்தில் மலருந் தாமரைமலரையொத்த கண்களையுடைய நாயகியே! உன்பொருட்டு எதிர்த்த அரசர்களையெல்லாம் வென்று, உன்னை என் தேரில்வைத்துக்கொண்டு) மேகமண்டலத்தை யளாவுகின்ற மதில்சூழ்ந்த மதுரையில் நான்சேர்ந்தபின்பு. எ-று. துருபதராசன் - பாஞ்சாலராசன். (சகூ)

ஆயிழைநீயும்யானுமளப்பருங்காலமின்ப
மோய்வறத்துய்த்துநேமியொருகுடைநிழல்கொண்டோச்சி
காயெரிக்கடவுண்முன்னர்க்கணக்கிலமகங்கள்செய்து
சேயுயர்விசும்பின்வாழுந்தேவர் தங்கடன்கழித்தும்.

(இ - புரை.) நல்ல ஆபரணங்களை அணிந்திருக்குந் தலைவியே! நானும் நீயும் அனேககாலம் ஒழிவில்லாமல் இன்ப மனுபவித்து, இந்தப்பூமியை என் ஒற்றைக்குடைநிழலில் வைத்து ஆஞ்ஞாசக்கரமுருட்டியும், சுவாலைவிட்டெழுகின்ற அக்கினிதேவன் முன்னாக அளவில்லாத மகங்கள்செய்தும், மிகவும் உயர்ந்ததாகிய சுவர்க்கலோகத்தில் வாழுந் தேவர்கள் கடன்களைத்தீர்த்தும். எ-று. யாகம்-ரு. அவை பிரமயாகம் தேவயாகம் பூதயாகம் பிதிர்யாகம் மானுஷயாகம் என்பவைகளாம் இவைகளில்பிரமயாகம் வேதமோதுதல் தேவயாகம் வேள்வி செய்தல்; பூதயாகம் பலியிடுதல், பிதிர்யாகம் தர்ப்பணஞ் செய்தல்; மானுஷயாகம் இரப்போர்க்கு ஆகாரமுதலியவை கொடுத்தல். (ருo)

அந்தணர் தங்கணெஞ்சுசுத்தவாக்கெடத் தானமீந்துஞ்
செந்தழல்புரையுமேனிச்சிவனடிபூசைசெய்தும்

பைந்தொடிநீயும்யானும்பண்டுசெய்தவத்தினாலோர்
மைந்தனையீனவந்தமைந்தனுமறையோர்தம்பால்.

(இ - புரை.) பிராமணர்கள் மனதிலுண்டாகும் ஆசைநீங்கும்படித் தானங் கொடுத்தும், சிவந்த அக்கினியையொத்த திருமேனியையுடைய பரமசிவத்தினது திருவடியைப் பூசித்தும், மாற்றுயர்ந்த பொன்னாற் செய்த வளையலணிந்த கையையுடையவளாகிய மனைவியே! நீயும் நானும் பூர்வஞ்செய்த தபோபலத்தினாலே ஒருபுத்திரனைப்பெற ; அந்தபுத்திரன் (வேதமுதலாகிய சாஸ்திரங்கள் கற்பிக்கும்) பிராமணர்களிடத்தில். எ - று (௫௧)

கலைபலபயின்றுமுக்கட்கடவுளுக்கடிமைபூண்டு
நிலையிலாவுலகுதன்னினிலைபெறப்புகழ்நிறீஇயுஞ்
சிலைவலித்திரடோளாற்றற்சேருநாளமைச்சர்தம்மோ
டலைகடற்பாரமெல்லாமவன்வயினளித்துயானும்.

(இ - புரை.) அறுபத்துநாலு கலைகளுங்கற்றுணர்ந்து, திரிநேத்திரங்களையுடைய பரமசிவனுக்கு அடிமையாகி, நிலையில்லாததாகிய இவ்வுலகத்தில் தன் புகழ் நிலைநிற்கும்படி நிறுத்தியும், விற்போர்செய்யும் பலமுள்ள திரண்ட புஜபராக்கிரமஞ்சேர்ந்தகாளில், மந்திரிகளோடு அலைவீசும் சமுத்திரஞ் சூழ்ந்த பூமிபாரமெல்லாவற்றையும் அந்தப் புத்திரனிடத்திற்கொடுத்து அதன் பின்பு யானும். எ - று. (௫௨)

பொய்யுடலெடுத்துமாயப்புணரிகணீந்திநீந்திக்
கைபிணைகடுத்துமீண்டக்கடலிலாழ்ந்திறந்துபோக
வையுறுபிறவிமாய்த்துமறைகளின்சிரத்தினிற்கு
மெய்யுறுநிலைமைதேர்வான்வேட்கைகூருளத்தனாகி.

(இ - தரை) பொய்யாகிய இவ்வுடலெடுத்து மாயையாகிய சமுத்திரங்களை நீந்தி நீந்தி,கைகளுங்கடுத்து (கரைசேரக்கூடாமையால் பின்னும் அந்தச்சமுத்திரங்களில் ஆழ்ந்திறந்து போகும்படியான குற்றம் பொருந்திய பிறவியையொழித்து, வேதங்களின்முடிவிலிராநின்ற உண்மையாகிய நிலையை அறியவேண்டுமென்கிற விருப்பமிகுந்த மனமுள்ளவனாகி. எ - று. காமத்தினால் மாயைகளை நீங்கவேண்டினால் மேன் மேலும் அம்மாயைகள் விருத்தியாகும்; ஆகவே, மனம் வருந்தும் என்பார், புணரிகணீந்தி நீந்திக்கையிணை கடுத்தும் என்றார் ஞானத்தினால் கடக்கலாம் என்பது துணிவு. (௫௩)

பொன்னெடுங்குன்றமன்னபுணர்முலைப்பொலன்கொம்பொப்பா
யென்னெடுஞ்செல்வமெல்லாமெனதலவென்றுநீத்து

நின்றெடும்போகிவேலைநெடுங்கடல்ங்கைகொண்ட
மன்னெடுந்தவத்தின்மிக்கமர்தவனிருந்துவாழும்.

(இ - புரை.) (உண்மை நிலையை அறியவேண்டுமென்கிற விருப்பமென் மனதில் உண்டானதினால்) நெடிய பொன்மலையையொத்த நெருங்கிய தனங்களையுடைய பொற்கொம்பினை நிகர்த்த நாயகியே! அஞ்ஞானத்தினால் என்னுடையதென்று நினைத்துக்கொண்டிருந்த பெரியசெல்வங்களை யெல்லாம் என்னுடையதல்லவென்று நீக்கிவிட்டு, உன்னுடன்போய்த் திரைகளையுடைய அளவிடக்கூடாத சமுத்திரநீரை உள்ளங்கையிலேற்றுக் கொண்டுண்ட நிலை பெற்ற பெரிய தவத்தின்மிகுந்த அகஸ்திய முனிவரிருந்து வாசஞ்செய்யும். எ-று. வேலை - புறத்திரை. (நிச)

சந்தனப்பொதுப்பர்சூழப்பொருநையந்தாமநாற்றிச்
செந்தமிழமுதுமன்றற்றென்றலங்கன்றுநல்குஞ்
சுந்தரபொதியக்குன்றைத்தொழுதனம்வலங்கொண்டேறிக்
கொந்தழலைந்திறுப்பண்கோதறுதவஞ்செய்காலை.

(இ - புரை.) சந்தனச்சோலை சூழ்ந்திருக்கத் தாம்பிரபருணி நதியென்னும் பூமாலையை நாலவிட்டு, இயல் இசை நாடகம் என்கிற தமிழென்னும் அமுதத்தையும் வாசனை வீசுகின்ற இளந்தென்றற் காற்றினையும் தருகின்ற அழகுள்ள பொதியமலையை நாம் பிரதக்ஷிணஞ்செய்து தொழுது, தோத்திரஞ்செய்து, அதன்மீதேறிச் சிகைவிட்டெரிகின்ற பஞ்சாக்கினி மத்தியிலிருந்துகொண்டு குற்றமில்லாத தவஞ்செய்யுங் காலத்தில். எ - று. (நிரு)

குறுமுனிவந்துதோன்றிக்கொடும்பவக்கடலைமாய்த்து
மறுவுறுபிறவிமாயமம்மர்நோயகற்றிப்பின்னர்
அறுசமயங்களுக்குமதீதமாஞ்சிவயோகத்தை
யுறுதியாயுபதேசிப்பயாமந்தவுபதேசத்தால்.

(இ - புரை.) அகஸ்திய முனிவர்வந்து கொடியதாகிய பாவக்கடலை யொழித்துக் குற்றந்தங்கிய பிறவிநீங்கும்படி மயக்கமாகிய பிணியைத்தொலைத்துப் பின்பு, அறுசமயங்களுக்கும் அதீதமாகிய சிவயோகத்தை உறுதியாக உபதேசிக்க; நாம் அந்த உபதேசத்தினால். எ - று. சிவயோகமாவது ஞானாசாரியர் கிருபையினால் தன்னையுஞ் சிவத்தையுங்கண்டு தற்போதஞ் சீவியாமலிருப்பது.

எள்ளுறுமெண்ணெய்போலடுவங்கணும்பரந்துநின்ற
வள்ளறன்வடிவுகண்டுமனத்தினைந்தழுறி
தகே
ள்ளாறுமலர்வீழ்வண்டின்முத்தியிற்களிப்பேங்கண்டாய்.

(இ - புரை.) எள்ளினிடத்திற் பொருந்திய எண்ணெய்போல எவ்விடத்தும் நிறைந்திருக்கும் பரமசிவனுடைய சொரூபத்தைக்கண்டு, மனதில் ஆனந்தமுறப்பெற்று, ஒருக்காலும் ஒழியாத பேரின்பம் விளையாநின்ற சிவானுபூதியையனுபவிக்கும் பொருட்டுத்தேன்விடாது பெருகாநின்றமலர்களிற்றங்கி அத்தேனையுண்ணும் வண்டுகளைப்போல மோக்ஷத்தில் ஆனந்தமுற்றிருப்போம். எ-று. விள்ளுதலிலாத இன்பம்என்றதற்கு அனுபவிகளும் இத்தகையது என்று வாய்விண்டு சொல்லப்படாதது என்பதும் பொருள். (௫எ)

வேறு.

என்றுமன்னவனிறுத்தனன்பின்னருமிசைத்தான்
அன்றுநாயுருவெடுத்தியானிறந்திடுமளவிற்
கொன்றையஞ்சடைக்குரிசிலைக்கண்ணுறுங்கொள்கை
தொன்றுபட்டதாற்பிறப்பெலாந்துரிசறவுணர்ந்தேன்.

(இ - புரை) இவ்வாறு பேரானந்தம் அடைவோமென்று சொல்லினவனும் அவ்வரசன் பின்னுஞ்சொல்வான், நான் முன்னாளில் நாயுருவெடுத்திருந்து இறக்குங்காலத்தில், கொன்றைப் பூமாலையணிந்த அழகிய சடாமகுடத்தையுடைய பரமசிவனைத் தரிசிக்குந் தன்மை முன்னமே கிடைத்ததினால், பிறப்புகளையெல்லாங் களங்கமற அறிந்தேன். எ - று. துரிசு - களங்கம். (௫அ)

வேறு.

பரவையுலகிற்பதினாலாம்பக்கத்
திரவுதொறுஞ்சிவனையேத்தியடிபேணி
யரிவைபிறவியகற்றுவாயென்று
குரிசின்மொழிந்தான்குலக்கொடியுங்கேட்டே.

(இ - புரை) மனைவியே! (சிவராத்திரியில் பரமசிவனைத் தரிசித்ததினாலே இப்படிக்கொத்த மேலான பதங்கிடைத்தது; ஆதலால், நீயும்) சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்தில் சிவராத்திரிதோறும் பரமசிவனுடைய திருவடிகளைப் பூசித்துத் தோத்திரஞ்செய்து, பிறவியை நீக்கிக்கொள்ளென்று அரசன் சொன்னான், அந்தவார்த்தையை அம்மாதுகேட்டு. எ-று. (௫௯)

அன்றுமுதலரனையாயிழையும்பூசித்தாள்
மன்றல்கமழ்செழுந்தார்மன்னவனுமாதருமாய்ச்
சென்றுபிறப்பேழ்கழியச்சின்மயவீடெய்தினார்.

(இ - புரை.) (இப்படியாகத் தன்கணவன் சொல்லிய வார்த்தையைக் கேட்ட ராஜஸ்திரியானவள்) சிவராத்திரியின்பலன் மிகவும் நன்மையானதா

யிருக்கிறதென்றுசொல்லி, அந்நாள்முதல் அவளும் சிவராத்திரியில் பரமசிவனைப் பூசித்துவந்தாள், (அப்படிப் பூசித்துக்கொண்டிருந்து ஏழாட்பிறப்பு நீங்கினவுடன் வாசனைபரிமளிக்காநின்ற பூமாலை யணிந்திருக்கும் அந்த அரசனும் அவன் மனைவியும் ஒரோதினத்தில் (இவ்வுலகத்தை விட்டுநீங்கி) மோக்ஷத்திற்போய்ச்சேர்ந்தார்கள். எ று. ஏழ்பிறப்புகழிய என்றது இவர்கட்கு நேர்ந்த ஏழ்பிறப்பேயன்றி, எழுவகைத்தோற்றத்தையும் கடந்தார்கள் என்பதும் ஒன்று. (௬௰)

வேறு.

இத்தகையவாமென்றேயீறேழாம்பந்கத்தின்
மெய்த்திறனுமீசன்விளையாட்டின்வித்தகமும்
பத்திவழியடியார்பான்மையுமற்றுங்கவர்தா
முத்திபெறும்வழியுமென்றான்முனிவரனே.

(இ - ள்) பராசரமுனியானவர் விமரிசராசனைப்பார்த்து, அரசனே! சிவராத்திரியின் உண்மையான மகத்துவமும், பரமசிவனுடைய திருவிளையாட்டின் மகத்துவமும், பத்திமார்க்கத்திற்செல்லும் அடியார்கள் தன்மையும், அந்த அடியார்கள் மோக்ஷப்பெறுகிற முறைமையும், இத்தன்மையனவாமென்று சொன்னார். எ-று. மற்று-ஆங்கு-அசைநிலைகள். (௬௧)

பேரறிவின்மாமுனிவன்பின்னருநன்றோதினான்
வாரிபுடைசூழுலகின்மன்னுயிர்கள்யாவர்க்கும்
நீரணியுஞ்வேணிநிமலனேதெய்வதமும்
ஈரமுறுகேளுமிருடீர்குரவனுமே.

(இ - ள்.) ஞானவறிவினையுடைய கவுதமருஷியானவர் இதுவரையிற் சொன்னதுமல்லாமல் மேலும் விளக்கமுறச் சொல்லுகிறார் நாற்புறமுஞ் சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்திலிராநின்ற நிலையாகிய உயிர்களுக்கெல்லாம் கங்கையை அணிந்த சடையையுடைய பரமசிவனே தெய்வமும், அன்புள்ள சுற்றத்தாரும், அஞ்ஞானத்தை நீக்குகின்ற ஞானசாரியருமாவர். எ-று. உடல் அநித்தியம், உயிர் நித்தியம் என்னு முறைமைபற்றி மன்னுயிரென்றார். நிமலனே என்பதில் ஏகாரம் தேற்றத்துடன் பிரிநிலை. (௬௨)

என்னுமுறைமனக்கொண்டீசன்றனைநோக்கி
மன்னுமகமுடிப்பார்மந்திரங்கள்சிந்திப்பார்
அன்னையுதாரத்தடையார்மறந்துமென
முன்னையருமறைகள்யாவுமொழியுமால்,

(இ-புரை.) என்கிற வார்த்தை மனதில் நம்பிக்கையாகக்கொண்டு (அத்தன்மையுள்ள) பரமசிவனைக்குறித்து, அழியாத யாகங்களைச் செய்கின்றவர்களும், மந்திரங்களை யுச்சரிப்பவர்களும், இவ்வுடலைவிட்டு நீங்கினபின்பு மறந்தாகிலும் தாய்வயிற்றிற் கருவாகத் தங்கார்களென்று பழமையாகிய வேதங்களெல்லாம் மொழியாநின்றன. எ-று. மறந்துமென்றது பிறவார்களென்கிற துணிவுபற்றியெனக்கொள்க. (கூங)

வேதமுறைசெய்தவிதியேனுங்கைவிட்டுச்
சீதமதிவேணிச்சிவனடியைப்பூசிக்கும்
போதமுடையபுராதனரோபொய்ப்பிறவி
வாதனையைநீக்கிமறைவீட்டின்வைகுவார்.

(இ - புரை.) வேதங்களாற்சொல்லப்பட்ட விதிகளேயானாலும், அவைகளைச்செய்யாமல் விட்டொழிந்து, குளிர்ச்சிபொருந்திய இளந்திங்களை யணிந்த சடாமகுடத்தையுடைய பரமசிவத்தின் பாதங்களைப்பூசிக்கும் ஞானத்தையுடைய பெரியோர்களே நிலையில்லாத பிறவித் துன்பத்தை நீக்கி, வேதங்களிற் சொல்லப்பட்ட (நித்தியமாகிய) மோக்ஷத்தில் எக்காலமும் பொருந்தியிருப்பார்கள். எ-று. வேதவிதியை ஒருபோதும் கைவிடலாகாது. அவற்றைவிடினும் சிவபூசையை விடலாகாதென்பார், 'சிவனடியைப்பூசிக்கும் போதமுடையார்.' என்றார். அங்ஙனம் பூசையொன்றினையேனும் நித்யமாய்ச் செய்வார் அவ்வேதங்கூறும் வீட்டைப் பெறுவாரென்பார் 'மறைவீட்டின் வைகுவார்' என்றார். (கூச)

வாழுமனைமேன்மதலையர்மேல்வான்பொருண்மேல்
வீழுமனமவற்றின்வீழாதுதாழேம்பித்
தாழுமவிர்சடையோன்றாள்விழையப்பெற்றவரோ
யேழுபவக்கடலுமேறும்புணைபெற்றார்.

(இ - புரை.) வாழ்கின்ற மனைவியரிடத்திலும் புத்திரர்களிடத்திலும் சிறப்புள்ளதாகிய பொருள்களிடத்திலும் விருப்புறுகின்ற மனத்தை, அவைகளில்விரும்பாமற்காத்து, பிரகாசியாநின்ற நீண்டசடையையுடைய பரமசிவன் திருவடிகளை விரும்பப்பெற்றவரோ எழுபிறப்பாகிய சமுத்திரங்களையுங் கடந்து மோக்ஷமாகிய கரையிலேறுகின்ற தெப்பத்தை யடைந்தவ ராவார்கள். எ-று.

கங்கையணிவேணியான்காமன்றனைவென்றோன்
மங்கையொருபாகன்றனக்குவழியடியார்

தங்கள்பெருஞ்செல்வமெல்லாந்தாழாதளிப்பரன்றி
யங்கமரிவாளாலரிந்துங்கொடுப்பாரே.

(இ - புரை.) கங்கையையணிந்த சடையையுடையவரும், மன்மதனை வென்றவரும், பார்வதியை யொருபாகத்தில் வைத்தருளியவருமாகிய பரமசிவனுக்குப் பரம்பரையாகிய அடியவர்கள் தங்களுடைய பெரியசெல்வங்களை யெல்லாம் மறுக்காது ஈவார்கள்; அதுவுமல்லாமல், தங்கள் சரீரத்தையும் வாளால் அரிந்துங் கொடுப்பார்கள். எ-று. அங்கமரிந்துங் கொடுப்பார் என்றது ததீசிமுனிவர் சிபிச்சக்கரவர்த்தியார் முதலியோரைக் குறித்தபடி. (சுசு)

வேறு.

கண்ணுதலாலயநோக்குங்கண்களேகண்கள்
கறைக்கண்டன்கோயில்புகுங்கால்களேகால்கள்
பெண்ணொருபாகனைப்பணியுந்தலைகளேதலைகள்
பிஞ்ஞகனைப்பூசிக்குங்கைகளேகைகள்
பண்ணவன்றன்சீர்பாடுநன்றாவேநன்று
பரன்சரிதையேகேட்கப்படுஞ்செவியேசெவிகள்
அண்ணல்பொலங்கழனினைக்குநெஞ்சமேநெஞ்சம்
அவனடிக்கீழடிமைபுகுமடிமையேயடிமை.

(இ - புரை.) நெற்றிக் கண்களையுடைய பரமசிவன் வீற்றிருக்கும் ஆலயங்களைத் தரிசிக்குங்கண்களே நல்லகண்கள், காளகண்டத்தையுடைய அந்தப் பரமசிவன் வீற்றிருக்கும் ஆலயங்களுக்குச் செல்லுகின்ற கால்களே நல்ல கால்கள், பார்வதியை யிடப்பாகத்தில் வைத்தருளிய அந்தக்கடவுளை வணங்குகின்ற தலைகளே நல்லதலைகள், பிஞ்ஞகனென்னு மொரு திருப்பெயரை யுடைய அந்தக்கடவுளை அருச்சிக்குங்கைகளே நல்லகைகள், தேவநாயகர் புகழைப் பாடுகின்ற நாவேநல்லநா, பரமசிவனுடைய சரிதங்களைப் பெரியோர்களால் கேட்கப்படுங் காதுகளே நல்லகாதுகள், பெருமையிற்சிறந்த அந்தக்கடவுளுடைய பொன்மயமாகிய வீரகண்டையணிந்த திருவடிகளைத் தியானிக்கும் மனமே நல்லமனம், அவருடைய திருவடிகளுக்கு அடிமையாகிற அடிமைத்தமே நல்ல அடிமைத்திறம். எ - று. (சுஎ)

வேறு.

குணமிலாராயினுங்குலீனராயினு
மணமலிகருங்குழன்மகளிராயினும்

பணமணியரவரைப்பரமனன்பரோ
கணமலியுலகெலாம்பரவுங்காட்சியார்.

(இ - புரை.) நற்குண மில்லாதவர்களே யாஞலும் நல்ல குலமற்றவர் களே யாஞலும், வாசனைபொருந்திய கருமையாகிய அளகபாரத்தை யுடைய மாதர்களே யாஞலும், மாணிக்கம் பொருந்திய படத்தைப்பெற்ற பாம்பினைக் கச்சாகத்தரித்திருக்கும் அரையினையுடைய பரமசிவனடியார்களே கூட்டமாக வுள்ள திரிலோகத்தாரும் துதிசெய்யும்படியான பெருமையையுடைய ராவார் கள். எ - று. பரமன் அன்பரோ பரவுங் காட்சியாரெனப் பொருடருதலின், ஏகாரம் தேற்றத்தோடு பிரிநிலை. (சுஅ)

வேறு.

இன்னதன்மையதெனவீசனன்பர்சீர்
அன்னவாகனனுக்குமறிவதன்றெனு
மன்னுமாதவத்தினீர்மனக்கொள்வீரெனப்
பின்னுமோர்பெருங்கதைபேசினுரோ.

(இ - புரை,) பரமசிவனுடைய அடியார்கள் புகழ் இத்தன்மை யான தெனப் பிரமதேவனுக்கும் அறியத்தக்க தல்லவென்று, அழியாத பெரிய தவத்தையுடைய நைமிசாரணியமுனிவர்களே ! அறிந்துகொள்ளுங்களென்று பினனும் ஒருபெரிய சரித்திரத்தைப்பேசுவாராயினர். எ - று. (சுகூ)

நான்காவது - சிவராத்திரியில் விமரிசன்
முத்திபெற்ற அத்தியாயம்
முற்றிற்று.
ஆக விருத்தம் உ௱கூ.

---

உ

சிவமயம்.

ஐந்தாவது.

# சனிப்பிரதோஷத்தில்சந்திரசேனன்

## பூசைசெய்த அத்தியாயம்.

அகழணிநாஞ்சில்சூழாய்பொன்மூதெயில்
திகழுமுச்சீனியாஞ்செல்வமாநகர்க்
கிகழருங்குணத்திறைமைபூண்டுளான்
புகழணிதகைமையான்புலவுவேலினான்.

(இ - புரை.) அகழியும் அழகிய உறுப்புகளையுடையதாய்ச் சூழ்ந்திருக்கும் நல்ல பொன்னாலாய பழையமதிலும் விளங்கும், செல்வமுள்ள உச்சீனியென்னும் நகரத்துக்கு இகழ்ச்சியற்ற நற்குணங்களோடு அரசுத்தன்மை கொண்டிருப்பவனும், புகழையே ஆபரணமாகத்தரிக்கும் தகுதியையுடையவனும், பகைவருதிரந் தோய்ந்த வேலாயுதத்தையுடையவனும். எ-று.

மாநகர்க்கு இறைமை பூண்டுளான் எனமுடிக்க. மூதெயில் என்றமையின் இவ்வரசனுடைய மூதாதையராலியற்றியதெனத் தெளியப்படும். என்க.

இந்திரன் றிருவெனவிசைக்குஞ்செல்வத்தான்
மந்தரமலையெனவளருந்தோளினான்
செந்திருவனமுலைதிளைக்குமார்பினான்
சந்திரசேனனந்தரணிமன்னனே.

(இ - புரை) தேவேந்திர செல்வத்துக்கு ஒப்பானதென்று சொல்லத்தக்க செல்வத்தையுடையவனும், மந்தரகிரியைப்போல வளரும் தோள்களையுடையவனும், வீரலக்ஷ்மியின் அழகுபொருந்திய தனங்களைப் புணருமார்பையுடைய மகாவிஷ்ணுவைப் போல்பவனும், சந்திரசேனனென்கிற பெயருடையவனுமாகிய இவ்வுலகத்தையாளும் அரசன் ஒருவனுளன். எ - று.

இவ்வரசனைத்திருமாலுக்கு ஒப்பிட்டுக்கூறியது "திருவுடைமன்னனைக் காணிற் றிருமாலைக் கண்டேனென்னும்" என்னும் திருவாக்கைப்போல, (உ)

மன்னவனகர்மாகாளேசுரன்
என்னவாழீசனையிமயம்பூத்தருள்

கன்னியோர்பாகனைக்கருத்துளேத்தியே
பொன்னடியருச்சனைபுரியுங்காலையே.

(இ - புரை.) இத்தன்மையுள்ள அந்த அரசனானவன் அந்நகரத்தில் மாகாளேசுரரென்று திருநாமத்தினையுடையவரும், மலையரையன் பெற்ற பார்வதியை யிடப்பாகத்தி லுடையவருமாகிய பெருமானை மனதிலே நினைத்துத் தியானஞ்செய்து அவருடைய அழகிய திருவடிகளில் பூசைசெய்யுங் காலத்தில். எ - று. (௩)

தாணுவினேவலிற்றூரகைக்கெலா
நாணிலாவெனக்கணநாதர்நாயகன்
வேணவாவுளத்தினன் விலங்கற்றோளினன்
மாணிபத்திரனெனவழங்குபேரினன்,

(இ - புரை.) சிவநேசமிருந்த மனமுடையவனும், மலைபோலத்திண்ணிய தோளையுடையவனும், மாணிபத்திரன் எனவழங்கும் பெயரையுடையவனும், நக்ஷத்திரங்களுக்கெல்லாம் பூரணசந்திரன் தலைமைபெற்றிருப்பதுபோல சிவகணநாதர்களுக்கெல்லாம் தலைவனுமா யிருக்குமொருவன் பரமசிவனுடைய கட்டளையினாலே. எ - று. (௪)

வேறு.

வந்துசந்திரசேனனைநோக்கிமன்னவனே
யெந்தைபூசனைக்கிணையிலாய்நின்னுடைநட்பு
முந்தவேண்டுவனென்றுதான்வந்தமைமொழிய
அந்தவேந்தனுமகமகிழ்ந்தவனொடுநட்டான்.

(இ-புரை.) அவ்விடத்தில்வந்து சந்திரசேனனைப்பார்த்து, அரசனே! எம்மையாளுகிய பரமசிவபூசையில் ஒப்பில்லாத பத்தியை யுடையவனாகிய உன்னுடன் நட்புகொள்ள விரும்பினேனென்று, தான்வந்ததைச்சொல்ல; (அதுகேட்டு) அந்தவரசனும் அந்தக் கணநாதனுடன் சினேகித்தான். எ - று. (௫)

இன்னவாறிவரிருவருமொழுகுமந்நாளின்
மன்னனன்பினன் மாணிபத்திரனுளமகிழ்ந்து
துன்னுசோதிச்சிந்தாமணிச்சுடர்கெழுமணியை

5பன்.

(இ - புரை,) இம்முறையாக இவ்விருவரும் நட்புற்று வாழுநாளில் சந்திரசேன மகாராசனுடைய அன்பினுக்கு மாணிபத்திரன் மனமகிழ்ந்து, சூரிய

னுக்கொப்பாகிய ஒளிபொருந்திய சிந்தாமணியென்கிற ஓர் அரிய அரதனத்தை (இது) உன்னுடையதா யிருக்கக்கடவது என்று கொடுத்தான். அப்படிக் கொடுத்த மணியை அந்தஅரசன் வாங்கிக்கொண்டான். எ - று. அன்பினுன் வேற்றுமைமயக்கம். (சா)

அந்தமாமணிப்பெருமையாமளப்பதற்கெளிதோ
சிந்தையாலதைநினைப்பினுஞ்செல்வமேகொடுக்குங்
கந்தநாண்மலருந்தியான்கவுத்துவமணியு
நந்தவாளொளிவிடுவதுஞாயிறொத்ததுவே.

(இ - புரை.) அந்தச் சிந்தாமணியின் பெருமையை நாம் அளவிட்டுச்சொல்லமுடியாது. அதை மனதிலுற் றியானித்தாலும் செல்வத்தைக் கொடுக்கும் (அன்றியும்) வாசனைபொருந்திய செந்தாமரைபோலும் நாபியினையுடைய திருமாலணிந்திருக்கும் கவுஸ்துவ மணியும் ஒளி கெடும்படி மிக்க ஒளியை விட்டு அநந்தங்கோடி) சூரியர்போல் கிரணங்களைப்பரப்பா நிற்கும். எ-று.(எ)

அரிதினுத்தமனளித்தசெம்மணியினையணியாப்
புனைபடுத்தினனணிதலும்புரவலன்மார்பில்
மரகதக்குலமலையினின்மழகதிர்க்கடவுள்
இரதம்விட்டிழிந்திருந்தெனவொளிதயங்கியதே.

(இ-புரை.) உத்தமனுகியமாணிபத்திரன் அரிதிற்கொடுத்தசெந்நிறமுள்ள சிந்தாமணியைத் துளைபடுத்திச் சந்திரசேன மகாராசன் தன்மார்பில் ஆபரணம்போற் றரித்துக்கொள்ளவும், உதய சூரியன் தானிருக்குந்தேரைவிட்டிழிந்து நல்ல மரகத மலையினிடத் திருப்பதுபோல ஒளிவிட்டுப் பிரகாசித்தது. எ-று.

rயநன்மணியணிபுனைந்துறைமகனிருபப
வனையுமாமணித்திறனெலாமயலறக்கேட்டு
வினையமெண்ணியதிசைதொறுமேவியவேந்தர்
புனையும்வேட்கையால்யாவருந்துதரிற்புகன்றார்.

(இ - புரை,) இத்தன்மையுள்ள சிந்தாமணியைச் சந்திரசேன மகாராசன் தரித்து வாழுநாளில், அப்படித் தரித்துக்கொண்ட மணியின் பெருமையையெல்லாம் தேசங்கடோறும் பொருந்திய அரசர்களெல்லாரும் சந்தேகமில்லாமற் கேள்விப்பட்டு, அதைத்தாங்கள் தரித்துக்கொள்ள வேண்டுமென்கிற விருப்பத்தினுல் தூதர்முன்னிலையிற் சொல்லியனுப்பினுர்கள். எ-று. மயல் - சந்தேகம். (கூ)

அன்பில்வேட்டனர்சிலர்சிலர்வினையிடையடுபோர்
வன்பில்வேட்டனரன்னதுமனங்கொண்டமறவோ
னென்புயங்களுமென்னுடைவரங்களுமிறந்த
பின்புநல்குவேன்மணியெனவஞ்சினம்பிடித்தான்.

(இ - புரை.) சிலபேர் சிநேகத்தினால் விரும்பினவர்களாய்க் கேட்டனுப்பினார்கள்; சிலபேர் கொல்லுகின்ற போர்வினையில் வன்பினால் வாங்கிக்கொள்வதாக விரும்பிச் சொல்லியனுப்பினார்கள். அப்படி யவர்களாற் சொல்லியனுப்பப்பட்ட தூதர்கள்வந்து சொல்லியதை அறிந்த சந்திரசேனமகாராசன் என்புஜபலமும் யான்பெற்றவரங்களு மொழிந்தபின்பு என்னிடத்திலிருக்குஞ் சிந்தாமணியைத் தருகிறேனென்று (தூதர்களுக்குச் சொல்லியனுப்பி) அதனை விரும்பிய மன்னர்மேல் தன்மனதில் வைரங் கொண்டவனாயினான். எ - று. 'ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற் செல்லும்வாய் நோக்கிச் செயல்' என்னும் திருக்குறளின்படி அன்பினாலும் வன்பினாலும் வினைமுடிக்கத் துணிந்தாரென்பார் 'அன்பில்வேட்டனர் சிலர் வன்பில் வேட்டனர் சிலர்' என்றார். வைரங்கொள்ளுதல் அரசர்க்குரிய ஆற்றல்களிலொன்றாம். (கo)

அன்னவாசகங்கேட்டலுமவனிகாவலரின்
மன்னுமாகதராரியர்மத்திரர்மராடர்
துன்னுகேகயர்சாளுவரவந்தியர்துருக்கர்
மின்னுகோசலர்சஞ்சையர்கவுரவர்விராடர்.

(இ - புரை.) சந்திரசேன மகாராசன் சொல்லியனுப்பிய வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் இவ்வுலகத்தை யாளுகின்ற அரசர்களில் பொருந்திய மகததேசத்தாரும் ஆரியதேசத்தாரும் மாத்திரதேசத்தாரும் மராடதேசத்தாரும் நிலையாகிய கேகயதேசத்தாரும் சாளுவதேசத்தாரும் அவந்திதேசத்தாரும் துருக்கதேசத்தாரும் பிரகாசியாநின்ற கோசலதேசத்தாரும் சஞ்சயதேசத்தாரும் கவுரவதேசத்தாரும் விராடதேசத்தாரும். எ-று. (கக)

என்றுபேர்பெறுமன்னவர்யாவருமிகலிக்
கன்றுநெஞ்சினர்கடற்படைதன்னொடுங்கடுகி
வென்றுகோடுமுச்சீனியையென்பதுவிளம்பிச்
சென்றுசூழ்ந்தனர்சூழ்தலுஞ்சந்திரசேனன்.

(இ - புரை.) என்று சொல்லப்பட்ட கீர்த்திபெற்ற அரசர்களெல்லாரும் பகைகொண்டு கோபமுள்ள மனத்தராய் சமுத்திரம்போலும் படைகளையுடையவர்களாய் முடுகி, உச்சினி பட்டணத்தைவென்று நமது கைவசப்படு

த்திக் கொள்ளுவோமென்று சொல்லிக்கொண்டு, அந்தப்பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டார்கள் ; அப்படிச்சூழ்ந்தமாத்திரத்தில் சந்திரசேனமகாராசன். எ-று கோடும் கொள்வோம். கோறும் வேறும் என்றாற்போல். (கஉ)

பகைஞர்வந்துதன்பதிவளைத்தனரெனக்கேட்டு
மிகையுநெஞ்சினன்வெருவலன்வினையமொன்றெண்ணான்
முகைகொள்கண்ணியுஞ்சந்தமுமொய்யொளிக்கலனும்
புகையுந்தீபமுமயினியும்புனலொடுமேந்தி.

(இ - புரை.) பகைவர்வந்து தன்னகரத்தைச் சூழ்ந்து கொண்டார்களென்று கேள்வியுற்றுத் தளராத மனதையுடையவனாய் அஞ்சாமலும், வேறொரு காரியஞ்செய்ய எண்ணாமலும், மலரும் பக்குவமுள்ள அரும்புகளால் தொடுத்த பூமாலையும் சந்தனமும் மிகுந்த ஒளியுள்ள ஆபரணங்களும் தூபமும் தீபமும் அன்னமும் திருமஞ்சனமும் ஏந்திக்கொண்டு. எ - று. (கங)

வேறு.

மாகாளமென்றுபெயர்மன்னுமரன்மன்னும்
பூகாடவிச்சினகரத்தினிடைபோகி
யேகானுபூதியொடிருந்திதயமேவு
மோகாதிகத்தையுமுனிந்துபுறமாக்கி.

(இ-புரை.) மாகாளம் என்று பெயருள்ளதாய்ப்பரமசிவன் வீற்றிராநின்ற கமுகஞ்சோலைசூழ்ந்த ஆலயத்திற்போய்ப் (பரமசிவத்தின் திருவடியில் மனம் அயிக்கமாகும்படியான) நிஷ்டையிலிருந்து, இருதயத்திற்பொருந்திய மோகாதிசயங்களை யெல்லாங்கடிந்து புறமாகநீக்கி. எ - று. சினகரம்-கோயில். (கச)

மறையாகமங்களிடைமந்திரமனைத்துங்
குறையாமலோதியருளின்குரவர்கூறு
முறையாலருச்சனைசெய்தன்பினொடுமுந்நீர்க்
கறையார்களத்தனடியைக்கருதினானே.

(இ - புரை.) வேதங்களிலும் ஆகமங்களிலும் சொல்லப்பட்ட மந்திரங்களை யெல்லாம் குறைவுபடாமற்கூறி தோத்திரஞ்செய்து, அருளினால் ஆசாரியர் அனுக்கிரகஞ்செய்த முறைமையின்படி யருச்சித்து, சமுத்திரத்தில் உண்டாகிய விஷந்தங்கிய கண்டத்தையுடைய மாகாளேசுவரனுடைய திருவடிகளைத் தியானித்தான். எ - று. (கரு)

இவ்வாறுபூசையிறைவன்புரியுமேல்வை
யவ்வாலயத்தணுகிபாயர்குலமன்னுஞ்

செவ்வாய்மடக்கிளியனாள்சிறுவனோடே
மைவ்வாரணத்துரிவையானடிவணங்கா.

(இ-புரை.) சந்திரசேன மகாராசன் இத்தன்மையாகப் பூசைசெய்துகொண்டிருக்குஞ் சமயத்தில், ஆயர்குலத்திற் பிறந்த சிவந்தவாயையும் அறியாமையையும் கிள்ளையின் (மொழியொத்த இனியமொழியையு முடைய) ஒருமாதானவள் தன்புத்திரனுடன் அந்த ஆலயத்திற்போய்க் கரிய யானைத்தோலைப் போர்வையாகப்போர்த்த மாகாளேசுவரன் திருவடிகளைவணங்கி, எ-று. (கசு)

மனையிற்றிரும்பிவரலும்மவடன்மைந்த
னினைவுற்றுநெடுனவிடைநீண்முடிமகிபன்
முனைவற்றெழும்பரிசுகண்டதனைமுன்னா
நனைமுற்றுபோதுகொடுநாடிவழிபடுவான்.

(இ - புரை.) தன்வீட்டிற்குத் திரும்பிவரவும், (மறுநாள்) அவள்புத்திரன் நெடியமகுடத்தையுடைய சந்திரசேனமகாராசன் மாகாளேசுவரனை மனதில் தியானித்து, முந்தியநாள் தொழுததன்மையைத் தன்மனதில்நினைத்து, அரும்புகள்முதிர்ந்த நல்ல மலர்களைக்கொண்டு முறைமையினோடு பூசைசெய்பவனாய். எ - று. (கஎ)

விரையுற்றமாலிகைவிளக்குவடிதெண்ணீர்
புரையற்றதெள்ளமுதுபொன்னணிகளாடை
தரையுற்றபாசடைமணற்கொடுசமைத்தாங்
குரையற்றபூசனைசமாதிநிலையுற்றான்.

(இ-புரை) (பூசாத் திரவியங்களெல்லாந் தனக்கு நேரிடாமையால்) பச்சிலைகளையும் மணலையுங்கொண்டு இவைகள் வாசனைபொருந்திய பூமாலையென்றும், இவைகள் தீபங்களென்றும்,இவைகள் வடித்த தெள்ளியதிருமஞ்சனமென்றும், இவைகள் குற்றமற்ற நல்ல அமுதமென்றும், இவைகள் பொன்னாபரணங்களென்றும், இவைகள் வஸ்திரங்களென்றும், ஏற்படுத்திக்கொண்டு சொல்லுக்கடங்காத் (தன்மையுள்ள) பூசைசெய்தலாகிய சிவநிஷ்டையிலிருந்தான். எ - று. ஆங்கு - அசை. (கஅ)

ஐம்புலவழிச்செலுமனத்தையுமடக்கி
நம்புசிவநிட்டையினிருக்குமிடநண்ணிக்
கும்பமுலையன்னைமகவின்பசிகுறித்தே
யெம்பிமனைவாவெனவியம்பவுமெழாதே.

(இ - புரை.) ஐம்புலன்வழியில் செல்லுகின்ற மனதைப்பந்தித்து, நம் புதலோடு சிவநிஷ்டையி லிருக்குமிடத்திற்குக் கும்பம்போன்ற தனங்களையு டைய தாயானவள் தன்புத்திரனுடைய பசியைக்குறித்துப்போய், தம்பீ! (போ ஜனசஞ்செய்ய) வீட்டுக்கு வருவாயென்று அழைக்கவும் அவன் எழுந்திரா மல் எ - று. மகனை எம்பி என்றது அன்பில்வந்த வழுவமைதி. (கக)

ஈசனதடிக்கமலமீதிதயவண்டைப்
பாசமுறவைத்தவனிருந்தபடியெல்லா
நேசமுறுமன்னையறியாதிஃதுநேர
மாசிலுணவுண்பதுமறந்ததெதுபோலாம்.

(இ - புரை.) பரமசிவனுடைய திருவடித் தாமரையினிடத்தில் தன் னிய வண்டினை அன்பு பொருந்தவைத்துத் தன்மகனிருக்குந் தன் மைகளை (புத்திரனிடத்தில்) ஆசைமிகுந்த தாயானவள் அறியாமல, இந்த விளையாட்டொன்று உண்டாக, நல்லபோசனஞ்செய்வதை மறந்திருப்பது என்னகாரணமோ? என்று. எ - று. போல் ஆம் - அசைகள். (உ0)

என்றுவெகுளாமகவையெற்றினளடர்த்தாள்
வன்றிறலினுறுமைமஞ்ஞளனைவைத்த
மின்றிகழ்கருஞ்சிலையெடுத்தகலவீசிக்
கன்றியமனத்தன்மனையிற்கடிதுபோனாள்.

(இ - புரை.) இவ்வாறு சொல்லிக்கோபித்து, மகனைக் கையால் மோதி யடித்தாள்; (அதுவுமல்லாமல் சிவபூசையில்) மிகுந்த உறுதிப்பாட்டையுடைய அந்தப்புத்திரன் சிவலிங்கப்பெருமானைப் பாவனைசெய்துவைத்த ஒளிவிளங் குகின்ற கருங்கல்லையெடுத்துத் தூரத்தில் எறிந்துவிட்டு, வெம்பியமனதை யுடையவளாய்த் தன்வீட்டில் விரைவாகச்சென்றாள். எ - று. (உக)

எந்தையையெடுத்திவணகற்றினளெனத்தன்
சிந்தைமிகநொந்துமுறையிட்டழுதுசேயோன்
வெந்துயர்பொறாமலிருகன்னல்விழியானாய்
முந்தியவுயிர்ப்புமறமூர்ச்சனையடைந்தான்.

(இ - புரை.) (அவள் எறிந்துவிட்டுப்போனதைப் பார்த்த பரிசுத்தனான அந்தப்புத்திரன்) என் ஐயனாகிய பரமசிவனை இவ்விடத்திலிருந்தெடுத்தெறிந்து விட்டாளென்று தன்மன மிகவும்வருந்தி முறையிட்டழுது, தனக்கு நேரிட் ட துயரத்தைச் சகிக்கமாட்டாமல் இரண்டுநாழிகைவரையில் கண்களையுந்திற வாமல் சுவாசமுமில்லாமல் மூர்ச்சையடைந்தான். எ - று. கன்னல்-நாழிகை.

(வேறு.)

விழித்தனன் விழித்து நோக்கலும்பழையமனையெலாநவமணிவி ளக்கம், பழித்துநின்றிமைக்கும்புரந்தராலயம்போற்பழுதறவிளங்கு தல்கண்டா, னொழித்தனள கடிந்த விலிங்கந்திபமியமாயொளிமணி யொண்சுடர்ச்சோதி, கொழித்துநின்றிருந்ததன்மைகண்டுள்ளங்குளி

(இ - புரை.) பின்பு மூர்ச்சை தெளிந்து கண்கள்விழிக்கவே, பழையதான தனது இல்லம் முழுவதும் நவரத்தினங்கள் ஒளிமிகுந்து மாறுமல் பிரகாசித்துக்கொண்டிராநின்ற தேவேந்திரன் கோவில்போல விளங்குவதைக் கண்டான்; பின்னும் தன்தாயானவள் எடுத்தெறிந்துவிட்ட சிவலிங்கமானது திவ்வியமானதாய் ஒளியுள்ள ரத்தினம்போலக் கிரணமுள்ள சோதியைக் கொழித்துக்கொண்டு அழியாத்தன்மையுடன் இருப்பதையுங்கண்டு, மனங்குளிர்ந்து அதிசயங்கொண்டான். எ - று. புரந்தரன் - இந்திரன். திவ்வியம் என்பது திடபியம் என்றுயிற்று. (௨௩)

தொல்லையம்பிறவிக் கடற்கரையேறத்தொண்டெனு மம்பியைக் காட்டும், அல்லணிகண்டன்பூசனைப்பயனே வல்லதுதிருவிளையாட் டோ, முல்லையங்கண்ணியெங்குலமுதல்வர்முறைசெய்தநல்வினைப் பயனோ, எல்லையிறவத்தோர்தமக்குமெய்தாததெளியனுக்கெய்தியதெ ன்னே

(இ - புரை.) பழமையாகிய பிறப்பென்னுஞ் சமுத்திரத்தைக் கடந்து மோக்ஷமென்னுங்கரையிலேறும்படி அடிமைத்திறமென்னும் தெப்பத்தைக் காட்டிய இருள்நிறந்தங்கிய கண்டத்தை யுடைய பரமசிவனைப் பூசித்தலால் உண்டாகும் பிரயோசனமோ? அல்லது, அவருடைய திருவிளையாட்டோ? முல்லைப்பூவால் தொடுக்கப்பட்ட அழகிய மாலையணிந்த என்குலமுதலோர் பூர்வம் முறைதவறுமல் செய்த புண்ணியத்தினல் உண்டாகும்பயனே? அளவில்லாததவத்தையுடையவர்களுக்கும் கிடைப்பதற்கரிய இப்பெருப்பேறு எளியனுக்குக் கிடைத்தது என்னகாரணமோ? எ - று. அம்பி - தெப்பம். (௨௪)

மியல்புதீவினையிழைத்தல்சிறியவர்சிற்றியலீதென் றறிஞருக்கியல்புபொறுப்பதென்றுரைப்பராதலாலடியனேனன்னை நெறியிலாதிழைத்தசிற்றியல்பொறுத்திநிமலனேகருணையங்கடலே மறியுறைகரத்துவரதனேயென்னவாழ்த்தினனமாசிலாத்தவத்தோன்.

(இ - புரை.) பிழைசெய்தல் சிறியோர்களுக்கியல்பு; சிறியோர்கள் பிழை செய்த லிவ்வாறுதானென்று பொறுத்துக்கொள்ளுதல் பெரியோர்கள் கடன்

என்று சொல்லுவார்கள். ஆதலால், அடியேன் தாயானவள் முறைமையில்லா மல்செய்த குற்றத்தை தேவரீர் பொறுத்துக்கொண்டருளவேண்டும்; திருமல னே! அழகியகிருபைக்கடலே! மான்பொருந்திய திருக்கரமுடைய வரதனே! என்று வாழ்த்தினான் அக்குற்றமற்ற சிறுவன். எ - று. வரதன் - மாறாதவரந் தருபவன். (உரு)

தன்மனைபுகுந்துதுயின்றநற்றாயும்விழித்தலுந்தன்மனையெல்லாம்
பொன்மயமாகக்கண்டுமெய்ப்புளகம்பொங்கிடமகவினைநோக்கி
நன்மகவீன்றேனென்றுளங்களித்துநரபதிக்குரைப்பனென்றெல்லை
மன்மனைகுறுகிப்புகுந்தவாறெல்லாமன்னனுக்குரைத்தலுமன்னன்.

(இ - புரை.) (இவ்விடத்தில் இவனிப்படி யிருக்கத் தன்மகன் சிவலிங் கமாகப்பாவனைசெய்துவைத்துப் பூசித்த கருங்கல்லையெறிந்துவிட்டு) தன்வீட் டிற்போய் நித்திரைசெய்த தாயானவளும் நித்திரை தெளிந்து பார்த்தமாத்திர த்தில், தன்வீடெல்லாம் பொன்மயமாயிருக்கக்கண்டு, சரீரத்தில் புளகமுண் டாகப் புத்திரனைப்பார்த்து, நல்லபுத்திரனைப்பெற்றேனென்று மனங்களித்து, (இச்செய்தியை) அரசனுக்குச் சொல்லுவேனென்று விரைவாக அரண்மனை க்குப்போய் அரசனைக்கண்டு, நடந்தசெய்திகளெல்லாம் சொன்னாள்; அதைக் கேட்ட அரசன். எ - று. (உசு)

மந்திரவிதியினமைச்சருமாதிமறைவலாளரும்புடைசூழத்
தந்திரந்தழுவச்சேரிசென்றணுகித்தமனியமனைவளநோக்கி
யந்தரத்தகடுகிழியநீள்பசும்பொனாலயம்வலங்கொடுபுகுந்து
சந்திரசேனன்சந்திரமவுலிதாளிணைவிதிமுறைதொழுதான்.

(இ - புரை.) மந்திராலோசனையின் முறைமையுணர்ந்த மந்திரிகளும் முதன்மையாகிய பிராமணர்களும் புடைசூழ்ந்துவரவும், நால்வகைச்சேனைகளு ஞ்சூழ்ந்துவரவும் ஆயர்சேரியிற்போய்ச் சேர்ந்து, பொன்மயமா யிராநின்ற வீட்டின் வளப்பத்தைப்பார்த்து, அண்ட முகடு கிழியும்படி உயர்ந்திராநின் ற ஆலயத்தைப் பிரதக்ஷிணஞ் செய்து, சந்நிதியிற்போய்ச் சந்திரசேனனென் னும் அந்த அரசன் சந்திர சேகர னாகிய பரமசிவனுடைய திருவடிகளை முறை ப்படித்தொழுதான். எ-று. (உஎ)

வேதமும்வேதவிரிஞ்சனுமாதிவிண்டுவுமண்டருங்காணு
ஆதியம்பரமனடியவர்க்குருகியருளினாலடைந்தனனென்னுங்
காதலிற்பொதுவர்மதலையைத்தழுவிக்காவலன்களிமகிழ்வெய்த
[illegible] நவகையாலொலியெழுந்ததுமே;

(இ - புரை.) அப்படித்தொழுத அரசன் நான்கு வேதங்களும் வேதங்களை யுணர்ந்த பிரமதேவனும் அப்பிரமனுக்கு ஆதியாகிய விஷ்ணுவும் மற்றுமுள்ள தேவர்களுங் கண்டறியாத யாவர்க்கு மாதியாகிய பரமசிவன் அடியார்க்காகத் திருவுளமிரங்கிக் கிருபையினால் திருக்கோயில்கொண் டமர்ந்தாரென்கிற அன்பினால், அந்த இடைப்பிள்ளையைத் தழுவிக்கொண்டு, அரசன் மிகுந்த மகிழ்ச்சியைஅடைய, (அதைக்கண்ட) அந்தப்பழய நகரத்தாருக்குண்டாகிய சந்தோஷத்தினால் கோஷித்த ஆரவாரமானது பருவகாலத்தில் சமுத்திரங் கோஷிப்பதுபோல் இருந்தது. எ-று. பொதுவர்-இடையர்-உவா-பௌர்ணிமை. (உ௮)

வரதவமதலைபூசனை புரிந்தவண்மையுந்தண்மதிக்குழவிப்
புரிசடையண்ணலருளினுங்கடைந்தபுதுமையும்புரவலன்கண்டு
கரையிலாவுவகையுற்றதுநகரங்களிப்பதுங்காணவந்தனன்போற்
குரைகடனடுவுட்கதிர்க்குலம்பரப்பியெழுந்தனன்குணதிசைவெய்யோன்.

(இ - புரை.) சிரேஷ்டமுள்ள தவத்தையுடைய அந்தப்புத்திரனானவன் பூசைசெய்தவளப்பமும், குளிர்ச்சிபொருந்திய இளம்பிறையை யணிந்தமுறுக்கிய சடாமகுடத்தையுடைய பரமசிவன் திருவருளினால் அவ்விடத்துத் திருக்கோயில்கொண்டமர்ந்த அற்புதமும் சந்திரசேன மகாராசன்கண்டு, அளவில்லாத சந்தோஷம் அடைந்ததையும் நகரத்தாரெல்லாங் களிப்படைந்ததையுங் காணவந்தவன்போல, ஒலிக்காநின்ற சமுத்திரத்தினடுவில் ஆயிரங்கிரணங்களையும் பரப்பிக்கொண்டு கீழ்த்திசையில் சூரியன்உதயமானான். எ-று. வரம்-மேன்மை. (உ௯)

முதுமெயில்வளைந்தகாவலரொற்றர்முழுதுமற்புதமெனவேகித்
தாதவிழிதழிச்சடிலவானவனைச்சனிட்பிரதோடத்திலொருநாள்
காதுவேன்மன்னன்வழிபடக்கண்டகாளைசெய்பூசனைமுதலா
ஆதியெம்பரமன்றோன்றியவளவுமவரவரரசருக்குரைத்தார்.

(இ - புரை.) பழமையாகிய மதிலைச்சூழ்ந்து காவலராயுள்ள ஒற்றர்களெல்லாம் இது அதிசயமென்று பேசிக்கொண்டு சென்று, மகரந்தத்துடன் மலர்ந்த கொன்றைப்பூமாலையணிந்த சடாமகுடத்தை யுடைய பரமசிவனைச் சனிப்பிரதோஷத்தில், ஒருநாள் பகைவராக்காயும் வேலாயுதத்தையுடைய சந்திரசேனமகாராசன் பூசைசெய்யக்கண்ட ஒரு இடைப்பிள்ளையும் அவ்வாறாக செய்யத்தொடங்கிய பூசைமுதலாக ஆதியாகிய நம்மிறைவன் தரிசனங் கொடுத்தவளவும் (வழுவாமல்) ஒவ்வொருவரும் அரசர்களுக்குச் சொன்னார்கள். எ - று. (௩௦)

தம்முடி துளக்கிக்கேட்டவேல்வேந்தர்தனித்தனிதண்ணெனவெருவிக், கொம்மையங்கொங்கைக்கொடிபுரைநுசுப்பிற்கோகிலமிடங்கு

நிற்குதலை, யம்மைபங்காளனடியவனிந்தவரசனையவமதித்தந்தோ,
வெம்மைமையினலடைந்தே மெனத்தமைமுனிந்துமேற்செயும் வினையமீ
தென்று

(இ - புரை.) (போருக்கெனவந்து மதிலை வளைந்துகொண்டுள்ள) வே
லேந்து மரசர்கள் தனித்தனி முடியசைத்து (இது ஆச்சரியமான காரி
யமா யிருக்கிறதென்று) தனித்தனியாக நடுக்கமுறப்பயந்து, இந்தச் சந்
திரசேனமகாராசன் குவிந்த அழகுள்ள தனபாரத்தையும் பூங்கொடியை
யொத்த இடையினையும் குயிலோசைபோல வசனிக்கும் மதுரமுள்ள மழலைச்
சொற்களையுமுடைய பார்வதிதேவியாருக்கு இடப்பாகமளித்தருளிய பரமசிவ
னுடைய மெய்யன்பனாயிருக்கின்றான்; இதையறியாமல் இவனை அவமதித்துப்
பகைகொண்டு வந்தோம் ; என்று தங்களைத்தாங்களே வெறுத்துக்கொண்டு
இனிநாம் செய்வேண்டியகாரிய மிதுவென்கிறதாக நினைத்து. எ-று. (௩௧)

கடற்படையனைத்துந்தத்தமூர்க்கேகக்கதுமெனப்பணித்தமரொதிர்ந்தா
ரடற்கருஞ்சேனைச்சந்திரசேனனன்பதேயமையுமென்றெண்ணிப்
படைக்கலந்துரந்தகையினராகிப்பதிபுகுந்தரசனைப்பணிந்து
விடற்கருநட்புவேண்டினரிவனும்விள்ளலாநட்பெதிர்விழைந்தான்.

(இ - புரை.) சமுத்திரம்போல மிகுந்த தங்கள்தங்கள் சேனைகளையெல்
லாம் தங்களூருக்குப்போகும்படி விரைவாக உத்தரவுசெய்தனுப்பிவிட்டு, யாவ
ராலும் போர்செய்வதற்கரிய சேனைகளையுடைய சந்திரசேன மகாராசனுடைய
சிநேகமே நமக்குப் போதுமானதென்று கருதிக்கொண்டு, தங்கள்கைகளிலிரு
ந்த ஆயுதங்களையெல்லாம் நீங்கினவர்களாய், உச்சினி பட்டணத்திற்குட்போய்
அந்தஅரசனைக்கண்டுவணங்கி, அரசனே உம்முடையசிநேகம் எப்போதும்நீங்
காமலிருக்கும்படி வேண்டினோமென்று பிரார்த்தித்தார்கள். அதைக்கேட்ட அவ்
வரசனும் (அவர்களைப்பார்த்து,) அரசர்களே? உங்களுடைய சிநேகமும்என்னி
டத்தி லெப்போதும்நீங்கா மலிருக்கும்படி நானும் விரும்பியிருக்கிறே னென்
றான். எ - று. கதும் என்பது விரைவுப்பொருளைத் தருமோரிடைச்சொல். ()

மன்னனுநட்பின்மன்னருமேகிமாகாளநாதனைவணங்கிப்
பின்னரோதொறுவன்பூசனைக்கெதிர்ந்தபின்ஞகன்றளினைதொழுது
முன்னர்நின்றிறைஞ்சுமதலையைத்தழுவிமுகமனன்ககமகிழ்ந்துளையா
இந்நிலத்தாயர்குலங்கட்குநீயேயிறைமகனெனவிசைத்தார்.

(இ - புரை.) இவ்வாறு சிநேகங்கொண்டபின்பு சந்திரசேனமகாராசனும்
நட்பினராகிய மறுதேசத்தரசர்களும்போய் மாகாளேசுவரனை வணங்கி, உட
னுடையபாலனை மசயதபூசைக்காக எழுந்தருளிவீற்றிராநின்றசிவலிங்கமூர்

த்தியையும்பணிந்து, தங்களெதிரில்நின்று வணங்கிய அந்தப்பிள்ளையைத் த ழுவிக்கொண்டு, மகிழ்ச்சியுடன் நல்லஉபசார வார்த்தைகள்சொல்லி, இந்தஉல கத்திலிருக்கும் ஆயர்குலத்துக் கெல்லாம் நீயே யிறைவனாயிருக்கக்கடவையென் று சொன்னார்கள். எ - று. தொறுவன் - இடையன். (௩௩)

(வேறு.)

அக்காலையின்வந்தானடலடையார்புரநூறப்
புக்கார்கலியிலங்கைப்பதிபுகையத்தழன்மடுத்துக்
கைக்கார்முகநெடியோன்றனைக்கலுழன்றனிற்பொறுத்த
மிக்கான்கவிகுலநாயகனனுமானெனுமேலோன்.

(இ - புரை.) இவ்வாறு அரசர்கள் சொன்னபோது பலம்பொருந்திய ப கைவராகிய அரசர்களுடைய பதியை அழிக்கும்படிப்போய்ச் சமுத்திரத்தினடு விலிருக்கும் இலங்கையானதுபுகைந்தெரியத்தக்கதாகத்தீயூட்டி, கையினிடத் துக் கோதண்டத்தையுடைய இராமமூர்த்தியைப் போர்களத்திற் கருட னைப்போற்றாங்கிய மிகுந்த பராக்கிரமசாலியும் வானரர்களுக்குப் படைத் தலைவனுமாகிய அனுமானென்னும் பெயரையுடைய மேலானவன். எ - று. புக்கு - புகுந்து, ஆர்கலி-சமுத்திரம். கவி - குரங்கு. கார்முகம் - கோதண்டம். கலுழன் - கருடன். (௩௪)

அம்மாருதிவரக்கண்டலுமடிவீழ்ந்தடல்வேந்தன்
செம்மாந்தலர்மழைதூய்ப்பலவழிபாடுகள்செய்தே
யெம்மானிவணெய்தத்தவமென்செய்தனமெனவே
யிம்மாவுளங்களித்தார்வமோடிருப்பக்கவிவீரன்.

(இ-புரை.) அத்தன்மையுள்ள அனுமான் வந்ததைக் கண்டமாத்திரத் தில் பலமுள்ள சந்திரசேனமகாராசன் அவர்பாதத்தில் சேவித்துக்கொண்டு, மிகுந்த களிப்படைந்து, மேகம்பொழிவதைப்போல மலர்களைச்சொரிந்து, பல வகையாகிய ஆராதனைகள்செய்து, எம்மிறைவன் இந்த நாட்டில் வரும்படி நாங்கள் என்னதவஞ் செய்தோமோவென்று துதிசெய்து, மனக்களிப்படை ந்து ஆசையுடனிருந்தான்; அப்படியிருக்கும்போது அனுமான். எ-று. (௩௫)

கோபாலர்தங்குலச்சேயினைக்குளிர்மார்புறவணைத்தே
பூபாலர்கள்கேண்மின்னுறுபொருளொன்றையுமுணரா
மாபாலனிங்கிவன்செய்திடுவழிபாட்டினுண்மகிழ்ந்தே
காபாலிவந்தருள்செய்தமைகண்டீரிவையெல்லாம்.

(இ-புரை.) ஆயர்குலப்புத்திரனைக் குளிர்ச்சிபொருந்திய தன்மார்பில் அணைத்துக்கொண்டு, அரசர்களே! கேளுங்கள், உலகிற்பொருந்திய யாதொ

ருபொருளையும் அறியாத பெருமைபொருந்திய இந்தப்புத்திரன் செய்த ஆராதனைக்குத் திருவுள மகிழ்ந்து, பரமசிவன் தமது தரிசனம் பாலித்ததைக்கண்டீர்களா? இவைகளெல்லாம். எ - று. (௧௬)

இறைசந்திரசேனன் புவியேழும்புகழுரவோன்
அறையுஞ்சனிவாரப்பிரதோடந்தனிலரனை
மறையின்படிவழிபட்டமைகண்டிங்ஙனமதலை
பொறையொன்றியமனத்தாற்புரிபூசாபலம்போலும்

(இ-பொ.) ஏழுலகமும் புகழத்தக்க வல்லமையுடையவனாகிய சந்திரசேன மகாராசன் (வேதாகமங்களால்) விசேஷமாகச்சொல்லப்படுகிற சனிப்பிரதோஷத்தில் முறைமைப்படிப் பரமசிவனைப்பூசித்ததைக்கண்டு, இந்தப்புத்திரன் சாந்தந்தங்கிய மனத்துடன்செய்த பூசையின் பலமாகும். எ-று. மனத்தாற்புரி பூசை - மானதபூசை. (௧௭)

அப்பூசனைகண்டார்பெறும்பேறித்துணையளவோ
இப்போதிவன்வழியாய்வருமெட்டாந்தலைமுறையிற்
கைப்போதகமழைக்கும்மழைக்கார்வண்ணனைவளர்ப்பான்
மெய்ப்போதத்துநந்தனெனுங்கோன்றோன்றுவன்விளங்க.

(இ-பொ.) அத்தன்மையுள்ள சனிப்பிரதோஷ பூசையைக்கண்டவர் பெறும்பேறு இவ்வளவிலடங்குவதோ? இப்போது பூசைசெய்த இந்தப் புத்திரனுடைய சந்ததியாய் வருகின்ற எட்டாந்தலைமுறையில் (முதலைவாயிற் சிக்குண்ட) துதிக்கையையுடைய ஒரு காட்டானையானது அழைக்க அதைரக்ஷித்த மேகவண்ணங்கொண்ட மகாவிஷ்ணு (கிருஷ்ணவதாரஞ்செய்வார்.) அவரைவளர்க்க உண்மை யறிவையுடைய நந்தனென்கிற ஆயர்கோனொருவன் அந்தக்குலம் விளங்கும்படி தோன்றுவன். எ-று. (௧௮)

இன்றேமுதல்வேல்வேந்தர்களெல்லீருமறிவனை
நன்றேதருபுகழ்ச்சீதரனெனவேபெயர்நவில்வீர்
என்றேயடலனுமான்சிவபூசாபலத்தியல்லை
யன்றேதவமதலைக்கினிதருள்செய்தனன்போனான்.

(இ-பொ.) வேலாயுதத்தையுடைய அரசர்களே! நீங்களெல்லாரும் இன்றுமுதல் இந்தப்புத்திரனை நன்மையைத்தருகின்ற புகழினையுடைய சீதரனென்று பெயரிட்டழையுங்களென்று சொல்லி, மேலும் பராக்கிரமமுள்ள அனுமான் அப்போதே சிவபூசையின் கிரமத்தை தவத்தையுடைய அந்தப்புத்திரனுக்கு இனிதாக உபதேசித்தருளிப்போனார். எ-று. (௧௯)

காற்றின்புதல்வன்போயபின்கருதாதமர்சொல்லி
மாற்றஞ்சியபடைமன்னரைவழிக்கொள்ளுநும்பதிக்கென்
றாற்றந்தருகரிதேர்பரியொண்பூண்டுகிலுதவிப்
போற்றுந்தவக்கோபாலனோடிருந்தான்புனைதாரான்.

(இ - புரை.) வாயுபுத்திரனாகிய அனுமான் போய்விட்டபின்பு எண்ணா மற் போர்செய்வோமென்று சொல்லிக்கொண்டு வந்து, பின்புசண்டைசெய்ய ப்பயந்த சேனையுள்ள அரசர்களைப் பார்த்து, நீங்கள் உங்களூருக்குப் போங்க ளென்றுசொல்லி, வலிபொருந்திய யானைகளுந் தேர்களும் குதிரைகளும் ஒளியுள்ள ஆபரணங்களும் வஸ்திரங்களும் பரிசாகக்கொடுத்து அனுப்பி விட்டுப் பூமாலையணிந்திருக்கும் அவ்வரசன் போற்றுகின்ற தவத்தையுடைய அந்தப்புத்திரனுடன் தன்னகரத்திலிருந்தான். எ - று. (சo)

நெடுநாளிருவோருந்திருநிலமாமகள்போகங்
கடவாதினிதருந்திச்சிவன்கழல்பூசனைபுரிந்தே
முடியாவிறுதியினேறினர்முத்திக்கரையென்னாப்
படுபாதகவினைவென்றவர்க்குரைத்தான்பழந்தவத்தோன்.

(இ - புரை) அரசனும் ஆயர்குலப்புத்திரனும் நெடுங்காலவரைக்கும் ஒருநாளாவது முட்டுப்படாமல் இவ்வுலகவின்பத்தை அனுபவித்துக்கொண் டிருந்து, பரமசிவனுடைய திருவடிகளையும் பூசித்து முடிவில்லாத அந்தியத் தில் மோக்ஷமாகிய கரையிலேறினார்களென்று பிறவிதோறும் பொருந்திய தீவினையைவென்ற நைமிசாரணிய முனிவர்களுக்குச் சூதமுனிவர் சொல்லி யருளினார். எ - று. (சக)

ஐந்தாவது சனிப்பிரதோஷத்தில் சந்திரசேனன்

பூசைசெய்த அ த்தியாயம் முற்றிற்று

ஆக விருத்தம் உ௲o.

திருச்சிற்றம்பலம்.

ஆறாவது

# சத்தியாதனன் பூசைசெய்த அத்தியாயம்.

பின்னுநான்மறைமுனிவரர்பெருந்தவத்தோனே
முன்னரோதுபிரதோடமும்பூசையின்முறையு
மன்னிநாடொறும்வழிபடுமவர்பெறுவரனும்
இன்னுமெங்களுக்கிருளறவியம்புதியென்றார்.

(இ-புரை.) இவ்வாறு சூதமுனிவர் சொல்லக்கேட்டுப் பின்னரும் நான்குவேதங்களுமுணர்ந்த நைமிசாரணிய முனிவர்கள் (சூதமகாருஷியைப் பார்த்து) மிகுந்த தவத்தையுடைய சுவாமிகளே! முன்னஞ்சொல்லிய பிரதோஷகாலமும், அந்தப்பிரதோஷ பூசையின் கிரமமும், இடைவிடாமல் நாடோறும் பூசிப்பவர்கள் பெறும்வரமும்,இன்னமும் எங்களுக்கு மயக்கந் தீரும்படிச் சொல்லி யருளவேண்டு மென்றார்கள். எ - று. (க)

முந்தைநூன்முனியன்னதைமொழிவலென்றுரைத்தான்
சிந்தைசெய்குதிர்பதின்மூன்றாம்பக்கமாந்திவாவின்
அந்தமாகியமாலையேபிரதோடமாகும்
இந்துசேகரன்விரும்பியகாலமுமிஃதே.

(இ - புரை.) அவைகளைச் சொல்லுகிறேன் கேளுங்கள்; பதின்மூன்றாநாளாகிய திரயோதசி தினத்தில், பகற்பொழுதின் முடிவாகிய மாலைப்பொழுதே பிரதோஷமாம்; சந்திரசேகரனாகிய பரமசிவன் விரும்பியகாலமும் அதுவே யாமென்று வேதமுணர்ந்த சூதர் கூறியருளினார். எ - று. (உ)

ஆயகாலையினடையலர்திரிபுரமழலிற்
றீயவாணகைமுகிழ்த்தருள்செம்மலையல்லான்
மாயனான்முகன்முதலியதேவரைவணங்கி
மேயபூசனைபுரிபவர்நரகிடைவீழ்வார்.

(இ - புரை.) அந்தப்பிரதோஷ காலத்தில் தேவவிரோதியர்களுடைய திரிபுரங்கள் அக்கினியாற்றீயும்படி ஒளிபொருந்திய புன்னகைசெய்தருளிய பரம

சிவனையேயன்றி, விஷ்ணு பிரமன் முதலாகிய தேவர்களை வணங்கி விரும்பிப் பூசைசெய்கின்றவர்கள் நரகத்தில் விழுவார்கள். எ - று. (கூ)

சொன்னகாலையிலீசனைவழிபடுந்தூயோர்
மன்னுமாக்கடலுடுத்தபார்முழுவதும்வணங்க
முன்னுபோகங்கள்யாவையுமுறையினிற்றுய்த்துப்
பின்னர்வீறறினிதிருப்பாராறபேரின்பவீட்டின்.

(இ - புரை.) மேற்சொல்லிய பிரதோஷகாலத்தில் பரமசிவனைப் பூசை செய்கின்ற பரிசுத்தர்கள் நிலைபெற்ற பெரிய கடல்சூழ்ந்த உலகத்தவர்களெல்லோரும் வணங்கும்படி (அரசர்களாய்ப்பிறந்து,) விரும்பிய போகங்களையெல்லாங் கிரமமாக அனுபவித்துப் பின்பு மோக்ஷவீட்டில் இனிதாக வீற்றிருப்பார்கள். எ-று. (௪)

அனையகாலையினருச்சனைபுரிந்துவீடடைந்தார்
எனையரென்றுநீர்வினவுதிரேலஃதிசைக்கேன்
வினையவென்றியான்விதற்பதேசாதிபனெழிலாற்
றனையொவ்வாதவேள்காமுறுஞ்சத்தியாதனனே.

(இ - புரை.) அத்தன்மையுள்ள பிரதோஷகாலத்தில் பரமசிவனை அருச்சித்து மோக்ஷமடைந்தவர்கள் யாவரென்று நீங்கள் வினவுவீராகில், அதைச் சொல்லுகிறேன் கேட்பீராக; போர்த்தொழிலில் வெற்றியை யுடையவனும் விதற்ப தேசாதிபதியும் மன்மதனும் ஒவ்வாத (சவுந்தரியமுள்ளவனுமான) சத்தியாதனனென்னும் பெயருள்ள ஒரு அரசன். எ - று. காமமுறுமென்பது விகாரவகையான் காமுறுமென நின்றது. காமம் உறும் எனப் பிரித்துக் கொள்க. (௫)

அறிவினீதியின்வாய்மையினமைச்சினினழகிற்
பிறிதில்கல்வியிற்பெருமையினிருநிதிப்பெருக்கிற்
செறியுமூதரணுடைமையின்விரதத்திற்றிறல்வேல்
எறியவூறஞ்சாக்கடற்படையுடைமையினிசையின்.

(இ - புரை.) அறிவினாலும் நீதியினாலும் சத்தியத்தினாலும் ஆலோசனையினாலும் அழகினாலும் ஒப்பு வேறில்லாத கல்வியினாலும் பெருமையினாலும் பொருள் மிகுதியினாலும் அழியாமல் பழமையாகிய நால்வகை யரண்களையுடைமையினாலும் வீரத்தினாலும், வெற்றிபொருந்திய வேலாயுதத்தைப் பகைவர்கள் தங்கள்மேலெறிய அதனால் காயத்துக்குப் பயப்படாத சமுத்திரம் போன்ற சேனைகளை யுடைமையினாலும் புகழினாலும். எ - று. நால்வகை அரண்களாவன - மதிலரண் அகழரண் மலையரண் காடரண். (௬)

மற்றுமின்னனதருமிறைமாட்சியின்மலிவிற்
கொற்றவேந்தரினவனியினிகரிலாக்குரிசில்
பற்றலார்கள்வந்தடிதொழநானிலம்பரித்தாங்
குற்றநாளினிலவன்பகையாகியவுரவோர்.

(இ - புரை.) முன்சொன்னவைகளுமல்லாமல் இவைகள்போல இன்னமும் விசேஷ குணங்களமைந்த அரசக்குரிய பெருமையின் மிகுதியினல் செயம்பெற்றிருக்கும் வேந்தர்களுக்குள் இந்த வுலகத்தில் ஒப்பில்லாத வானய்விளங்கும் இவ்வரசன், பகைமன்னர் வந்து தன்பாதத்தை வணங்கும்படித் தன்தேசத்தை யாண்டுகொண்டிருக்குநாளில், அவனுடையபகைவர்களாகிய பலமுள்ள வேந்தர்கள். எ - று. (எ)

விண்டலம்புகழ்சாலுவதேசத்தின்வேந்தர்
கொண்டலன்னதுன்மருடணன்முதலியோர்குழாங்கொண்
டெண்டிசாமுகந்தூளியின்மறைந்திடவெழுந்து
மண்டுதானையாற்சத்தியாதனன்பதிவளைத்தார்.

(இ - புரை.) தேவலோகத்தாரும் புகழத்தக்க பெருமையுள்ள சாலுவதேசத் தரசர்களாகிய மேகத்தையொத்த துன்மருஷணன் முதலானவர்கள் கூட்டமாகச் சேர்ந்து, அஷ்டதிக்குகளும் தூளியினுல் மறையும்படி எதிர்சென்று நெருங்கிய நால்வகைச் சேனைகளால் சத்தியாதனனுடைய நகரத்தை வளைந்து கொண்டார்கள். எ - று. (அ)

முகையுடைந்துதார்மதுமழைபிலிற்றிடமுல்லை
நகைமடந்தையர்முலைபொருநலந்திகழ்மார்பன்
பகைஞர்வந்துதன்பதிவளைந்தனரெனப்பகரு
மிகையடைந்தசொற்கேட்டலுநக்கிவைவிளம்பும்.

(இ - புரை.) அரும்புகள் முருக்கவிழ்ந்துதேன்மழை பொழியும்படியாக, முல்லையரும்புகளை யொத்த தந்தபந்திகளுடைய மாதர்தனங்கள் பொருந்தத்தக்க பூமாலையணிந்திருக்கும் அழகமைந்த மார்பையுடைய சத்தியாதன மகாராஜன், பகைவர்கள்வந்து தன்னகரத்தை வளைந்துகொண்டார்களென்கிற குற்றம்பொருந்திய சொல்லைக்கேட்டமாத்திரத்தில் நகைத்துக்கொண்டு இந்தவார்த்தைகளைச் சொன்னன். எ - று. மிகையடைந்தசொல் என்றமையால் இதுவரையும் கேளாதசொல் என்பதும் பொருள். நகுதல் - சிரித்தல். (கூ)

மன்றறங்கியமாலைவேற்றுணைமாற்றரசர்
வென்றியம்புயத்தருக்குமென்றடம்புயவிறலும்

இன்றுகாண்குவன்கடற்படையெழுகெனவியம்பித்
துன்றுதாரவனேறினன்சுடர்மணிநெடுந்தேர்,

(இ - புரை.) வாசனைதங்கிய மாலையணிந்த வேலாயுதத்தை யுடைய பகைமன்னவர் வெற்றிபொருந்திய அழகிய] புஜவீரப்பையும் என்னுடைய பெரிய புஜபலத்தையும் இன்றறிகிறேனென்று, சமுத்திரம்போன்ற சேனைகளைப் புறப்படச்சொல்லி நெருங்கிய பூமாலையணிந்த அவ்வரசன் பிரகாசியாநின்ற தனது பெரிய தேரிலேறினன், எ - று. (௯0)

இருவர்தம்பெருஞ்சேனையுமேற்றெதிரிகலிப்
பொருகளந்தனின்விளைந்தபோரமலையிறபுழுங்கிக்
கருவழிந்துருமுதிர்ந்தனகார்க்குலமென்றாற்
பரவைமாநிலம்வெருவருந்தன்மையார்பகர்வார்.

(இ - புரை) (சத்தியாதனராசன் போர்க்களத்திற் சென்றவுடன்) இருவர்சேனைகளும் எதிர்த்துப் பகைகொண்டு யுத்தஞ்செய்யும் போர்க்களத்தில் உண்டாகிய பெரிய ஓசையினால், மேகங்களும் பயந்து கருவழிந்து இடிகளைக் கக்கினவென்றால், சமுத்திரம்வளைந்த இவ்வுலகத்தார்பயமுற்றதன்மையினைத் தெரிந்து சொல்லுகின்றவர்கள் யாவர்; (ஒருவருமில்லை.) எ - று. அமலை - சத்தம். (௯௧)

நிணநெடும்படைதாக்கலினெடுங்குடர்சரிந்து
மணமலிந்ததாரசிரம்புயமணிகரந்துணிந்து
பிணம்விழுந்தவக்களவயிற்றுணங்கைப்பேயுடனைக்
கணமெழுந்துநின்றாடினவெண்ணிலாக்கவந்தம்.

(இ - புரை.) பகைவர் நிணங்கள் பொருந்திய பெரிய ஆயுதங்கள் படுகிறதினால் நெடியகுடர்கள் சரிந்து, வாசனைதங்கிய மாலையணிந்திருக்கும் சிலதலைகளும் புஜங்களும் அழகியகைகளும் அறுபட்டு, பிணங்கள் விழுந்த அந்தப் போர்க்களத்திற் கைகோத்துக்கொண்டாடுகின்ற பேய்களுடன் அப்பொழுதே அளவில்லாத கவந்தங்களும் எழுந்து நின்றாடின. எ - று. கவந்தம்-சிரமற்றவுடல். (௯௨)

வினையமெண்ணுறுமந்திரத்தலைவரும்விரைத்தார்
புனையுந்திண்புயச்சேனைக்காவலரும்விண்புகுந்தார்
இனையபூசலிற்றுன்மருடணன்கொலவிறந்தான்
வனையும்வார்கழற்சத்தியாதனனெனுமறவோன்,

(இ - புரை.) (இப்படியாக நடக்கும்போர்க்களத்தில்) சூழ்ச்சிமிக்கமந்திரிகளும், வாசனையுள்ள வெற்றிமாலையணியும் புசங்களையுடைய சேனாதிபதிகளும், இறந்துவீரசொர்க்கஞ் சேர்ந்தார்கள். அத்தன்மையுள்ள யுத்தத்தில் நீண்ட வீரகண்டை யணிந்திருக்கும் சத்தியாதனனென்னும் அரசன் துன்மருஷணனாற் கொல்லப்பட்டிறந்தான். எ - று. (கங)

(வேறு.)

வென்றவேந்தர்தம்மணியைவிளித்துமாய்ந்தோன்வியன்பதியை
இன்றுகொண்டுகூட்டுண்மினென்னும்வெஞ்சொற்பொறான்போலக்
கன்றுசிந்தைக்கதிரவனுங்காயுங்கதிரையறச்சுருக்கிக்
குன்றினின்றுந்தேரோடுங்குடபாற்கடலிற்குப்புற்றான்.

(இ - புரை.) இவ்வாறு செயம்பெற்ற அரசர்கள் தம்முடையசேனைகளை அழைத்து, இறந்துபோன சத்தியாதனனுடைய பெரியநகரத்தைக் கொள்ளை கொள்ளுங்கள் என்றுசொல்லியதுகேட்டுச் சகிக்காதமனத்தன்போலச் சூரியன்காய்கின்ற தன்னுடைய கிரணங்கள்முழுவதுஞ் சுருக்கிக்கொண்டு, உதயகிரியினின்று தேருடன் மேற்குச்சமுத்திரத்திற் குதித்துவிட்டான். எ - று. சூரியதேவன் மேற்குச்சமுத்திரத்தில் குதித்தானெனறதாற் பகற்பொழுது போயிற்றென்பது தாற்பரியம். (கச)

கங்குல்வந்துபுகுமளவிற்கருதார்சேனைபதிபுகுத
மங்குபோர்சசத்தியாதனன்றன்மனைவிசதியாமடநல்லாள்
அங்கைகொண்டுவயிற்றெற்றியந்தோவினையேனெனவரற்றிப்
பொங்குமிருளிற்றமியளாய்க்காந்துகுடபாற்போயினள்.

(இ - புரை.) இராக்காலம் வந்தவளவில் நகரத்தைக் கொள்ளையிடும்படி அந்தச்சேனைகள் பிரவேசிக்க, அதையறிந்த போரில் இறந்துபோன சத்தியாதனன் மனைவியாகிய சதியென்னும் பெயருள்ள மாதானவள், இரண்டுகைகளினாலுந்தன்வயிற்றிலெற்றிக்கொண்டு, அந்தோ! பாவியானேனென்றழுது, அந்த இராப்பொழுதில் துணையின்றி தனியளாய் யாருமறியாதபடி மேற்குத்திசை நோக்கிப் போய்விட்டாள். எ - று. (கரு)

துன்பந்துணையையன்றிமற்றோர்துணையொன்றயலிற்காணாதாள்
அன்பிற்சேவற்றுணையிழந்தவன்றிற்பெடைபோலழுதிரங்கி
வன்பிற்செலவுங்கருமுதிர்ந்தவருத்தமுறலானடைமாய்ந்து
முன்புற்றறியாநெடுங்கானவாவிக்கரையைமுடுகினாள்.

(இ - புரை.) மேற்குத்திசை நோக்கிப்போனவள் துன்பமாகிய துணையேயல்லது வேறொருவரைத் துணையாக அயலிற்காணாதவளாய், அன்பினையு

டைய ஆணன்றிலைப்பிரிந்தபெட்டையன்றில்அழுவதுபோல அழுதிரங்கி, நடக்கமாட்டாமல் நடந்துபோகவும், கருப்பமுதிர்ந்த வருத்தத்தை யடைவதினால் நடைதள்ளாடினவளாய் ஒருக்காலுஞ் சென்றுகண்டறியாத பெரியகாட்டிலிருக்கும் ஒருதடாகத்தின் கரையிற்சேர்ந்தாள். எ - று. (கசு)

வேறு.

நல்வினை தணக்குமாறுந் தீவினை நணுகுமாறு
மொல்லையினுறுவதென்னு லுணருமென் றறிவிப்பாள்போற்
பல்லியந்துவைக்கமுன்றில்விழாக்களிபகலிற்றுய்த்தா
ளல்லினிற்றமியளாகியணங்குறைவனத்தளானாள்.

(இ - புரை.) நல்வினைப் பயன் நீங்கு முறைமையும் தீவினைப் பயன் சேருமுறைமையும் விரைவாகப்பொருந்துவதையென்னால் அறிந்துகொள்ளுங்களென்றுதெரிவிக்கின்றவள்போல,பலவாத்தியங்கள் சத்திக்கும்படித் தன் அந்தப்புரத்தினிடத்தில் நடக்கும் சிறப்புகளைக்கண்டு பகற்பொழுதில் சந்தோஷத்தை யனுபவித்தவள் இவ்விராப்பொழுதில் தனிமையானவளாய் வனதேவதைகள் வாசஞ்செய்யத்தக்க காட்டிலிருப்பவளானாள். எ - று. அணங்கு - தெய்வம், ஈங்குவன தெய்வம். (கஎ)

ஏற்றியவருத்தத்தாலுமெழுச்சியினடையினாலு
முற்றியகருப்பமேன்மேல்வேதனைமுதிர்ந்துகாட்டப்
பெற்றனளென்பமன்றோபெரும்பகைபிழைத்துச்செற்ற
கொற்றவர்க்கிடந்துடிப்பக்குமரனைக்கொலைவேற்கண்ணாள்.

(இ - புரை.) பகைவரைக் கொலைசெய்யத்தக்க வேல்போன்ற கண்களையுடைய அந்த ராசஸ்திரீயானவள் தனியாகக் காட்டிற் போனவுடன் புருஷனிறந்தபோது மோதிவருந்திய வருத்தத்தினாலும், வழிநடந்த வருத்தத்தினாலும், முதிர்ந்த கருப்பமானது அதி வேதனையைக்காட்ட, பகைகொண்டு போர்செய்துவென்ற அரசர்களுக்கு இடத்தோளும் இடக்கண்ணும் துடிக்கும்படி ஒருபுத்திரனைப்பெற்றாள். எ - று. இடத்தோளும் இடக்கண்ணுந் துடிப்பது இன்னலைக்காட்டு மோர்குறியாம். (கஅ)

அருமைநறிநீந்தலானுமரசனைத்தணத்தலானுந்
திருமகன்றன்னையீன்றவேதனைத்தியக்கத்தானும்
ஒருமகளுண்ணுநீர்வேட்டோடையினிறங்கலோடுங்
கருநிறக்கொடியசீற்றக்கராமுயிர்கவர்ந்ததன்றே.

(இ - புரை.) அருமையான வழியைக்கடந்து வந்ததினாலும், தன்கணவனாகிய அரசனை யிழந்ததினாலும், சிறந்த புத்திரனை யீன்ற உபத்திரவத்தின்

மய்க்கத்தினுலும், ஒப்பற்ற அந்த ராசஸ்திரீயானவள் நீருண்ணவிரும்பி ஒரு நீரோடையி லிறங்கினமாத்திரத்தில் கரியநிறமுள்ள கொடியதாகிய கோபங் கொண்ட முதலேயானது அவளுயிரை வாங்கிக்கொண்டது. எ - று. ஏகாரம் அசை. (கக)

உதிரமுநிணமுமுண்டகராமுளேயுழையிற்போக
அதிரகடலவனியாளவவதரித்தானைக்காண்பான்
கதிரவன்றாதைபோலக்கதுமெனக்கடலின்வந்தான்
மதலேயைபுரப்பாரின்றிவாய்திறந்தாற்றுங்காலே.

(இ - புரை.) அவளுடைய உதிரத்தையும் மாமிசத்தையுமுண்ட முதலே யானது சேற்றினிடத்திற் போக; ஒலிக்காநின்ற சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத் தையாள்வதற்காகப் பிறந்த புத்திரனைக்காண அவன் பிதாவந்ததுபோலச் சூரி யன் கடலினிடத்தி லுதயஞ்செய்தான். அந்தக்குழந்தையை ஆதரிப்பவர்க ளில்லாமல் வாய்திறந்தழும்போது. எ - று. (உ0)

கமையினுள்கைமையுற்றாள்பார்ப்பனிவறுமைபூண்டா
ளமைவுறுகாதற்றன்சேயாண்டொன்றுபுக்கான்றன்னேச்
சுமையெனமருங்குனின்றுதுவண்டிடக்கையிற்றங்கி
யுமையெனும்பெயரினளவ்வோடையின்றீரமுற்றாள்.

(இ-புரை.) பொறுமையினையுடையவளும், கைம்பெண்தன்மை யடைந்த வளும், தரித்திரமுள்ளவளும், உமையெனும் பெயரையுடையவளுமாகிய ஒரு பிராமணஸ்திரீயானவள், ஆசை பொருந்திய ஒருவருஷத்துக் குழந்தையாகிய தன்புத்திரனை ஒரு பளுவைச் சுமப்பதுபோலாக இடையானது துவளும்படிக் கையிலேந்திக்கொண்டு அந்தத்தடாகத்தின் கரையிற்சேர்ந்தாள். எ - று. (உக)

தாயிழந்தாருமின்றித்தரையினிற்கிடந்துசெய்ய
வாய்திறந்தாற்றுகின்றமதலேயையுற்றுநோக்கிக்
காய்கதிர்க்கடவுள்விம்பங்கடலினின்றுதித்ததேபோ
லேயுமிச்சேயையீன்றாள்யாவளோவென்றுதேர்வாள்.

(இ - புரை.) தாயையிழந்து வேறொருவரு மில்லாமல் மண்ணிற்கிடந்து சிவந்த வாயைத்திறந்து அழுகிறகுழந்தையின் சமீபத்திற்போய்ப்பார்த்துச் சூரி யதேவன் சமுத்திரத்தினின்றும் உதயமானதுபோலத் தேஜசுபொருந்திய இந் தக்குழந்தையைப் பெற்றவள் எவளோவென்று யோசிப்பாள். எ-று. (உஉ)

ஆரிளங்குமரனுகவந்தணன்மதலேயாக
விருநிலத்திவரோயன்றியாவரோபெறுதற்பாலார்

நிரைவளைபுனிற்றிளுண் மற்றியாண்டையாய்நின்றுண்மைந்தன்
புரிகொடிநாபியின்னுமறுத்திலாள்புகுந்ததென்னே.

(இ - புரை.) (இந்தப்பிள்ளை) இராசகுமாரனாகவேண்டும், அல்லதுபிராமணப் பிள்ளையாகவேண்டும், பெரிய இந்தவுலகத்தில் மேற்சொல்லிய வருணத்தாரல்லாமல் இப்படிக்கொத்த அழகுள்ள பிள்ளையை மற்ற எவர்கள் பெறுந்தன்மையை யுடையவர்கள்; இதைப்பெற்றவள் எவ்விடத்திலிருக்கின்றளோ? இந்தக்குழந்தையின் கட்டுப்பட்டிருக்கும் கொப்பூழ்க்கொடியை இன்னமும் அறுக்காதவளா யிருந்தாளே மத்தியில் என்னசம்பவித்ததோ? எ - று. (உ௩)

என்னிளங்குழவிக்கின்ஞெனிளவலாயின்பாலூட்டி
மன்னியகாதல்கூரவளர்ப்பனோவென்னவெண்ணு
மன்னியவருணத்தானேலந்தணர்க்கடாதேயென்னுந்
தன்னிளங்குமரனோடுதராபதிமகவைப்பார்க்கும்.

(இ-புரை.) என்னுடைய இளங்குழந்தைக்கு இவன்தம்பியாக இனியபாலூட்டி நிலையான ஆசைமிகுதியாகும்படி வளர்ப்பேனோவென்று எண்ணுவாள்; மேற்சொல்லிய இரண்டு வருணமுமில்லாமல் அன்னியகுலத்துப் பிள்ளையானல் இவ்வெண்ணம் நமது குலத்துக்குத் தகாதே யென்றெண்ணுவாள்; தன்னுடைய புத்திரனோடு இராசகுமாரனைப் பார்ப்பாள். எ - று. (உ௪)

இத்திறமையமெய்தியிடைந்திவணிற்கும்வேலை
சத்திரங்கரகங்கொண்டோர்தவமுனியோடைசார்ந்து
புத்திரசோகமுற்றுப்பொன்னனைணின்றவாறு
முத்தமக்குமரன்வந்தவரவையுமுளத்திஞேர்ந்தான்.

(இ - புரை.) இப்படியாகச் சந்தேகத்தைப் பொருந்தி யிவளிடைந்து நிற்கும்போது, ஒருகையிற் குடையும் மற்றொருகையிற் கமண்டலமுமுடையவராய் ஒருருஷியானவர் அந்தமடுவினிடத்தில்வந்து,புத்திரசோகத்தையடைந்து இலக்குமிபோன்ற அழகுள்ள அந்த பிராமணஸ்திரீயானவள் நிற்கும் தன்மையையும் நன்மையுள்ள இராசகுமாரன் பிறந்தவகையையும் தமதுமனதில் ஞானதிருஷ்டியினால் அறிந்தார். எ - று. (உ௫)

(வேறு.)

ஐயமெய்தியவந்தணமாதுகே
டுய்யவோரைபிற்றேன்றியதோன்றலை
மையலின்றிமருவிவளர்த்திடி
னுய்யுமுங்கள்குலமுமுலகுமே.

(இ - புரை.) சந்தேகப்பட்டுக்கொண்டிருக்கும் பிராமணமாதே! கேட்பாயாக. சுபவோரையிற் பிறந்த இந்தராசபுத்திரனைச் சந்தேகமில்லாமல் விரும்பி நீவளர்த்தால், உங்கள் குலமும் இந்தவுலகமும் உய்தலடையும். எ - று. (உசு)

என்னமாமுனிகூறலுமேந்திழை
மன்னுமாநிதிபோலுமகவுட
னின்னறீரவெடுத்துக்கொண்டேகினள்
மன்னர்மன்னன்மகனைமற்றென்பவே.

(இ-புரை.) இப்படியாக அந்தமுனிவர் சொல்லலும், அதைக்கேட்ட பிராமணஸ்திரீயானவள், நிலையான பெரிய நிதியொத்த தன்பிள்ளையுடன் சத்தியாதனன் புத்திரனைத் துன்பந்தீரும்படி யெடுத்துக்கொண்டு போனாள். எ - று.

மற்று என்ப அசைகள். (உஎ)

போதலுற்றபுரிகுழற்பார்ப்பனி
மாகமுட்டியமாளிகைவான்றலை
மேகமுற்றுவிழைவுடன்கண்படு
மேகசக்கரமாநகரெய்தினள்.

(இ-புரை.) இராசகுமாரனை யெடுத்துக்கொண்டு செல்கின்ற கடைகுழைந்த அளகத்தையுடைய பிராமணஸ்திரீயானவள், ஆகாயத்தையளாவிய மாளிகைகளின் பெரியசிகரங்களில் மேகங்கள்வந்து சந்தோஷத்துட னித்திரைசெய்யும்படியான ஏகசக்கிரமென்னும் பெயரையுடைய நகரத்திற்போனாள். எ-று.

"தாதுலராதகோதை" எனத் திருவிளையாடற்புராணத்துள் அமங்கலிக்கு ஆண்டிருப்பதுபோல, ஈண்டும் புரிகுழல் என ஆண்டது வாளா பெயராகக் கொண்டதெனக்கொள்க. (உஅ)

ஈண்டுநல்குரவாற்பலியேற்றுண்டு
மாண்டசெல்வமகவிருவோரையும்
ஆண்டுநன்சிறப்பால்வளர்த்தாக்கினள்
பூண்டவேதமுந்நூலும்புனைவித்தே.

(இ-புரை.) ஏகசக்கர புரத்துக்குப்போன அந்தப்பிராமணஸ்திரீயானவள் பொருந்திய வறுமையினால் அந்நகரத்தில் பிக்ஷை யெடுத்துண்டு, மாட்சிமைபொருந்திய செல்வம் அடையத்தக்க இரண்டு பிள்ளைகளையும் மிகுந்தசிறப்புடன் வளர்த்து, உபநயன கல்யாணஞ்செய்வித்து விதிவிலக்குகளைச் சொல்லுந்தன்மையுள்ள வேதமுமோதுவித்து. எ-று. (உகூ)

மக்களோரிருவோருமறையவர்
புக்கிறேறுஞ்சென்றேற்றிடும்போனகந்
தக்கதாயுடனுண்டுசதுர்மறை
யொக்கவேதியர்தம்மொடுமோதினர்.

(இ - புரை) அந்தப்பிள்ளைக ளிருவர்களும் பிராமணர்கள் வீடுகள்தோறுஞ்சென்று, பிக்ஷையெடுத்துக்கொண்டு வருகிற அன்னத்தைக் கற்புள்ள தாயுந்தாங்களுமுண்டு, நான்குவேதங்களையும் ஒருங்கேபிராமணப்பிள்ளைகளுடன் அத்தியயனஞ் செய்துவந்தார்கள். எ - று. (௯0)

அரியவேதமுமங்கமும்விற்படைக்
குரியகல்விமுதலவுலகினின்
விரியுமெண்ணெண்கலையின்விகற்பமுங்
கரியமாலும்பின்னேனுமெனக்கற்றார்.

(இ - புரை.) அருமையாகிய வேதங்களும் ஆறங்கங்களும் வில்லாதியான ஆயுதப்பயிற்சிக்குரிய கல்வியும், இவைமுதலாக உலகத்திற்பரந்த அறுபத்துநான்கு கலைகளின் விகற்பங்களும், இராம லட்சுமணர்கள் போலக் கற்றார்கள். எ - று.

வேதாங்கமாவன:—மந்திரம் வியாகரணம் நிகண்டு சந்தோபிசிதம் நிருத்தம் சோதிடம் என்பவைகளாம். அறுபத்துநான்கு கலைகளாவன:—அக்ஷரலக்ஷணம் லிகிதம் கணிதம் புராணம் வேதம் வியாகரணம் நீதிசாஸ்திரம் சோதிடசாஸ்திரம் தருமசாஸ்திரம் யோகசாஸ்திரம் மந்திரசாஸ்திரம் சகுனசாஸ்திரம் சிற்பசாஸ்திரம் கனகபரிக்ஷை இரதபரிக்ஷை கஜபரிக்ஷை அசுவபரிக்ஷை வைத்தியசாஸ்திரம் உருவசாஸ்திரம் இதியாசம் காவியம் அலங்காரம் மதுரபாடணம் நாடகம் நிருத்தம் சத்தப்பிரமம் வீணை புள்ளாங்குழல் மிருதங்கம் தாளம் அஸ்திரபரிக்ஷை இரத்தினபரிக்ஷை பூமிபரிக்ஷை சங்கிராமவிலக்கணம் மல்லயுத்தம் ஆக்ருஷணம் உச்சாடணம் வித்துவேஷணம் மதனகாத்திரம் மோகனம் வசிகரணம் இரசவாதம் காந்தருவவாதம் பைபீலவாதம் கவுத்துகவாதம் தாதுவாதம் காருடம் நஷ்டம் முஷ்டி ஆகாயப்பிரவேசம் ஆகாயகமனம் பரகாயப்பிரவேசம் அதரிசியம் இந்திரசாலம் மகேந்திரசாலம் அக்கினிஸ்தம்பம் சலஸ்தம்பம் வாயுஸ்தம்பம் திடஸ்தம்பம் வாக்குஸ்தம்பம் சுக்கிலஸ்தம்பம் கன்னஸ்தம்பம் கட்கஸ்தம்பம் அவஸ்தைப்பிரயோகம் என்பவைகளாம். (௯௧)

(வேறு.)

இவ்வாறுமைந்தர்வளர்கின்றகாலையிவரோடுமன்னையுமைபோய்
மைவாரணத்தினுரியாளர்கோயில்வழிபாடுசெய்துவருநாட்

சைவாகமத்தினெறிநன்றுணர்ந்தசாண்டில்லியனென்னுமுனிவன்
செவ்வாய்மலர்ந்துவுமையோடுவந்தருளத்தெருட்டல்புரிவான்.

(இ - புரை.) இவ்வாறு அந்த இரண்டுபுத்திரர்களும் வளர்கின்றகாலத்தில், இவர்களுடன் தாயாகிய உமையென்பவள் கறுத்தயானைத்தோல் போர்த்த பரமசிவனுடைய ஆலயத்திற்குப்போய் வந்தனை வழிபாடுசெய்து வருகிற நாளில், ஒருநாள் சைவாகமங்களைப் பழுதறவுணர்ந்த சாண்டில்லிய னென்கிற ஒருமுனிவர் மகிழ்ச்சியுடன் உமையென்பவளிடத்தில் வந்து அவளுக்குத் தெரியும்படித் திருவாய்மலர்ந்து சொல்லுகின்றார். எ - று. (௩உ)

அந்தோசிவன்றன்விளையாடல்யாவுமரியாதிதேவரறியார்
மைந்தோரிலிந்தவிளையானுனக்குமகவாகிவந்தசெயலை
நந்தாதுரைக்கமுடியாததென்றுநவிலாமுனங்கைபணியா
முந்தாவெனக்குண்மகிழத்தெரித்திமுறையாயென்மைந்தன்வரவே.

(இபுரை.) உமையென்பவளே! பரமசிவனுடைய திருவிளையாடலை யெல்லாம்விஷ்ணுமுதலாகிய தேவர்களு மறியமாட்டார்கள்; இந்தப்புத்திரர்களில் இளையவன் உனக்குப்புத்திரனாகி வந்தசெய்கையை விவரித்துச்சொல்ல முடியாதென்று சொல்வதற்குமுன் அவள்வணங்கி, பெரியோரே! மனமகிழ்ச்சியுண்டாகும்படி இளையபுத்திரனுற்பத்தியை முறைமையாக எனக்கருளிச்செய்யவேண்டுமென்றாள். எ - று. மைந்தர் என்னுஞ்சொல் ஈண்டு மைந்தோரெனநின்றது. வந்தோரில் என்றும பாடம். (௩௩)

(வேறு.)

என்னுமுமைக்குமாமுனிவனிசைத்தானிந்தமாமதலை
தன்னையீன்றதாதைபெயர்சத்தியாதனனுந்தார்வேந்தன்
மன்னர்மன்னன்வைதர்ப்பநாடனவன்போர்மருவலராற்
கன்னியமரினுயிரிழந்தான்மனைவிசதியுங்கானடைந்தாள்.

(வேறு.)

(இ-புரை.) இளையபுத்திரன் உற்பத்தியைச் சொல்லவேண்டுமென்றுகேட்ட உமையென்பவளுக்குப் பெருமைபொருந்திய முனிவர் சொல்லுகின்றார்; இந்தப் புத்திரனைப்பெற்ற தகப்பன்பெயர் சத்தியாதனனென்பார்கள். (அவன் என்னவருணத்தா னென்றால் மாலையணிந்திருக்கும் அரசனாகிய க்ஷத்திரிய வருணத்தான்;) அரசர்களெல்லார்க்கும் அரசனாயிருப்பவன், வைதர்ப்பதேசத்தையுடையவன், இத்தன்மையனானவன் வலியபோர்செய்கின்ற பகைவரால் அழிவில்லாத யுத்தகளத்தில் உயிர்விட்டிறந்தான்; அதையறிந்த அவன்மனைவியாகிய சதியென்பவள் பகைவர்க்கு அஞ்சித் தன்கற்பினைக் காத்துக்கொள்ளும்படிக் காட்டிற்போய்விட்டாள். எ - று. (௩௪)

அடைந்தவனத்தினிம்மகவையரிதினீன்றவருத்தத்தாற்
குடைந்துநீருண்பதுவேட்டுவாவியிடத்திற்குறுகுங்கான்
மிடைந்துவன்மீனுயிர்கவரவீந்தாள்பாலன்றனித்தழுதா
னுடைந்தகுரல்கேட்டுன்மகவாயெடுத்துவளர்த்தாயெனவுரைத்தான்.

(இ - புரை.) அப்படியாகச் சென்றவனத்திற் சதியென்பவள் இந்தப் புத்திரனை யரிதாகப்பெற்ற வருத்தத்தினால், சரீரத்தைச் சுத்தி செய்துகொண்டு நீருண்ணவேண்டு மென்கிற விருப்பமுற்று ஒரு தடாகத்தினிடத்தில் போன போது, அதிலிருந்த ஒருமுதலையானதுவிழுங்க உயிரிழந்தாள்; பிறந்தபுத்திரன் யாரும் ஆதரவில்லாமற் றனியாயழுது கொண்டிருந்தான்; நீ அவனழுங் குரலைக் கேட்டுப் போயெடுத்துவந்து உன்புத்திரனாக வளர்த்தாயென்று சொல்லியருளினார். எ - று. வன்மீன் - முதலை. (௩௫)

கேட்டவுமையுமிறும்பூதுகிளரவிந்தமகவீன்றோன்
வாட்டமிலனாயரசாட்சிவரும்போகத்தைநுகர்போதிற்
றோட்டுமமருளவனாவியொன்னார்தொலைக்கத்தொலைந்ததுவும்
காட்டினடைந்துமிவனன்னைகராவாலிறந்தகாரணமும்.

(இ - புரை.) தன் இளையபுத்திரன் உற்பத்தியைச் சாண்டில்லிய முனிவர் சொல்லக்கேட்ட உமையென்னும் பிராமண ஸ்திரீயானவள் மிகுந்த ஆச்சரியமடைந்து, (அந்த முனிவரைப்பார்த்துப் பின்னுங் கேட்கின்றாள்; ஐயரோ!) இந்தப்புத்திரனைப்பெற்ற வரசன் மனவாட்ட மில்லாதவனாய் அரசாட்சியினால் வருகிற போகங்களை அனுபவித்துக் கொண்டிருக்குங்காலத்தில், கூட்டமாகக் கூடிய போர்க்களத்தில் பகைவர்கள் யுத்தஞ்செய்து கொல்ல அவனுயிரிழந்த காரணமும், இந்தப்புத்திரனுக்குத் தாயானவள் நம்முடையகணவன் இல்லாத நகரத்திலிருந்தால் ஏதாவது அபாயம் நேரிடுமென்று காட்டிற்சென்று முதலையினால் உயிரிழந்த காரணமும், எ - று. (௩௬)

மந்தமறையின்சேய்வறுமையகன்றுவாழ்வதென்றெனவு
முந்தைவைகன்மறைமுனிவன்மொழியாற்றெளிந்துவளர்த்தேற்குச்
சிந்தைமகிழவருந்தவனேசெப்புகென்றாள்செப்புவான்.

(இ - ள்.) இந்தக் குழந்தை எக்காலத்தில் அரசுரிமை எய்துவானென்றும், இப்பிராமணச்சிறுவன் வறுமையினின்று எப்போது விலகுவானென்றும், நான் முன் காட்டிற்சென்றபோது ஒரு முனிவரைக் கேட்டுத்தெளிந்து, வளர்த்துவந்தனன். இவ்வரலாறுடைய எனக்கு, மேற்கூறிய காரணங்களை மொழியவேண்டுமென்று விண்ணப்பித்துக்கொள்ள; சாண்டில்லியமுனிவர் கூறுவா

ராயினர். எ - று. மேற்செய்யுளிற்கூறிய காரணமும் என்பது, இங்கு செப்பு கென்றாள் என்பதைக்கொண்டு முடிந்தது. (௩௭)

காளையிவன்றன் றாதைமுனங்கழிந்தபவத்திற்கைதவர்கோன்
பாளைவிரிந்துமணங்கமழுமதுராபுரிக்குப்பார்த்திபனாய்
வாளைமுனிந்துகடைசிவந்தவரிக்கண்மடவார்மாரனெனத்
தாளைவணங்கார்முடிவணங்கத்தருமச்செங்கோற்செலுத்தினான்.

(இ - பொ.) உமையே! நீகேட்ட இரண்டுகாரணமுஞ் சொல்லுகிறேன் கேட்பாயாக. இந்தஇளையபுத்திரனுடைய பிதாவானவன் முற்பிறப்பில் பாண்டியராசன்; பாளைகள்விரிந்து வாசனைவீசும்படியான வளப்பத்தையுடைய மதுராபுரிக்குஅரசனாகியும், வாளாயுதத்தைக் கோபித்துக் கடைசிவந்து செவ்வரிபரந்த கண்களையுடைய மாதர்களுக்கு மன்மதனபோல அழகுள்ளவனாகியும், தன் தாளைவணங்கார்களான பகைவர்களும்தங்கள் முடியினால் தன்பாதத்தைவணங்கத்தக்கதாகத் தருமநெறியில் வழுவாமல் செங்கோற் செலுத்திக் கொண்டிருந்தான். எ - று. கைதவர் - பாண்டியர். (௩௮)

ஈசனெண்ணெண்விளையாட்டுமியற்றினோனங்கயற்கண்ணி
நேசன்றொண்டுபூண்டுசிவநேசநிசியின்முகந்தோறும
வாசவன்போல்வழிபட்டுவருபன்னாளிலொருநான்று
பேசுபதின்மூன்றாந்தினம்வந்தெதிர்ந்ததற்றைப்பிரதோடத்தின்.

(இ - பொ.) ஈசுவரரும் அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்தருளினவரும் அங்கயற் கண்ணியார் மணவாளருமாகிய சோமசுந்தரக் கடவுளுக்கு நேசனாகி அடிமைபூண்டு, பரமசிவன் விருப்பமுறத்தக்க பிரதோஷகாலந்தோறும், தேவேந்திரன் பூசைசெய்ததுபோலப் பூசைசெய்துகொண்டு வருகின்ற பலநாட்களில் ஒருநாள் திரயோதசிதினம்வந்தது, அந்தத்தினத்திற் பிரதோஷகாலத்தில். எ - று. (௩௯)

ஆலவாயினரன்றன்னையரசன்வழிபட்டலர்தூவும்
வேலைவளவன்முதலபகைவேந்தரமர்க்குமேவினரென்
றோலையோடுதூதர்வரவுவாரீர்க்கடலினொலியெழுந்து
ஞாலம்புகழுந்தமிழ்மதுரைநடுங்கவரசனுருத்தெழுந்தான்.

(இ - பொ.) திருவாலவாயில் வீற்றிராநின்ற சோமசுந்தரக் கடவுளை இந்தப்பாண்டியராசன் ஆராதனைசெய்து மலரால்அருச்சிக்கும்போது,சோழராசன் முதலாகிய பலதேசத்து மன்னவர்கள் பகைகொண்டுபோர்செய்யவந்தார்களென்று தூதர்கள்ஓலைகொண்டுவரவும்,பருவகாலத்துச்சமுத்திரவோசைபோல ஒருபேரோசை யுண்டானதால், பூலோகத்தி லுள்ளவர்கள் புகழும்படியான

தமிழ்வளரும் மதுரையிலிருப்பவர்க ளெல்லாரும் பயந்து நடுங்கவும், இதையறிந்த பாண்டியராசன் கோபித்தெழுந்தான். எ-று. ஒலியெழுந்து வினையெச்சத் திரிபு. (சo)

வேறு.)

கொன்றையங்கண்ணிக்கடவுள்பூசனையுமுடித்திலமென்பதுகுறியான், கன்றியமனத்தன்சேனைகாவலரைக்கதுமெனவம்மின்களென்றுங், குன்றுறழ்மணித்தேர்பண்ணுதிவலவகொணர்திீயென்றென்றுங்கூறிச், சென்றனன்கொழும்பொற்கோயில்வாய்கடந்துவீதிவாய்ச் செல்கின்றவேலை.

(இ - புரை.) கொன்றைப் பூமாலையணிந்த பரமசிவனுடைய பூசனையை முடித்திலோ மென்பதையுங் கருதாதவனாய், கொதிப்புள்ளமனத்துடன் சேனாதிபதிகளைப்பார்த்து நீங்கள் சேனைகளைக் கூட்டிக்கொண்டு விரைவாக வாருங்களென்றும், தேர்ச்சாரதியே நீமலைபோலும் தேரைப்பூட்டிக்கொண்டு வருவாயென்றும், சொல்லிப்புறப்பட்டுச் செழுமையுள்ள பொன்னாற்செய்யப்பட்ட தன் ஆசாரவாசல் கடந்து வீதியினிடத்திற் செல்லும்போது. எ-று. (சக)

மந்திரக்கிழவன்மாபெலவேந்தன்வரதனைப்பூசனைபுரிதல், சிந்தையினெண்ணிநாற்படைசூழச்சேனைகாவலரொடுஞ்சென்று, தந்திரமிரியப்பொருது செம்பியனைத்தருக்கறப்பிணித்தனன்கொணர்ந்து, செந்தமிழ்மாறன் றிருமுனம்விடலுஞ்செழியர்கோனவாளினாற்றடிந்தான்.

(இ - புரை.) (இவ்வரசன் சிவபூசையையும் மத்தியில் நிறுத்திவிட்டு யுத்தஞ்செய்யப்புறப்பட்டது தெரியாமல்) அவனுடைய மந்திரியானவன் வலிய அரசன் சிவபூசைசெய்துகொண் டிருப்பதை மனதில் நினைந்து, அதற்கு விக்கினம் வராதபடித் தானே நால்வகைச் சேனைகளுஞ் சூழ்ந்துவரப் படைத்தலைவர்களோடும்போய், பகைவருடைய சேனைகளெல்லாம் ஓடும்படிப் போர்செய்து, சோழராசனை இறுமாப்புகெடக் கட்டிக்கொண்டுவந்து, செவ்விய தமிழை விருத்திசெய்த பாண்டியனெதிரில்விடவும், அவ்வரசனைத் தன்வாளினாற் கொன்றான் எ - று. தந்திரம் - படை. (சஉ)

அடையலர்ச்செருத்தசெருக்கினாற்றென்னனாலவாயரன்றிருப்பூசை, யிடையினிற்றணந்தேமுடித்திலமென்பதெண்ணிலனெல்லியினையினி, மடைவளஞ்சுரப்பவருந்தினனந்தமடமையான்மறுமையிற்போகங், கடைசெலவருந்தாதிடையினிழலொன்னார்கருவியாற்களத்தினின் மடிந்தான்.

(இ - புரை.) பகைவரைக்கொன்ற இறுமாப்பினால் பாண்டிய ராஜன் திருவாலவாயில் வீற்றிருக்கும் சொக்கநாதர் திருவாராதனையை மத்தியில் நீங்கி நிறைவேற்றவில்லையே யென்பதை நினையாமல், இராப்பொழுதில் சட்டுருசியுங் குறையாமல் வாய்க்கு இனிமையைத்தரத்தக்கதாக அன்னம் உண்டான். அந்த அறியாமையினால் மறுபிறப்பில் பூர்ணாயுசுடனிருந்து போகங்களை அனுபவிக்காமல் அற்பவாயுவாய் பகைவருடைய ஆயுதத்தாற் போர்க்களத்தில் இறந்தான். எ - று. (சங)

அன்றுமிக்குமரனந்தவேல்வழுதிக்கரும்பெறற்குமரனாயுதித்துத், தன்றிருத்தாதைசெய்கைபோற்றானுந்தரியலர்ச்செருத்தனமென்'னும், வென்றியிற்களித்துத்தாதையோடயின்றுவினையெனுன்றுயில்கொடுகழித்தான், றொன்றுபட்டுளவாந்தீமையாலின்னவறுமையாந்துயர்க்கடல்குளித்தான்.

(இ புரை.) அந்தநாளிலு மிந்தப்புத்திரன் வேலாயுதத்தையுடைய அந்தப் பாண்டியனுக்குப் பெறுதற்கரிய புத்திரனாய்ப்பிறந்து, சிறப்புள்ள தன்தகப்பன் செய்கைபோலத் தானும் பகைவரைக்கொன்றேமென்கிற வென்றியால் மமதையடைந்து, தகப்பனுடன் அன்னமருந்தித் தன் குற்றத்தை எண்ணாமல் நித்திரைசெய்து இராப்பொழுதுகழித்தான். இவ்வாறுபழமையாய் வருகின்ற பாவத்தினால் இத்தன்மையுள்ள தரித்திரமாகிய துக்க சமுத்திரத்தில் முழுகினான். எ - று. (சச)

மற்றிவன்றாயுமந்தவாள்வழுதிமனைவியாய்வாழ்முற்பவத்தின்
வெற்றிவேன்மன்னன்பன்னியராயவேறுளமடவியர்க்கெல்லாம்
குற்றமேபுரிந்துதீவிடமருத்திக்கொலைபுரிபாவமேயிவனைப்
பெற்றநாளந்தமுதலைவாய்ப்படுத்திப்பெய்வளையுயிர்கவர்ந்ததுவே.

(இ - புரை.) இவ்வாறு துக்கசாகரத்துள் அழுந்திய இவன் தாயானவளும் வாளாயுதமேந்திய அந்தப்பாண்டியராசன் மனைவியாய் வாழ்ந்துகொண்டிருந்த முற்பிறப்பில், வெற்றி பொருந்திய வேலாயுதத்தையுடைய அவ்வரசன் மனைவியர்களாகிய மற்றுமுள்ள மாதர்களுக் கெல்லாம் குற்றங்களையே செய்து, கொடியதாகிய விஷமிட்டுக் கொலைசெய்த பாவமே இவனைப் பெற்றநாளில் அந்தமுதலைவாயில் அகப்படச்செய்வித்து அவளுடைய பிராணனைக் கவர்ந்துவிட்டது எ - று.

(வேறு.)

ஆதியம்பரமனையருள்ளறிவுடையக
காதலின்முற்பவம்வழிபடாக்கலா

வேதனைவறுமையான்மெலிந்துமிப்பவத்
தேதமோடுபெலியெடுப்பரின்சொலாய்.

(இ - புரை.) இனியசொல்லை யுடையவளே! ஆதியாகிய கிருபைக்கடலாகிய பரமசிவனை முற்பிறப்பில் அன்புடன்பூசைமுற்றச் செய்யாமையால் சம்பவித்த வேதனையைத்தருகின்ற தரித்திரத்தினால் வருந்தியும் இப்பிறப்பில் துன்பத்துடன் பிக்ஷையை யெடுக்கின்றார்கள். எ-று. (சசு)

மல்கியசெல்வமும்வளனுமைந்தரும்
பல்கியகிளைஞரும்பழுக்கவாழுநர்
நல்கியகிரீசனைநாளுநாடியே
யல்கலிற்பவந்தொறுமருச்சித்தேத்தினார்.

(இ - புரை.) நிறைந்தசெல்வமும் வளப்பமும் புத்திரர்களும் மிகுந்த சுற்றத்தாரும் செழித்திருக்கும்படி வாழ்கின்றவர்கள்,மேற்சொல்லியவைகளையெல்லாம் அருளிச்செய்கின்ற கயிலாசபதியை நாடோறு மனதில்தியானஞ்செய்து குறைதலில்லாத ஜென்மங்கடோறும் அருச்சனைசெய்து துதிசெய்யப்பெற்றவர்களாவார்கள். எ - று. (சஎ)

மறையுமங்கமுமாசில்புராணமுஞ்
செறியுமாகமமுன்னின்றுசெப்புமாற்
பொறியினல்வினைபோக்கிமெய்வீட்டின்ப
மறியநல்குமரனடியென்னவே.

(இ-புரை.) அந்தச்சிவபூசையின் பலனானது ஐம்பொறிகளால் அனுபவிக்கத்தக்க தீவினையைநீக்கி, உண்மையாகிய மோக்ஷஇன்பத்தை அறிந்து, ஆனந்தமடையும்படி பரமசிவனுடைய திருவடியைத் தருமென்றுவேதங்களும் வேதாங்கங்களும் குற்றமில்லாத பதினெண்புராணங்களும் பொருந்திய இருபத்தெட்டாகமங்களும் ஒன்றுக்கொன்று மாறுபடாமல் நின்றுசொல்லுகின்றன.எ-று.

சொன்னவிப்பிரதோடத்திற்கித்துணை
மன்னுமான்மியம்யாதெனின்மாதுகேள்
கன்னல்வேளையெரித்தநங்கண்ணுத
லின்னதாயரசனிமுகத்தினே.

(இ - புரை.) சொல்லிய இந்தப்பிரதோஷத்துக்கு நிலைபெற்ற இவ்வளவு மகத்துவம் உண்டான தென்னவென்றால், அந்தணமாதே! சொல்லுகிறேன்

கேள்; கரும்புவில்லையுடைய மன்மதனையெரித்த நெற்றிக்கண்ணையுடைய நம்முடைய பரமசிவன் இத்தன்மையுள்ளதாகிய பிரதோஷகாலத்தில், எ - று.

இரவு. ஈண்டு பிரதோடகாலத்தை யுணர்த்திற்று. (௪௯)

வேறு.

விண்டலமளக்கும்வெள்ளிவேதண்டத்தாதிதன்வியனெடுஞ்சிகரத்
தெண்டிசாமுகமுமிருள்கெடவிமைக்கவெழுந்தபேராலயமன்றின்
அண்டநாயகிகண்டுவந்தெழிலரியாசனத்தினிதுவீற்றிருப்பக்
கொண்டலினிறத்தோன்கொண்டலினுருமிற்குடமுழாக்குடங்கையின்முழக்க

(இ - புரை.) ஆகாயத்தை யளக்கும்படியான கயிலாசகிரியில் விசாலமுள்ளதாய் உயர்ந்திருக்கும் சிகரத்தில், அஷ்டதிக்குகளிலும் இருள்கெடும்படிப் பிரகாசிக்க ஓங்கிய பெரிய ஆலயத்தின்சபையில், பார்வதிதேவியார்நோக்கிச் சந்தோஷித்து அழகுள்ள சிங்காசனத்தில் வீற்றிருக்கவும், விஷ்ணுவானவர் இடிமுழக்கம்போலக் குடமுழா வென்னும் வாத்தியத்தைத் தன்னுடைய அகங்கையினால் முழக்கவும், எ-று. வேதண்டம் - மலை. கொண்டலினிறத்தோனென்றது வாணனுமாம். (௫௦)

தும்புருவோடுநாரதர்பாடப்புரந்தரன்சுதியினிற்கூட்ட
அம்புயமடந்தைதோரியவனிதையாகியேமகரயாழ்நடவ
வம்பணிமுலையிற்கோடுறத்தழுவிமாடகமலர்க்கையான்முறுக்கி
யம்பவளத்தின்வாய்மலர்திறந்துநாமகளமுதப்பாட்டயர.

(இ - புரை.) தும்புருநாரதர்கள் இசைபாடவும், அதைத்தேவேந்திரன் சுதியிற்கூட்டவும், திருமகளானவள் ஒத்துப்பாடுகின்ற மகளிர்போல மகரவீணைவாசிக்கவும், சரஸ்வதி கச்சணிந்த தன்னுடைய தனங்களினிடத்தில் வீணைத்தண்டு பொருந்தும்படி சார்த்திக்கொண்டு செந்தாமரை மலர்போன்ற கையினால் முறுக்காணியைமுறுக்கி, அழகிய பவளத்தையொத்த வாயைத்திறந்து அமுதம்போல மதுரமுள்ள இசைபாடவும், எ - று. (௫௧)

அவனியையீன்றவிரிஞ்சரோர்பதின்மர்க்காதியாஞ்சதுர்முகவிரிஞ்சன்
புவனிவானுலகஞ்செவிசெவிடெறியப்பொற்கரத்தாளத்தைச்சதியிற்
சிவனடனத்துக்கிசையவேதாக்கத்தேவர்களனைவருமேத்தத்
தவளவெண்ணீற்றோனளவில்பல்கோடிதபனரினுருவெடுத்தாடும்.

(இ - புரை.) இப்பூலோகத்தைச் சிருட்டித்த பத்துப் பிரமாக்களுக்கு ஆதியான சதுர்முகப் பிரமதேவன் பூலோகத்தவர்க்கும் தேவலோகத்தவர்க்கும் காதுகள் செவிடுபடும்படி அழகிய கைத்தாளத்தைத் தாளக் கிரமப்படிச்

சிவனுடைய நடனத்துக்கு இசையத்தாக்கவும், தேவர்களெல்லாருந் துதிசெய்யவும், வெள்ளிய விபூதியணிந்திருக்கும் பரமசிவன் அளவில்லாத பலகோடி சூரியர்கள்போலத் திருவுருவங்கொண்டு தாண்டவஞ்செய்யா நின்றனர். (௫௨)

விண்டுவேமுதலாந்தேவர்களெவரும்விதுவுறைசடிலவானவன்றன்
றண்டவினிருத்தங்காணியவேகுந்தன்மையாலன்னவரெல்லா
மண்டுநீருலகமாதியஞ்சுடரைவழிபடுபூசனைதமதாய்க்
கொண்டுநின்றுவப்பரென்றுநான்மறையுங்கூறுமாகமங்களுங்கூறும்.

(இ - புரை.) விஷ்ணுமுதலாகிய தேவர்களெல்லாரும் சந்திரனை யணியும் சடாமகுடத்தையுடைய பரமசிவனது நித்யானந்த நிருத்தத்தைத் தரிசிக்கச் செல்லுந் தன்மையால், அவர்களெல்லாரும் சமுத்திரஞ்சூழ்ந்த இந்தவுலகத்தில் ஆதியாகிய பரமசிவனை ஆராதனைசெய்யும் பூசனை தங்களுடையதாகக் கொண்டு எந்நாளும் மகிழ்ச்சி அடைவார்களென்று, நான்கு வேதங்களும் இருபத்தெட்டு ஆகமங்களுஞ் சொல்லுகின்றன. எ று (௫௩)

அன்றியுமடவாய்நின்வயினுதிததவநும்பெறற்கானவேதியன்முன்
சென்றிடுமும்மைப்பிறப்பின்வேதியருட்செல்வமிக்குடையனுயிருந்து
ந், கன்றியவுலோபஞ்சிந்தையைக்கவற்றக்கைவிரிந்தெவரளித்தாலும்
நன்றெனவேற்றவளநிதியோடுநாடொறுபபாவமுமீட்டி.

(இ-புரை.) ஓமடந்தையே! இதுவுமல்லாமல் உன்னிடத்திற்பிறந்த இந்தப் பிராமணப்பிள்ளையானவன் முற்பிறப்பிற் பிராமணகுலத்தில் மிகுந்த செல்வமுடையவனுயிருந்தும், கொடியதான லோபகுணமானது தன்மனதைப் பீடிப்பதினல், (தனக்குள்ளதைத்தானனுவியாமல்,) எவர்கள் கொடுத்தாலும் கைவிரித்துத் தானமாக வாங்கிக்கொள்ளும் பொருளுடனே பாவத்தையும் நாடோறும் சேர்த்து. எ-று. எவரளித்தாலும் என்றமையால் நல்லோர் பொருளேயன்றித் தீயோர்பொருளைஏற்றலாகாதென்றும் ஏற்றுல் பாவமேவருமென்றும்போதரும்.

வாழுநாளகத்துளொருபகலேனும்வறியவர்க்கிட்டுணுதொழிந்த
பிழையால்வறுமைப்பிணிபிடித்திந்தப்பிறப்பினிலின்னணமுழன்றுன்
போழிளமதியமுடித்தசேகரனைப்பூசனைபுரிவரேன்மைந்தர்க்
கூழுறுவறுமைபரிதிவானமன்முன்னெள்ளிருட்பிழம்பெனவொழியும்.

(இ - புரை.) (இவ்வாறு பெருந்தனஞ்சேகரித்து) வாழுநாளில் தன்வீட்டில் வருகின்ற யாசகருக்கு ஒருநாளாவது பிட்சையிட்டுண்ணுத குற்றத்தினல் வறுமைநோயடைந்து, இந்தப்பிறப்பில் இவ்விதமாக வருத்தமடைந்தான். ஓம்

றைக்கலை இளஞ்சந்திரனையணிந்த திருமுடியையுடைய பரமசிவனை (சனிப் பிரதோஷத்தில்) பூசனைசெய்வார்களானால் இந்தப் புத்திரர்களுக்கு ஊழினால் நேரிட்டிருக்கிற வறுமைநோயானது சூரியனைக்கண்ட இருட்கூட்டம் நீங்கு வதுபோல நீங்கிவிடும். எ - று. (டுரு)

இவ்வண்ணமுரைத்தமுனிவரன்மொழியையின்பொடுவிருப்புறக்கேட்டாங்
கவ்வண்ணமெல்லாமனக்கொடுமகிழ்வுற்றன்னவள்பின்னருமந்த
வெவ்வினையறுத்த முனியுடன்கேட்டகதையெலாம்விளம்புவனென்றுச்
செவ்வண்ணவேணிச்சூதமாமுனிவன்றெருளுறச்செப்பினனன்றே.

(இ - புரை.) இப்படியாகச் சொன்ன முனிவனுடைய வார்த்தையைச் சந்தோஷமும் இன்பமும் உண்டாகக்கேட்டு, அம்முறைமைகளையெல்லாம் மனதிலறிந்துகொண்டு மகிழ்ச்சியடைந்து, அந்தப்பிராமண ஸ்திரீயானவன் தீவினையையொழித்த அந்த முனிவனிடத்தில் மேலுமேலும் கேட்டகதையெல்லாம் சொல்லுகிறேனென்று செம்மைநிறமுள்ள சடையையுடைய சூதமுனிவரானவர் நைமிசாரணிய முனிவர்களுக்குத் தெளிவுண்டாகும்படிச் சொல்லியருளினர். எ - று. (டுசா)

ஆறுவது - சத்தியாதனன்
பூசைசெய்த அத்தியாயம் முற்றிற்று.
ஆக விருத்தம் ௩௩சா.

---

உ
சிவமயம்.

ஏழாவது

# பிரதோஷபூசைமகிமை அத்தியாயம்.

மன்னியகற்பினருந்ததியனையமடவாளுமையவள்கேட்டுத்
தன்னிருகாமுமுச்சிமேற்குவியத்தவமுனிமலரடிதாழ்ந்து
பன்னகாபரணன்பூசனைபுரியும்படியெலாமடியனேனறிய
நின்னருள்புரிந்துவாய்மலர்திறந்துநிகழ்த்தெனநெடுந்தவனுரைத்தான்.

(இ - புரை.) நிலைபெற்ற கற்பினையுடைய அருந்ததியையொத்த உமை யென்னும் பெயருள்ள பிராமணஸ்திரீயானவள் முனிவர் சொல்லியவெல் லாங்கேட்டு, தன்னுடைய இரண்டுகைகளையும் உச்சியின்மேற்குவித்து நமஸ் கரித்து, அவர்பாதங்களிற்சேவித்து, பரமசிவனைப் பூசனைசெய்யுங் கிரமமெ ல்லாம் அடியேன் தெரிந்துகொள்ளும்படிக் கிருபைசெய்து திருவாய்மலர்ந்து சொல்லுமென்று கேட்க, அவர் கூறுவாராயினர். எ - று. (க)

வேறு.

திங்கடோறுங்குறையாதுதிகழுமிரண்டுபக்கத்துக்
கங்குன்முகங்கள்பன்மூன்றுந்தினத்துவந்தகாலமெலாம்
பொங்குந்தூயபுனலாடிப்பகற்போதுண்டிபொருந்தாம
லங்கண்மாலைப்போதுவரவலர்கம்பலத்தினவிதானித்தே.

(இ - புரை.) மாதந்தோறுங் குறையாமல் விளங்குகின்ற இரண்டுபக்ஷத் துப் பதின்மூன்றுந்திதியில், பிரதோஷம்வருகிற காலமெல்லாம் மிகுந்த பரி சுத்தமாகிய நீரில் ஸ்நானஞ்செய்து, பகற்பொழுதில் ஆகாரங்கொள்ளாமல் அந்நாளில் மாலைப்பொழுது வருகிறகாலத்தில் பிரகாசிக்கின்ற பலவித சித்திர ங்களெழுதிய கம்பலத்தினால் மேல்விதானங்கட்டி. எ - று. இரண்டுபக்ஷமா வது பூர்வபக்ஷம் அபரபக்ஷம் என்பவைகளாம். (உ)

புனிதமணிமண்டபம்புகுந்துபுரிநூற்கும்பமண்டலங்கண்
முனிவில்விதானமுறைபிறழாதியற்றிக்குரவன்மொழிபேணி
நனிசேர்சைவாகமவிதியும்புராணவிதியுநான்மறையி
னினியவிதியுமலைவுபடாதொன்றும்விதியினியல்போர்ந்து.

(இ - புரை) இப்படியாகப்பந்தரிட்டு மேல் விதானங்கட்டின பரிசுத்த மான அழகியமண்டபத்திற் பிரவேசித்துக் கும்பங்களுக்கு நூற்சுற்றி, மண்ட லங்கள் குற்றமில்லாத சாத்திரமுறைக்கு மாறுபடாமல் ஏற்படுத்திக் குருப தேசமொழியை விரும்பி, சைவாகமவிதியும் புராணவிதியும் இனிதாகிய வேத விதியும் ஒன்றுக்கொன்று மாறுபடாமல் சரியொத்திருக்குமுறைமையை யுண ர்ந்து. எ - று. (ஙு)

ஐந்துபுலனுமொருவழியேநிறுவிமனத்தினழுக்ககற்றிச்
சிந்தையாரப்பாவித்துவாயாற்றிருமந்திரஞ்செப்பி
முந்துகரத்தாலவர்முதலவழிபாடிரண்முறைமுடித்துக்
கந்தமலருநாற்றமும்போலபேதமாயகருத்தினனாய்

(இ புரை.) ஐம்புலன்களை யொருவழிப்படுத்திக் காமவெகுளி மயக்கங் களைநீக்கிச் சித்தத்திற் பொருந்தப்பாவித்து, வாயினாற் பஞ்சாக்ஷரத்தைச் சொல்லிக் கைகளினால் மலர்சாத்தலாகிய சோடசோபசாரங்களையும் செய்து, பூவும் மணமும்போல அபேதமான கருத்தையுடையவனாய், எ - று. (ச)

வெற்புக்கரையன்றிருமயிலையின்னற்பொலியுமேனியளை
யற்பமருங்கிற்கிடர்செய்யுமணிபூத்திருக்குமுலையாளைக்
கற்புக்கரசிதனைச்சந்திரகலையார்மேகக்கருங்குழலைப்
பொற்புக்கழகுதரும்வதனப்பொலம்பூங்கொம்பிற்பொலிவாளை.

(இ - புரை.) மலையரையன் புத்திரியாய் மயில்போன்ற சாயலையும் மின் னலைப்போற் காந்திபரப்பும் திருமேனியையும் சிறிய மருங்குலுக்குத் துன்பஞ் செய்யத்தக்கதாய அழகிய தனங்களையும் கற்பரசியாம் தன்மையையும் சந்திர கலையென்கிற ஒருவித ஆபரணந்தங்கிய மேகம்போலும் கரியஅளகத்தையும் அழகுக்கு அழகினைத்தருவதாகிய திருமுக மண்டலத்தையு முடையவராய் பொறகொம்புபோலப் பொலிந்துவிளங்கும் பார்வதிதேவியாரை. எ-று. (ரு)

வாமபாகத்தருச்சித்துவழிபட்டேத்திமணித்தவிசிற்
காமனுகமடலைசெயக்கனலைவழங்குங்கட்கரும்பைப்
பூமனார்தஞ்சிரங்கமழும்புலவையொழிப்பப்பொற்கொன்றைத்
தாமநாற்றந்திசைகமழுமணிமார்புடையதனிப்பொருளை.

(இ - புரை.) இரத்தினங்கள்பதித்த ஆசனத்தில் பரமசிவனுடைய இட ப்பாகத்தில் எழுந்தருளப்பண்ணி அருச்சனையுடன் ஆராதனைசெய்து, மன் மதன் சரீரத்தை நீறுசெய்த விரூபாக்ஷத்தை யுடையவராய் அடியார்களுக்குக் கரும்புபோலிருக்கும் கடவுளும், பிரமகபாலத்தின் முடை நாற்றத்தை நீக்கிப் பொன்னிறமுள்ள கொன்றைப்பூமாலையின் வாசனை அஷ்டதிசை வரைக்கும் பரிமளிக்கும்படி அணிந்திருக்கும் அழகிய மார்பையுடையவருமாகிய ஒப்பற்ற பரம்பொருளானவரும், எ - று. அடலை-சாம்பர். (சு)

வெள்ளிமலையின்மாணிக்கவெற்புவருதல்போல்விளங்கும்
பள்ளியுரகமால்விடையிற்பவனிபோதும்பரஞ்சுடரைத்
துள்ளிமதியோடிகலியலைதுளும்புங்கங்கைச்சடையானைப்
புள்ளியிளமான்கன்றுகளும்புண்டரீகக்கரத்தானை.

(இ - புரை.) வெள்ளிமலையின்மேல் மாணிக்கமலை வருவதுபோல, விள ங்குகின்ற சர்ப்பசயனத்திற் பள்ளிகொள்ளும் விஷ்ணுவாகிய ருஷபவாகனத்திற்

பவனிசெல்லுகின்ற பரஞ்சுடரும், சந்திரனுடன் பகைத்துத்தள்ளி அலைகள் ததும்பிக்கொண்டிருக்குங் கங்கையைஅணிந்த சடையையுடையவரும் இளமையாகிய புள்ளிமான் கன்று விளங்கிக்கொண்டிருக்கும் செந்தாமரைமலர்போன்ற திருக்கரங்களை யுடையவரும், எ - று. வெள்ளிமலையில் மாணிக்கவெற்பு வருதல்போல் விடையிற்பவனிபோதும் எனக்கூட்டி முடிக்க. (எ)

வாங்குபலைநீர்வாரிதியுமலையுநிலனுமற்றெவையுந
தாங்குபுயங்கனாபுரத்தின்பறைநின்றிரைக்குந்தாளானை
வீங்குபுணரியாலாலவிடமுண்டிருண்டகளத்தானை
யோங்குசிகைமுத்தீயென்னவொளிருங்கழுமுட்படையானை.

(இ - புரை.) உலகத்தைச் சூழ்ந்திருக்கும் அலைநீரையுடைய சமுத்திரத்தையும் மலைகளையும் பூமியையும் மற்றுமுள்ள எல்லாவற்றையும் தாங்குகின்ற ஆதிசேஷனுடன் வேதமாகிய சிலம்புகள் சத்தித்துக்கொண்டிருக்குந் திருவடிகளையுடையவரும், நீாமிகுந்த சமுத்திரத்தில் உண்டாகிய ஆலகால விஷத்தை உண்டு கறுத்த கண்டத்தினையுடையவரும்,ஓங்குகின்ற சிகையினையுடைய முத்தீப்போல ஒளிருகின்ற சூலாயுதத்தையுடையவருமாகிய பரமசிவனை.எ-று. (அ)

அன்பினிருத்திச்சிவாகமத்தினமைவிற்கருப்பூரத்தீப
மின்பநிறைக்குநறுந்தூபமியாவுங்குறையாதினிதமைத்து
நன்பொன்மலர்த்தார்முடித்தசடைநாதன்றுணைத்தாள்வழிபட்டாற்
றுன்பமில்லையார்மாட்டுமென்றுசுருதிமுறையிடுமே.

(இ - புரை.) அன்புடன் ஆசனத்திலெழுந்தருளப்பண்ணிச் சிவாகமத்திற்சொல்லியிருக்கு முறைமைப்படி கர்ப்பூரதீபமும் நல்லவாசனையைத் தருகின்ற தூபமும் மற்ற எல்லாவுபசாரமுங் குறைவுபடாமல் இனிதாகச்செய்து, நல்ல பொன்னிறமுள்ள கொன்றைப்பூமாலையை அணிந்த சடையையுடைய பரமசிவத்தின் இரண்டுதிருவடிகளையும் ஆராதித்த யாவரிடத்திலுந் துன்பமணுகமாட்டாதென்று வேதங்கள் முறையிடுகின்றன. எ - று. நன்பொன்மத்த முடித்தசடை என்றும் பாடம். (கூ)

வேறு.

இத்திறமிருவருமியற்றுவாரொனிற்
றொத்திணரிதழியான்றுணைப்பூண்டிடும்
பத்தியின்முன்னவன்வறுமைபம்படுஞ்
சத்திரத்திளவலுந்தரணிகாக்குமே.

(இ - புரை.) இப்படியாக இந்த இரண்டுபேரும் பிரதோஷகாலத்தில் பூசை செய்வார்களானால் கொத்தாகிய கொன்றைப் பூமாலையணிந்த கயி

லாசபதியின் அடிமைத்திறம்பொருந்திய பத்தியினாலே மூத்தவனுடைய தரித்திரமானது பாழ்பட்டுப்போம்; இளையவன் அரசனாகி ஒருகுடையின் கீழிருந்து பூலோகத்தைக்காப்பான். எ - று. (க0)

வேறு.

என்றுமுன்னமெழுந்திறைஞ்சினர்
முன்றுமுன்னியவேகைமுற்றுற
அன்றுநின்னடியேமருந்துய
ரன்றுமேகெடவுய்ந்துவாழ்ந்தனம்.

(இ - புரை.) இவ்வாறு முனிவர்சொல்வதற்கு முன் அவர்களெழுந்து, வணங்கினவர்களாய், எங்களுக்குத் தாயையொத்த மகானுபாவரே! உம்மால் நாங்கள் முன்னேய மகிழ்ச்சி பொருந்தவும் அடியேங்களுடைய அருமையாகிய துயரமொழிந்து போகவும், தீவினையினின்றும் பிழைத்து வாழ்வை யடைந்தோம். எ - று. (கக)

என்றாரன்பினிரங்கிமாமுனி
நன்றுகென்றுநயந்துமைந்தர்பாற்
றன்றுணெஞ்சுகணுச்சிசாத்தியே
குன்றுமந்திரமூலங்கூறினான்.

(இ - புரை.) அன்புடனே இவ்வாறு சொன்னார்கள். அதைக்கேட்ட முனிவரானவர் கிருபைவைத்து உங்களுக்கு நன்மையுண்டாக்க கடவதென்று ஆசீர்வதித்து, அந்தப்புத்திரர்களுடைய சிரசிலும் நேத்திரங்களிலும் இருதயத்திலும் தம்முடைய பாதத்தைவைத்து, அழிவுபடாத மூலமந்திரத்தை உபதேசித்தார். எ - று. (கஉ)

கேட்டார்வல்வினைவேரொடேகெட
வூட்டாநல்வினைமேலுமோங்கிடச்
சேட்டார்மைந்தர்கடேசிகன்பதஞ்
சூட்டாநின்றனர்பின்னுஞ்சொல்லுவான்.

(இ - புரை.) அவ்வாறுமுனிவருபதேசித்த மந்திரத்தை வலியதீவினைகள் ஆணவமலத்துடன்கெடவும், ஆகாமியமேறச்செய்யாத நல்வினை மேன் மேலும் விர்த்தியாகவும் கேட்டுக்கொண்டு, இளமைப்பருவைத்தையுடைய அந்தப் புத்திரர்கள் ஆசாரியராகிய முனிவருடையபாதங்களைத்தொழுதார்கள். (அவர்கள்தொழுதவுடன்) முனிவர் பின்னுஞ்சொல்லுகின்றனர். எ - று. (கங)

(வேறு.)

வல்லமறையோன்மதலேசுசிவிரதனெனவுமணிவயிரக்
கல்லிற்றிரடோளரசிளங்கோக்காளேதருமகுத்தனென்றுஞ்

சொல்லக்கடவதுலகமெனச்சொல்லிமுகமன்பலவியம்பிச்
செல்லறவிர்த்துமகிழ்வோடிங்குமரர் தம்மைச்செல்கென்றான்.

(இ - புரை.) வல்லமையையுடைய பிராமணபுத்திரனைச் சுசிவிரதனென வும், அழகிய வயிரக்கற்போலும் திரண்டதோளையும் இளமைப் பருவத்தையு முடைய ராசகுமாரனைத் தருமகுத்தனெனவும், உலகத்தார் சொல்லக்கடவதொ ன்றுபெயரிட்டு, உபசாரவார்த்தைகள் பலவாகச்சொல்லித் துன்பத்தைநீக்கி, மகிழ்ச்சியுடன் அவ்விரண்டு புத்திரர்களையும் போங்களென்று உத்தரவுகொடு த்தார். எ - று. தருமகுத்தன் - தருமத்தைப் பாதுகாப்பவன். (கசு)

வேதமுனிவன்விடைகொடுப்பவிளங்குகுமாரிருவோரும்
போதமுறுதந்தாயருடன்மனையிற்புகுந்துபுரமெரித்த
நாதன்றன்னை நிசிமுகத்தினுநாளும்விசேடிதமாய்ப்
பாதகமலந்தொழுதேத்திவழிபாடனைத்தும்பண்ணியே.

(இ - புரை.) வேதங்களுணர்ந்த முனிவர் உத்தரவுகொடுப்ப, விளங்கு கின்ற இரண்டு புத்திரர்களும் தெளிவுபெற்ற தாயாருடன் வீட்டில்வந்து, திரி புரதகனரான பரமசிவனைப் பிரதோஷகாலத்தில் நாடோறும் விசேஷமாய்ச் சோடசோபசாரத்துடன் பூசைசெய்து திருவடித் தாமரைகளைவணங்கி, எ-று.

திங்களொருநான்கிவ்வாறுசெல்லச்செல்வரிருவோரிற்
பொங்குபுரிநூற்சுசிவிரதன் புனிதநதியிற்புனலாட
அங்கணொருசாரேகுதலுந்தெண்ணீர்பொருதவகன்கரைவாய்க்
கொங்கைக்குவமைசான்றதொருகுடத்தினிதியங்கண்ணுற்றான்.

(இ - புரை.) இவ்வாறு நாலுமாதஞ்செல்ல, அந்தப் புத்திரர்களிருவரில் பூணூல்விளங்கு மார்பினையுடைய சுசிவிரதன் அங்கு ஒருபுறத்திலுள்ள சுத்த மான நதியிற்றீர்த்தமாடச்சென்றான். அப்படிச் செல்லவும், தெளிந்த அலைநீர் மோதுகின்ற கரையினிடத்தில் மாதர்கள் கொங்கைக்கு ஒப்புளதான ஒருகுட த்தில் திரவியமிருக்கக்கண்டான். எ - று. (கஎ)

ஓகையொடுகரன்மறைவல்லோனுறுதபொருள்கண்ணுற்றிட்டலும்
பாகைவிரவுமொழியுமையாள்பங்கன்பூசைப்பலனென்றே
தோகைபாகன்புகழ்பாடித்தோளிற்சுமக்குங்குடநிறைந்த
ஈகையோடுமனையகத்தினெய்தித்தாயர்க்கிதுசொன்னான்.

(இ - புரை.) தான் கண்டறியாத திரவியத்தைக்கண்டவளவில், அப்பிரா மணப்பிள்ளை சந்தோஷத்துடன் பாகுபோலும் மதுர வசனங்களையருளும் பார்வதியானை யிடப்பாகத்திலுடைய பரமசிவனைப் பூசித்தலரல் கிடைத்த

பலனிதுவென்று அவருடைய புகழை யெடுத்துப்பாடித் தோத்திரஞ்செய்து, பொன்னிறைந்த அந்தக் குடத்தையெடுத்துத் தோளில்வைத்துக்கொண்டு வீட்டில்வந்து, தாயாருக்கு இந்த வார்த்தையைச்சொன்னான். எ - று.

ஈகை - பொன். (கரு)

அன்பர்க்கெளியவெள்ளிமலையமர்ந்தமுதல்வனருள்பேணி
யின்புற்றியற்றும்பூசனையினெய்துடயன்காணிதுவெனனத
துன்பக்கடலினமுழ்ந்துமுமைதூயபுதல்வன்சொற்கேளா
என்புற்றுருகியகங்குளிர்ந்தங்கிளையான்முகம்பார்த்திதுசொல்வாள்.

(இ - புரை.) அம்மையே! அன்பர்க்கெளியரும் கைலையில்வீற்றிருப்பவரு மாகிய பரமசிவனுடைய திருவருளை விரும்பி இன்பம் பொருந்தச்செய்யும் பூசனையினால், அடைந்தபலன் இதுவென்று பரிசுத்தனாகிய தன்புத்திரன்சொல்லிய வார்த்தையைக்கேட்டு, முன் துக்கசாகரத்தில் அழுந்திய உமையென்னும் பெயரையுடைய தாயானவள் எலும்பு நெக்குவிட்டுருகி மனமகிழ்ச்சியடைந்து, அந்த இளையபுத்திரன் முகத்தைப்பார்த்து இந்த வசனஞ் சொல்லுவாள் எ - று. (கஅ)

மைந்தர்நீங்களிருவீருமாழைபகிர்ந்துகொண்மினெனக்
கந்துங்கழையும்பொருங்களிறறுக்கழற்கால்வேந்தன்றிருப்புதல்வன்
அந்திவண்ணனளித்ததீதவற்கேயெமக்குமவனளிக்கும்
புந்தியவலமொழிகென்றுத்தாயர்த்தொழுதுபுகன்றனே.

(இ - புரை.) புத்திரர்களே! நீங்களிருவரும் இந்தத்திரவியத்தைப் பங்கிட்டுக்கொள்ளுங்களென்று சொல்ல; கட்டுத்தறியையும் குத்துக்கோலையும் முறிக்கத்தக்க யானைப்படைகளையுடைய வீரகண்டைகட்டிய காலினனாகிய ராசபுத்திரன் சொல்லுகின்றான்; தாயே! அந்திவண்ணரான பெருமான் என் தமையனுக்கு அருளிச்செய்த தாகையால் அவருக்கே யுரியதாம்; எனக்கும் அந்தக்கடவுள்கிருபைசெய்வார்; அம்மையே! உன்மனதிலிருக்குந் துயரத்தை நீக்கென்றுதாயை வணங்கிச்சொன்னான். எ - று. மாழை - பொன்; கந்து - கட்டுத்தறி. (கக)

(வேறு.)

மற்றவன்கூறியவண்ணமைந்தருஞ்
செற்றமிலன்னையுஞ்செல்வமோங்கவே
யுற்றநல்குரவினையொழிந்துவைகுநாட்
கொற்றவன்காதலன்கொள்கைகூறுவாம்.

(இ-புரை.) அரசகுமாரன் சொல்லிய பிரகாரமே குற்றமில்லாத தாயும் புத்திரர்களும் நெடுநாளாகப் பொருந்திய தரித்திரத்தை யொழிந்து, செல்வம் அதிகரிக்க வாழுநாளில், அரச குமாரனுடைய செய்கையை இனிச் சொல்லுவாம். எ - று. (உ0)

ஐம்புலனொருவழியடக்கியாறணி
பைம்பொனறிதழியம்படலைவேணியான்
வம்பறுமலரடிவணங்கியேத்தலும்
இம்பரிற்றிங்களாறிரண்டுசென்றவே.

(இ - புரை) பஞ்சேந்திரியங்களையும் ஒருவழியில் அடக்கி, கங்காநதியையும் மாற்றுயர்ந்த பொன்னிறமுள்ள கொன்றைப்பூமாலையையும் அணிந்த சடையினையுடைய பரமசிவத்தின் மணமுறுத் திருவடித்தாமரையை இவ்வுலகில் வணங்கித் துதிசெய்துகொண்டு வருகையில், பன்னிரண்டு மாதங்கள் சென்றன. எ - று. (உக)

அன்னதுநிகழுவோராழியேயதேர்
மன்னவன்வடதிசைவழிக்கொண்டேகுநாட்
கன்னலஞ்சிலைமதன்விழவுகாணிய
வின்னிளவேனில்வந்திறுத்ததென்பவே.

(இ - புரை.) அந்தன்மையாகப் பன்னிரண்டுமாதம் அவன் பூசைசெய்துகொண்டிருக்க; ஒற்றையுருளமைந்த தேரையுடைய சூரியன் வடதிசை நோக்கிச் செல்லுநாளாகிய உத்தராயணத்தில், கருப்புவில்லையுடைய மன்மதன் தனக்குரியவிழாவைக்கொள்ள இனியதாகிய இளவேனிற்காலம் வந்தது.எ-று.

என்ப எ - அசைகள். இளவேனிற்காலம் சித்திரை வைசாக மாதங்கள்.

நறுமலர்ப்பாடலந்துணர்த்தநாகங்கள்
குறுமுகைவெண்மலர்கொழித்தகோங்கினந்
துறுமலர்பொதுளிப்பொன்னணிந்துதோன்றின
வெறிமலர்க்காஞ்சிப்பூப்பசந்தவீற்றினே.

(இ - புரை.) இளவேனிற்காலம் வந்தபோது வாசனைபொருந்திய மலர்களையுடைய பாதிரிமரங்கள் பூத்தன; புன்னை மரங்கள் சிறிய வெள்ளிய அரும்புகளையும் மலர்களையும் கொட்டின; கோங்கமரங்கள் நெருங்கிய மலர்களைப் பொருந்திப் பொன்னையணிந்து கொண்டதுபோலத் தோன்றின; வாசனைதங்கிய காஞ்சிமலர்கள் செழுமையுடன் பசலைநிறமுள்ளதாயிருந்தன. எ-று.

பாசிலையுதிர்த்தனபழுவப்பாதவம்
வீசியபனைநொறுந்தளிரின்வேய்ந்தன

காசறுசெம்பட்டாமொருவிக்காய்க்கதிர்
பூசுற்செம்படாம்போர்த்தபோலுமே.

(இ - புரை.) ஆலமரங்கள் பச்சை இலைகளை உதிர்த்தன; (அப்படி யுதிர்த்தபின்பு) நீண்ட கிளைகள்தோறும் தளிர்கள்விட்டு அலங்கரிக்கப்பட்டது போலிருந்தன; (இவ்வாறு பச்சிலைகளுதிர்ந்து செந்தளிர் தளிர்த்தது எப்படியிருந்த தென்றால்,) குற்றமற்ற பச்சைப்போர்வையை நீக்கிச் செந்தளிர் மிகுந்த சிவப்புப் போர்வையைப் போர்த்துக் கொண்டதுபோலிருந்தது. எ-று

பாதவம் - பாதத்தால் நீரைக்கொள்வது; எனவே மரங்கள் என்றபடி.

கொடியவுமிளந்தளிர்குழைத்தகோட்டவுங்
கடிமலர்குடைவனகள்ளுண்வண்டினம்
பெடையொடுகுயிலினம்பிறங்குதண்முறி
யிடையிடைகோதுவகானமெங்குமே.

(இ - புரை.) இவையேயன்றி, அந்த வனமெங்கும் மதுவையுண்கின்ற வண்டினங்கள் கொடிகளிலும், இளந்தளிர்கள் தளிர்த்த கொம்புகளிலும், வாசனைபொருந்திய மலர்களிலும் குடைவனவாயிருந்தன; ஆண்குயில்களும் பெட்டைக்குயில்களும் பிரகாசியாநின்ற குளிர்ந்த தளிர்களை மூக்கினுற் கோதுவனவாயிருந்தன. எ - று. முறி - தளிர். (உரு)

கலைமகள்வடிவினைமராங்கவர்ந்தன
மலைமகளெழிலினைப்பூவைவாங்கின
கொலைமகள்கவினைநீடிலவங்கொண்டன
அலைமகளழகினையசோகணிந்தவே.

(இ - புரை.) சரஸ்வதியின் சரீரநிறத்தை வெண்கடப்பமலர்களும், பார்வதிதேவியாருடைய திருமேனிநிறத்தைக் காயாமலர்களும், துர்க்கையினுடைய நிறத்தைப் பெரிய இலவமலர்களும், திருமகள் நிறத்தை அசோகமலர்களும், கொண்டு விளங்கினபோலப் பூத்துநின்றன. எ - று.

வெண்கடம்புமலர் வெள்ளைநிறமும், காயாம்பூ கறுப்புநிறமும், இலவம்பூ சிவப்புநிறமும், அசோகம்பூ பொன்னிறமுங் கொண்டுள்ள புட்பங்களைப் பூத்தன என்பது கருத்து. க உ

வண்டுகளுமகுயில்களுங்கேசரங்களு
பரியதொதினூடனைக்தமிதென்றலுங்
துளிபடுசினைதொறுந்துவன்றிமேவிராம்
களிமதன்பாசறைபோன்றகாவெலாம்.

(இ - புரை,) கிளிகளும் குயில்களும் வண்டுகளும், வண்டுகள் மொய்க்கும் பூந்தாதுக்களைப்பூசிய தென்றற்காற்றும், தேன்றுளிபொருந்திய கிளைகள்தோறும் நெருங்கியிருப்பதினால், அவ்வனமெல்லாம் களிப்பினையுடைய மன்மதனது பாசறையென்னும் படைவீடுபோலிருந்தது. எ - று. கேசரம் வண்டு.

மன்மதனுக்குக் கிளி குதிரை, குயில் எக்காளம், வண்டுகள் வில்லிற்பூட்டும் நாண், தென்றற்காறறு தேர், இக்காரணம் பற்றிப் படைவீடென்றார். இதனை "ஆலைக் கரும்புசிலை யயங்கணைபூ நாண்சுரும்பு - மாலைக் கிளிபுரவி மாருதந் தேர் - வேலை, கடிமுரசங் கங்குல் களிறுகுயில் காளங் - கொடிமகரந் திங்கள் குடை." என்னும் இரத்தினச்சுருக்க வெண்பாவானுணர்க. (௨எ)

அந்தரவகடுபோழ்ந்தகன்றதண்டலைப்
பைந்தருத்தொறுங்கொடிபடர்ந்துபற்றின
சுந்தரமிழந்துமூப்படைந்ததொன்மையோர்
மைந்துடனரம்புயர்வன்மைபோன்றவே.

(இ-புரை.) ஆகாயத்தி னகட்டைப் பிளக்கும்படியான உயரமுள்ளதாய்ப் பரந்த சோலையிலிருக்கும் பசிய மரங்கடோறும் கொடிகள்படர்ந்து பற்றிக்கொண்டிருக்குந் தன்மை, அழகினையிழந்து மூப்படைந்தவர்கள் (அவயவத்தில்) வலிமையுடன் நரம்புகள் மேற்றோன்றி நிறபனபோலிருந்தன. எ - று. ()

தேசுறுகிளியினமொழுங்கிற்சேண்வழி
வீசியசிறையவாய்ப்பறத்தல்வேனில்வேந்
தாசைசூழுலகங்கொண்டதற்குக்கட்டிய
பாசிலைத்தோரணப்பான்மைபோன்றவே.

(இ - புரை.) பச்சென்ற ஒளியினையுடைய கிளிக்கூட்டங்கள் ஆகாய மார்க்கத்தில் சிறைகளைவீசிக்கொண்டு ஒழுங்காகப்பறந்து செல்லுதல், வசந்தகாலத்துக்குரிய மன்மதன் எட்டுத்திக்கிலுஞ் சூழப்பட்ட இவ்வுலகத்தைத் தன்வசப்படுத்திக் கொண்டதின்பொருட்டுப் பச்சிலைத்தோரணங்கட்டிய தன்மைபோ லிருந்தது. எ - று. (௨௯)

அரும்பவிழ்நறுமலர்சுலவவாயிடைச்
சுரும்பினந்தருமுதலனைத்துஞ்சூழ்ந்தன
மரங்கிழம்படுதலின்வழாதமைந்துற
இரும்பிறைற்பூண்பிடித்திட்டதொத்ததே.

(இ - புரை.) அரும்புகள்விரிந்த நறியமலர்களி னிடத்தில் சுழன்று தேனுண்ணுவதற்கு வண்டுகள் அவ்விடத்திலிருக்கும் விருக்ஷங்கள் முதலானவைகளிற் சூழ்ந்துகொண்டிருத்தல், விருக்ஷங்கள் கிழத்தன்மை யடைந்தபொழுதி

ஞல், இனி யொடிந்துபோமெனக்கருதி, யொடியாமலிருக்ும்வண்ணம் இரு ம்பினூற பூண் செய்து அமைத்தது போலிருந்தது. எ - று. (௯0)

அலங்கல்வெண்கவிகைவேலரசரீட்டமு
மிலங்கிழைமகளிரோடிளைஞரீட்டமும்
டொலங்கொடிமாளிகைநீங்கிப்போகதளி
துலங்குபூங்காவகந்துன்னிச்சேர்ந்தவே.

(இ - புரை.) வெற்றிமாலையினையும் வெள்ளைக் குடையினையும் வேலா யுதத்தையுமுடைய அரசர்கூட்டமும், பிரகாசியாநின்ற ஆபரணங்கள் அணிந் திருக்கும் மாதர்கூட்டமும், வாலிபர் கூட்டமும், பொன்னூற் செய்யப்பட்ட கொடிகள்கட்டிய மாளிகைகளை விட்டுச்சென்று, வண்டுகள் விளங்கிக்கொண் டிருக்கும் மலர்களையுடைய சோலையினிடத்தில் நெருங்கிச் சூழ்ந்தன. எ - று.

சோலையானது தளிர்விட்டுத்தழைந்து, அரும்புகள் மலர்ந்து, அதிககுளி ச்சியா யிருத்தலால, நீ விளையாடியும் போதுகொய்தும் இன்பம் அனுபவித் வின்பொருட்டுச் சென்றதெனக் கொள்க. (௯க

இருநிலமன்னர்மார்பிலகுமாரம்போல்
அருவரைநெற்றிதாழருவியாடியும்
முருகயர்புலமெனமகளிர்முண்டக
மருவிரிவாவியங்கரையின்வைகியும்,

(இ - புரை.) பெரிய இவ்வுலகத்தை யாளுகின்ற அரசர்கள் மார்பில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் முத்தமாலைபோல பெரியமலையி னுச்சியி லிரு ந்துவிழுகிற அருவிநீரில் விளையாடியும், வாசனைதங்கி விளங்கும் நந்தனவன த்திற் பொருந்துவதுபோல மாதர்களானவர்கள் வாசனையுடன் மலருகின்ற அ ழகிய தடாகக்கரையில் பொருந்தியும். எ - று. அயர்தல்-ஈண்டுதங்கல். (௯உ)

சிலம்பெதிர்கூவியுஞ்சிற்றில்கோலியு
முலம்பொருகுவவுத்தோளுழுதகொங்கைமேற்
கலம்பலதிருத்தியுங்கலவையாடியு
நலம்பலதுய்த்தனர்நதியின்பாங்கரோ.

(இ - புரை.) மலைகளுக்கெதிரில் கூவியும், நதியின்கரையில் சிறுவீடுகட் டிவிளையாடியும், (தத்தங்கணவர்களுடைய) திரண்டகல்லையொத்துப் பருத்த, புசங்களில்படிந்த-தனங்களின்மேல் பல்வித ஆபரணங்களை அணிந்தும், வா சனைத்திரவியஞ்சேர்ந்த சந்தனக்குழம்பு பூசியும், இவ்வாறு பல இன்பங்களை யனுபவித்தார்கள். எ - று.

மலைகளுக்கெதிரிற் கூவினால், கூவுகின்றவர்கள் ஓசைபோலாவது அவர்கள் வசனம்போலாவது பிரதித் தொனியுண்டாகு மாதலால், அதுவுமோர் விநோதமாகக் கொண்டாரெனக்கொள்ளுத லொருவகை. அவ்வாறன்றித் தங்கள் தங்கள் கணவர்களுடன் ஊடினவர்களுக்கு மகிழ்ச்சியின்மையால், மற்றொருவிநோதத்தில் மனஞ்செல்லாமல் பேச்சுத்துணைக்காக மலையுடன் கூவினார்களெனக்கொள்ளுத லொருவகை. கிள்ளை குயில் இவைகளுடன் பேசலாகாதோவெனின், அவைகளின் ஓசை விரகத்துக்கேதுவானது. இக்கருத்து "வெயினிறங்குறையச்சோதி மினனிழல்பரப்ப முன்னர்த், துயிலுணர் செவ்வியாருக் துனியுறு முனிவிநோருவ், குயிலொடு மினிதுபேசிச் சிலட்பொடு மினிதுகூவி" என்னும் கம்பராமாயணம் வரைகாட்சிப்படலம் உஅ - வது செய்யுளானுமுணர்க. (௩௩)

இத்தலையின்னண நிகழுவெண்ணில்சீர்ச்
சத்தியாதனன்றருதருமகுத்தனு
மெய்த்தவத்தோழனை நீங்கிவேறொரு
பத்திரம்பொதுளியபழுவமெய்தினன்.

(இ - புரை.) இவ்விடத்தில் இவ்வாறு நிகழ்ந்துகொண்டிருக்க; அளவில்லாத சீரினையுடைய சத்தியாதனனீன்ற தருமகுத்தனென்பவன் உண்மையாகிய தவத்தினையுடைய தன்தோழனைவிட்டு நீங்கி, தழை நிறைந்துள்ள வேறொரு வனத்திற்சென்றான். எ - று. பழுவம் - வனம். (௩௪)

மஞ்சுசூழ்குடுமிவெள்ளிவேதண்டமழுவலான்செவிக்கிசைநிறைக்கும், விஞ்சையர்பெருமான்றிருமகளாயவெள்வளைத்தோளியாங்கொருத்தி, வஞ்சிநுண்ணிடையார்பண்ணையுளாடும்வனப்பினைக்கண்டலுமயங்கிக், குஞ்சரநுகர்ந்தவெள்ளில்போன்மாழ்கிக்குழைந்துதன்னுளந்தனிற்குணித்தான்.

(இ - புரை.) (அப்படிபோன தருமகுத்தனென்பவன்) மேகங்களால் சூழப்பட்ட சிகரங்களையுடைய கயிலாசகிரியில் வீற்றிருக்கும் பரமசிவனுடைய திருச்செவிகளிற்பொருந்த இசைபாடுகின்ற வித்தியாதரமன்னவன் புத்திரியாகிய சங்குவளையலணிந்த கையினையுடைய ஒருமாதானவள், அவ்விடத்தில் பூங்கொடிபோல நுண்ணிய இடையினையுடைய தோழிமார் கூட்டத்தில் விளையாடிக்கொண்டிருக்கும் அழகைக் கண்டமாத்திரத்தில், மனமயங்கி வேழமுண்ட விளாங்கனிபோலச் சோர்வுடன்மெலிந்து, தன்மனதில் இவ்வாறு நினைத்தான். எ - று.

வேழமுண்ட விளாங்கனி என்றது தேரைமுகர்ந்ததெங்கங்காய் என்பது போன்றது; வேழம் தேரை என்பனவொருவகைநோய்; இதனை நச்சினார்க்கினியார் சீவகசிந்தாமணியில்வரைந்த உரையானுமுணர்க. வேதண்டம் - மலை. (௩௫)

பூவுறைதிருவோ நாகர்தங்கொடியோ பொருப்புறைகுழுதவாய்
மயிலோ, தேவர்தமுலகினின்றிழிந்தருளுஞ்செய்யவாய்மடமொழிக்
கிளியோ, யாவளிங்கிருந்தவேந்திழையென்னவிறைமகனெண்ணமுற்
றிரங்கக், கோவிளங்குமரன்வனப்பினைநோக்கிக்கொடியிடைமடந்தை
யுங்குறித்தாள்,

(இ - புரை.) இங்கிருக்கின்ற மாதானவள் செந்தாமரையில் வீற்றிருக்குந் திருமகளோ? நாககன்னிகையோ? மலையிலவாழும் செவ்வல்லிபோலும் வாயினையுடைய வரையரமகளோ! தேவருலகத்திலிருந்துவந்த சிவந்தவாயையும் மழலைச்சொல்லையுமுடைய கிள்ளையையொத்த ரம்பாஸ்திரீயோ? இன்னளென்று தெரியவில்லையே யென்று அந்த ராசகுமாரன் எண்ணங்கொண்டு (காம விகாரத்தினால்) வியாகுலமுடையவனாயிருக்க; அவ்வரசகுமாரனைப் பார்த்துக் கொடிபோன்ற நுண்ணிய இடையையுடைய அந்தஸ்திரீயும் இச்சைகொண்டு இவ்வாறுநினைத்தாள். எ - று. (௩௬)

பண்ணுறுகானவிஞ்சையருலகிற்பாகசாதனன்றிருநாட்டின்,மண்ணகவரைப்பினிளமையினலத்தின் வடிவினிலிவன்றனக்கிணையார், கண்மணிகுளிர்ப்பவடிவுகொண்டிறந்தகாமனேவந்தனனென்று,வுண்ணிறையழியவுலையிடுமெழுகொத் தொருமொழி தோழியர்க்குரைத்தாள்.

(இ - புரை.) இசைபொருந்திய கானம் பாடுகின்ற வித்தியாதர ருலகத்திலும் தேவேந்திரனுடைய உலகத்திலும் பூலோகத்திலும் இளமை சவுந்தரியம் உருவம் இவைகளில் இவனுக்கு ஒப்பானவர்கள் யாரிருக்கின்றார்கள்; முன்னிறந்த மன்மதன் (பார்க்கின்றவர்களுடைய) கண்மணி மகிழ்ச்சியடையும்படி உருவுகொண்டு வந்தானேயென்று, உள்ளத்திலிருக்கும் கற்புகுலைய உலைக்களத்திலிட்டமெழுகைப்போல (மனமுருகி) தோழிகளைப்பார்த்து ஒருவார்த்தை சொல்லினாள். எ - று. (௩௭)

மங்கைமீர்நீவிரனைவருமிந்தவனத்தினுக்கப்புறம்போகிப்
பொங்கரிற்புகுந்துநறுமலர்கொய்துபோதுமினென்றவர்ப்பணியா
அங்கவர்யாருநதணந்தபினிந்தவணங்கொருதமியளாயெதிர்ந்து
பங்கயமுகத்துக்குமரன்மாட்டணுகிப்பரிவுடனினையனபகர்ந்தாள்.

(இ - புரை.) தோழிகளே! நீங்களெல்லாரும் இந்தவனத்துக் கப்புறம் போய்ச் சோலையிற்சேர்ந்து, வாசனைபொருந்திய மலர்கள் பறித்துக்கொண்டு வாருங்களென்று அவர்களுக் குத்தரவுசெய்து, அவர்களெல்லாரும் நீங்கிப் போனபின்பு இந்த மாதானவள் தான் தனிமையாகப்போய்த் தாமரைமலர்

போன்ற முகத்தினையுடைய ராசகுமாரன் சமீபத்தில் அடுத்து, விருப்பத்துடன் இந்த வார்த்தையைச்சொன்னான். எ - று. (௧அ)

கன்னலஞ்சிலைவேளுருவுகொண்டனையகாளையீண்டடைந்தகாரணமு
நின்னுடைநாடுநின்றிருமரபுநின்றிருப்பெயரும்யாவென்னப்
பொன்னிளமுலையாள்வினவலுங்கேட்டுப்புந்தியினவள்குறிப்புணர்ந்து
மின்னணிமவுலிவேந்தர்கோனளித்தவிடலையுமனமகிழ்ந்துரைத்தான்

(இ - புரை.) கருப்புவில்லையுடைய மன்மதனானவன் முன்போல உருவு கொண்டதுபோன்ற பாலயனே! நீ இவ்விடத்திற்கு வந்தகாரணமும், உன்னுடையதேசமும், உன்னுடையகுலமும், அழகிய உன்பெயரும், யாவையென்று பொன்னிறமுள்ள தேமல்பரந்த இளமைபொருந்திய தனங்களையுடையவள் வினவவும், அவற்றைக்கேட்டுத் தன்மனதில் அவள் குறிப்பை அறிந்துகொண்டு, ஒளிபொருந்திய மகுடம் அணிந்த மன்னவனீன்ற ராசகுமாரன் மனமகிழ்ந்து சொல்லுகின்றான். எ - று. யா - யாவை. (௧௯)

விரைமலர்நாற்றம்யோசனைகமழும் விதர்ப்பதேசாதிபன்விரிந்த,
தரையெலாநிழற்றுமுழுமதிக்கவிகைச்சத்தியாதனன்றனக்கமைந்த,
மரைமலர்த்திருவேயனையவள்சதியாமடவரறிருவயிற்றுதித்தே,னிரை
வளைக்கரத்தாயெந்தைபோர்பகைஞர்நெடும் படைக்களத்திடைமடிந்
தான்.

(இ - புரை.) மலர்களின் மணம் யோசனைவரையும் பரிமளிக்கும் (சோலைகள்சூழ்ந்த) விதர்ப்பதேசத்துக்கு அரசனாகி, பரந்த உலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் நிழலைச்செய்யும் பூர்ணசந்திரனையொத்த வெண்கொற்றக்குடையினை யுடையவனாய், (ராச்சியபாரஞ்செய்த) சத்தியாதன வரசனுக்கு அமைந்த புட்பவாசியான திருமகளையொத்த (சவுந்தரியமுள்ள) சதியென்னும் பெயரிய மனைவி வயிற்றிற்பிறந்தேன்; வரிசையாக வளையலணிந்த கையையுடைய மாதே! என்பிதாவானவர் போர்செய்யவந்த பகைவருடைய பெரிய யுத்தகளத்தினிடத்தில் (எதிர்த்துப் போர்செய்து) மடிந்தார். எ - று. (௨௦)

ஈன்றவெம்மாயுநீருணுங்கயத்தினிடங்கர்வாய்ப்பட்டனண்மடியத்,
தோன்றியவுமையாம்பார்ப்பனியெனைத்தன் றோன்றலுக்கிளவலாய்வ
ளர்த்தாள், சான்றுசான்முனிவனெனக்குறுநாமந்தருமகுத்தன்னெ
னச்சாற்றி, யான்றவெந்துயரினழிவுறாவண்ணமரனடிக்கென்னையாட்
கொடுத்தான்.

(இ - புரை.) (என்பிதா இறந்துபோகவே, என் தாயானவள் நகரத்தை விட்டுத் தனியேவனத்திற்போய் அவ்விடத்தில் என்னைப்பெற்று, அங்கிருக்கும்

ஒருகுளத்தில்) நீருண்ணப்போய் அதிலிருக்கும் முதலைவாயில் அகப்பட்டிறந்து போனாள்; (அப்படி என் தாயானவள் இறந்துபோகவே சிசுவானநான் அழுது கொண்டிருக்குந் தருணத்தில்) அங்கேவந்த உமையென்னும ஒரு பிராமணஸ்திரீ யென்னையெடுத்துக் கொண்டுபோய்த் தன்புத்திரனுக்கு இளையவனாக வளர்த்தாள். (அப்படி நான்வளரும் நாளில்) மேனமைமிகுந்த சாண்டில்லியர் என்னும் ஒருமுனிவர்வந்து, எனக்குத் தருமகுத்தன் எனப் பொருத்தமுள்ள தான பேர்கூறி மிகுந்த கொடியதான பிறவித்துன்பத்தில் வருந்தாத வகையாகப் பரமசிவனுடைய திருவடிகளுக்கு எனை அடிமையாகக்கொடுத்தார். எ-று.

உமையவடலைவன்றனைவழிபட்டவுறுதியாலொருவருமொவ்வாக்,
கமையினாய்நின்னையெதிர்ந்தனனல்லோர்காட்சியாலெய்துதல்சிறிதே,
எமையளித்திறந்தோனிழந்தவான்றிருவு மிருநிலக்கிழமையுமெதிர்ந்
தேன், அமையிளந்தோளாய்மரபுநினபதியுமறைகுதிபெயரொடுமென்
றான்.

(இ - புரை.) ஒருவரும ஒப்பில்லாத கற்புக்குரிய பொறுமையினையுடையவளே! பார்வதி கணவனாகிய பரமசிவனைப்பூசித்த உறுதியினாலே, உன்னை யெதிர்ப்பட்டேன்; நல்லவர்கள் தரிசனத்தினால் அடையும்பேறு சிறிதோ? என்னைப்பெற்று இறந்த பிதாவானவா பகைவராலிழந்த சிறப்புள்ள செல்வமும் பெருமைபொருந்திய ராச்சியபாரமும், அடைந்தேனாயினேன்; பசிய மூங்கிலையொத்த தோள்களையுடைய மாதே! உன்குலமும், உன்னூரும், உன்பெயரும் சொல்லுதியென்றான். எ - று. கமை-பொறுமை; க்ஷமை என்பதின் திரிபு. அமை-மூங்கில். (௪௨)

அயிலெயிற்றுழுவையதளசைத்தாடுமரனிரந்தரமினிதுறையுங்,
கயிலையிற்றென்பாற்சேடியுள்வாழுங் கந்தர்ப்பர்தொழுங்கழற்குரிசில்,
புயலுறழ்தடக்கைத்திரமிடனென்னப் பொறித்திடுந்திருப்பெயரவற்
குக், குயின்மொழித்துவர்வாய்த்தாரணிவயிற்றிற்றோன்றினேனென்
றவள்கூறி.

(இ - புரை.) கூரிய பற்களையுடைய புலித்தோலையுடுத்து நடனஞ்செய்யும் பரமசிவன் மகிழ்ச்சியுடன் நிரந்தரமாக வாசஞ்செய்யுங் கயிலாசகிரிக்குத் தென்புறத்திலிராநின்ற சேடியென்னும் நகரத்தில் வாசஞ்செய்கின்ற காந்தருவர்கள் தொழும்படியான மேகத்தையொத்த பெரிய கையையுடைய திரமிடனென்று சொல்லப்பட்ட அழகிய பெயருள்ள அரசனுக்கு அவன் மனைவியாகிய குயிலோசைபோன்ற இனியசொல்லையும், பவளம்போன்ற வாயையுமுடைய தாரணி யென்பவள் வயிற்றிற் பிறந்தேனென்று அவள்சொல்லி எ - று. அயில் - கூர்மை. (௪௩).

என்பெயரஞ்சுமதியெனவுரைட்பர்யானுமென்றோழியருடனே, நன்புயறழுவும்பொதும்பரின்பொழில்வாய் நறுமலர்கொய்குவான்புகுந்தேன், அன்புடையாயம்போக்கிநிற்காணுமவாவினிற்றமியளாயடைந்தேன், நின்படிவமுமெய்யழகையுங்கண்டேனினைதொறுநிறையழிந்தயர்ந்தேன்.

(இ - புரை.) என்பெயர் அஞ்சுமதியென்று சொல்லுவார்கள்; நானென் தோழியருடன் நல்ல மேகந்தவழும் இவ்வனத்திலுள்ள இனிய சோலையில் வாசனைபொருந்திய மலர்களைக் கொய்யவந்தேன்; (அப்படிவந்த நான்) உன்னைப்பார்க்கவேண்டுமென்கிற ஆசையினால் என்னிடத்தில் அன்பினையுடைய தோழிகளை அப்புறம் அனுப்பிவிட்டுத் தனியளாய்வந்தேன்; வந்து உன்வடிவத்தையும் அழகையுங்கண்டு நினைக்குந்தோறும் கற்புநிலைமாறிச் சோர்வினையடைந்தேன். எ - று. (சச)

வானவர்வியப்பமகரயாழ்நீவிவரிநரம்பணிமிடறென்னக், கானநன்குணர்ந்தோராயினுமுணராக்கானவிஞ்சைகண்முழுதுணர்ந்தேன், ஞானநன்னிலையால்யாவர்தங்கருத்து நசையையுங்குறிப்பினிலறிவேன், வேனில்வேளனையாயென்னுழை நினக்குவேட்கையுண்டென்பதுங்குறித்தேன்.

(இ - புரை.) தேவர்களும் வியப்படையும்படி மகரவீணைவாசித்துக் கட்டுப்பட்டிருக்கிற தந்திரிகளின் ஓசையும் கண்டத்திறேசையும் ஒன்றெனும்படிக் கானம்பாடுதலை நன்றாக வுணர்ந்தவர்களேயானாலும், அவர்களாலும் அறிந்துகொள்ளக்கூடாத கானவித்தைகள் முழுவதும் தெரிந்திருக்கின்றேன். இதுவுமன்றி, நல்ல ஞானநிலையினாலே எல்லாருடைய கருத்தையும் அவர்களிச்சையையும் குறிப்பாக அறிந்துகொள்வேன்; வசந்தகாலத்துக்குரிய மன்மதனையொத்தவனே! (இப்போது) என்னிடத்தில் உனக்கு ஆசையுண்டென்பதையும் அறிந்துகொண்டேன். எ - று. (சரு)

இன்னனபன்னியெமக்கியல்பாயதியாழினோருமணமதுதான்
கன்னவிறோளீயெண்வகைமணத்திற்கந்தர்ப்பமணமெனுமறைநூல்
அன்னதாலெனதுகைக்கிளையாகாதண்ணலுமன்பினையாதன் [தாள்
முன்னையூழ்வினையின்முடிந்ததென்றந்த மொய்குழலுரைத்திதுசெய்

(இ - புரை.) இவ்விதமான வார்த்தைகளைச்சொல்லிப் (பின்னுஞ்சொல்லுகிறாள்) மலைக்கொப்பாய தோள்களையுடைய ராஜகுமாரனே! அருமையாகிய காந்தர்வவிவாகம் எங்களுக்கு இயல்பாயிருப்பது; அந்த விவாகம் எட்டுவகைமணத்தில் ஒன்றென்று வேதசாஸ்திரங்கள் சொல்லுகின்றன; அப்படித்

சொல்லியிருக்கின்றதுடன், எனக்குண்டாகிய ஒருதலைக் காமத்தினளவேயாகாமல், நீயும் என்னிடத்தில் மோகங்கொண்டவனானது பழைய ஊழ்வினையினால் நேரிட்டதென்று நெருங்கிய அளகத்தையுடைய அந்த மாது சொல்லி அதற்குமேல் இக்காரியத்தைச்செய்தாள். எ - று.

எண்வகை மணம்-பிரமம், தெய்வம், ஆரிஷம், பிரசாபத்தியம், ஆசுரம், காந்தர்வம், இராக்கதம், பைசாசம். (சஅ)

கொங்கையங்குவட்டிற்றாளமாலிகையைக்கொழுஞ்சுடர்க்குருமணியாழி, யங்கையினேந்திமணிச்சிலம்பரற்றவன்னங்களலமரநடந்து, சிங்கவேறனையானுலம்பொருதடங்தோட்சேர்த்தினள்சேர்த்தலுமரச, புங்கவன்சிறுவனுவகைபூத்தந்தப்பொலங்கொடிக்கினையனபுகன்றான்.

(இ - புரை.) பொன்மலையையொத்த தனங்களில் அணிந்திருக்கு முத்துமாலைகளைச் செழுமையுள்ள ஒளியினையும் நிறத்தினையுமுடைய ரத்தினங்கள்பதித்த மோதிரம் அணிந்த கையினால்கழற்றி யேந்திக்கொண்டு, மணிகள் பதித்த சிலம்புசத்திக்கவும், அன்னப்பக்ஷிகள் மயங்கவும் நடந்து, ஆண்சிங்கம் போன்ற ராசகுமாரனுடைய திரண்ட கல்லையொத்த புசங்களில் அணிந்தாள்; அப்படி அணிந்தமாத்திரத்தில் ராஜசிரேஷ்டனாகிய சத்தியாதன மகாராஜாவின் புத்திரன் சந்தோஷமடைந்து பொற்கொடியையொத்த அந்த மாதைப் பார்த்து இந்தவார்த்தை சொன்னான். எ - று. அன்னம் அலமரல் தமக்கு இத்தகைய நன்னடை வாய்க்கவில்லையே என்ற வருத்தத்தாலென்க. (சஎ)

அரசிழந்தந்தோவறுமைபூண்டுழல்வனணியநின்றாரமாலிகையைத், திரமிடனெனுமுன்றாதைநேராதுசேர்த்தினையிஃதுளங்தேரிற், பரவருங்கற்பிற்பைந்தொடிமுறையின்பகுதியன்றேயெனப்பகர, மருமலர்க்குழலாள் குறுநகைகோட்டி வணங்கிவாய்புதைத்துநின்றுரைத்தாள்.

(இ - புரை.) அரசாட்சியை யிழந்து தரித்திரமுள்ளவனா யுழன்றுகொண்டிருக்கிற யான் அணிந்துகொள்ளும்படி, உன் முத்துமாலையைத் திரமிஷனென்கிற உன் பிதாவின் சம்மதியில்லாமல் என்புஜத்திற் றரித்தாய்; இந்தச் செய்கையை மனதில் ஆலோசிக்குமிடத்தில், புகழ்தற்கரிய பதிவிரதாதருமத்தையுடையவளே! இது நீதியின் பாற்பட்டதல்லவே என்று அவன்சொல்ல; வாசனைதங்கிய பூமாலையணிந்த அளகத்தையுடைய அந்தக் கந்தருவ மாதானவள் புன்னகைசெய்து வணங்கி, வாய்பொத்திக்கொண்டு நின்றுசொல்லுகிறாள். எ - று. ஆரம் - முத்து. (சஅ)

மன்னவன்சிறுவகேட்டிநீயுரைத்தவாசகமழகிதேயடிச்சி
நின்னுடைக்கருத்தினெண்ணியமுறையேநிரப்புவனுளையுமீள
இந்நெடுவனத்தினெய்துதியென்றுவேந்திழையாயமோடேகத்
தன்னிகரில்லான்றுணைவனுக்கிதனைச்சாற்றினன்றன்னகரடைந்து.

(இ - புரை.) அரசகுமாரனே! நான் சொல்லுகிற வார்த்தையைக் கேட்பாயாக; நீசொன்ன வார்த்தை அழகுள்ளதாயிருக்கின்றது; அடிச்சியாகிய நான் உன்னுடைய மனதில் நினைத்தவைகளை முறைமைப்படி நிறைவேற்றுகிறேன்; நாளையதினமும் நெடியதாகிய இவ்வனத்தில் வருவாயென்று சொல்லி, அந்தக்காந்தர்வ ஸ்ரீயானவள் தன்தோழிகளுடனே போக; தனக்கு ஒப்பில்லாதவனாகிய ராசகுமாரன் இந்தச் சேதியைத் தன்தமையனா யிருப்பவனுடன் சொல்லித் தன்பதியைச்சேர்ந்து, எ - று. (௬௯)

உமையெனுமன்னைக்கெதிர்ந்தவைவாயவுவகையையப்படியுரைத்துச்,சுவையுடைத்திங்கட்சடிலவானவனைத்தொழுதுவந்தனைத்தொழிலியற்றி,யெமையளித்தருணீயென்றுகொண்டந்தவேந்திழையுரைத்திடும்வழிநாள், அமைநிரைந்தோங்கும்வனந்தனிற்புகுந்தியாழரசனேடரிவையைக்கண்டான்.

(இ - புரை.) தன்பதியிற்போன அரசகுமாரன் உமையென்னும் பெயரையுடைய தன்தாயைக்கண்டு, தனக்குநேரிட்ட சந்தோஷ சமாசாரத்தை நடந்தபடி சொல்லி, இளந்திங்களை யணிந்திருக்குஞ் சடாபாரத்தையுடைய பரமசிவனைத்தொழுதுஆராதித்து, அடியேங்களை ரக்ஷித்தருளுமென்று வேண்டிக்கொண்டு, காந்தர்வஸ்திரீ வரச்சொன்னபடி மறுநாள் மூங்கில்கள் வரிசை வரிசையாயோங்கி வளர்ந்திராநின்ற அந்த வனத்திற்போய்க் கந்தர்வராசனையும் அக்தமாதினையுங் கண்டான். எ - று. (௭0)

கண்டவர்தம்மைக்கண்டியாழ்விஞ்சைக்கதிர்முடியரசுவப்போடு
வண்டிமிர்தெரியலரசிளங்களிறேவருகெனவாங்குபுதழுவி
யண்டரிலொருவனைவேதியனையடுத்தனன்புல்லியாங்கிருத்தித்
துண்டவெண்பிறையான்கூறியமாற்றஞ்சுடர்முடியரசகேளென்றான்.

(இ - புரை.) ஒளிபொருந்திய கிரீடம் அணிந்திருக்கும் வித்தியாதர மன்னவன் தன்னைக்கண்டவர்களைத் தானும் பார்த்துச் சந்தோஷத்துடன் வண்டுகள் இசை பாடிக்கொண்டிருக்கும் பூமாலையணிந்த யானையையொத்த ராசகுமாரனே! வருவாயென்று சமீபத்தில் வரவழைத்துத் தழுவி, தேவர்களில்ஒருவனான பிராமணச்சிறுவனையும் அடுத்துத்தழுவி,அவ்விடத்தில் தன்னுடன் இருக்கும்படிவைத்துக்கொண்டு,வெண்மையாகிய இளந்திங்களையணிந்த

பரமசிவன் அருளிச்செய்த திருவாக்கினைப் பிரகாசந்தங்கிய மகுடத்தையுடைய அரசகுமாரனே! கேளென்று சொன்னான். எ-று. (ருக)

விண்ணகடணவும்வெள்ளியங்கிரியின்விளங்குமாமணிசெய்மண்டபத்திற், பண்ணவர்பெருமானிணையடிக்கமலம்பணியயானென்னலினடைந்தேன், கண்ணுதலடியர்க்கெளியவனமலன்கருணைவாரிதியெனைநோக்கி,யுண்ணிறையுவகைபுறம்பொழிந்தோங்கவகமகிழ்ந்தின்னவாறுரைத்தான்.

(இ - புனை) அண்டமுகட்டைப் பொருந்திய அழகிய கயிலாயகிரியில் பிரகாசிக்கும் மாணிக்கமுதலாகிய ரத்தினங்களினாற் செய்யப்பட்ட மண்டபத்தில் தேவர்கடேவனான பரமசிவனுடைய இரண்டு திருவடித்தாமரைகளையும்வணங்க நான் நேற்றுப்போயினேன்; போனவிடத்தில் நெற்றிக்கண்ணையுடையவரும் அடியார்க்கெளியவரும் நிர்மலமானவரும் கிருபைக்கடலானவருமாகிய கயிலாசபதியானவர் அடியேனைப்பார்த்து, உள்ளேநிறைந்த சந்தோஷமானது புறத்தில்பெருகி யோங்கத்தக்கதாகத் திருவுளமகிழ்ந்து இவ்வாறு சொல்லியருளினார். எ - று. நென்னல் - நேற்று. (ருஉ)

ஆசில்சீர்க்குமரநினதுநற்றாயுமத்தனுமிறந்ததுமதன்பின்
மாசிலாளொருத்திபார்ப்பனிவளர்க்கவறுமையங்கடலினாழ்ந்ததுவுந்
தேசிகமுனியுன்பிறப்பெலாந்தெருட்டிச்சிவனையேபூசியென்றதுவும்
ஈசனதடியினன்பினான்மலர்பெய்தேத்திநீபூசைபண்ணியதும்.

(இ - புனை.) குற்றமில்லாத புகழினையுடைய ராசகுமாரனே! உன்னுடைய நல்ல தாயும் தகப்பனும் இறந்துபோனதும், அதன்பின் உத்தமியாகிய ஒரு பிராமணஸ்திரீயானவள் உன்னைவளர்க்க வளருநாளில் நீங்கள் தரித்திரமாகிய சமுத்திரத்தில் மூழ்கியிருந்ததும், ஒருமுனிவனாகிய ஆசிரியன்வந்து உன்பிறப்பின் விவரத்தைத்தெரிவித்து, நீ சிவனையே பூசித்துக்கொண்டிருவென்று சொல்லியதும், அவர்சொல்லியபடி நீ பரமசிவனுடைய திருவடியில் அன்புடன் மலர்களால் அருச்சித்துத்துதிசெய்து பூசைசெய்ததும். எ - று.

வறுமையங்கடல் என்பதினிடையிலிருக்கும் அம் சாரியை. (ருங)

அன்னதாலுன்மாட்டன்புமிக்குடையேமென்பதுமீறிகெனவுணாத்துப், பின்னருநினதுதாதையைமாய்த்துப்பெரும்பதிவளனெலாங்கவர்ந்த, மன்னரைவீட்டிக்கடற்படைதுணித்துவாகைகொண்டரசினங்குமரன், றன்னருட்கவிகையுலகெலாநிழற்றத்தருக்கொடுதுணைசெய்வாயென்றான்.

(இ - புனை.) அந்த முனிவர் சொற்படி பூசைசெய்த தன்மையினால், உன்னிடத்தில் மிகுந்த கிருபைவைத்திருக்கிறோமென்பதும், அதியக்கடலை

யென்று சொல்லி, பின்னும் உன் தகப்பனைக்கொன்று பெரிய நகரமுதலாகிய வளப்பங்களையெல்லாம் அபகரித்துக்கொண்ட அரசர்களையும் கடல்போன்ற அளவற்ற சேனைகளையுங்கொன்று, வெற்றியடைந்து, அந்தராசபுத்திரன் (இராச்சியபட்டாபிஷேகஞ்) செய்துகொண்டு உயிர்களுக்கெல்லாம் கிருபை செய்யத்தக்க வெண்ணிறக்குடை நிழல்செய்யும்படித் தருக்கொடு துணைசெய் யென்று எனக்குக் கட்டளையிட்டனர். எ - று.

அரசகுமாரன் முனிவன்சொற்படி நம்மைப் பூசித்ததினால், தன்பகைவரைவென்று அரசாட்சிசெய்வான்; அந்தக்காலத்தில் அவனுக்குச் சகாயஞ் செய்யென்று பரமசிவன் தனக்குக் கட்டளையிட்டதாக வித்தியாதரன் சொன்னான் என்பது தாற்பரியம் (௫௪)

முத்தலைச்சூலஞ்சுவன்மிசையிருத்துமுழுமுதலுரைதலைமேற்
கொண், டத்தலைநின்றுநகரின்வந்தனைவேற்கணங்கிவளரனுரைப்படி
யே, கைத்தலநெல்லிக்கனியினின்மரபுங்கவினும்வாதுரைத்திடக்கே
ளா, இத்தலைவந்தேன்சிவனருள்பெற்றார்க்கெய்திடாப்பொருளுமொ
ன்றுளதோ.

(இ-ரை.) மூன்றுபிரிவாகிய சூலாயுதத்தைத் தமது திருத்தோளிற்றாங்கும் பரமசிவன் அருளிச்செய்த திருவாக்கினைச் சிரமேலேற்றுக்கொண்டு, அவ்விடத்திருந்து என்னகரத்தைச்சேர்ந்த எனக்கு என்புத்திரியாகிய இந்தக்கன்னிகையானவள் பரமசிவன் அருளிச்செய்த திருவாக்கின்படி கரதலாமலகம் போல உனனுடைய மரபினையும் அழகினையும் சொல்லக்கேட்டு, (உன்னைக்காணும்பொருட்டு) இவ்விடத்தில் வந்தேன்; பரமசிவனுடைய கிருபையைப் பெற்றவர்க்குக் கிடையாத ஒருபொருளுமிருக்கின்றதோ? எ - று.

இவ்வுலகமெல்லாம் சிருஷ்டியாவதற்குமுன்னும அவையெல்லாம் இறுதியடைந்த பின்னும் எவற்றிற்குங் காரணராயிருப்பவராதலால், பரமசிவனை முழுமுதலென்றார். இதனை, "ஆதியு மந்தமுமாயினார்க்கு" என்னுந் திருவாசகத்தானுணர்க. சுவல் - தோள். (௫௫)

ஆதலாலஞ்சுமதியிவணினக்கேயடிப்பணிசெய்கெனவளித்தேன்
காதலாயெனப்பொறகரகநீரவன்றன்கரத்தினினவிடுத்தபின்கமல
மாதுநேர்மகளிர்நவமணிகனகமால்கரிதேர்பரிபதாதி [ன்.
மோதுபோர்க்கணியங்கவசம்விற்றூணிமூரிவேல்வாளிவைகொடுத்தா

(இ - ரை.) இந்த முறைமையினால் ஓ காதலனே! அஞ்சுமதியென்னும் பெயரையுடைய (என்புத்திரியாகிய) இந்தக்கன்னிகையை உனக்குப் பணிவிடை செய்யக்கடவளென்று விருப்பத்துடன் கொடுத்தேனென்று, பொற்கரகத்திலிருக்கும் நீரை அவன்கையில் விட்டபின்பு, திருமகளையொத்த (அழ

குள்ள) தோழிகள் நவமணிகள் சுவர்ணம் பெரியயானைகள் தேர்கள் குதிரைகள் பதாதிகள் தாக்கும்படியான மழுவாயுதம் கவசம் தனுசு அம்பறாத்தூணி பலம்பொருந்திய வேலாயுதம் வாளாயுதம் என்னும் இவைகளையுங் கொடுத்தான். எ - று. கணிபம் - மழுப்படை. (ருசு)

வேறு.

முனிவரன்புதல்வனுயமுழுமழுவிராமன்போல
அனிகமோடெய்தித்தெவ்வருருங்கிளையறுத்துச்செங்கோ
லினிதினேச்சியபின்மைந்தற்கிறைமையீந்தெம்பாலெய்தித்
தனிமுதல்பதத்திற்சேர்திதையலோடரசவென்று.

(இ - புரை.) இவைகளைக்கொடுத்த வித்தியாதரன் பின்னுஞ் சொல்லுகிறான்; அரசகுமாரனே! நீ சமதக்கினிமுனிவருடைய யபுத்திரராகிய மழுவாத பரசாயுதத்தையுடைய பரசுராமனைப்போல, இச் சைந்நியங்களோடு சென்று, வெல்லுதற்கரிய பகைவரைச் சுற்றத்தாருடன்கொன்று, உயிர்களுக்கெல்லாம் இன்பமுண்டாகும்படி செங்கோல்செலுத்திப் (புத்திரசம்பத்துமுதலாகிய அஷ்டசம்பத்துகளுடன் வாழ்ந்து,) அதன்பின்பு உன்புத்திரனுக்கு அரசாட்சிகொடுத்து, உன்மனைவியுடன் எம்மிடத்தில்வந்து ஒப்பற்ற பரமசிவனுடைய திருவடியிற் சேரக்கடவையென்றுசொல்லி. எ - று.

பரசு - கோடரி. (ருஎ)

எடுத்துறழுயங்கிகின்றவேந்திழைக்கினிதுகூறி
யடுத்தாற்சேனைமுற்றுமவன்றுணையாகத்தூண்டி
மடுத்தொலிமுரசமார்ப்பவாழ்த்தினன்மருமான்றன்னை
விடுத்தயன்விமானமூர்ந்துவெள்ளிவேதண்டஞ்சேர்ந்தான்.

(இ - புரை.) தன்புத்திரியையெடுத்து முகத்தோடு முகமுறத் தழுவி, அந்தமாதுக்கு இனிய உபசாரவார்த்தைகள் சொல்லிப் பொருந்திய சேனைகளையெல்லாம் ராசகுமாரனுக்குத் துணையாகச்செல்லும்படி அனுப்பி, ஒளிபொருந்திய பேரிகைவாத்திய முழங்கத்தக்கதாக வாழ்த்துதல்செய்து, மருமகனுக்கு விடைகொடுத்து, (அதற்குமேல் அந்த வித்தியாதரன்) பிரம லோகத்து விமானத்தி லேறிச்சென்று, கைலையைச்சேர்ந்தான். எ - று.

மருமான் - மருகன். வேதண்டம் - மலை (ருஅ)

குங்குமக்குவடுபோலக்குவிந்தெழுவயிரத்தோளான்
மங்கையர்க்கரசியஞ்சுமதியெனுந்திருவினேடும்
பங்கபத்தண்டார்முன்னேன்புனடவாப்பதாதிசூழத்
தங்குலக்குரிமையானவிதர்ப்பதேசத்தைச்சார்ந்தான்.

(இ - புரை.) (வித்தியாதரன்போனபின்பு) குங்கும மலைபோலத் திரண்டெழுந்த திண்ணிய தோள்களையுடைய ராசகுமாரன் (அழகு முதலிய வைகளா

ல்) மாதாகளுக்கு அரசியாகிய அஞ்சுமதியென்னுந் தன்மனைவியுடன் குளிர்ச்சிதங்கிய தாமரைமாலையணிந்த பிராமணனாகிய தமையன் தன் அருகில்வரவும் சேனைகள்சூழவுஞ்சென்று, தன் குலத்தாருக்கு உரியதாகிய விதர்ப்ப தேசத்தைச் சேர்ந்தான். எ - று தன்குலக்கு இதில் அத்துச் சாரியை குறைந்து நின்றது. (ருகூ)

நெடும்படைப்பகைவரெல்லாநேர்ந்துபோர்தருகவன்றேல்
அடும்படைத்தொழில்கைவிட்டெம்மடிப்பணிசெய்கதந்த
மிடும்பினைத்தடியவந்தேம்யாமெனவிறைமைசாற்றி
முடங்கலிறபொறித்துத்தூதிற்போக்கினன்முழவுத்தோளான்.

(இ - புரை.) இப்படியாக விதர்ப்பதேசத்தைச்சேர்ந்த மத்தளம்போலுந்திரண்டதோள்களையுடையதருமகுத்தனென்னும் ராசகுமாரன், மிகுந்தசேனைகளையுடைய பகைவர்களாகிய மன்னவர்களே! நீங்களெல்லோரும்வந்து சண்டைசெய்யுங்கள்; இல்லாவிட்டால் போர்த்தொழிலைவிட்டு நம்முடைய பாதத்தைவணங்கிக் குற்றேவல்செய்யக்கடவீர்கள்; உங்களுடைய அகங்காரங்களை அடக்க நாம்வந்தோமென்று அரசவீரத்தை ஓலையிலெழுதித் தூதர்கள் கையிற்கொடுத்தனுப்பினன். எ-று. (கூ0)

கேட்டமன்னவர்களெல்லாங்கிரித்திண்டோள்குலுங்கநக்காங்
கூட்டரக்கனையசெங்கண்சிவந்திவனொருவனோவெம்
வாட்டிறற்கெதிர்வனென்றுவந்துவெங்களத்தரானார்
கோட்டமில்குணத்துத்தன்மகுத்தனும்போரினேற்றான்.

(இ-புரை ) இவ்வாறு அனுப்பப்பட்ட ஓலையை வாசித்தறிந்த அரசர்களெல்லாரும் மலைபோன்ற புசங்கள் குலுங்கும்படிநகைத்துச் செந்தாமரைமலர் போன்றகண்கள் செம்மைநிறமேற்றிய அரக்குப்போலச்சிவக்கக் (கோபங்கொண்டு);இச்சிறுவனொருவனோ?எங்கள் வாள்வலிக்கு அஞ்சாமல் எதிர்க்கத்தக்கவனென்று (அவமதித்துத்தங்கள்தங்கள்சேனைகளுடன்) வெவ்விதாகிய யுத்தகளத்தில் வந்து சேர்ந்தார்கள்; மாறுபடாத நற்குணத்தையுடைய தருமகுத்தனும் போர்க்களத்தில் எதிர்த்தான். எ - று. நக்காங்கு-இதில்ஆங்கு அசைநிலை. ()

ஏற்றெதிர்மலையவேந்தரொறிபடைவடிவேலேந்திக்
கூற்றெனவுடன்றுசாபங்குழைத்தடுபகழிதூர்த்தார்
வேற்றடந்தானைவீரர்வெருவந்தூறஞ்சியாங்கே
யாற்றலராறைரன்னதரசிளங்குமரன்கண்டான்.

(இ - புரை.) இவ்வாறு எதிரிட்டு யுத்தஞ்செய்ய, பகைமன்னவர்கள் எறிந்து கொல்லத்தக்க ஆயுதங்களையும் வடித்த வேலையையும் ஏந்தி, நமன்போலக் கோபமுள்ளவர்களாய், வில்லைவளைத்துப் பாணங்களைப் பிரயோகஞ்செய்

தார்கள்; (அந்தப்பாணங்கள்பட்டுத் தேர்ப்பாகர்முதலியவர்களுடைய தலை முதலாகிய அவயவங்கள் அறுபட்டுவிழுவதைக்கண்டு பயந்து, தன்படைவீரர் கள்எதிர்நின்று போர்செய்யமாட்டாதவர்களாய்ப் பின்னிட்டோடினார்கள். அதைத்தருமகுத்தனென்னும் ராசகுமாரன் கண்டான். எ - று. சாபம்-வில். பகழி அம்பு. உளறு - துன்பம். (சுஉ)

வரிசிலைகுழையவாங்கிவடிக்கணைதொடுத்துமாற்றார்
விரிபிணக்குவையின்குப்பைவெற்பெனமலியவீட்டிப்
புரையறுவடிவேலேந்தித்தாதையைமுன்னம்போரிற்
றரையினிற்செற்றான்செம்பொற்றலையறத்தடிந்திட்டானே.

(இ - புரை.) வரிந்துகட்டியவில்லை நன்றாகவளைத்துக் கூர்மையுள்ள பா ணங்களைப்பிரயோகஞ்செய்து, பகைவருடைய பிணக் குப்பைகள் எங்கும்பர ந்து மலைகள்போலக் குவியும்படிச்செய்து, முன்புவேலாயுதத்தை யுடையவ னாய் வந்து போர்க்களத்தில் தன்பிதாவின் தலையைப்பூமியில் வீழ்த்தினவனுடை யபொன்மகுடமணிந்த தலையையறுத்துத் தள்ளினான். எ - று. (சுங)

வரிசிலை - வரிந்துகட்டிய வில்லெனப்பொருள்படலால், வினைப்பகுதி வி னையெச்சப்பொருளில்வந்தது; "வரிப்புனைபந்து" என்பதுபோல.

படைமலைவொழிகவென்னப்பணைமுரசறைவித்தம்பொற்
குடை புவிநிழற்றமன்னர்குரைகழற்றாளின்வீழ
இடையிடையமைச்சர்பாதத்தேத்துபுவணங்கிநிற்பத்
தொடையணிமார்பன்றங்கடொன்னகரடைந்துபின்னாள்.

(இ-புரை.) (தருமகுத்தனென்கிற ராசகுமாரன் தன்பகைவனுடைய தலை யை அறுத்துத்தள்ளினவுடன்) இனிப்போர்செய்வதை யொழியுங்க ளென்று பெரிய செயபேரிகையாற்சாற்றுவித்து, அழகியபொன்மயமான வெற்றிக்குடை பூமிக்கெல்லாம் நிழல்செய்யவும் போர்செய்யவந்த மற்றஅரசர்கள் சத்திக்கும் வீரகண்டையணிந்த தன்னுடையபாதத்தில் விழுந்து பணியவும், செல்லுமி டந்தோறும் வரிசைவரிசையாக மந்திரிகள் தன்பாதத்தைத் துதிசெய்து வண ங்கி நிற்பவும், வெற்றிமாலையணிந்த மார்பையுடையவனாய்ப் பழமையாகிய தங் கள் நகரத்திற்போய்ச்சேர்ந்து, மறுநாள். எ - று. (சுச)

மந்திரக்கிழவர்சூழவணங்கலர்வணங்கிவாழ்த்தத்
தந்திரத்தலைவர்போற்றத்தமனியமகுடஞ்சூடி
யைந்தருக்கொடைகண்டேத்தவவனியைமுழுதுங்காத்தான்
கந்திறைத்தழன்றுபாயுங்கடாமுகக்களிற்றினானே.

(இ - புரை.) ஆரவாரத்தோடு கோபங்கொண்டு கட்டுத்தறியை முறிக் கும் மதமொழுகும் யானைப்படைகளுடைய தருமகுத்தவரசன் மந்திரிகள் சூழ்

ந்திருக்கவும், பகைபடன்னரா யிருந்தவர்களெல்லோரும் வணங்கிவாழ்த்தவும், சேனாதிபதிகள்போற்றிசெய்யவும், கற்பகத்தருக்களும்தான் கொடுக்குந் தியாகத்தைக்கண்டு புகழவும்,பொன்மகுடஞ்சூடி பூமிமுழுவதையுங்காத்தான். எ-று.

பஞ்சதருக்கள் அரிச்சந்தனம் கற்பகம் சந்தானம் பாரிசாதம் மந்தாரம். மகுடஞ்சூடி காத்தான் என இயைக்க. (௬௫)

வேறு.

மையணிகண்டன்றனையருச்சித்துவருப்பிரதோடத்தின்வலத்தாற்
செய்யகோறிசைகண்மீச்செலமாலைத்திங்கள்வெண்குடைபுவிகவிப்ப
ஐயநின்னடிமையாமெனத்தெவ்வரடிதொழப்புவிமுழுதாண்டு
துய்யபோகங்களனுகர்ந்துபின்னிறந்துதுணைவியோடரன்பதமடைந்தான்.

(இ - பொ.) கருநிறந்தங்கிய கண்டத்தையுடைய பரசிவப்பெருமானைச் சனிப்பிரதோஷத்தில் அருச்சனை செய்துவந்த பலத்தால் செங்கோலானது அஷ்டதிக்குகளிலும் செல்லவும், பருவகால அந்திப்போதில் உதயமாகும்பூரண சந்திரனையொத்த வெள்ளைக்குடை பூமிமுழுவதையுங் கவித்துக்கொள்ளவும், பகைவராகிய அரசர்கள் இறைவனே நாங்கள் உன்னுடைய அடிமையென்று பாதத்தைவணங்கவும், பூமிமுழுவதையுமாண்டு நல்லபோகங்களை அனுபவித்துப் பின்பு இவ்வுடலத்தைவிட்டுத் தன்மனைவியுடன் சிவபதஞ்சேர்ந்தான். எ - று.

பூரணசந்திரனே குடைக்கு உபமானமாதலால், மாலை என்பதற்கு பருவகால மாலைப்போதைக்கூறினும். (௬௬)

இன்னதேயருளுமிப்பிரதோடமென்னயாம்வழுத்துதற்கெளிதோ
அன்னவாகனனுங்கலுழவாகனனுமறிவதன்றதனுடைப்பெருமை
பன்னகாபரணன்பூசையினிதுபோற்பலந்தரும்பூசையின்றென்று
முன்னைநூன்முழுதுமுணர்ந்தவன்மொழிந்தான்முனிவரரனைவருமகிழ்ந்தார்

(இ - பொ.) சனிப்பிரதோஷ பூசையின்பலனானது இத்தன்மையான இகபரசவுக்கியங்களைத் தருமென்று நாம்விவரித்துச் சொல்வதற் கெளிதல்ல; அதனுடைய பெருமை பிரமதேவரும் விஷ்ணுமூர்த்தியும்அறியத்தக்கதுமல்ல; சர்ப்பாபரணரான பரமசிவனுக்குரிய பூசைகளில் இந்தப்பூசையைப்போலப் பலனைத்தரும் பூசைவேறொன்று மில்லையென்று வேதாகமசாஸ்திரங்களையெல்லாமுணர்ந்த சூதமுனிவர் சொல்லியருளினார். அதுகேட்டு நைமிசாரணிய முனிவர்களும் மனமகிழ்ந்தார்கள். (௬௭)

ஏழாவது-பிரதோஷபூசைமகிமை .அத்தியாயம் முற்றிற்று.

ஆ விருத்தம் ௪௱௩.

சிவமயம்.

எட்டாவது

# சோமவாரவிரதமான்மிய அத்தியாயம்.



சீதமதிப்பிள்ளைவெள்ளையமுதங்காலுஞ்செஞ்சடைமைக்கருமிடற்றுப்பசியசாயன், மாதுவளரொருபுறத்துநீறுபூத்தமாணிக்கமலையனையவருணமேனி, நாதனதுசரித்திரத்தின்மேன்மையின்னுநவில்வனெனத்தவமுனிவரொவருங்கேட்பச், சூதனெனும்புராணமுனிமறைகளுன்குஞ்சொன்னமுனியடிதொழுதுபின்னுஞ்சொன்னான்.

(இ - ள்.) குளிர்ச்சிபொருந்திய இளந்திங்கள் வெண்ணிறமுள்ள அமிர்தகிரணத்தைப் பொழிந்துகொண்டிருக்கும் சிவந்தசடைமுடியினையும், மேகம்போன்ற காளகண்டத்தினையும், பச்சைநிறமுள்ள பார்வதிதேவியார் அமர்ந்த இடப்பாகத்தினையும், நீறுபூத்த மாணிக்கமலையையொத்த செம்மைநிறமுள்ள திருமேனியையுமுடைய பரமசிவனது சரித்திரத்தின் மேன்மையை யின்னுஞ் சொல்லுகிறேனென்று நைமிசாரணியத்தில் தவஞ்செய்யு முனிவர்களெல்லாருங் கேட்கும்படிச் சூதரென்கிற புராணமுனிவரானவர் நான்குவேதங்களையுஞ் சொன்ன வியாசமுனிவர் பாதங்களை மனதில்சிந்தித்து வணங்கிப் பின்னுஞ் சொல்லுகின்றார். எ - று. (க)

நித்தியமாயானந்தவுருவமாகிநிறைவுறும்பொருளாகிக்குறைபடாது, சத்தியமாயனைத்துயிர்க்குமுள்ளீடாகிச்சங்கற்பவிகற்பங்கட்கயலதாகி, வைத்தசிவதத்துவத்தினியல்புதன்னைவருகுரவனருளினினிதுணர்ந்துவாழும், அத்தகையர்பிறப்பாழியிடைநின்றேறியழியாத சிவகதியினடைவரன்றே.

(இ - ள்) முனிவர்களே! நித்தியப்பொருளாயும் ஆனந்தமே திருமேனியாகக்கொண்டவராயும் குறைவுபடாமல் எங்கும் நிறைந்தபொருளாகியும் சத்தியப்பொருளாயும் எல்லாவுயிர்க்குள்ளும் உயிராகியும் சங்கற்பவிகற்பங்களுக்கு அன்னியமாகியும் பொருந்திய சிவதத்துவத்தின் இயற்கையைக் கிருபையால் எழுந்தருளிய ஆசாரியர் அனுக்கிரகித்த முறைமையினால் உணர்ந்து வாழ்கின்ற தன்மையையுடையவர்கள் பிறவிச் சமுத்திரத்தின்கரையேறி அழியாத சிவகதியை அடைவார்கள். எ - று. சங்கற்பம்-மனவியாபாரம். (உ)

வாங்குதிரைச்கடலுடுத்தஞாலமீதின்மண்ணாசைபொன்னாசை மகளிராசை,தீங்குதருமெனக்கருதித்துறந்துதங்கள்சிந்தனையைப்புல னெறியிற்செலுத்தாராகிப், பூங்கனகவரைச்சிலைகொண்டவுணர்மாயப் புரமெரித்தகயிலைமலைப்புனிதன்றாளி, னோங்குமறைநெறியின்வழிபா டுசெய்வோருதரவழிவருங்கவலையொழிப்பர்மாதோ.

(இ - புரை.) அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த பூவுலகத்தில் மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை என்று மூவகையாசைகள் தீங்குதருமென்று கருதி அவற்றைத் துறந்து, தங்கள்மனதை யைம்புலன்வழியிற் செலுத்தாதவர்களாய்ப் பொலிவுள்ளமகமேருவாகிய வில்லைக்கொண்டு அவுணர்களெல்லோரும்மாயும்படித்திரிபுரங்களையெரித்தகயிலாசவாசராகிய சிவபெருமானின் திருவடிகளில் ஓங்கிய வேதவிதிப்படி பூசைசெய்கின்றவர்கள் தாய்வயிற்றில் தங்கிப்பிறக்கும் துன்பத்தை நீங்குவார்கள். எ - று. (௩)

எண்ணரியவிடயங்களுடனேகூடியிடைவிடாதொழுகிடினும்யாவரோனும், கண்ணுதல்வானவனடியைமறவாராகிக்கருத்தினின்வைத்துறுங்காலங்கழிக்குமாந்தர், மண்ணகநீள்வரைப்பின்வருபோகமெல்லாம்வைகறொறுநுகர்ந்துடலமாயபேலை, விண்ணகநாடதனிடைச்சென்றடையுங்காலைவிடயத்தான்வருந்துயரமீள்வரன்றே.

(இ-புரை.) எண்ணரிய விஷயங்களுடனேகூடி இடைவிடாமற் போகாநுபவஞ்செய்யினும் நெற்றிக்கண்ணையுடைய பரமசிவத்தின் திருவடிகளை மறவாதவர்களாய்த் தங்களிருதயத்தில் அத்திருவடியைத் தியானித்துக்கொண்டு காலங்கழிக்குமாந்தர்கள் எவர்களேயாயினும், இப்பெரியவுலகத்தில்வரும் போகங்களை யெல்லாம் நாடோறும் அனுபவித்து இவ்வுடலம்நீங்க, தேவலோகத்தில்செல்லுங்காலத்தில் முன் அனுபவித்த விஷயங்களால் நேரிடத்தக்க துயரங்களை அனுபவிக்கமாட்டார்கள். எ - று. (௪)

நீடுபெரும்போகநுகர்வேட்கையெல்லாநீத்தறியாவொருவனிருவினையினீங்கி, வீடுபெறக்கருதியருந்தவங்கள்செய்தும்வேறுசமயத்தடைந்துமாவதுண்டோ, கோடுயருநெடுங்கயிலைமலையின்மன்னுங்கொழும்பவளமணிவரையினருணடாதத், தேடவிழுமலரின்வழிபடுவானியினிரும்போகநுகர்ந்துயர்வீடெய்துவானே.

(இ - புரை.) மிகுதியான போகங்களை அனுபவிக்க வேண்டுமென்கிற ஆசைகளைநீக்கவறியாத ஒருவன், நல்வினை தீவினையென்னும் இருவினையில் நின்றும் நீங்கி, மோக்ஷத்தை அடையவேண்டு மென்கிற எண்ணங்கொண்டு, அருமையாகிய தவங்கள்செய்தும், மற்றொருசமயத்திற் சென்றும், கிடைக்கும்ப

லன் வேறுமுண்டோ? சிகரங்களுயர்ந்த கயிலாயகிரியில் வீற்றிருக்கும் செழுமையான பவளமலைபோன்ற பரமசிவத்தின் சிவந்ததிருவடிகளில் இதழ்கள் விரிந்த மலர்களால் வழிபடுவானாகில், இம்மை மறுமை யின்பங்களை அனுபவித்து அதற்குமேற் பதவிகளுக்கெல்லா மேலாகிய மோக்ஷத்தை அடைவான். எ - று. அருணம் - செந்நிறம். (௫)

பிறையி னொடுநறைபி தழிந்தொடையும்வானிற்பெருகிவருஞ்சுரநதியுமுடித்தவேணிக், கறையணியுமணிமிடற்றுமுக்கட்செய்யகளிற்றுரிவையந்தணன்றாள்பணியுமாந்தர், மறைகளொருநான்குமவற்றங்கமாயமன்னுபுராணங்கள்பதினெட்டுநாடி, யறையவரிதாயடியரெளிதிற்றேருமழிவில்பெருஞ்சிவகதியையடைவர்தாமே.

(இ-புரை.) இளஞ்சந்திரனுடன்வாசனைதங்கிய கொன்றைப் பூமாலையையும் ஆகாயத்திற் பெருகிவருகின்ற கங்காநதியையு முடித்துவிளங்கும் சடாமகுடமும் விஷந்தங்கிய காளகண்டமும் திரிநேத்திரமும் யானைத்தோற்போர்வையுமுடையபரமசிவனது திருவடியைப் பணியுமாந்தர்கள், நான்குவேதங்களும் அவைகளுக்குரிய ஆறங்கங்களும் நிலைபெற்ற பதினெண்புராணங்களும் ஆராய்ந்தறிந்து, சொல்வதற்கரியதாய் அடியவர்கள் எளிதில் உணரும்படியான அழிவில்லாத பெரியசிவகதியை அடைவார்கள். எ - று.

செய்யகளிறு என்றது யானைகளுக்குக்கூறு மிலக்கணங்களமைந்த தென்பது கருத்து. பரமசிவத்தை அந்தணரென்றது தேவோத்கிருஷ்டத்தை நோக்கியென்க. (௬)

சொன்னவிவையெவற்றினுக்குமேலாகிச்சுருதிசிவாகமம்புகலுஞ்சோமவார,மன்னிவரும்பிரதோடந்தோறுஞ்செம்பொன்மலைச்சிலைவானவனையுலகங்களீன்ற, கன்னியுடனுகமத்தின்வழிதப்பாதுசடிமலரின்வழிபாடுபுரியுமேலோ, ரின்னலெனும்பெருங்கடலின்கரைநின்றேறிபகபரத்தும்போகநுகர்ந்திடுவரன்றே.

(இ - புரை.) பரமசிவத்தைப் பூசிக்கும்படி இதுவரையிற்சொல்லியஅந்த பூசைகளெல்லாவற்றினு முயர்ந்ததாய், வேதங்களிலும் சைவாகமங்களிலுஞ் சொல்லப்படுகிற சோமவாரத்திற் பொருந்திவருகிற பிரதோஷந்தோறும்,மேருவை வில்லாகவுடைய பரமசிவத்தையும் கன்னியாகிய அம்பிகையாரையும் ஆகமவிதிதவறாமல் மணமலர்களால் ஆராதனைசெய்யும் பெரியோர்கள், துன்பமென்கின்ற பெரியசமுத்திரத்தின் கரையிவர்ந்து இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் அனுபவிப்பார்கள். எ - று. (௭)

இல்லறத்தின்கிழமைதனைப்பூணுமாந்தரியல்புடனில்லறக்கிழமைபூண்டமாந்தர்,தொல்லறத்தின்கொழுநருடன்வாழுமாதர்துணைவ

ர்தமையிழந்துதுயருழக்குமாதர், புல்லறத்தையொருவியரன்சோம வாரபூசனையேபுரிவரெனிற்புவனமீதி, னல்லலறுத்தன்னவருண்ணி னைந்தவெல்லாமவர்நினைவின்படியேவந்தடையுமன்றே.

(இ - புரை.) இல்வாழ்க்கையினுரிமையைப் பூணாதவர்களும், கிரமமாக இல்வாழ்க்கையைப் பூண்டவர்களும், பழமையாகிய அந்த இல்வாழ்க்கையில் தத்தங்கணவருடன் வாழுமாதர்களும், கணவர்களையிழந்து துயருறும் மாதர்க ளும், பொருந்திய அந்த இல்வாழ்க்கையைநீங்கிப் பரமசிவனது சோமவாரபூச னையே செய்வார்களானால், இவ்வுலகத்தினிடத்தில் துன்பங்கணீங்கி அவர்க ள்மனதில் கருதியபொருள்களெல்லாம் நினைவின்படி அடையப்பெறுவர். எ-று.

"புல்லறத்தையொருவி யரன்சோமவாரபூசனையே புரிவரெனின்" என்ப தற்கு செய்தற்குரிய ஏனையதருமங்களைவிட்டேனும், இச்சோமவார வழிபாட் டினை அவசியம் செய்யவேண்டுமென வற்புறுத்திக் கூறுதலுமொன்று. (அ)

என்றுபலதருமமெடுத்திசைத்தேமீட்டுமிமயமலையரையன்மட ப்பாவைகேள்வன், றொன்றுபடுமாகமங்கடோறுமுண்மைச்சுருதிதொ றும்புகன்றருளுஞ்சோமவாரத், தொன்றுபெருங்கதையனந்தமவற்று ண்மின்னுறொளியிழைசீமந்தனியென்றுலகம்போற்றுங், குன்றனைய பெருந்தவத்துக்கோதினீதிக்கொம்பனையாணற்றகதைகூறுவாமே.

(இ - புரை.) இத்தகைய பலவாகிய சிவதருமசரித்திரத்தைச் சொல்லி, மீட்டும் பார்வதிதேவியார் கணவராகிய பரமசிவம் பழமையும் உண்மையுமா கிய ஆகமங்களிலும் வேதங்களிலும் சொல்லியருளிய சோமவாரபூசையைக் குறித்த சரித்திரங்களனந்தமாகும் அவைகளுக்குள் மின்போலும் ஒள்ளிய ஆபரணங்களணிந்த சீமந்தனியென்று உலகம் விதந்துகூறும் மலைபோலும் தவத்தினையும குற்றமற்ற நீதியினையுமுடைய ஒருமாது சோமவாரவிரதம் அனுஷ்டித்த கதையினைச் சொல்லுவோமென்று கூறுவாராயினர். எ - று. மீட்டும் கூறுவாம் எனமுடிக்க. (கூ)

வேறு.

இளங்கதிர்நுழைகலாவிருள்கொள்பூம்பொழில்
வளங்கெழுமாரியவர்த்தநாட்டிறைன்
விளங்கொளிமணிமுடிமிலைந்தவேந்தர்கோ
னளந்தறிவருங்கலைக்காழியேயனான்.

(இ - புரை.) சூரியனது இளங்கதிரும் நுழையக்கூடாத இருள்சூழ்ந்த பூஞ்சோலைகளின் வளப்பங்கள்பொருந்திய ஆரியாவர்த்த நாட்டையுடைய விளங்குகின்ற இரத்தினமகுடமணிந்த அரசர்களுக்கு அரசனுயிருப்பவனும், அளந்தறிவிடுதற்கரிய கல்வியுணர்ச்சியில் சமுத்திரத்தை யொத்தவனும். எ-று.

எண்டிசைமுழுவதுமெழுதுவண்புகழ்
மண்டலிகர்க்கெலாமகுடம்போல்பவன்
புண்டருகொழுநிணப்புலவுநாறுவேற்
றிண்டிறற்சித்திரவருமனென்பவே.

(இ - புரை.) அஷ்டதிக்குகளிலும் எழுதிய வளவிய புகழுள்ளவனும் அரசர்களுக்கெல்லாம் மகுடம்போலிருப்பவனும் போர்முகத்தெதிர்க்கும் பகைவருடைய மாமிசத்தின்கொழுவிய நிணப்புலால்நாற்றம் நாறும் வேற்படையையுடையவனும், திண்ணிய வெற்றியையுடையவனுமான சித்திரவருமனென்னும்பெயருள்ள ஒரு அரசனிருந்தான். எ - று. என்ப ஏ அசைகள். புண் - மாமிசம். (கக)

ஆயவனெண்ணிலாமகங்களாற்றியுந்
தாயெனவுயிரெலாந்தழையப்போற்றியு
மீயுறுமுகிலெனவெறுக்கைமாமழை
தூயநன்மறையவர்சுமப்பநல்கியும்.

(இ - புரை.) அந்த அரசன் அளவில்லாத யாகங்கள்செய்தும், தாயைப்போல உயிர்களெல்லாந் தழையும்படி ஆதரித்தும், ஆகாயத்திற்சஞ்சரிக்கும் மேகம்போலப் பொன்மழையைப் பரிசுத்தர்களான பிராமணர்கள் சுமந்துகொண்டு போம்படி கொடுத்தும். எ - று. (கஉ)

மரகதவரையெனவயங்குமாதவன்
குரைகழல்வணங்கியுங்குன்றவில்லிறைற்
புரமெரிகொளுவிடப்பொருதவன்கழ
லிரவினும்பகலினுமலர்பெய்தேத்தியும்.

(இ - புரை.) மரகதமலைபோலும் விளங்கும் விஷ்ணுமூர்த்தியின் ஒலிக்கும் வீரகண்டையணிந்த திருவடிகளை வணங்கியும், மேருவில்லினாற்றிரிபுரத்திற்றீப்பற்றப் போரியற்றிய பரமசிவனுடைய திருவடிகளை இரவும் பகலும் பூவிட்டிறைஞ்சித் துதிசெய்தும். எ - று. (கங)

முழவொலிபடுகடன்முத்தவெண்குடை
நிழலிடையுலகெலாநெறியிற்காக்குநாட்
குழன்மொழிமனைவியர்வயிற்றிற்கொல்சின
மழவிடையெனச்சிலமகட்பெற்றனரோ.

(இ-புரை) முழவம்போல ஓசை பொருந்திய கடலினிடத் துண்டான முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட வெள்ளைக் குடை நிழலில் முறையாக உலகத்தைக் காக்கு நாளில், வேய்ங் குழல்போலும் இனிய வசனத்தையுடைய மனைவியர்களிடத்துக் கொல்லத்தக்க கோபத்தையுடைய இளமையான இடபம் என்று சொல்லத் தக்க சில புத்திரர்களைப் பெற்றான். எ - று. (கச)

பெற்றபினிறைமகன்பெண்மகாரெமக்
குற்றிலரொனநினைந்தொன்றலாதன
நற்றவமிழைப்பவோர்மனைவிநாண்மலர்ப்
பொற்றொடியெனவொருதிருவைப்பூத்தனள்.

(இ-புரை) புத்திரர்களைப் பெற்றபின் அவ்வரசன் பெண் குழந்தைகள் நமக்குண்டாக வில்லையே யென்று கருதிப் பலபல நல்ல தவங்களைச் செய்ய; ஒரு மனைவியானவள் தாமரைப்பூவில் வீற்றிருக்கும் மகா லட்சுமியைப் போன்ற ஒரு புத்திரியைப் பெற்றாள். எ - று. (கரு)

(வேறு-)

தாமந்திகழ்தருமொய்ம்பொடுதழைசித்திரவருமன்
சீமந்தனியெனவேயருள்செல்விக்ககமகிழ்வா
னுமந்தனைமறைநீதியினன்னாளிடைநவிலா
வாமந்திகழுமையைத்தருமிமவானின்மகிழ்ந்தான்.

(இ-புரை.) வெற்றிமாலை பிரகாசித்துக்கொண்டிருக்கும் புசங்களோடு தழைந்துள்ள சித்திர வருமனென்னு மரசன் தான் பெற்ற புத்திரிக்கு மனமகிழ்ச்சியுடன் வேத விதிப்படி நல்ல தினத்தில் சீமந்தனி யெனப்பேர்கூறி சவுந்தரியமுள்ள உமயவளைத் தனக்குப் புத்திரியாகப் பெற்ற மலையரையன் போல மகிழ்ச்சி யடைந்தான். எ-று. (கசு)

மதவெங்களிவிறல்யானையமன்னன்றருமேவற்
குதவுந்தனதுழையோர்களையுயர்சோதிடநூலின்
விதமொன்றியமறைவாணரையழையின்னெனவிடுப்பக்
கதமொன்றியகாலிற்கடிதேகிக்கொடுவரவே.

(இ-புரை.) மதமயக்கங் கொண்டிருக்கும் வெற்றிபொருந்திய யானைப் படையுடைய அவ்வரசன் தான் உத்தரவு செய்யும் ஏவலுக்குத் தடையில்லாமல் உதவுகின்றவர்களாகிய ஏவலாளிகளை நோக்கி, உயர்ந்த சோதிட சாஸ்திர வகைகளை யுணர்ந்த சாஸ்திரிகளை யழைத்துக் கொண்டு வாருங்களென்று அனுப்ப; அவர்கள் சண்டமாருதம் போல அதி விரைவாகச் சென்று அழைத்துக் கொண்டு வர. எ - று. (கஎ)

கண்ணுற்றனனவரைப்பலகணிதத்துறைவல்லீர்
பெண்ணிற்கணியெனயானருள்பெண்ணின்றிறனெல்லா
மண்ணிற்கருதொண்ணுநிலைவருசோதிடவிதியா
லெண்ணித்துணிவுறுசாதகமிடுகென்றிறைசொன்னான்.

(இ-புரை.) வந்த சோதிஷ சாஸ்திரிகளைப் பார்த்துப் பலவாகிய சோதிஷ சாஸ்திர முணர்ந்தவர்களே! பெண்களுக்கு ஆபரணம் போல நான் பெற்ற இப் பெண்ணிற்குச் சாதகபலன்களை யெல்லாம் இவ்வுலகத்தில் அறிதற்குரிய நிலைமையினை யுடைய சோதிஷ சாஸ்திர விதியால் ஆராய்ந்து, நிச்சயமான சாதக மெழுதுங்க ளென்று அவ்வரசன சொன்னான். எ-று. (கஅ)

என்னுமுனமொருவேதியனவடன்னிருவினையு
முன்னுநிலைபெறுசாதகமுற்றும்படியெழுதிப்
பொன்னார்கனகழன்மன்னவபுவிமாமகள்புணரு
மன்னாவிவைகேண்மோவெனவழுவாதுரைசெய்தான்.

(இ-புரை.) இவ்வாறு சொல்வதற்குமுன் ஒரு பிராமணன அந்தப் பெண்ணினுடைய இரு வினையையும் ஆராய்ந்து, நிலை பெற்ற சாதகமுங் குறைவில்லாம லெழுதிப் பொன்னாற் செய்யப்பட்ட வீரகண்டை யணிந்தவனும் பூதேவியை மணந்தவனுமான மன்னவனே! இவை கேளென்று தவறுமற் சொன்னான், எ-று. (கக)

(வேறு.)

மணத்தினினுமையாண்மகப்பெறற்கதிதிவடிவினினுயர்தமயந்தி
குணத்தினிற்கமலைகற்பினிற்சனகிகொழுங்கலைக்கியன்மகளென்னப்
பணத்துறையுலகமுழுவதும்புகழும்படிபதினாயிரம்பருவந்
தணப்பிலளாகக்கொழுநனோடுறையுந்தராபதிநின்மகளென்றான்.

(இ-புரை) அரசனே! உம்முடைய புத்திரி கலியாணத்தில் உமையவளென்று சொல்லத் தக்கவள், புத்திரர்களைப் பெறுவதில் அதிதியென்று சொல்லத் தக்கவள், சவுந்தரியத்தில் உயர்ந்த தமயந்தி யென்று சொல்லத் தக்கவள், நற்குணத்தில் திருமக ளென்னத் தக்கவள், பதிவிரதா தருமத்திற் சீதை யென்னத் தக்கவள், செழுமையுள்ள கலைகளுக்குச் சரஸ்வதி யென்று சொல்லத் தக்கவளென்று சொல்லி, ஆதிசேஷன் முடியில் பொருந்திய இவ் வுலக முழுவதும் புகழும்படி பதினாயிரவருஷங் கணவனை விட்டுப் பிரியாமல் வாழ்ந்துகொண் டிருப்பாள் என்று கூறினான். எ-று. (உ௦)

என்றவனுரைத்தசாதகப்பொருளினியல்பெலாங்கேட்டுளமகிழ்ந்து, பொன்றழைதிணிதோட்புரவலனவற்குப்பொருணனிகொடுத்த

னனிருப்பப், பின்னையுமொருவனேழிரண்டாண்டிற்பிறைநுதன்மங்கலமிழக்கும், வென்றிவேலிறைவவென்றலுநிருபன்வெய்துயிர்த்தணையிசைவிழுந்தான்.

(இ-புரை.) இவ்வாறு அந்தப் பிராமணன் சொல்லின சாதகப் பொருளி னியல்பை யெல்லாம் கேட்டு மனமகிழ்ந்து, அழகு நிறைந்த திண்ணிய தோளையுடைய அரசன் அவ் விப்பிரனுக்கு மிக்க பொருள் கொடுத்து, (சந்தோஷத்துடன்) இருக்க; மற்றொரு பிராமணன் (சாதகம் பார்த்து) வெற்றி பொருந்திய வேலாயுதத்தை யுடைய அரசனே! இந்தப் பெண்ணானவள் பதினான்காம் வருஷத்தில் மாங்கலிய மிழப்பா ளென்று சொன்னான். அப்படிச் சொல்லவே, அவ்வரசன் பெரு மூச்சு விட்டுக்கொண்டுசோகத்தினால் ஆசனத்தின்மேல் விழுந்தான். எ-று. (உக)

பைவிரியரவமிடிவிழவெருவும்பான்மைபோலோரிருகன்னல்
வெய்துயிர்த்திருந்துகணிதரைப்போக்கிவிதிவலியறிகுவமென்ன
செய்தவழ்வடிவேற்புரவலனுளத்தினினைவுடனொழுகுமந்நாளின்
மைவிழிச்செவ்வாய்வெண்ணகையவட்குமங்கையம்பருவம்வந்ததுவே

(இ-புரை.) ப்கையவர் நிணந்தோய்ந்த வேலேந்திய அவ்வரசனானவன் படத்தை விரித்த சர்ப்பம் இடி விழப் பயந்து சுருண்டு விழுந் தன்மைபோல, இரண்டு நாழிகை வரைக்கும் பெரு மூச்சு விட்டுக்கொண் டிருந்து, பின்பு ஒருவாறு தெளிந்து, சோசியர்களை அனுப்பிவிட்டு, ஊழ் வினையின் வன்மையை அறிவோமென்று சிந்தித்திருக்கும் நாளில் மையணிந்த கண்களையும் சிவந்த வாயினையும் வெண்மைநிறம்பொருந்திய தந்தங்களையு முடைய அந்தக் கன்னிகைக்கு அழகிய மங்கைப் பருவம் வந்தது. எ - று. (உஉ)

மங்கையம்பருவம்வருதலுமவளைவழிபடுசேடியர்குறுகித்
திங்கள்வாணுதனீயேழிரண்டாண்டிற்றிருவிழந்திருக்குவையென்ன
வங்கவள்வெருவியாக்கியவர்க்கியாகியமுனிவரன்மனைவி
தங்கியசாலைசென்றவட்டொழுதுதன்னுறுதுயர்நிலைசொன்னாள்.

(இ-புரை.) மங்கைப் பருவம் சேர்ந்த மாத்திரத்தில் அவளைப் போற்றி வரும் தோழிகள் வந்து, திங்கள்போலும் ஒளி தங்கிய நெற்றியினை யுடையவளே! நீ பதினான்காம் வருடத்தில் மாங்கலியம் இழந்துவிடுவை யென்று சொல்ல ; (அதைக் கேட்டு) அவள் பயந்து, யாக்கியவர்க்க முனிவர் பத்தினியாகிய மயித்திரை யென்பவளிருக்கும், பர்ன்ன சாலைக்குப்போய் அவ்வம்மையைத் தொழுது, தனக்கு நேரிட்டிருக்கிற துயர் நிலையைச் சொல்லுவாளாயினாள். எ - று. திரு என்பது ஈண்டு மாங்கலியத் திருவை. (உ௩)

அருந்ததியனையகற்புடையன்னையடியனேனுரைப்பதொன்றுளதாற், பெருந்திருவிழப்பன்யானெனக்கணிதர்பிதாவுடனுரைத்தனரதனாற், பிருந்தியநின்னைவந்தடைந்தனனித்தீவினைப்பிணியகற்றுதற்கோர், மருந்தருள்கென்றென்றடிதொழுதிரப்பவரமயித்திரையும்பின்னுரைத்தாள்.

(இ - ள்.) அருந் ததியை யொத்த கற்பினையுடைய அம்மையே! அடியேன் விண்ணப்பித்துக்கொள்வதோர் வார்த்தையுண்டு; (அது என்னவெனில்) நான் பதினான்காம் வருஷத்தில் மாங்கலியம் இழப்பே னென்று சோதிஷர்கள் என் பிதாவுடன் சொன்னார்கள்; அதனால் கற்பினால் மேன்மை பெற்ற உன்னைச் சரணென்றடைந்தேன் ; இந்தத் தீவினையாகிய நோயை நீக்குவதற்கு ஒரு அவுஷதம் கிருபை செய்ய வேண்டுமென்று பாதத்தை வணங்கி யிரப்பச் சிரேஷ்டமுள்ளமயித்திரை யென்பவள் பின்பு சொல்லுகிறாள். எ-று. (உச)

புரிகுழலணங்கேசோமவாரத்திற்புனிதநீரினிதுடனாடிப்
பரிவுடனுணவுமுதலியதுறந்துமோனமாய்ப்பவித்திரையாகித்
தெரிமலர்கொணர்ந்துபரமனோடுமையைச்சிவாகமவிதிமுறைவழுவா
தரியபூசனைசெய்தருமறையவர்க்குமுவப்புடனன்னமுமளித்தே

(இ - ள்.) கட்டுப்பட்ட அளகத்தையுடைய பெண்ணே! சோமவாரத்தில் பரிசுத்தமாகிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, வெறுப்பின்றி ஆகாரமுதலானவைகளைநீக்கி, மவுனமாய்ப் புனிதையாய் மலர்களை ஆய்ந்துகொண்டுவந்து, பரமசிவனுடன் பார்வதிதேவியாரையும் சைவாகமவிதி தவறாமற்பூசைசெய்து, அரிய பிராமணர்களுக்குச் சந்தோஷத்துடன் அன்னமுங் கொடுத்து. எ - று. பவித்திரம் - சுத்தம். (உரு)

இன்னணமரனையேத்திநீவழிபட்டீசனேயென்னுறுதுணையே
யுன்னுடையருளேவேண்டுவனென்னவுரைத்துநல்விரதமுமுடித்தால்
மன்னியவிரதந்தரும்பெருநலத்தான்மாதுநின்கணவனுக்குரிய
தன்னுடைஞாலமல்லதுவேண்டுந்தராதலமளவில்வளவரம்.

(இ - ள்.) இந்தப்பிரகாரம் பரமசிவனை ஆராதித்துத் துதிசெய்து, ஈசனே! எனக்குற்ற துணையே! தேவரீருடைய திருவருளையே விரும்புகிறேனென்று பிரார்த்தித்து, நல்லவிரதத்தையும் நிறைவேற்றினால், நிலைபெற்ற அவ்விரத விசேடத்தால் மாதே! உன்னுடைய கணவனுக்குரிய தேசமேயல்லாமலும் மற்றும் விரும்புந்தேசங்களும் அளவிறந்தன கிடைக்கும். எ - று.

விரதமுடித்தலாவது - உத்தியாபனஞ்செய்தல். (உசு)

சந்தமுமலருமரிசனத்துடனேசாத்தினால்வளம்பலதழைக்கும்
நந்தலிற்றூபமளித்திடினுடலநறுங்கடிகமழுமதல்லா
னந்தமிறீபமளிக்கினேருளவாமவியளித்திடினுணவுளதாம்
பைங்தொடிபாகுவெள்ளிலையளிக்கிற்பதுமமாளிகைமயில்சேரும்.

(இ - புரை.) சீமந்தனியே! மஞ்சளுடன் சந்தனமும் மலர்களும் சாத்தினால் பலவளங்கள் உண்டாகும்; கெடுதலற்ற தூபங்கொடுத்தால் சரீரம் நல்லவாசனை கமழ்ந்துகொண்டிருக்கும்; இதுவுமன்றி குறைவுபடாத தீபங்கொடுத்தால் அழகுண்டாகும்; அன்னம் நிவேதித்தால் ஆகாரம் உண்டாகும்; பசியவளையணிந்த பெண்ணே! பாக்கும்வெற்றிலையும் நிவேதித்தால் பதுமாசனியான திருமகள் நிவாசங்கிடைக்கும். எ - று.

அரிசனம் - மஞ்சள். ஏர் - அழகு. (உஎ)

அஞ்செழுத்தோதினட்டமாயோகமடைந்திடுமாகுதிபண்ணி
னெஞ்சினினினைத்தகருமங்கள்யாவுநினைத்தவாறெளிதினிற்கூடும்[ பூ
வஞ்சிநுண்ணிடையாயந்தணர்க்கடிசின்மகிழ்வுடன்வழங்கின்மற்றத
லெஞ்சலிற்றகுதிக்கடவுளரெவருமிருங்களியெய்துவரறிநீ

(இ - புரை.) பஞ்சாக்ஷரஞ் செபித்தால் அஷ்டமாயோகஞ் சித்தியாம்; சிவயாகஞ்செய்து பூர்ணாகுதியமைத்தால் இஷ்டசித்திகள் எளிதிற்கைகூடும்; பூங்கொடிபோல நுண்ணிய இடையை உடையவளே! மகிழ்ச்சியுடன் அந்தணர்களுக்கு அன்னங்கொடுத்தால் அதனால்குறைவற்ற மேம்பாட்டினையுடைய தேவர்களெல்லாரும் மிகுந்தகளிப்பையடைவார்களென்றுநீயறிவாயாக. எ-று

என்னுரைவழாமல்யான்மொழிந்தருளுமிந்தவாறிளமதிக்கொழுந்து, மன்னுசெஞ்சடிலவானவன்றனைமாதுடன்வழிபடத்துணிந்தா, லுன்னுடையுளத்திற்கவலையுந்துயருமொழிந்திடுமுண்மையீதென்னாப், பன்னருஞ்சிறப்பிற்பார்ப்பனியுரைத்துப்பைங்தொடியேகெனப்பணித்தாள்.

(இ - புரை.) என்மொழி தவறாமல் நான்சொல்லிய பிரகாரம் இளந்திங்கட் கொழுந்துபொருந்திய செஞ்சடையையுடைய பரமசிவனைப் பார்வதியாருடன் ஆராதனைசெய்யத் துணிந்தால், உன்னுடைய மனவியாதியும் துயரும் நீங்கிவிடும், இதுநிச்சயமென்று சொல்லுதற்கரிய சிறப்பினையுடைய பிராமணஸ்திரியாகிய மயித்திரையென்பவள் சொல்லிப் பசியபொன்னாற்செய்த வளையலணிந்த மாதே! நீ உன்னகத்திற்குச் செல்லென்று உத்தரவு செய்தாள். எ - று. (உ௯)

தொழுகுலத்தணங்குபுகன்றவைகேட்டுச்சோமவாரந்தொறுஞ்
சிவனை, வழுவறவுமையோடாகமவிதியின்மட வரல்வழிபடுநாளி, னெ
ழுவுறழ்திணிதோளனன்றருகுமரனிந்திரசேனன்மாமதலை, முழுவலி
பெறுசந்திராங்கதனென்போன்முருகனிற்கட்டழகுடையோன்.

(இ - புரை.) பிராமணகுல மயித்திரையென்னும் மாது சொன்னவை
களைக்கேட்டுச் சீமந்தனியென்பவள் சோமவாரந்தோறும் யாதொரு வழுவுங்
கலவாமல் ஆகமவிதிப்படிப் பார்வதிதேவியாருடன் பரமசிவனை ஆராதனைசெய்
யுநாளில், எழுத்தூணம்போலும் பலம் பொருந்திய தோள்களையுடைய
நளசக்கிரவர்த்தியின் பௌத்திரனும் இந்திரசேனனுடைய புத்திரனுமான
மிகுந்த பராக்கிரமம் பொருந்திய சுப்பிரமணியரைப்போல மிகுந்தசவுந்தரிய
முள்ளசந்திராங்கத னென்பவன். எ - று. (ந௦)

அன்னவன்றனக்குச்சித்திரவருமனரியமாதவத்தினினீன்ற
தன்னுறுதநயைவனிதையர்க்கணங்காய்த்தயங்குசீமந்தனியென்னுங்
கன்னிமையமகிழ்ந்துகொடுத்தலும்விதியிற்கடிமணமுடித்துநன்னலங்க
ளின்னமுதாகச்சிறிதுநாணுகர்ந்தங்கிருந்தனனிருந்திடுநாளின்.

(இ-புரை.) அந் தன்மையுள்ள சந்திராங்கத னென்பவனுக்குச் சித்திர
வருமனென்னும் அரசன் அரிய தவத்தினற் பெற்ற தன்னுடைய புத்திரியும்
மாதர்களுக்குட் டெய்வம்போல்பவளுமான சீமந்தனி யென்னுங் கன்னிகை
யை மகிழ்ச்சியுடன் பாணிக்கிரஹணம் செய்விக்க; அவனும் விதியோடு மணந்
து சிலநாள் நல்ல இன்பங்களை இனிய அமுதம்போல அனுபவித்துக்கொ
ண்டிருந்தான்; அப்படி யிருக்கும் நாளில். எ – று. (நக)

( வேறு. )

தருவெனவழங்குவண்மைச்சந்திராங்கதனுநண்பின்
மருவியதோழர்தாமுமணிநிறயாணர்நன்னீர்
பெருகியயமுனையாற்றிற்பெயர்தருதோணிமீது
வெருவிலராகியன்னேறினர்விதியின்கொட்பால்.

(இ-புரை.) கறபக விருக்ஷம்போல வழங்கும் வளமையினை யுடைய
சந்திராங்கதனும், அவன்தோழர்கள் சிலரும் நீலநிறம்பொருந்திய அழகிய நீர்
பெருகுகின்ற யமுனையாற்றினிடத்தில் செல்லுகின்ற தோணியின்மேல் விதி
வசத்தால் அச்சமுறுதவர்களாய் ஏறினார்கள். எ - று. யாணர் - அழகு. (நஉ)

திரையெடுத்தெறிதலானுஞ்செலவிடுகடுப்பினாலும்
கிரைநிரைமாந்தர்தொக்குநெருங்குதலானுநீருள்

விரைவொடுதுவன்றிப்பாயும்வேகமிக்கிடுதலானுங்
கரைகடப்பரிதாயோடங்கவிழ்ந்ததுகவிழ்தலோடும்.

(இ-புரை.) அலைகள் அதிகமாக வீசுவதினாலும் செல்லும்படி விடுகிற விரைவினாலும் வரிசை வரிசையாக மனிதர் சேர்ந்து நெருங்கி யிருப்பதினாலும் நீரி னிடத்து விரைவுடன் பாயானது வேக மிகுந்து தள்ளுதலினாலும் கரை கடப்ப தரிதாய் அவ்வோடம் கவிழ்ந்தது; அடபடி கவிழ்ந்த மாத்திரத்தில். எ - று. கடுப்பு - விசை. (கக)

சந்திராங்கதனுந்தோழர் தாங்களும்புனலின்மூழ
வெந்திறலிடங்கரநதத்தோழனைவிழுங்கவேந்தன்
முந்தைநல்வினையின்பான்மைமுளைத்தெழவுரகர்வாழு
மந்தமில்பிலத்துப்புக்கோரருநதிக்கரையைச்சார்ந்தான்.

(இ-புரை.) (அந்தத் தோணியி லிருந்த) சந்திராங்கதனும் தோழர்களும் நீரில் மூழ்கிவிட; வெவ்விய வலியுள்ள முதலைகள் அந்தத் தோழரை விழுங்கி விட்டன. சந்திராங்கதன்மாத்திரம் முற் சென்மங்களிற்செய்த தருமம் முன வந்துதவ நாகர்கள் வாழும் முடிவற்ற பிலத்துக்குட்போய் அவிடத்திருக்கும் அரியநதிக் கரையைச் சார்ந்தான். எ-று. (கச)

நதியினின்றுடுகின்றநாகர் தமகளிர்நோக்கி
யதிசயமெய்தியின்னோனார்கொலென்றருகுசேர்ந்து
புதியவன்றன்னைத்தங்கட்க்கன்புரவுபூண்டு
வதிதருங்கோயிலாங்கண்வருகெனக்கொண்டுபுக்கார்.

(இ-புரை.) அந்த நதியில் விளையாடுகின்ற நாக கன்னியர்கள் வந்த அரசகுமாரனைப் பார்த்து ஆச்சரியமுற்று, இவன் யாவனென்று அவனருகில் வந்து உண்மை தெளிந்து, விருந்தினனாய் வந்தவனைத் தங்களரசனாகிய தக்ஷகன் காவல் கொண்டு வாசமா யிருக்கிற அரண்மனையி னிடத்துக்கு வருவா யென்று அழைத்துக்கொண்டு போனார்கள். எ - று. (கரு)

புக்கவரவனை வாயிற்புறத்தினினிறுவிப்போகித்
தக்ககன்றிருமுன்காளையடைந்தமைசாற்றலோடு
மக்கணத்தவனைநீவிரழைமின்களென்னமாதர்
மக்களிற்றிலகவீண்டுவருகெனவேந்தர்வேந்தன்.

(இ - புரை.) போன மாதர்கள் அவனை வாயிலினிடத்து நிறுத்தித் தாங்கள்மாத்திரம் உள்ளேபோய்த் தக்ஷகன் சமுகத்தில் சந்திராங்கதன் வந்திருப்பதைச் சொல்லவும், அத்தக்ஷகன் அப்பொழுதே அழையுங்களென்றுகூற,

அந்தமாதர்கள் சென்று மனிதர்களுக்குள் திலகம்போன்றவனே! வருவாயென்று கூட்டிக்கொண்டுபோகச் சென்ற அவ்வரசன். எ-று. இவ்வரசன் என்னும் எழுவாயை அடுத்தசெய்யுளில் கண்டான் என்பதனோடுமுடிக்க. (ந௬)

ஆயிரந்தபனர்தொக்காங்கவிர்கதிர்சொரிவதேய்ப்பப்
பாயொளிமவுலிதோறும்பருமணியிமைக்கவைகு
நாயகன்றன்னைநாகமடந்தையர்நடுவட்டோன்றிச்
சேயுயர்விசும்பிற்றேவிற்பொலிதருதேவைக்கண்டான்.

(இ - புரை.) ஆயிரஞ் சூரியர்கள் ஒன்றாகச்சேர்ந்து விளங்குகின்ற கதிர்களைச் சொரிவதையொப்பாகப் பரவுகின்ற ஒளியையுடைய பணமகுடந்தோறும் பருத்தமாணிக்கம் பிரகாசிக்கும்படி வீற்றிராநின்ற தக்ஷகனென்னும் நாகராசனாகிய தேவை அரமடந்தையர் கூட்டத்தினடுவில் தோன்றி மிகவும் உயர்ந்ததாகிய விண்ணுலகிலிருக்கும் இந்திரன்போலக் கண்டான். எ - று.()

கண்டடிதொழுதுநின்றகாலையக்காளைதன்னைத்
திண்டிறல்வேலினாய்நின்றேயமுங்குலனுமற்று
மொண்டிறற்றாதைபேருமுரைத்தியென்றுரைத்தலோடு
முண்டகமுகைபோற்செங்கைகூப்புபுமொழியலுற்றான்.

(இ-புரை.) அப்படிக்கண்டு தன்பாதத்தை வணங்கிநின்றபோது (தக்ஷகராசன்) அந்த ராசகுமாரனைப்பார்த்துப் பலமும் வெற்றியுமுள்ள வேலாயுதத்தையுடையவனே! உன்னுடைய தேசமும் குலமும் வெற்றியையுடைய உன் பிதாவின்பெயரும் சொல்லென்று சொன்னவுடன் அரசன் தாமரையரும்புபோலக் கைகளைக் குவித்துக்கொண்டு சொல்லத்தொடங்கினான். எ - று.

நெடுங்கடல்வளாகவைப்பினிடதநாடெனதுநாடு
கடுங்கலிக்கிகலாய்வந்தமன்னவன்கருதலார்க
ளடங்கிடப்பொருதவைவேலாற்றலானறத்தின்மிக்கா
னடுங்கலின்மனத்துச்செங்கோனளனெனவுளனோர்வேந்தன்.

(இ - புரை.) நெடிய சமுத்திரஞ் சூழ்ந்த பூலோகத்தினிடத்தில் நிடததேசமென்று சொல்லப்படுவது என்னுடைய தேசம்; கொடியதாகியபாபத்துக்குப் பகையாய் வந்த அரசனும், பகைவரா யிருப்பவர்கள் அடங்கத் தக்கதாக யுத்தஞ்செய்துவென்ற கூர்மைதங்கிய வேலாயுதமேந்தும் பராக்கிரமமுள்ளவனும், தருமத்தில் மிகுந்தவனும், நடுங்குதலில்லாத மனதையுடையவனுமாகிய நீதிசெலுத்துகின்ற நளனென்னும்பெயரையுடைய ஒரு ராசனுளன்.எ-று.

தொடையினினறவின்மானக்குலத்தினிற்புகழினேரி
னடையலர்ச்செருக்கும்வைவேலாற்றலினொருவரொவ்வான்

றுடையணிந்துடையதேவிதொழத்தகுவடமீனென்ன
நடையறிபுலவரோத்திகவில்தமயந்தியென்பாள்.

(இ - புரை.) அவ்வரசன் இன்னும் எத்தன்மை யுள்ளவனென்றால், ஈகையிலும் அறிவிலும் மானமுள்ள குலத்திலும் புகழிலும் அழகிலும் சத்துருக்களைப் போர் செய்து கொல்லத் தக்க பராக்கிரமத்திலும் தனக்கு ஒருவருமொவ்வாதவன்; இவ்வரசன் மாலை சூட்டிய மனைவியானவள் எல்லாரும் வணங்கத்தக்க அருந்ததி யென்று நன்னெறியறிந்த அறிஞர்கள் புகழ்ந்து சொல்லத் தக்க தமயந்தியென்பவள். எ - று. (௪0)

அவடிருவயிற்றின்வந்தவரும்பெறற்புதல்வனுய
திவள்பரிநிருபனிந்த்ரசேனன்மற்றெனதுதாதை
கவளமால்யானைச்சந்திராங்கதனெனும்பெயரினேன்யான்
றவளவாண்முறுவற்சீமந்தனியைவேட்டுறையுநாளின்.

(இ-புரை.) அந்தத் தமயந்தியின் அழகிய கருப்பத்தினின்றும் உற்பவித்த நடனக் குதிரையையுடையை இந்திரசேனமகாராசன் என்னுடைய பிதா ஆகுவர். (போர்முனையில்) பெரியயானையையொத்தவனுகிய சந்திராங்கதனென்னும் பெயரை யுடையநான் வெண்மைநிறந் தங்கிய ஒளியுள்ள பற்களையுடைய சீமந்தனியை விவாகஞ்செய்து கொண்டு வாழும்நாளில். எ - று.

தோழரும்யானும்வாவுதுணைபரிகடாவுமாபோ
லூழுறுவினையாலொன்றுமுணர்கிலாதோடமேறி
யாழுநீர்யமுனையாற்றுள்விடுநலுமம்பிதாழ்ந்து
காழுறுகழையுந்தள்ளிக்கவிழ்ந்ததுகவிழ்ந்தவேலை.

(இ - புரை.) தோழர்களும் நானும் தாவுகின்ற குதிரைகளைச் செலுத்துவதுபோலபழமையாகப்பொருந்திய வினையினுல்ஒன்றும்யோசியாமல் தோணியிலேறி ஆழ்ந்தநீரையுடைய யமுனையாற்றுள் (அதிவிரைவாகச் செல்லும்படி) விடவும், அந்தத்தோணிதாழ்ந்து வயிரம்பொருந்திய மூங்கிற்கோலையும்மீறிக் கொண்டு கவிழ்ந்துவிட்டது, அப்படிகவிழ்ந்தபோது. எ - று. அம்பி-தோணி.

இறந்தனர்நண்பரெல்லாம்யானிணையெய்துமூழாற்
றுறந்துயிர்விடாதுவந்துதொழுதனனென்றுகூற
அறந்தருசிந்தையானுமதிசயித்தரசேநீங்க
டிறந்தெரிந்தேத்துந்தேவன்யாரொன்றுன்செம்மல்சொன்னுன்.

(இ - புரை.) என்னுடைய தோழர்களெல்லாரும் இறந்துபோனுர்கள். யான் உம்மை அடையும் ஊழிருத்தலால் உயிர் துறந்துபோகாமல் வந்து

தொழுதேனென்றுசொல்ல;தருமசிந்தையுடையநாகராஜனும் ஆச்சரியமுற்று, அரசனே! நீங்கள் உண்மையறிந்து துதிசெய்யுங்கடவுள் யாவனென்றான்; அத ற்குப் பெருமையிற் சிறந்தவனை சந்திராங்கதன் சொல்லுகின்றான். எ - று.

யாவனொருவனெவ்வுயிருமெல்லாவுலகங்களுமுடையான்
யாவனொருவன்கடவுளருக்கெல்லாமிறைமைபூண்டுள்ளான்
யாவனொருவன்றிரிபுரமுமெரியக்கனகச்சிலைகுனித்தான்
யாவனொருவன்விடமுகர்ந்தானவனேயெங்கட்கிறையோனே.

(இ - புரை.) எல்லாவுயிரையும் எல்லாவுலகங்களையுமுடைய ஒருவர் எவ ர்,தேவர்களுக்கெல்லாம் தேவராயிருக்கும் ஒருவர் எவர், திரிபுரங்களும் எரியும் படி பொன்மலையை வில்லாகவளைத்த ஒருவர் எவர், விஷமுண்டவர் எவர், அவரோ யெங்களுக்குக் கடவுள். எ - று. (௬௪)

என்றுமெவனிராசதத்தினயனையீன்றுபடைப்பிப்பா
னென்றுமெவன்சாத்துவிதத்தினரியையீன்றுபுரப்பிப்பா
னென்றுமெவனேதாமதத்தினரனையீன்றுதுடைப்பிப்பா
னென்றுமவனேயெங்குலத்தையிணைத்தாணீழலளிக்குமால்.

(இ - புரை.) எந்நாளும் இராஜதகுணத்திற் பிரம தேவனை உண்டாக்கி இவ்வுலகங்களைச் சிருஷ்டிக்கச் செய்விப்பார் எவர், எக்காலமும் சத்துவகுண த்தில் விஷ்ணுவையுண்டாக்கி ரக்ஷிக்கச் செய்கின்றவர் எவர், எக்காலமும் தா மதகுணத்தில் அரனையுண்டாக்கி உயிர்களைச் சங்கரிக்கச்செய்கின்றவர் எவர், அவரோ எக்காலமும் எங்களைத் தம்முடைய திருவடிநீழலில்வைத்துரக்ஷிப்பவர்.

வேறு.

ஆரணந்தனக்குமுன்னையாரணமாகிமன்னுங்
காரணங்களுக்குமுன்னைக்காரணமாகித்தோன்றும்
பூரணவொளிகட்கெல்லாம்பூரணவொளியாய்நின்று
நாரணனுணர்கிலாதநாதன்யாமுணருநாதன்.

(இ - புரை.) வேதங்களுக் கெல்லாம் முதல்வேதமாகியும், நிலைபெற்ற காரணங்களுக்கு முதற்காரணமாகியும், தோற்றப்படும் பூரண வொளிகளுக் கெல்லாம் பூரண வொளியாயு மிருந்து விளங்கும் விஷ்ணுவினாலும் அறியப்ப டாத நாதனே நாங்கள் தியானஞ் செய்யும் நாதன். எ - று. (௬௫)

வானமேமுதலாம்பூதவகைதொறுமுள்ளீடாகித்
தானருளுயிர்கட்கெல்லாஞ்சான்றுமாயவற்றினெல்லா

மானபற்றென்றுமின்றியரியதன்விஞ்சையாலே
யூனமிலுலகமெல்லாந்தன்வயத்தொழுகநின்றும்.

(இ - புரை.) ஆகாய முதலாகிய பஞ்சபூதங்கடோறும் உள்ளீடாகியும், தாம் அருளப்பட்ட உயிர்கட்கெல்லாம் சாக்ஷியாகியும், அவைகளில் தமக்கொரு பற்றுமில்லாமல் அருமையாகிய தமது முடிவிலா ஆற்றலினாலே கெடுதலற்ற உலகமெல்லாம் தமது வசப்பட்டு நடக்க நின்றும். எ - று. (சஎ)

ஒருவனுய்முதல்வனுகியுறுவரங்கொடுப்போனாகி
மருவுமுக்குணங்கணீத்துமனத்திடை நினைத்தற்கொண்ணுத்
திருவருளுடையவுண்மைத்திகழொளியாயதெய்வங்
குருபரனருளின்யாங்கள்வழிபடக்குழையுந்தேவே.

(இ-புரை.) ஒப்பும் உயர்வு மில்லாத ஒருவனும், எல்லாவற்றிற்குங் காரணனாகியும், அன்பர்களுக்கு மிகுந்த வரங்கொடுப்பவனாகியும், பொருந்திய முக்குணங்களையும் நீக்கி மனதினிடத்தில் நினைத்தற்கரிய திருவருளை யுடைய உண்மையாய் விளங்குகின்ற சோதியாயுமிருக்குந் தெய்வமே, குருபரனருளினாலே நாங்கள் ஆராதனை செய்யத் திருவுளமிரங்குந் தெய்வமாம். எ-று. ()

நினைவரும்பாதகங்களைந்தையுநீக்கியின்பக்
கனைகடறுளையப்பண்ணுங்கண்ணுதல்கருத்திலாது
தினையளவடியர்செய்தசிற்றியற்பூசையேனும்
பனையளவாகக்கொள்ளும்பரமனெம்பரமனுவான்.

(இ - புரை.) நினைத்தற்கரிய பஞ்சமா பாதங்களையும் அடியார்க்கு நீக்கிப் பேரின்பமாகிய கடலினிடத்துப் பொருந்தச் செய்யும் பரமசிவனும், அன்பில்லாமல் தினையளவாக அடியார்கள் செய்வது சிறிய பூசையேயாயினும் பனையளவாகக் கொள்ளும் பரமனுமானவனே, எங்களுக்குக் கடவுளானவர். எ-று கனை-ஒலி. சிற்றியற் பூசையாவது-ஆகமவிதி தவறிச் செய்யும்பூசை.

கங்கையைமுடியிற்சூடிக்கவுரியைப்பாகம்வைத்துப்
பொங்கரவங்கடம்மைப்புரிகுழையணிந்துபாதச்
செங்கமலத்தைவேதச்சிரத்தினிணிருத்தித்தேவ
ரங்கைகள்கூப்பநின்றவவனெமையளிக்குந்தேவே.

(இ-புரை.) கங்கையைத் திருமுடியில் அணிந்து பார்வதியை யிடதுபாகத்தில்வைத்து, விளங்குகின்ற சர்ப்பங்களை விரும்புங்குண்டலமாகத் திருச்செவியில் தரித்து, திருமுடித் தாமரைகளை வேதமுடியில் வைத்துத் தேவர்களை

ல்லாரும் அழகிய கைகளைக் குவித்துத்தொழவிருக்கும் தேவனே,எங்களை ரக்ஷிக்குந்தேவனும். எ - று. (ருo)

அத்துவாவென்னுந்தூயவருமணித்தவிசினங்க
ணுத்தமமூர்த்தியாகியுயர்குணங்கடந்துவைகு
நித்தனேயெமக்குநாதனீண்முடிவேங்தேயென்று
கொத்தலர்நறியபைந்தார்க்கோமகனுரைத்தலோடும்.

(இ - புரை.) ஆறத்துவாக்களாகிய பரிசுத்தமுள்ள அழகிய ஆசனத்தினிடத்தில் உத்தமமூர்த்தியாகி, உயர்ந்தகுணங்களைக்கடந்து வீற்றிராநின்ற நித்தியனே எங்களுக்குக்கடவுள்; நீடியமகுடமுள்ள நாகராசனே! என்று கொத்தாகியமலர்களாற் றொடுக்கப்பட்ட வாசனைதங்கிய மாலையணிந்த ராசகுமாரன் சொல்லவும். எ - று. ஆறத்துவாக்கள் - மந்திரம் பதம் வர்னம் புவனம் தத்துவம் கலை. (ருக)

சிறியனீயாயுமென்முன்சிவனதுதகுதியெல்லா
மறிவுறமொழிதலாலேயருங்களியெய்துகின்றேன்
வெறிகமழ்தொடையாய்நின்பால்விளம்புவதொன்றுண்டென்ன
பொறிவரிப்பகுவாய்நாகர்புரவலன்புகலலுற்றான் [ப்

(இ - புரை.) வாசனைகமழ்கின்ற பூமாலையணிந்த ராசகுமாரனே? நீ சிறியவனுயிருந்தும் பரமசிவனுடைய பெருமைப்பாட்டினையெல்லாம் எனக்குத் தெரியும்படிச் சொன்னமையால், மிகுந்தகளிப்பினையடைந்தேன்; ஆதலால், இனி யுன்னிடத்தில் நான் சொல்லும்வார்த்தை யொன்றுண்டென்று பொறிகளையும் வரிகளையும் பிளந்த வாய்களையுமுடைய நாகராசன் சொல்லுகிறான். எ - று. (ருஉ)

இவ்வுலகனைத்துஞ்செய்யவெரிமணிமயமதாகு
மவ்வியமகன்றநாகமகளிருமரம்பையன்னார்
துவ்விடுபுனல்கள்யாவுஞ்சுரருணுமமுதமாகுந்
திவ்வியபொருள்களெல்லாஞ்செழுந்தருவாகுமன்றே.

(இ - புரை.) இந்த வுலகமெல்லாம் செவ்விதாகிய தீ நிறமுள்ள மாணிக்கமயமாயிருக்கும். பொறாமையகன்ற நாகமகளிரோ அரம்பா ஸ்திரீகளையொத்தவர்களா யிருக்கிறார்கள், உண்ணத்தக்க நீரெல்லாம் தேவருண்ணும் அமிர்தமயமாயிருக்கின்றன, திவ்வியமான சோலைக ளெல்லாம் கொழுமையுள்ள கற்பகச்சோலையாயிருக்கின்றன. எ-று. து - உணவு. (ருங)

நரைதிரைமருவாவெய்யநமன்றமர்நணுகல்செய்யா
குரைதருகுரிசினீயிக்குறைகெனவுரைத்தலோடும்

தனைபுகழொழுந்தையையாவெனையன்றித்தநயரில்லான்
றினைதரும்பவளவாயென்மனைவியுஞ்சிறியளென்றான்.

(இ - புரை.) மேன்மைபொருந்திய ராசகுமாரனே! இங்கிருப்பவர்களை நரையுந்திரையும்பொருந்தா, யமதூதர்களிவ்விடத்துக்கு வரார்கள், ஆதலால் நீ இவ்விடத்திலேதானே வாசமா யிருவென்று சொன்னவுடன் ஐயா! பூலோகத்தவராற் புகழப்பட்ட என் பிதாவானவர் என்னை யல்லது வேறே புத்திரரில்லாதவர் கடலிலுண்டாகும் பவளம்போன்ற செவ்வாயையுடைய என் மனைவியுஞ் சிறிய வயதையுடையவளென்று சொன்னான். எ-று. (ருச)

அன்றியுமன்றோரம்பிகவிழயானாற்றுளாழ்ந்து
பொன்றினனென்னவன்றேபொன்றிதல்பொருந்தினாரோ று
கன்றியகாலஞ்செய்தகற்பனையறிகிலேன்யான்
வென்றிவேலிறைவவெம்மூர்மேவுவன்விடுத்தியென்றான்.

(இ - புரை) இதுவுமல்லாமல் ஆற்றில் தோணிகவிழ; நான் அதில் ஆமிழ்ந்து இறந்தேனென்று அப்போதே அவர்களிறந்துபோனார்களோ? வெவ்விய காலஞ்செய்த கற்பனை இன்னதென்று நானறிகிலேன்; ஆதலால் வெற்றிபொருந்திய வேலையுடைய நாகராசனே! எங்களூர்க்கு நான் போகிறேன், உத்தரவு கொடுவென்று ராசகுமாரன் சொன்னான். எ-று. (ருரு)

ஈதவனுரைத்தலோடுமெழுந்தபேருவகைபொங்கக்
கோதறுகுணத்துநாகக்குரிசிலுமுழையர்க்கூவி
மேதகுகலன்களாடைமுதலியவெறுக்கைமற்றுங்
காதலிற்கொணர்திரொன்றுகாவலற்களித்துப்பின்னும்.

(இ-புரை.) அந்த ராசகுமாரன் இந்த வார்த்தையைச் சொன்னபோது மிகுந்த சந்தோஷம் பொங்கக் குற்றமற்ற குணத்தையுடைய நாகராசன் ஏவலாளிகளை யழைத்து, மேன்மை பொருந்திய ஆபரணங்கள் வஸ்திரங்கள் முதலாகியவைகளும் பொன்னும் மற்றுமுள்ளவைகளும் ஆசையுடன் கொண்டுவாருங்களென்று (உத்தரவுசெய்து, அவர்களால்கொண்டுவரப்பட்ட அப்பொருள்களை யெல்லாம்) அவ்வரசனுக்குக் கொடுத்துப் பின்னும்தருவான். எ-று.

வெறுக்கை - பொன். (ருசு)

திரைக்கடலேழுஞ்சூழ்ந்துசேண்முகடளக்குநேமி
வரைத்தலைதன்னையொல்லைமண்டலமிட்டுமீளு
முரைப்பரிதாயவேகத்தொருவயப்பரியைநல்கி
யிரைக்களிக்கவைச்சார்ந்தும்வேண்டுவெறுப்பநல்கா

(இ - புரை.) அலைகளையுடைய எழுகடலையும் ஒவ்வொன்றாகச் சூழ்ந்து, அண்டமுகட்டையளக்காநின்ற சக்கிரவாளகிரியின் சிகரத்தையும் அதிகவிரைவாக மண்டலமிட்டு வரும் சொல்லுதற்கரிய வேகத்தையுடையபலமுள்ள ஒரு குதிரையுங் கொடுத்து, வாசனைதங்கிய கூட்டுவர்க்கஞ்சேர்ந்த சந்தனக்குழம்பும் வெறுக்கும்படி கொடுத்து. எ - று. (ருஎ)

அளித்தவைசுமப்பமற்றோரயிலெயிற்றரக்கன்றன்னை
விளித்துடன்விடுத்துப்பின்னும்வேறொருபுயங்கராசன்
களிப்புறுகுமரன்றன்னைக்காக்கெனப்பணித்தலோடுந்
துளித்தலைமுகிலன்னானுந்தொழுதனன்விரைவிற்போகி.

(இ - புரை.) கொடுத்த இப்பொருளையெல்லாம் சுமந்து போவதற்காக கூர்மையான பற்களையுடைய ஒரு ராக்ஷதனை அழைத்து, அவ்வரசனுடன் அனுப்பி, மேலும் வேறொரு நாகராசனை யழைத்துக் களிப்பையுடைய இந்த ராசகுமாரனைப் பாதுகாத்துக்கொண்டு போவென்று உத்தரவுசெய்தான். அப்படி உத்தரவுசெய்த வுடன் துளித்தலைச் செய்யும் மேகத்தையொத்த ராசகுமாரனும் நாகராசனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு விரைவுடன் சென்று. எ-று. (ருஅ)

குளைபுனலதனுளுகுமரனுநிருதன்றானும்
புரையறுமனத்தராகிப்புரிவுகொண்டருகிற்போத
விரைபரியுகைத்துநீருள்வெய்யவனெழுதன்மானத்
தரைபுகழ்குரிசிறோன்றியமுனையங்கரையைச்சார்ந்தான்.

(இ - புரை.) ஒலிக்கும் நீரையுடைய யமுனையாற்றினிடத்தில் நாக குமாரனும், அரக்கனும் குற்றமில்லாத மனத்தையுடையவர்களாய்ப் பாதுகாத்துக்கொண்டு தன் அருகில்வர; விரைவுடன்செல்லுகின்ற குதிரையை செலுத்திக்கொண்டு சமுத்திரத்தில் சூரியன் உதயமாவது போல, உலகம் புகழ்கின்ற ராசகுமாரன் நீர்மேலெழுந்து அழகிய யமுனை ஆற்றங் கரையைச் சார்ந்தான். எ-று. நிருதன்-அரக்கன்-புரிவு-ஆசை. (ருகூ)

பாதலந்தன்னின்வீழ்ந்துபடருழவாதுவந்த
தாதலர்நறியமாலைத்தராபதிகுமரன்செய்கை
யோதினனிப்பாலன்னோனுற்றதற்குற்றுற்ற
தீதுறுதுயரமெல்லாந்தெளிவுறச்செப்பலுற்றேன்.

(இ - புரை.) பாதாளத்தில் வீழ்ந்து யாதொரு துன்பமுமடையாமல்வந்த மகரந்தத்துடன் மலர்கின்ற வாசனைதங்கிய மாலையணிந்த ராசகுமாரன்செய்கையை இதுவரையிற் சொன்னேன். இனி அவன் ஆற்றில் வீழ்ந்ததற்காக

அவனுடைய சுற்றத்தார் பொருந்திய கொடிய துயரங்களை யெல்லாம் விவரமாகச் சொல்லுகின்றேன். எ-று. (சுo)

நெளிதிரையமுனையாற்றினீர்விளையாடல்செய்து
துளிதருபுயலினல்குஞ்சந்திராங்கதனுமன்னு
னளிபெறுதோழன்மாருமப்பியிற்கவிழ்நதுநீரின்
விளிதருதன்மையெல்லாமாதுலன்விரைவிற்கேட்டான்.

(இ - புரை.) நெளிகின்ற அலையையுடைய யமுனையாற்றினீரில் நீர் விளையாடலைச் செய்து, துளியைத் தருகின்ற மேகம்போலத் தானங் கொடுக்கத்தக்க சந்திராங்கதனும் அவனுடைய தயையைப்பொருந்திய தோழர்களும் தோணியுடன் கவிழ்ந்து, நீரில் இறந்துபோன தன்மை யெல்லாம் அவன் மாமனாகிய சித்திரவன்மன் அப்போதே கேள்விப் பட்டான். எ-று. தளி-துளி. மாதுலன்-மாமன். (சுக)

கேட்டலுமெழுந்தியாற்றின்கிளர்கரைகுறுகிவந்து
வாட்டிறற்குரிசிலேயென்மருகவோமருகவோவென்
றீட்டியதுயரமீக்கொண்டெடுத்தெடுத்தழைத்தல்கேளாக்
கோட்டமின்மனத்துமன்னன்குமரருமயங்கிவீழ்ந்தார்.

(இ - புரை.) கேள்விப்பட்டமாத்திரத்தில் எழுந்து அந்த நதியின் கரையில் வந்துசேர்ந்து, வாள்யுத்தஞ் செய்யத்தக்க வல்லமையையுடைய ராசனே! என்மருமகனே! என்மருமகனே! என்று நேரிட்ட துயரம் அதிமமாகக் கொண்டு பலவாறு அழைத்தலைக் கேட்டு, மாறுபடுதலில்லாத மனதையுடைய அவ்வரசன் புத்திரர்களு மயங்கிச்சோர்ந்தார்கள். எ-று. (சுஉ)

மற்றவன்மனைவிமாருமனங்குழைந்தழுதுநைந்தார்
செற்றமில்கமலையன்னதெரிவைசீமந்தனிக்குஞ்
சொற்றனரவளுங்கேட்டுச்சுடுதொழிலுருமுவீழப்
புற்றரவழுங்குமாபோற்புரண்டனள்புலம்புகின்றாள்.

(இ - ள்.) அவனுடைய மனைவியர்களு மனமுருகி அழுது மெலிந்தார்கள்; குற்றமில்லாத திருமகளையொத்த சீமந்தனியென்னு மாதுக்குஞ்சொன்னார்கள்; அவள் அந்தச்சேதியைக்கேட்டுச் சுடுகின்ற செய்கையையுடைய இடிவிழ, புற்றிலிருக்கும் சர்ப்பங்கள் வருந்துவதுபோலப் புரண்டு புரண்டு புலம்புவாளாயினள். எ - று. (சுங)

வேறு.

நீர்மலிந்தபண்ணைநிடதத்தார்மன்னவனே
தார்மலிந்தமார்பாதமியேனுயிர்த்துணையே

சீர்மலிந்தசொல்வாணர்தீயகலிக்கோடைதெறுங்
கார்மலிந்தவண்கைக்களிறேகளிறேயோ.

(இ - ள்) நீர்நிறைந்த வயல்களையுடைய நிடததேசத்தி லிருப்பவர்களுக்கு அரசனே! பூமாலைநிறைந்த மார்பையுடையவனே! தமியேனது உயிர்த்துணையே! சீர்பொருந்திய பாவலர்களுடைய கொடிய வறுமையாகிய கோடையைக் கெடுக்கத்தக்கமேகம்போன்ற வளப்பந்தங்கிய கையையுடைய மதகஜமே! மதகஜமே! எ - று. (சுச)

புன்னைச்செழுங்காவிற்பூவணையின்யாமுயங்கு
முன்னைப்பெரும்போகமவேண்டாய்முனிந்துதா
னென்னைபபிரிதாய்நீயென்றாலும்யான்றமியே
னுன்னைப்பிரிந்தாவியுய்யேன்மற்றுய்யேனே.

(இ - ள்) செழுமைதங்கிய புன்னைவனத்தில் மலர்மஞ்சமேல் நாமிருவருஞ்சேர்ந்தனுபவிக்கும் முன்போகத்தை விரும்பாமல் வெறுத்து, நீயென்னைப் பிரிந்துவிட்டாலும், நானுன்னைப்பிரிந்து தமியளாயுயிர்பிழைத்திரேன் பிழைத்திரேன். எ - று. (சுரு)

என்றென்றரற்றியிலங்கிழைதன்கைம்மலரால்
குன்றொன்றுகொங்கைகுழையும்படிபுடைத்து
நின்றொன்றுஞ்சொல்லாணெருப்பிடைபுக்கியான்விழுந்து
பொன்றும்பொழுதன்றிப்போமோதுயரென்றாள்.

(இ - ள்.) சீமந்தனியானவள் இவ்வாறு சொல்லிச்சொல்லியழுது செந்தாமரைமலர்போன்ற தன்கைகளால் மலையையொத்த தனங்கள்குழையும்படிமோதிக்கொண்டு, வேறொன்றும் பேசாமல் நான் நெருப்பில்விழுந்து இறந்தகாலத்திலல்லது இந்தத்துக்கந்தீருமோ என்றாள். எ-று. (சுசு)

இங்கிவடானிவ்வண்ணநையவிகல்வேந்தன்
பொங்குதுயர்மாதவராற்போக்கியுளந்தெளிந்து
திங்கடிருவாண்முகத்துச்சீமந்தனியுறையு
மங்குறுடுசென்னிமணிக்கோயில்வந்தடைந்தான்.

(இ - ள்.) சீமந்தனியானவள் இவ்வாறு துயரப்பட்டுக்கொண்டிருக்க; பலமுள்ளராசனானவன் தனக்குண்டான துயரத்தை முனிவர்களால் நீங்கப்பெற்றுத்தெளிந்து, சந்திரனையொத்த அழகினையும் ஒளியினையும் பொருந்திய முகத்தினையுடைய சீமந்தனியிருக்கும் மேகத்தையளாவுகின்ற சிகரத்தையுடைய ரத்தினங்கள்பதித்த மாளிகையிற் சேர்ந்தான். எ - று.

வேந்தன் தெளிந்து கோயிலடைந்தான் எனமுடிக்க. (சுஎ)

தாதையைக்கண்டுள்ளந்தளராவடிவீழ்ந்த
மாதினைத்தன்கையாரவாங்கியெடுத்தணைத்துப்
பூதலத்துயாவர்வினையைப்புறங்கண்டார்
காதலித்துமாகேதகவலாதொழிகென்றான்.

(இ - புரை.) வந்தபிதாவைக்கண்டு மனந்தளர்ந்து பாதத்தில் விழுந்த புத்திரியைத் தன்கைகள் பொருந்தவாரி யெடுத்தணைத்து, மகளே! பூலோகத்திலிருப்பவர்களில் வினையைக்கடந்தவர்கள்யாருமில்லை; (ஆதலால்)கணவனிடத்தில்விருப்பம்வைத்துவருந்தாதேயென்றான். எ-று —கவலுதல்-வருந்துதல். ()

என்னுமுரையுமிகந்துபடருழந்து
தன்னுளயர்ந்து தலைவன்றனையடைவான்
வன்னிபுகுவதன்றிவாழேனெனவரற்று
மின்னினுறுமிடையைவேந்தன்விலக்கினான்.

(இ - புரை.) இவ்வாறு தன்தகப்பன் சொன்னசொல்லையுந் தவிர்த்துத் தனக்குள் துன்பமடைந்து சோகங்கொண்டு கணவனிடத்திற் போய்ச்சேர அக்கினிப் பிரவேசமாவதேயல்லாமல், இனி யுயிருடன் வாழேனென்று சொல்லியழுகிற மின்னலைப்போலும் நண்ணிய இடையையுடையவளாகிய தன்மகளை அக்கினிப்பிரவேசமாக வொட்டாமல் அவ்வரசன் விலக்கினான். எ - று. வன்னி - நெருப்பு. (சுகூ)

தந்தைவிலக்கத்தளிரியலாள்சாவோரீஇச்
சிந்தைநலியுந்துயரஞ்சிறிதகற்றிப்
புந்திதெளியச்சிவனையேபூசைசெய்வே
னெந்தையறிவாயெனக்கயினியாயினாள்.

(இ - புரை.) தன்பிதா தடுத்ததினால் மாந்தளிர்போன்ற சாயலையுடைய சீமந்தனியானவள் சாதலையொழிந்து, மனம் வருந்தும்படியான துயரஞ் சிறிது நீங்கப்பெற்று, எந்தையே! என்புந்தி தெளிவடையும்படி இனிப் பரமசிவனையேபூசைசெய்வேன், நீயறிவாயென்று சொல்லி விதந்துவாயினாள். எ - று. கயினி-விதந்து. (எ0)

எண்ணார்தொழவாழிகலிந்திரசேனன்
றண்ணார்புனல்வீழ்ந்துதன்மதலைமாய்ந்ததுவும்
பெண்ணாணங்குகைமைபெற்றதுவுங்கேட்டரற்றிக்
கண்ணாரவலப்புனலாற்கடல்செய்தான்.

(இ - புரை.) பகைவரெல்லாம் வணங்கும்படி வாழ்கின்றபலமுள்ள இந்திரசேனமகாராசன், தன்புத்திரன் குளிர்ச்சிபொருந்திய யமுனையாற்றில்

விழுந்து இறந்ததும், மருகி கைம்பெண்ணானதுவுங் கேள்விப்பட்டழுது, கண்களிலிருந்துபெருகாநின்ற துக்கநீரினுல் சமுத்திரமொன்றுண்டாக்கினுன். எ - று. எனவே மிக்கதுரடைந்தானென்பது கருத்து.

சுற்றமுநற்றாயுந்துயர்க்கடலின்மூழ்கினர்
மற்றுநிடதத்தாரெல்லாமனங்கவன்று
கொற்றவனேயெங்கொளித்தாயென்றுட்குழைந்தழுதார்
பற்றலருங்கேட்டார்பழம்பகைதீர்ந்தோமென்றார்.

(இ - புரை.) உறவினரும் நல்லதாயும் துக்கசாகரத்தில் முழுகினர்கள் இவர்களுமன்றி, நிடததேசத்தாரெல்லாரும் மனக்கவலையுற்று, எங்களரசனே! எங்கே யொளித்தாயோ என்று மனங்குழைந்து அழுதார்கள். பகைவர் இந்தச் செய்தியைக்கேள்விப்பட்டுப்பழம்பகைதீர்ந்தோமென்றுகளித்தார்கள். எ - று.

காலமிஃதென்னக்கலிமாவுங்கைமாவும்

கோலியமராடிநளன்கோமகனைத்தேவியுடன்
ஞாலமெலாநொந்துநடுங்கச்சிறைவைத்தார்.

(இ - புரை.) (அப்படிக்கேள்விப்பட்டபகைவர்கள்இந்திரசேனனைவெல்லுதற்கு) இதுதான் காலமென்று குதிரைகளும் யானைகளும் வேலேந்தியபதாதிகளும் உடன்வரச்சென்று யுத்தஞ்செய்தலை விரும்பிச்சூழ்ந்து போர்செய்து, இந்திரசேனனை அவன் மனைவியுடன் கொண்டுபோய்த் தேசமெல்லாம் நொந்து நடுங்கும்படிச் சிறையில்வைத்தார்கள். எ - று. (எங)

மல்குநிதியும்வளநாடுமாநகருஞ்
செல்வமுழுதுஞ்செறுநரோகைக்கொண்டு
பல்பகல்வந்தாளுநாட்பாதலத்தைவிட்டெழுந்த
வில்கெழுதோண்மைந்தன்வினையம்விளம்புவாம்.

(இ - புரை.) நிறைந்தநிதிகளையும் வளப்பம்பொருந்திய நாட்டினையும் பெருமை பொருந்திய நகரத்தையும் மற்றுமுள்ள செல்வமெல்லாவற்றையும் பகைவர்கள்கைக்கொண்டு பலநாளாண்டுகொண்டிருக்கும்நாளில், பாதாளத்தை விட்டுவந்த விற்பொருந்திய புயத்தையுடைய சந்திராங்கதனுடைய செய்தியைச்சொல்லுகிறோம். எ - று. செறுநர் - பகைவர். (எச)

வேறு.

நன்னதிக்கரையின்வந்துநளன்மருமிந்திரசேன
னின்னருண்மதலைவாமாவியல்புடனேறுமேழெல்லை

யன்னவன்மனைவியாயத்தவர்களோடணுகித்தானும்
பொன்னிருகரையுஞ்சிந்தும்பூம்புனலாடவந்தாள்.

(இ - புரை.) ஈளச்சக்கிரவர்த்தியின் பவுத்திரனான சந்திராங்கன் நல்ல யமுனையாற்றங்கரையில் வந்து தாவிச்செல்லுங் குதிரையின்மேல் இயல்புட னேறும்போது, அவன் மனைவியாகிய சீமந்தனியானவள் தோழிக்கூட்டங்களு டன்சென்று இருகரைகளிலும் பொன்னையொதுக்கும் யமுனையாற்றில் நீராட வந்தாள். எ - று. (எரு)

ஐயிருகாதஞ்சந்தத்தருங்கடிகமழச்செம்பொன்
மெய்யணிதிகழநொய்யவெண்டுகின்மருங்கிற்சாத்தித்
துய்யவரிருவர்காணத்துனைப்பரியேறியாடு
மையறுகுமாரற்கண்டுமனமறுகுற்றுநின்றாள்.

(இ - புரை.) (நீராடவந்தவள்) பத்துக்காதம்வரையில் அரியசந்தனவாச னைபரிமளிக்கவும், சரீரத்தி லணிந்திருக்கும் ஆபரணங்கள்பிரகாசிக்கவும், நுண் ணியதாகிய வெள்ளைவஸ்திரம் இடையிலணிந்து, பரிசுத்தர்களானநாகராசனும் இராக்கதனுமாகிய இருவரும் பார்க்கும்படி, வேகமாகச்செல்லும் குதிரையி லேறிக்கொண்டு விளையாடுகின்ற குற்ற நீங்கிய அந்த ராசகுமாரனைக்கண்டு மனங்கலங்கிநின்றாள். எ - று. (எசு)

மங்கலமிழந்துமெய்யின்மணவணிதுறந்துநின்ற
கொங்கலர்கோதைதன்னைக்குமரனுங்குறுகிநோக்கித்
திங்கள்வாணுதனீயார்கொறிருமணம்புணர்ந்தான்யாவ
னிங்குநீகைமையானகாரணமென்கொலென்றான்.

(இ - புரை.) மாங்கலியத்தையும் அங்கத்திலணியும் மங்களத்துக்குரிய ஆபரணங்களையு மிழந்துநின்ற சீமந்தனியைச் சந்திராங்கதன் சென்றுகண்டு, ஓ சந்திரவதனி நீயார்? உன்னைச்சிறப்புடன் விவாகஞ்செய்துகொண்டவன் யா வன், இப்போது நீகைம்பெண்ணயிருக்குங் காரண மென்னவென்றான். எ - று.
கொங்கலர்கோதை என்றது சீமந்தனியைக்குறிக்கும் ஒரு பெயர். (எஎ)

அவனவ்வவினவலோடுமரிவையுநாணிநிற்பக்
கவலுறுமவடன்றோழியொருமகள்கழறுகின்றா
ளிவள்பிதாச்சித்திரவன்மனிருநிலமுழுதுங்காக்குந்
தவலருங்கேள்விச்சந்திராங்கதனிவடலைவனுமால்.

(இ - புரை.) இவ்வாறு அவன் வினவவே சீமந்தனிநாணத்துடன் விலகி நிற்றலையுணர்ந்த கவலையடைந்திருக்கும் அவளுடைய தோழிகளுளொருத்திச்

சொல்லுகின்றாள் ; (இராஜகுமாரனேகேள்) இவளுடைய தந்தை சித்திரவன்மன், இவள் கணவனோவென்றால் பெருமைபொருந்திய பூமிமுழுமையுங்காக்கும் கெடுதலற்ற நல்லகேள்வியையுடைய சந்திராங்கதனென்பவன். எ-று. ()

கொடுவினை துரப்பமற்றக்கோமகன் றானுமுன்னாட்
டொடுபுனல்யமுனையாற்றுட்டுஞ்சிடத் துயரமெய்தி
யுடுபதியிழந்துமாழ்கும்ரோணியினொளியைநீத்து
வடுவகல்கற்பினங்கைமங்கலமிழந்துநின்றாள்.

(இ - புரை.) இவள்கைம்பெண்ணானதற்குக் காரணமென்னவெனில், இவள்வாழ்ந்துகொண்டிருக்கும் நாளிலொருநாள் கொடியவினையானது செலுத்ுதலினாலே ஆழ்ந்தபுனலையுடைய யமுனையாற்றில் இவள்கணவனாகிய அந்த ராஜகுமாரன் இறந்துபோனதினால் குற்றமில்லாத கற்பினையுடைய இந்தமாதானவள் துயரம் அடைந்து, சந்திரனையிழந்து விசனப்படுகின்ற ரோகணி நக்ஷத்திரம்போல வொளியிழந்து மங்கலமிழந்திருக்கின்றாள். எ - று. (எக)

மங்கலமிழந்துமசனறவருடமூன்றாகுமையா
திங்களங்கண்ணிவேய்ந்தசிவனதுசோமவாரங்
கொங்கையங்கண்ணிநோற்பாள்குளிர்புனலாடல்வேண்டி
யிங்கெழிலாயமெல்லாஞ்சூழ்வரவெய்தினாளே.

(இ - புரை.) அரசகுமாரனே ! இம்மங்கை மாங்கலியமிழந்து மூன்று வருஷமாயிற்று. அன்றுமுதல் இவள் சந்திரக்கண்ணியணிந்த பரமசிவனுக்குரிய சோமவாரவிரதம் அனுஷ்டிக்கின்றாள் ; அதன்பொருட்டு ஸ்நானஞ்செய்யவிரும்பி, அழகுள்ள தோழியர் கூட்டஞ்சூழ இவ்விடத்தில் வந்தனள்.எ-று.

அன்றியுமிவடன்கேள்வனரும்பெறற்றாதைதன்னைக்
கன்றியதெவ்வர்பற்றிக்கடுஞ்சிறைவைத்துநீதி
யொன்றியநாட்டையெல்லாமொருங்குடன்பரவாநின்றார்
வென்றிவேற்குமரகேண்மோவெனறவள்விளம்புங்காலை.

(இ - புரை.) வெற்றிபொருந்திய வேலாயுதத்தையுடைய அரசனே! இதுவுமல்லாமல் இவள்கணவனுடைய தாதையைப் பகைகொண்ட சத்துருக்கள் கொடிய சிறையில்வைத்து நீதிபொருந்திய நாட்டையெல்லாம் ஒருங்காகக் கைப்பற்றி அரசுசெய்கின்றார்கள். என்று அத்தத்தோழி சொன்னபோது.எ-று.

நாணொடுநின்றநங்கைநாவரிகந்தனருஞ்செம்பொற்
பூணணிமார்பனேநீபுதுமலர்ப்பகழிசேர்க்குந்
தூணியுஞ்சிலையுமில்லாததொடுகழல்மதனோவன்றிச்
சேணுயர்விசும்பிற்றேவகுமரனோசெப்புகென்றாள்.

(இ - புரை.) நாணத்துடனின்ற சீமந்தனியானவள் பின்பு நாணம்விட்டுப் பிரகாசியாநின்ற செம்பொன்னாலாகிய ஆபரணங்களணிந்த மார்பையுடைய மன்னவனே! நீ புதியமலர்க்கணைகள்வைக்குந் தூணியுங் கருப்புவில்லுமின்றிவந்த வீரகண்டையணிந்த மன்மதனோ? அல்லது மிகவுமுயர்ந்த தேவலோகத்தில் வாசஞ்செய்யுந் தேவகுமாரனோ? சொல்லென்றாள். எ - று. (அஉ)

என்றவண்மீட்டுமென்றனின்னலேமுதலவெல்லா
மொன்றறப்புகலக்கேட்டாயென்னையுநீயுணர்திகொல்லோ
கன்றியமனத்தேனின்னைக்கனவிடைக்கண்டேன்போலு
நின்றநீயாவனின்னேநிகழ்த்துதிகரவாதென்றாள்.

(இ - புரை.) அவளிவ்வாறு சொல்லிப் பின்னுஞ் சொல்லுகிறாள். எனக்குநேரிட்ட துன்பங்கள் முதலானவைகளையெல்லாமொன்றும் வழுவாமற்கேட்டனை, நீயென்னை அறிவையோ? வருந்திய மனதையுடைய நான் உன்னைக் கனவிற்கண்டவளா யிருக்கின்றேன்; இங்குநின்ற நீயாவன்; ஒளிக்காமலிப்பொழுதே சொல்லவேண்டுமென்றாள். எ - று. (அங)

மற்றவனுரைத்தான்யானோர்மானிடனல்லனெண்ணிற்
செற்றமில்குணத்தாய்சித்திபெற்றுடையதேவ
னற்றமில்புவனமெங்குமொல்லையினடைந்துமீளக்
கற்றவனென்றுகாந்தளஞ்செங்கைபற்றி.

(இ - புரை.) அவளிவ்வாறு வினவ சந்திராங்கதன் சொல்லுகிறான்; குற்றமில்லாத குணத்தையுடைய மாதே! நான்மனிதர்களுக்குள் ஒருவனல்லன்; எண்ணிப்பார்க்கில் சித்திகளைப்பெற்ற தேவரிலொருவன்; பழுதில்லாத உலகங்களெங்கும் அதிவிரைவாகச் சென்றுவரக் கற்றவன்; என்று சொல்லி அவளுடைய செங்காந்தள்போன்ற கரத்தைப்பிடித்துக்கொண்டு. எ - று.

அருகுறவழைப்பமாதரையுறவெய்திப்பின்னும்
பருகுவார்போலநோக்கிப்பணைமுலைபுளகங்கொள்ள
வெருவினாசிற்பமன்னன்மின்னிடைச்செவியின்மேலலென்
றொருமொழியுறுதியாகவுவப்புடனுரைப்பதானான்

(இ - புரை.) (அவ்வரசகுமாரன்) சமீபத்தில் வரும்படி அழைக்க; (அதைக்கண்ட) தோழிமார்கள் சந்தேகமுற்றுப்பின்னும் (அவ்வரசனை)விடாது பார்த்துப் பருத்ததனங்கள் புளகத்தையடைவதுமன்றிப் பயமுமடைந்துநிற்க, சந்திராங்கதன் சீமந்தனியின்காதில் சந்தோஷத்துடன் மெதுவாக ஒருவார்த்தையுறுதியுடன் சொல்லலானான். எ - று. (அரு)

உன்னுறுதுணைவன்வேறோருலகத்தினுள்ளான்மாதே
யன்னவன்றனக்குயானுமாருயிர்த்தோழனந்த
மன்னனுமிரண்டுநாளில்வந்துனதவல்நீக்கு
மின்னதுபுகல்வான்வந்தேனென்றனனெழிலின்மிக்கான்.

(இ - புரை.) மாதே! உன்கணவன் வேறோருலகத்திலிருக்கிறான்; அவனுக்கு நான் உயிர்போன்ற சிநேகன், அந்தமன்னனு மிரண்டுநாளையில்வந்து உனது துக்கத்தை நீக்குவான்: இந்தச்சேதி யுனக்குச்சொல்லவே யான்வந்தேனென்று அழகில்மிகுந்த சந்திராங்கதன் சொன்னான். எ - று. (அசு)

நெஞ்சினிலவலநீத்திநெற்றியங்கண்ணனாணை
வஞ்சிநுண்ணிடையாயன்னோன்வருவதேதிண்ணமாகுந்
துஞ்சமென்றிதனையார்க்குஞ்சாற்றலையென்றுசாற்றிப்
பஞ்சின்மெல்லடியினாட்குமீட்டிதுபகரலுற்றான்.

(இ - புரை.) வஞ்சிக்கொடிபோலும் நுண்ணிய இடையை யுடையவளே! உன்மனதிலிருக்குந் துன்பத்தைநீங்குவை, நெற்றிக்கண்ணரான பரமசிவனாணைப்படி அவன்வருவது நிச்சயமாம்; நான்சொன்ன வார்த்தையை எளிதாகக்கருதி யாருடனுஞ்சொல்லாதே, என்று சொல்லி, செம்பஞ்சினுமெல்லியபாதத்தையுடைய சீமந்தனிக்கு மறுபடியுமிந்தவார்த்தைசொல்லுகின்றான். எ-று.

தெரிவைநின்கொழுநற்குற்றதிறனெலாந்தெரியச்சொன்னேன்
பரிவுறுமெனதுதாதைதாயர்தம்பரிவுநீக்க
விரைவினினெனதுதேயத்தேகுவனென்றுவேகக்
குரகதந்தூண்டிவைவேற்குரிசிலுங்கடிதிற்போனான்.

(இ - புரை.) மாதே! உன்கணவனுக்குப் பொருந்திய செய்கையெல்லாம் உனக்குத்தெரியும்படிச்சொன்னேன்; இனி என்னிடத்தில்விருப்பம்வைத்திருக்கும் என்தாய்தந்தையருடைய வருத்தத்தைநீக்க, விரைவாக என்தேசத்துக்குச் செல்லுகிறேனென்றுசொல்லி, கூர்மைதங்கிய வேலாயுதத்தையுடைய சந்திராங்கதனானவன் வேகமாகச்செல்லும் குதிரையை நடத்திக்கொண்டு துரிதமாகப்போனான். எ - று. குரகதம் - குதிரை. (அஅ)

சேயொளிக்குரிசில்போயபின்னர்த்திருவினல்லாள்
மாயமோவன்றிநெஞ்சின்மயக்கமோகனவுகொல்லோ
போயவனுரைத்தவெல்லாம்பொய்கொலோமெய்கொலோவென்
றாயவளழுதுதேம்பியவலங்கொண்டினையசொன்னாள்.

(இ - புரை.) செவ்வியதான ஒளியையுடைய சித்திராங்கதன் போய்விட்டபின்பு திருமகளினுஞ்சிறந்த அழகுள்ள சீமந்தனியானவள் இப்போதுபோன

இந்தத் தேவகுமாரன் சொன்னவெல்லாம் மாய்கையோ? அல்லது நம்முடைய மனதிலிருக்கு மயக்கந்தானோ? அல்லது சொப்பனமோ? பொய்யோ? அல்லது மெய்யோ? என்று அழுது தேம்பித்துன்பங்கொண்டு இந்தவார்த்தைசொன்னாள். எ - று. (அகூ)

வேறு.

என்னுறுசிந்தனையென்கணவன்பான்
மன்னுவதல்லதுமற்றொருவன்மேற்
றுன்னுவதன்றுவிளைந்தமைசொல்வி
னென்னவனேயெனையாளுநலத்தோன்.

(இ - புரை.) என்மனமானது என்கணவனிடத்திற் பொருந்துமே யல்லது மற்றொருவனிடத்திற் பொருந்துவதன்று; (ஆதலாலிப்போது) என்னிடம் நடந்ததை ஆலோசிக்குமிடத்தில் இங்குவந்துபோன மகாபுருஷனே என்னையாளத்தக்க தன்மையையுடைய என்கணவனேயாகும். எ - று. (கூ0)

யாக்கியவர்க்கர்தமில்லுறைநல்லாள்
வாக்கியநம்பிமழுப்படைவள்ள
லாக்கினையாலவனுக்கருள்பூசைப்
பாக்கியம்வந்துபலித்ததுகொல்லோ

(இ - புரை.) யாக்கியவர்க்க ரென்னு முனிவருடைய பத்தினியாகிய மயித்திரைசொல்லிய வார்த்தையைநம்பி, மழுவாயுதமேந்திய பரமசிவனது ஆக்கினையாகிய சைவாகமவிதிப்படி அவனுக்குச்செய்த பூசையின்பாக்கியம்நமக்குவந்து பலித்ததுவோ? எ - று. கொல்-ஐயப்பொருளது. (கூக)

அன்றியுமுன்னமொரந்தணனெந்தைக்
குன்றிருவோர்பதினாயிரகால
மன்றல்செய்தோனுடன்வாழ்குவளென்ற
நன்றறிசொன்னெறிநண்ணியதேயோ.

(இ - புரை.) இதுவுமல்லாமல் முன்னமொருபிராமணனுன்குமாரத்தி பதினாயிரவருஷம் கணவனுடன் வாழ்வாளென்று என்பிதாவுடன் சொன்ன நன்மையறிந்த சொல்லின் முறைமைபொருந்தியதோ? எ - று. (கூஉ)

நிரந்தரநற்சொண்ணியித்தருமுண்டோ
நரந்தநறுங்குழலுயவொக்கின்
வரந்தருபூசைமகிழ்ந்தெண்ணியவாழ்வித்
தரந்தைகெடுப்பதையாரறிகிற்பார்.

(இ - புரை.) எப்போதும் நல்லவாக்கியங்களாகிய சகுனங்களுமுண்டா கின்றன. ஏலவார்குழலியரான தேவியாரை யிடப்பாகத்திலுடைய பரமசிவன் அனுக்கிரகஞ் செய்யத்தக்கதாகிய எமது பூசைக்கு மகிழ்ந்து எம்மை வாழ்வித் துத் துன்பங்கெடுப்பதை யாரறியவல்லவர்கள், எ - று. (கஙூ)

பாவியனேது பகுத்தறிவேனென்
ஞவியனுனை டையும்மிவனென்றென்
ரூவியமாசுறலொத்தவள்வைகிக்
காவியினேர் தருகண்கள்கலுழ்ந்தாள்.

(இ - புரை.) பாவியாகிய நான் ஏது பகுத்தறியக்கூடுவேன், என்னுயிர் போன்ற கணவன் எந்நாள் இங்குவந்து சேர்வானோவென்று, அழுக்குற்ற சித்திரமொத்தவள் தனித்திருந்து நீலோற்பலம்போன்ற கண்களில் நீர்சோரும் படி வருந்தியிருந்தாள். எ - று. (கூ௪)

இருந்துபுலம்புமிளங்கிளி தன்னை
வருந்தல்வருந்தன்மடக்கொடியென்றே
பொருந்தியதோழியர்பூம்புனலாட்ட
அருந்ததிகோயிலடைந்தனளிப்பாள்.

(இ - புரை.) இப்படிப் புலம்பாநின்ற இளங்கிளிபோல்பவளைத் தோழி யர்கள் தாயே! வருந்தாதே வருந்தாதேயென்று தேறுதல்சொல்லி ஸ்நாநஞ் செய்விக்க; அருந்ததியையொத்த கற்புள்ள சீமந்தனியென்பவள் தன்மாளிகை யிற்போய்ச் சேர்ந்தாள். அதற்குமேல் நடந்ததென்னவெனில். எ - று. (கூரு)

போரணிமாமிசைபோகியவேலோ
னீரணிசூழ்நிடதத்திருநாட்டிற்
ரோரணநீடியதொன்னகர்முன்னர்க்
காரணிசோலைகளிப்பொடடைந்தான்.

(இ - புரை.) போர்க்கோலமணிந்த குதிரையின்மேற் சென்ற வேலேந் திய ராஜகுமாரன் நீர்வளமிகுந்த அழகியநிடதநாட்டில் தோரணங்கள் ஓங்கிய பழமையாகிய நகரத்துக்கு முன்னிருக்கும் மேகமண்டலமளாவிய சோலையி னிடத்தில் களிப்புடன் சேர்ந்தான். எ - று. (கூசா)

சேண்வழிவந்திடுசெல்லலகற்றிப்
பூண்மலிகின்றபொலந்திருமார்ப
னுண்மருவுஞ்சிலைநாகருமாரன்
வாண்முகநோக்கியோர்மாற்றமுரைத்தான்.

(இ - புரை.) அதிதூரம் வழிநடந்த வருத்தத்தை நீக்கிக்கொண்டு ஆபரணங்கள் நிறைந்துள்ள பொன்னிறந்தங்கிய அழகியமார்பையுடைய அந்தராஜகுமாரன், நாணிபூட்டத்தக்க வில்லினைப்பெற்ற நாககுமாரனுடைய ஒள்ளிய முகத்தைப்பார்த்து ஒருவார்த்தைச் சொல்லுகின்றான். எ - று. (கூஎ)

பாதலமேவியதும்பணிநாதன்
மேதகுமெய்வரநல்கியதும்மிப்
பூதலமுற்றதுமின்றுபொருந்தார்க்
கோதுதிபின்னருமோதுவதுண்டால்.

(இ - புரை.) யமுனையாற்றில்வீழ்ந்த நான் பாதாளலோகத்திற் சென்றதையும், அங்கிருக்கும் நாகராஜன் எனக்கு மேன்மையுற்ற நல்லவரங்களைக் கொடுத்ததையும், அந்த வரம்பெற்றுக்கொண்டு பூலோகத்தில் வந்ததையும் இப்போது நீபோய்நம்முடைய பகைவருக்குச் சொல்லுவாய். இதுவுமல்லாமல் இன்னமுஞ் சொல்வதுண்டு, அதென்னவெனில். எ - று. (கூஅ)

எண்ணுறுதாதையிருஞ்சிறையோடெங்
கண்ணகனுடிதுகாலம்விடாரேன்
மண்ணுலகாளுமதிப்பையொழித்தே
விண்ணுலகாளவிடுக்குவனென்பாய்.

(இ - புரை.) யாவரு மதிக்கத்தக்க என்பிதாவின் சிறையையும் எமது இடமகன்ற தேசத்தையும் இப்போது விடாராகில், மண்ணுலகத்தையாளும் படி அவர்க்குள்ள எண்ணத்தையொழித்து, விண்ணுலகத்தை யாளும்படி அனுப்புவேனென்றுஞ் சொல்லுவாய். எ - று. (கூகூ)

என்றவனேவலியைந்தனனேகிக்
குன்றெனநீடியகோபுரமூதூர்ச்
சென்றுபுகுந்தடுசேரலர்தம்பாற்
கன்றியநெஞ்சொடுகட்டுரைசெய்வான்.

(இ - புரை.) இவ்வண்ணஞ் சொல்லிய ராசகுமாரனேவலுக்கு நாககுமாரன் சம்மதித்தவனாகிச்சென்று, மலைபோலுயர்ந்த கோபுரத்தையுடைய பழமையாகிய நகரத்திற்சேர்ந்து, கொல்லுகின்ற பகைமன்னரைக்கண்டு கோபங்கொண்டமனதுடன் உறுதியானவார்த்தைச் சொல்லுகின்றான். எ - று. ()

இந்திரசேனனெனும்புகழ்மன்னன்
மைந்தனடுந்திறல்வாகுவலத்தான்
றந்திரமேவியதக்ககனல்க
அந்தமிலாதவரங்கொடடைந்தான்.

(இ - புரை.) இந்திரசேனனென்னும் பெயர்பெற்ற புகழுள்ள மன்னவனுடைய புத்திரனும், சத்துருக்களைப் போர்முகத்திற் கொல்லும்படியான புசபலத்தையுடையவனும், நாகப்படைகளையுடைய தக்ஷகனென்னும் நாகராசன் கொடுக்க அளவில்லாத வரங்கள் பெறறுக்கொண்டவனுமான சந்திராங்கதன வந்திருக்கின்றான். எ - று. தந்திரம் - சைந்நியம். (கoக)

ஆதலினலவனோடமராடல்
பேதைமையென்றறிவீர்பிழைசெய்தீர்
தாதையும்விட்டுயர்தண்ணடையும்விட்
டேதமுறாவகையேகுமினென்றான்.

(இ - புரை.) ஆகையாலவனுடன் போர்செய்குதல் உங்களுக்கு அறிவில்லாமை யென்றறியுங்கள்; நீங்களோ மிகுந்த குற்றஞ்செய்திருக்கிறீர்கள்; ஆகிலுமிப்போது நீங்கள் க்ஷேமமடையவேண்டுமென்கிற எண்ணமிருந்தால், அவன் தகப்பன் சிறையைநீக்கி, அவன்தேசத்தையும் விட்டு, நீங்கள் யாதுகுறையுமில்லாமல் போய்விடுங்களென்று சொன்னான். எ - று.
தண்ணடை - நாடு. (கoஉ)

இத்திறநாககுமாரனியம்ப
மத்தகயானைமறப்படையன்னர்
அத்தகைவேந்தருஞ்சிறைநீக்கித்
தத்தமரும்பதிபோயினர்சார்ந்தார்.

(இ புரை.) இப்படியாக நாககுமாரன் சொல்ல; மத்தகத்தையுடைய யானைமுதலாகிய வீரத்தன்மையுள்ள நால்வகைப் படையோடுங்கூடிய அந்த மன்னவர்கள் மேன்மைபொருந்திய இந்திரசேனனைச் சிறைவிடுத்துத் தங்கள் தங்கள் நகரத்திற்போய்ச் சேர்ந்தார்கள். எ - று.
"யானையுடைய படைகாண்டல் முன்னினிதே" என்பதனால் யானையைக் கூறினார். அத்தகை என்பதில் அகரம் உயர்த்தற்கண்வந்தது. (கoங)

வேறு.

மேவலாளர்போயபின்னர்வேந்தன்மாமகன்வர
வேவலாளர்கூறக்கேட்டுளின்பமுற்றமைச்சரைக்
கூவியொல்லையென்மகற்கொணர்மினீண்டெனவவர்
பூவர்சோலையுட்குபுகுந்துபுண்ணியற்கொடுவந்தார்.

(இ - புரை.) பகைமன்னர் போய்விட்டபின்பு இந்திரசேனனென்னும் அரசன் தன் மகன்வந்திருப்பதை யேவலாளர் சொல்லக்கேட்டு மனமகிழ்ச்சியடைந்து மந்திரிகளை அழைத்து, என்புத்திரனை விரைவினில் இவ்விடத்துக்கு

அழைத்துக்கொண்டு வாருங்களென்று சொல்ல; அந்த மந்திரிகள் மலர்களை யுடைய சோலையினிடத்துக்குப் போய்ப் புண்ணியனாகிய அந்தக்குமாரனை அழைத்துவந்தார்கள். எ - று. (கo௪)

வந்துதந்தைதாளின்வீழ்தன்மைந்தனைப்பொன்மார்புறத்
தந்தையும்பரிந்துதன்றடக்கையாலணைத்திடா
எந்தைதண்புனற்குள்வீழ்ந்திறந்தநீபிழைத்தனென்
முந்தையோர்கள்செய்தவமுடித்தநன்மையாலென்றான்.

(இ - புரை.) புத்திரன்வந்து தகப்பனாகிய இந்திரசேனன் பாதத்தில் வணங்கினவுடன் அவனை யெடுத்துத் தனமார்பிற்பொருந்த நீண்டகைகளினால் அணைத்துக்கொண்டு, என்னையனே! என்பெரியோர்கள் செய்தற்குரிய தவஞ் செய்துமுடித்த நன்மையால் குளிர்ச்சியுள்ள ஆற்றில்விழுந்து இறந்த நீ பிழைத்தது என்றான். எ - று. (கoரு)

என்பதாயநன்கினிதியம்பவைந்தனும்மெழுந்
தன்புகூருமன்னைதன்னடிவணங்கவன்னையுந்
துன்பவாரிவிட்டகன்றுசூழ்கரைக்கடந்ததோர்
இன்பவாரியூடுபுக்கெழாதமுழ்கினாளரோ.

(இ - புரை.) இவ்வண்ணஞ் சொல்லுவதாகிய நல்லவார்த்தைகளை யினிதாகத் தகப்பன்சொலல; (அதன்பின்பு) புத்திரனானவன் அன்புமிகுந்த தன் தாயினுடைய பாதத்தைவணங்க; அந்தத் தாயும் துக்கசமுத்திரத்தை விட்டு நீங்கி சூழ்ந்த கரைகடந்ததாகிய பெரிய இன்பசமுத்திரத்தில் புகுந்து, எழாத வண்ண முழுகினாள். எ - று. (கoசு)

ஏனைநற்கிளைஞருமிரும்பதியுண்மாந்தரும்
போனவாவிபெற்றுடையர்போன்மகிழ்வுகூர்ந்தபின்
மானமன்னன்மைந்தவுற்றவாறெலாங்கிளத்தெனத்
தேனெய்மாரிபெய்வதென்னச்செம்மல்யாவுஞ்செப்பவே.

(இ-புரை.) இவர்களுமல்லாமல் மற்றைச்சுற்றத்தாரும் பெருமைபொருந்திய நகரத்தாரும் தாங்கள் முன்பிழந்த உயிரைப் பின்னும் பெற்றவர்கள்போல் மகிழ்ச்சியடைந்தபின்பு, பெருமைபெற்ற அரசபுத்திரனைப்பார்த்து, மைந்தனே! நீ நதியில்விழுந்தபின்பு நடந்த சேதியெல்லாம் சொல்லென்று வினவ, தேனும் நெய்யுமேகலந்து மழைபொழிவதுபோல நடந்த சேதியெல்லாம் ராசகுமாரன் சொல்லி. எ - று. (கoஎ)

தக்ககம்பரிந்தளித்ததாவில்பல்வளனெலா
மிக்கதாதைபாலளிப்பவேந்தனும்மகிழ்ந்துபின்

புக்கவாறுசித்திரவன்மனுக்குரைத்திர்போதிரென்
றக்கணத்திஞேலைதூதினன்புடன்விடுப்பவே.

(இ - புரை.) தக்ஷகன் பரிவுடன்கொடுத்த கெடுதலற்ற பொருள்களை யெல்லாம் அன்புமிகுந்த பிதாவினிடத்தில் கொடுக்க; அந்தராசன்பார்த்து மன மகிழ்ந்து, அப்பொழுதே யோலையெழுதித் தூதர்கையிற்கொடுத்து, நீங்கள் சித் திரவன்ம ராசனிடத்திற்குப்போய் என்குமாரன்வந்த சேதியைச் சொல்லுங்க ளென்று அனுப்பிஞன். எ - று. (கoஅ)

ஆரியவருத்தநாடடைந்துதூதரோலையை
வேரியார்நறுந்தெரியல்வேந்தனுக்களித்தலுஞ்
சோரிவேலிஞனுமோலைசொற்பொருளுணர்ந்துடல்
பூரியாவிருந்துதன்னமைச்சுடன்புகன்றனன்.

(இ - புரை.) (அப்படி யனுப்பப்பட்ட தூதர்கள்) ஆரியவருத்த தேசம் போய்ச்சேர்ந்து, தங்களிடத்திலிருக்கு மோலையைத் தேனிறைந்து வாசனைதங் கிய மாலையணிந்த சித்திரவன்மனுக்குக் கொடுக்கவும், இரத்தக்கறைதோய்ந்த வேலாயுதத்தையுடைய அவ்வரசன் தூதர்கொடுத்த வோலையிலெழுதியிருக்கும் சேதியைப் படித்துணர்ந்த மாத்திரத்தில் உடல்பூரிப்படைந்திருந்து தன் மந் திரியுடன் சொன்ஞன். எ - று. (கoக)

சொன்னவாய்மைகேட்டவன்றுறக்கமேவிஞனென
மன்னர்மன்னன்வன்கழல்வழுத்திநிற்பமன்னனும்
அன்னவாறுதன்மகட்குரைப்பவந்தவன்னமுந்
தன்னையீன்றதாதைதாளின்வீழத்தாதைசாற்றுவான்.

(இ - புரை.) இவ்வாறு அரசன் வார்த்தையைக்கேட்ட மந்திரியானவன் சுவர்க்கலோகத் தின்பம்பெற்றவன்போல மகிழ்ச்சியடைந்து, இராஜாதிராசன் பாதத்தை வணங்கித் துதிசெய்திருப்ப; பின்னும் அவ்வரசன் ஓலைவந்தசேதி யைத் தன்மகளாகிய சீமந்தனிக்குச்சொல்ல; அன்னநடைபோன்ற நடையை யுடைய சீமந்தனியும் மகிழ்ச்சிகொண்டு தன்னைப்பெற்ற பிதாவின் பாதத்தில் வணங்கிநிற்ப; அவ்வரசன் சொல்லுகிருன். எ - று. (ககo)

கங்கைதங்குசெஞ்சடைக்கணிச்சிவாணவற்குநீ
யங்கையாலருச்சனைபுரிந்தடைந்தநன்மையான்
மங்கையுன்றன்மன்னனுய்ந்துவந்ததென்றுகூறிடாப்
பொங்குதீயவெந்துயர்ப்புணரிநின்றுமேறிஞன்.

(இ - புரை.) புத்திரியே! கங்கைபொருந்திய சடாமகுடத்தையுடைய மழுவாயுதமேந்திய பரமசிவனுக்கு நீ அங்கையினால் அருச்சனைசெய்து வந்த

நன்மையினாலே, உன்கணவன் பிழைத்துவந்ததென்று சொல்லிப்போகின்ற தீயதாகிய வெவ்விய துக்கசமுத்திரத்தினின்றுங் கரையேறினான். எ - று. கணிச்சி-மழு. (கககூ)

மாசுசூழ்ந்துமாமணிகழீஇயவாறுபோலவே
பாசிழையைப்பைம்புனலினாட்டிப்பாலினாவியந்
தூசுடுத்தியொண்மலர்ச்சுரிகுழல்வனைந்துபின்
பூசுசாந்தணிந்துசெய்யபொற்கலன்கள்சேர்த்தினார்.

(இ - புரை.) அழுக்கடைந்த மாணிக்கத்தைக் கழுவியதுபோலப் பசும் பொன்னினாற்செய்த ஆபரணங்க ளணிந்துள்ளவளாகிய சீமந்தனிக்கு நல்ல நீரினால் ஸ்நாநஞ்செய்வித்து, பாலின்புகைபோலும் அழகுள்ள வஸ்திரமணிந்தும், வாசனையுள்ளமலர்களைக் கூந்தலிலணிந்தும், பின்பு சந்தனம் பூசிச்செவ்விதாகிய பொன்னாற்செய்யப்பட்ட ரத்நாபரணங்களு மணிந்தார்கள். எ-று.

கோலமைக்கண்மாதைவாவுகொய்யுளைப்பரித்திண்டேர்
மேலிருத்திச்சேடியர்நெருங்கவெண்சங்கார்ப்பெழப்
பாலிழைத்தவேலையிற்பரந்துசேனைசூழ்வரக்
காலியற்கலினமாவிவர்ந்துகாவலன்சென்றனன்.

(இ - புரை.) இவ்வாறு அலங்காரஞ்செய்தபின்பு அழகிய மையிட்ட நேத்திரத்தையுடைய சீமந்தனியைத் தாவிச்செல்லும் பிடரி மயிரினையுடைய குதிரைகள்கட்டிய பலம்பொருந்திய தேர்மேலேற்றித் தோழிகள்சூழவும், தவளச்சங்கம் ஆரவாரிக்கவும், பாற்சமுத்திரம்போலச் சேனைகள் சூழ்ந்துவரவும், காற்றைப்போல அதிவேகமாகச் செல்லுகின்ற சேணம்பூட்டிய குதிரையின்மேல் அவ்வரசன் ஏறிச்சென்றான். எ - று. கலினம் - குதிரைச்சேணம்.

நீடுசெந்நெறிகடந்துநென்மலிந்திடதமா
நாடுமேவியிந்திரசேனனன்னகர்ப்புறத்தினோர்
ஏடவிழ்ந்தபூம்பொழிலிருந்துதூதுபோக்கியே
யாடல்வேந்தனுக்குத்தானடைந்தவாறறிவித்தான்,

(இ - புரை.) (அவ்வாறு சென்ற அரசன்) நெடியதாகிய மார்க்கத்தைக் கடந்து செந்நெற்பயிர்நிறைந்த பெருமைபொருந்திய நிடதநாட்டைச்சேர்ந்து, இந்திரசேன ராஜனுடைய நகரின்புறத்திலிருக்கும் இதழ்கள்விரிந்த மலர்களையுடைய ஒருசோலையினிடத்திருந்து, தூதரையனுப்பித் தான்வந்திருப்பதை வெற்றியினையுடைய இந்திரசேன மகாராசனுக்குத் தெரிவித்தான். எ - று. ஆடல் - வெற்றி. (ககச)

வெங்கலிகெடக்துரந்தவேந்தர்வேந்தனுழுணர்ந்
தங்குநின்றெழுந்துதன்னமைச்சரோடெதிர்கொளா
மங்குறங்குகோயில்வாய்வருகெனக்கொண்டேகியே
பொங்குமோகையோடவண்புதுவிருந்துநல்கினுன்.

(இ - புரை.) கொடிய கலிப்பகையை நீக்கிய மன்னர் மன்னவனுகிய இந்திரசேனன் சித்திரவன்மனென்னு மரசன் வந்திருப்பதைத் தூதர்களாலறிந்து, தன்மந்திரிகளுடன் அவ்விடத்திலிருந்து புறப்பட்டு எதிர்கொண்டு, மேகங்கள் பொருந்தும்படியாகிய உன்னதமுள்ள தன்அரண்மனைக்குவருவீரென்று அழைத்துக்கொண்டுபோய் அவ்விடத்தில் மிகுந்த சந்தோஷத்துடன் புதுமையான விருந்துசெய்வித்தனன். எ - று. (கசுரு)

சந்திராங்கதனும்வந்துதாழ்ந்துமாதுலனடிக்
கந்தநாண்மலர்வணங்கக்கையினுலெடுத்தணைந்
திந்தமாதினுவியோடுமெங்களாவியாவையும்
உய்ந்துவாழவென்றுநீயுமுய்ந்துவந்ததாமரோ.

(இ - புரை.) (சித்திரவன்மனுவனன் விருந்துண்டிருக்கும்போது) சந்திராங்கதன்வந்து தன்மாதுலனுடைய அன்றலர்ந்த தாமரைமலர்போன்ற பாதங்களை வணங்கினமாத்திரத்தில், அவன் மருகனைக் கையினுலெடுத்தணைத்து மார்புடன் தழுவிக்கொண்டு, இந்தச்சீமந்தனி யுயிரும் எங்களுயிரும் பிழைத்து வாழும்படியாகவே நீயும்பிழைத்துவந்தது, என்று கூறினுன். எ - று. கந்தம் - வாசனை. (கசகூ)

என்றுகூறியன்றுசந்திராங்கதற்கியைந்தநாட்
டுன்றுசோதிடத்தர்சொல்லவோரையிற்சுருதிநூல்
ஒன்றுநீதியந்தணருரைப்பவொள்ளழலினமுன்
மன்றனுறுகோதையைமறுமணம்புணர்த்தினுன்.

(இ - புரை.) இவ்வாறு சொல்லி, அதன்பின்பு சந்திராங்கனுக்குப் பொருந்திய நல்லநாளின்னநாளென்று அங்குவந்திருந்த சோதிடர்கள் சொல்ல; அந்தலக்கினத்தில் வேதசாஸ்திரங்களுணர்ந்த நீதியாளர்களாகிய பிராமணர்கள் மந்திரங்களைக்கூற; ஓமாக்கினியின்முன் சீமந்தனியை மறுமணஞ்செய்வித்தான். எ - று. ஒள்ளழல் - ஒளியுள்ள தீ. (கசஎ)

மணஞ்செய்வித்தபின்னரன்புமன்னுசித்திரவன்மனீ
றிணங்குநல்லமைச்சர்தாமிருபுறமுஞ்சூழ்வரக்
கணங்கொடானையோடுதேர்கடாவியேகியூர்புகுந்
தணங்கனுர்நலத்தின்மூழ்கியண்டர்கோனின்வைகினுன்.

(இ - புரை.) மறுமணஞ் செய்வித்தபின்பு அன்புள்ள சித்திரவன்மனென்பவன் பெருமைபொருந்திய நல்லமந்திரிகள் இருபுறத்திலும்வரும்படிக் கூட்டமாகிய சேனைகளுடன் புறப்பட்டுத் தேரைச்செலுத்திக்கொண்டுபோய்த் தன் பதியிற்சேர்ந்து, தெய்வமகளிரையொத்த தனக்குரிய மாதர்களுடன் இன்பம் அனுபவித்துக்கொண்டு தேவேந்திரன்போலிருந்தான். எ - று. (கக அ)

வேறு.

பூமண்டலத்தைப்பொறுக்கும்புயங்கேசனீந்த
தாமந்துகில்பூணிறைசந்திவையாவுநல்கிச்
சீமந்தனியைத்திருமேவருஞ்செம்பொன்மார்பன்
றாமங்கமழுஞ்செழுஞ்சேக்கையிற்றோயுநாளின்

(இ - புரை.) இந்தப் பூமியைத் தாங்கும்படியான நாகராசன்கொடுத்த மாலை வஸ்திரம் ஆபரணம் நிறைந்தசந்தனம் என்னுமிவைகளைச் சீமந்தனிக்குக்கொடுத்துத் திருமகள்மேவிய மார்பனாகிய சந்திராங்கதன் தாமங்கமழும் செழுமையுள்ளபுட்பசயனத்தில் அவளுடன் கூடிக்குலாவி வாழுநாளில். எ - று.

நெய்வண்ணவேற்கைநிராருமிலேறனாற்குக்
கொய்வண்ணமாலைக்கொழும்பொன்முடிசூட்டிமன்னன்
பொய்வண்ணமாயவுடலான்வருபோகநீங்கி
மெய்வண்ணமேவத்துறவின்றலைமேவினானே.

(இ - புரை.) இந்திரசேனனென்னுமரசன் நிணந்தங்கிய வேலேந்துங் கையையுடையவனும் ஒருவருமொப்பிலாத ருஷபம்போன்ற நடையையுடையவனுமான தன்புத்திரனுக்குக் கொய்து கட்டிய வண்ணமாலை சூழ்ந்த பொன் மகுடந்தரித்து, பொய்த்தன்மையுள்ள மாயாசம்பந்தப்பட்ட உடலினால் வரத் தக்க போகங்களை வெறுத்துநீக்கி, உண்மைப்பொருளாகிய மோக்ஷமடையத் துறவடைந்தான். எ - று. (கஉ0)

தன்றாதைபோய்நற்றவஞ்செய்திடத்தாமவேலோன்
பொன்றாழ்குடைக்கீழகன்ஞாலம்புரக்குமெல்லை
நன்றாயுமைந்தர்நால்வரையீன்றுநற்பாற்
குன்றார்முலைமங்கையோர்கொம்பினையும்பயந்தான்.

(இ - புரை.) இப்படியாகத் தன்பிதா வனத்திற்போய் நல்ல தவஞ்செய்துகொண்டிருக்க; வெற்றிமாலை யணிந்த வேலையுடைய சந்திராங்கதன் அழகுதங்கிய குடையின்கீழிருந்து அகன்ற பூமியைக் காக்கும்நாளில், நன்னெறியை யுணரத்தக்க அறிவினையுடைய எட்டுப்புத்திரர்களைப்பெற்றுப் பின்னும் நல்லபொன்மலையொத்த தனத்தையுடைய பூங்கொம்புபோன்ற ஒருபுத்திரியையும் பெற்றான். எ - று. (கஉக)

மாவண்கைமன்னன்மகப்பேற்றின்மனங்களித்துப்
பாவந்தவிர்ந்துபதினாயிரமாண்டுபோரிற்
றாவின்றியின்பநுகர்ந்தான்றனிஞானவாழ்வு
மேவுந்தவத்தீரெனச்சூதன்விளம்பினனே.

(இ - புரை.) ஒப்பற்ற ஞானவாழ்வினையுடைய தவத்தர்களாகிய நைமிசாரணியமுனிவர்களே! மிகுந்த வளப்பந்தங்கிய கரத்தையுடைய சந்திராங்கதன் புத்திரர்கள்பிறந்து நன்மார்க்கத்தில் நடக்கத்தக்கவர்களா யிருப்பதினால் மனமகிழ்ச்சியடைந்து, (நீதியுடன் செங்கோற்செலுத்தி) பாவஞ்சேராத வண்ணம்நீக்கி யிவ்வுலகத்தில் பதினாயிரம்வருஷம் குறைவில்லாமல் இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்தானென்று சூதமுனிவர் சொன்னார். எ - று. (கஉஉ)

எட்டாவது சோமவாரவிரதபூசை அத்தியாயம் முற்றிற்று.

திருவிருத்தம். ருஉச.

ஒன்பதாவது

# சோமவாரத்திற்சீமந்தனிபாவவணபெற்ற அத்தியாயம்.



பின்னுமாதவர்விழைவுறப்பெருந்தவவியாதன்
அன்னசூதமாமுனிவரனரனருளடியார்
மன்னுசெய்கையுஞ்சோமவாரத்தின்மான்மியமும்
இன்னுமோதவுண்டவைகேண்மினென்றிசைத்தான்.

(இ - புரை.) நைமிசாரணிய முனிவர்கள் பின்னும் சந்தோஷம் அடையும்படி பெரியதவத்தையுடைய வியாசரையொத்த சூதமுனிவர் பரமசிவனருள் பெற்ற அடியார்களுடைய நிலைபெற்ற செய்கையும் சோமவாரவிரதமகிமையும் இன்னமுஞ்சொல்லத் தக்கதுண்டு; அவைகளைக் கேட்பீர்களென்று சொல்லியருளினார். எ - று. (க)

பொங்குவெள்ளிமீன்புதையினுஞ்சகட்டினைப்போழ்ந்து
பங்குவேறினுப்படுமழைப்பருவம்பொய்த்தாலுந்
திங்கண்மும்மழைதிறம்பிலவாய்வளஞ்சுரக்கும்
மங்குறேய்பொழில்வைதர்ப்பநாட்டில்வாழ்மறையோர்.

(இ - புரை.) விளங்குகின்ற சுக்கிரனென்னுங் கிரகமானது மூடத்தில் விழுந்தாலும், உரோகணி நக்ஷத்திரத்தைப் பேதித்துக்கொண்டு சனிக்கிரகம்

வக்கிரித்துச்சென்றாலும், நியதியாகப்பொருந்திய மழைப்பருவமும் தப்பினு லும், மாதந்தோறு மும்மாரிமாறுபடாமல் வளங்கள் சுரக்கப்பெற்ற மேகமண் டலவரையிற் பொருந்திய சோலைசூழ்ந்த வைதர்ப்பநாட்டில் வாழ்கின்ற பிரா மணர்களுக்குள்ளே. எ - று. சகடு - உரோகணி. பங்கு - சனி. (உ)

இனியநண்பொடுவேதமித்திரன்றவத்தீன்ற
புனிதநான்மறைபுகல்சுமேதாவுநற்புகழோன்
றுனியிலாமதியாலுயர்சார்ச்சுதன்றோன்றல்
தனிமெய்ஞ்ஞானநூற்சாமவானெனுந்தகவோனும்.

(இ - புரை.) வேதமித்திரனென்பவன் அன்புடன்செய்த தவத்தினாற் பெற்ற புனிதமாகிய நான்குவேதங்களையும் ஓதியுணர்ந்த சுமேதா என்பவனும், நல்ல புகழையுடையவனுய்த் துன்பமடையாத புத்தியினாலுயர்ந்த சார்ச்சுத னென்பவனுடைய புத்திரனாகிய ஒப்பற்ற மெய்ஞ்ஞான நூற்களையோதியுணர் ந்த மேன்மையுள்ள சாமவானென்பவனும். எ - று. (ங)

அரியநான்மறைமுதலியவங்கங்களாறுந்
தெரிவரும்பொருட்புராணமுமாகமத்தெளிவும்
விரியுமாறுளகலைகளுங்குரவனால்விளங்கிக்
கரியகாமனுஞ்சாமனுமெனக்கவினமைந்தார்.

(இ - புரை.) அருமையாகிய நாலுவேதங்களும் ஆறங்கங்களும் தெரி தற்கரிய பொருளமைந்த பதினெண்புராணங்களும் ஆகமங்களிற் சொல்லுகிற நிச்சயப்பொருளும் பரந்திராநின்ற மற்றுமுள்ளகலைகளும் ஆசாரியரால்கற்று ணர்ந்து, மன்மதனும்அவன்தம்பியாகியசாமனும்போலழகமைந்தார்கள். எ-று.

மைந்தர்கல்வியுமிளமையுமனக்கொடுமகிழ்ந்த
அந்தணாளர்தமரும்பெறற்புதல்வரைநோக்கிச்
சிந்தையோகையாற்சிறுவர்நீர்புவிக்கெலாமணியாம்
இந்தமாநிலவைதர்ப்பவேந்தன்மாட்டெய்தி.

(இ - புரை.) தங்கள் புத்திரர்கள் சிறுவயதில் கற்றுணர்ந்த கல்வியின் திறத்தையும் பெற்றுள்ள வாலிபத்தையும் மனங்கொண்டு, மகிழ்ச்சி யடைந்த பிராமணரிருவர்களும் பெறுதற்கரிய தங்கள் புத்திரர்களைப்பார்த்து உள்ளத்தி லுண்டான சந்தோஷத்தினால், சிறுவர்களே! நீங்கள் இவ்வுலகத்துக்கு ஆபர ணம்போல் விளங்குகின்ற பெரியஇடத்தையுடைய இந்தவைதர்ப்பநாட்டுஅரச னிடத்திற்சென்று. எ - று. (ரு)

கற்றகல்வியாற்காவலன்சிந்தையைக்கனிவித்
துற்றமாநிதிப்பரிசிலாங்குவகையினேற்றுப்
பெற்றசெம்பொனாற்கன்னியர்கடிமணமபேணி
முற்றுமில்லறம்புரிவதேமேற்கொண்டுமுயல்வீர்.

(இ - புரை.) நீங்கள் கற்றகல்வியால் அரசன் மனங்கனியச்செய்து, அவன் பரிசிலாகக்கொடுக்கு மிகுந்த திரவியத்தைச் சந்தோஷத்துடன் வாங்கிக்கொண்டுவந்து, நீங்கள் பெற்றுக்கொண்ட அந்தத்திரவியத்தினால் கன்னிகைகளை விவாகஞ்செய்து, குறைவில்லாத இல்லறம் நடத்துவதை மேற்கொண்டு நன் முயற்சியில் முயலுங்கள். என்று கூறினார்கள். எ - று. (சு)

என்றுகூறலுமிருவருமிசைந்தனரேகிக்
குன்றுபோலுயர்கோயிலிற்கொற்றவற்குறுகி
நின்றுதங்குலவிஞ்சைகணிகழ்த்தலுநிருபன்
நன்றுநன்றுநீர்வேட்டவைபெறுகெனநவின்றான்.

(இ - புரை.) இவ்வாறு அவ்விருவர் பிதாக்களுஞ்சொல்ல, அதற்குச் சம்மதித்துச் சென்று, மலையொத்துயர்ந்த அவ்வரசன் மாளிகையிற் சேர்ந்து அவனைக்கண்டு, தாங்கள் கற்றிருக்குங் கல்விகளைப் பிரசங்கித்தார்கள். அரசன் அதைக்கேட்டு உங்கள் பிரசங்கமுங் கல்வியும் மிகவும் நன்றாயிருக்கின்றன, ஆகையால உங்களுக்கு வேண்டிய பொருள்களைப் பெற்றுக்கொள்ளுங்களென்றான். எ - று. (எ)

மாலைவெண்குடைமன்னவாமன்னமற்றிதுகேள்
சேலைவென்றகட்டிருந்திழையார்மணமுடிப்பான்
ஏலவந்தனமிருநிதிதந்தருளென்னக்
கோலவெள்ளெயிறிலங்கிடநகைத்திதுகூறும்.

(இ - புரை.) வெற்றிமாலையும் வெண்வட்டக்குடையுமுடைய மன்னவர் மன்னனே! நாங்கள் சொல்லுவதைக்கேட்பாயாக; கயல்மீனைவென்ற அழகுள்ள பார்வையையுடைய கன்னியரை விவாகஞ்செய்துகொள்ள மனதிலுத்தேசித்து உன்னிடத்துக்கு வந்தோம். அதற்குத் தகுதியாக மிகுந்த திரவியங்களை எங்களுக்குக் கொடுவென்றுசொல்ல; அதைக்கேட்ட அரசன் அழகியபற்கள் விளங்க நகைத்து இந்த வார்த்தையைச் சொல்லுகின்றான். எ - று. ()

மண்டுதீம்புனனிடதத்தர்கோமகன்மனையாள்
கொண்டகற்புடைக்கோதைசீமந்தனிக்கொம்பர்
துண்டவெண்பிறைவேணியான்சோமவாரத்தில
அண்டாநங்கண்டுவியப்புறவாநச்சனைபுரிந்தே.

(இ - புரை.) மிக்க நீர்வளம் நிறைந்த விடதேசத்தரசன் மனைவியாகிய கற்பினையுடைய பூமாலைபோன்ற சீமந்தனியெனபவள் இளந்திங்களணிந்த சடையையுடைய பரமசிவனைச் சோமவாரத்தில் தேவர்களுங்கண்டு ஆச்சரியப்படும்படி அருச்சனைசெய்து. எ - று. (௯)

அந்தவேலையினுண்மறைமுனிவரையடங்கச்
சந்தமென்முலைதையலாரொடுவரச்சாற்றி
யிந்துசேகரனுமையெனவவர்களையெண்ணிப்
புந்தியான்மகிழ்ந்தருச்சனைவழிபடல்புரியா.

(இ - புரை.) அந்தச் சோமவார காலத்திற் பிராமணாகளைச் சந்தனம் பூசப்பெற்ற தனங்களையுடைய அவரவர் பத்தினிமாருடன்வரும்படிச் சொல வியனுப்பி, வந்தவர்களை உமாமகேசுவரர்களாக மனதிற் பாவித்து மகிழ்ந்து அருச்சனைசெய்து. எ - று. (௧௦)

வேண்டுநன்கலன்வெறுக்கைகண்மிகவவர்க்களிக்கு
மாண்டுநீவிர்களிருவரிலொருவனாண்டகையாய்ப் (ரு)
பூண்டகோலத்தின்மனைவியாயொருவனைப்புனைந்து
காண்டகுஞ்சிறப்பிறைமகள்பாற்சென்றுகடிதின்.

(இ - புரை.) அவர்கள் வேண்டிய நல்ல ஆபரணங்களும் திரவியமும் மிகுதியாகக் கொடுக்கிறாள். ஆதலால், நீங்களிருவரிலொருவன் ஆண்மகனாகவும் ஒருவன் கோலம்பூண்ட அவன் மனைவியாகவும் அலங்கரித்துக்கொண்டு, அழகினாற் றக்க சிறப்பினையுடைய ராசகுமாரத்தியாகிய சீமந்தனியிடத்தில் விரைவிற்போய். எ - று. வெறுக்கை - பொன். காண் - அழகு. (௧௧)

கைதவத்தினாலவடரும்வெறுக்கைகள்கவர்ந்து
மைதழைந்தகண்மடவியர்கடிமணமருவி
யுய்திரென்னுரைமறுத்திரேற்றண்டமுண்டென்னுக்
கொய்துணர்த்தொடைவேந்துரைத்தனுமுளங்குலைந்தார்.

(இ - புரை.) இப்படிக்கொத்த வஞ்சகத்தினால் அவள்கொடுக்கிற திரவியத்தை அபகரித்து மைபொருந்திய கண்ணையுடைய கன்னியர்களை விளக்கமுள்ள விவாகஞ்செய்துகொண்டு வாழுங்கள்; என்சொல்லைத் தடுப்பீர்களானால் உங்களுக்குத்தண்டனைகிடைக்கும் என்று, கொய்த பூங்கொத்துக்களாற்றொடுக்கப்பட்ட மாலையணிந்த அரசன் சொல்லவும் அவர்கள் மனம் வருந்தி. எ-று.

வேறு.

அந்தோவந்தோவெங்கடமக்கீதழகிற்றோ
கொந்தார்மாலைக்கொற்றவகோயில்குறுகுற்றால்

நந்தாகின்றவஞ்சனைவேடநணுகுற்றால்
எந்தாயெந்தைதங்குலமுதலோடிறுவாரே.

(இ - புரை.) (இப்படி அந்த ராசன் சொன்னதைக்கேட்ட பிராமணச் சிறுவர்களவனை நோக்கி,) ஐயையோ! வேதமுதலாகிய சாஸதிரங்களையெல்லாங் கற்றிருக்கும் எங்களுக்கு இந்தக்காரியம் நன்மையுடையதோ? அரசனே! உனது அரண்மனையைக்குறுகிய நாங்கள் வஞ்சனையான வேஷத்தைப்பொருந்தினால் எங்கள் மாதாபிதாக்கள் குலமுதலுடனழிந்துபோவார்களே! எ - று.

இம்மைதனக்குமறுமைதனக்குமெழுமைக்கும்
வெம்மைசெய்கேடுநரகும்விளைகும்விறல்வேந்தே
செம்மையகற்பித்தாயெனினின்றேசெய்வேமென்
றம்மறையோர்நின்றஞ்சியுரைடபவலல்வேந்தன்.

(இ - புரை.) அரசனே! நீ சொன்னதுபோல் செய்வோமாகில் இம்மை மறுமையென்னுமிரண்டினு மல்லாமல், எழுபிறப்பினுந் துன்பஞ் செய்யும் கெடுதியையும் நரகினையும் உண்டாக்கும், வெற்றியுள்ள அரசனே! நன் மார்க்கத்தைக் கற்பித்தாயானால், இப்பொழுதே செய்கிறோமென்று அந்தப் பிராமணர்கள் எதிர்நின்று பயந்துசொல்ல; (அதைககேட்ட) வலியுள்ள அவ் வரசன். எ - று. (கச)

வெஞ்சினமூளக்கண்கள்சிவக்கவெடிசொல்லாற்
செஞ்சொலுரைக்குந்தேசிகர்தேவர்திறல்வேந்தர்
தஞ்சொனவின்றாலம்மொழிகேளாத்தகவிலலோர்
அஞ்சிநடுங்கத்தண்டமியைப்பதறமென்னா.

(இ - புரை.) செவ்விய வார்த்தையைச் சொல்லுங் குரு தேவர்கள் வென்றியுள்ள அரசர்கள் என்னுமிவர்கள் ஏதாவதொரு சொல்லைக்கூறினால், அவர்கள் வார்த்தையைக்கேளாத தகுதியிலலாதவர்களைப் பயந்துநடுங்கும்படித் தண்டனை செய்வது தருமமென்று வெவ்விய கோபம் அதிகரிக்கக் கண்கள்சிவக்க வெடித்த சொல்லால் கூறுவானாயினான். எ - று. (கரு)

என்னுரைகேளீராமெனினுங்களையிப்போதே
யன்னியகீழ்மைக்குலராய்வேதியராகாது
கொன்னுறுதண்டஞ்செய்குவனென்றென்றிறைகூற
முன்னுறநிறகும்வேதியர்வெருவாமொழிகுற்றார்.

(இ - புரை.) இவ்வாறு சொன்ன அரசன், என் வார்த்தையை நீங்கள் கேளாவிட்டால், உங்களை யிப்பொழுதே பிராமணரென்கிற யோக்கியதையில்

லாடல் நான்கு வருணத்துக்கும் அன்னியமான தாழ்ந்தசாதியாய்ப் போகத் தக்க கொடிய தண்டனை செய்விப்பேன் என்று கடிந்துகூற, எதிரிலிருக்கும் பிராமணர்கள் பயந்து சொல்லுகின்றார்கள். எ - று. (கசு)

சீறலைமன்னுசீறலையுன்றன்றிருவுள்ளப்
பேறலதுண்டோநின்குடைவாழப்பெற்றோர்க்குத்
தாறலைபூகத்தொடுகனிதேமாத்தலைசாய
ஆறலைமோதுநிடதத்திருநாடணைவோமே.

(இ - புரை.) மன்னவனே கோபஞ் செய்யாதே உனதுகுடை நிழலில் வாழப்பெற்றவர்களுக்கு உன் திருவுளப்பேறன்றி வேறொன்றுண்டோ? இல்லையாதலால், குலைகள் அசைந்துகொண்டிருக்கும் கமுகமரமும், பழங்களையுடைய தேமாமரங்களும், தலைசாயும் வண்ணம ஆறானதுஅலையினால் மோதத்தக்க நீர் வளம்பெற்ற நிடததேசத்துக்குப் போகின்றோம். எ - று. (கஎ)

என்றவர்கூறச்சிந்தைநயுவந்தேயிகல்வேந்தன்
ஒன்றியசாமவான்மடமாதருருவென்னப்
பொன்றணிபெண்மைக்கேயும்வனப்புப்புனைகென்னத்
துன்றியணைந்தார்கைபுனைவண்ணத்தொழில்வல்லோர்.

(இ - புரை.) இவ்வாறு அவர்கள் சொல்லலும் சிறந்த வலியுள்ள அவ்வரசன் மனமகிழ்ந்து, அலங்காரஞ் செய்விக்கும் நல்லதொழில் வல்லவர்களை அழைப்பித்து, இந்தச் சாமவானுக்குப் பெண்ணுருவத்திற்கியைந்த வனப்பினைச் செய்யுங்களென்று சொல்ல, வண்ணஞ்செய்வோர் அவ்வாறு செய்யத் துணிந்தார்கள். எ - று. (கஅ)

மங்கையர்போலக்கொங்கைகள்வேறேவனைவித்துக்
குங்குமசந்தத்தேய்வைகள்கோட்டிக்குளிர்முத்தத்
தொங்கல்வளைந்திட்டினமலர்பெய்நசுருளோதி
பொங்கிருணச்சிகழிகையாகப்பொற்பித்தார்.

(இ - புரை.) மாதர்களைப்போலிருக்கும்படி வேறே தனங்கள் நூதனமாக அமைத்து, குங்குமம் முதலிய வாசனைத்திரவியஞ்சேர்ந்த சந்தனக்குழம்பு பூசி, குளிர்ந்த முத்துமாலைகளையணிந்து, பூமாலைசூட்டிய அளகபாரத்தை இருளும் நாணும்படிக் கொண்டையாக அலங்கரித்தார்கள். எ - று. தேய்வை-சந்தனக்குழம்பு. சிகழிகை-மயிர்க்கொண்டை. (ககூ)

கோலவிழிக்குக்கருமைசிறக்குங்கோடீட்டி
யாலநெடும்பொற்குண்டலமுங்காதணிசெய்து

பாலநுதற்குப்புண்டரமிட்டுப்பட்டுர்வேலை
ஞாலமும்விற்குந்துகிலமைத்தார்நவையற்றார்.

(இ - புரை.) அழகுள்ள நேத்திரங்களுக்குக் கறுத்த மையைச் சிறக் கும் அரியக்கோலாலெழுதி, அசையும்படி யிரண்டு காதிலும் பொற்குண்ட லங்கள் தரித்து, நெற்றியினிடத்திற் றிரிபுண்டரமாக விபூதியணிந்து, பரந்த சமுத்திரஞ்சூழ்ந்த உலகத்தையே விலைமதிக்கத்தக்க வஸ்திரமுமணிந்தார்கள்; அலங்காரஞ்செய்யுந்தொழிலில் குற்றமற்றவர்களாகிய வண்ணமாதர்கள். எ-று. கோல் - மைதீட்டுங்கோல். பாலநுதல் - மீமிசைப்பதம். (௨௦)

வேறு

இருடிகண்மயங்கத்தாருகாவனத்தினெதிர்ந்தநாண்மாயனார்மாயம்
புரிதருபெண்மைமோகினிரூபம்பொருவுறப்பொற்பலங்கரித்து
நரபதிதனக்குக்காட்டலுமகிழ்ந்துநன்றெனவவன்விடைகொடுப்பத்
தெரிவையரோடும்புகுந்தருமறையோர்சூழாத்தொடுமிவர்களுஞ்சென்றார்.

(இ-புரை.) இருடிகள் மயங்கும்படித் தாருகாவனத்தில் சென்றநாளில் விஷ்ணுவானவர் மாயத்தினாற்கொண்ட மோகினியென்னும் பெண்ணுருவை யொப்பாக அழகுடனலங்கரித்து, அரசனுக்குக்காட்டினவுடன் அவன்மகிழ்ந்து நன்றாகவிருக்கின்றதென்றுசொல்லி உத்தரவு தரப்பெற்றுக்கொண்டு, சீமந் தனியிடத்துக்குத் தங்கள் தங்கள் பத்தினிகளுடன் செல்லுகின்ற பிராமணக் கூட்டங்களுடன் போனார்கள். எ - று. (௨௧)

குடங்கையினடங்காநெடுங்கணாளிருந்தகோயிலிற்குமரனுங்கோல
வடந்தருமுலையாளாயுருவெடுத்தமைந்தனும்வருதலுமகிழா
கடந்தெதிர்சென்றாங்கருக்கியமுதலநவையறுபூசனைபுரிந்தாங்
கடைந்தமாதவரோடிருக்கெனவிவற்குமகமகிழ்ந்தாசனமளித்தாள்.

(இ - புரை.) அகங்கையினளவிலடங்காத நெடியகண்களையுடைய சீமந் தனி யிருக்குங்கோயிலிற் சுமேதாவென்பவனும் அழகிய மணிவடமணிந்த தனங்களையுடைய பெண்ணுருவமைந்த சாமவானென்பவனும் செல்லுதலும், சீமந்தனி அவர்களைக்கண்டு மனமகிழ்ந்து, எதிர்கொண்டுபோய் அருக்கியமுத லியவற்றாற் குற்றமற்ற பூசைசெய்து, அவ்விடத்தில் வந்திருக்கும் பிராமணர் களுடன் மகிழ்ந்திருங்களென்று இவர்களுக்கும் ஆசனங்கொடுத்தாள், எ - று.

சுழிபடுகங்கைச்சடிலவானவன்றன்சோமவாரத்தினிற்றெரக்க
பழிபடுதீமைமுனிந்தவேதியரைப்பன்னியரோடுபன்முறையால்
வழிபடுமமையத்திவர்முகநோக்கிமைந்தரிங்கிவரெனமதித்துப்
பொழியருட்கண்ணணைமுகங்கோட்டிப்பொருக்கெனமறைத்திதுசெய்தாள்.

(இ - புரை.) சுழிகள்பொருந்திய கங்கையையணிந்த சடாமகுடத்தை யுடைய பரமசிவனுக்குரிய சோமவாரதினத்தில் தன்னிடத்தில் வந்திருக்கும் பழியும் தீமையுமற்ற பிராமணர்களை அவரவர்கள்பத்தினிமாருடன் பலமுறை யோடு பூசனைசெய்யுங்காலத்தில், இவர்கள் முகத்தைப்பார்த்து, இவர்களிரு வரும் ஆண்மக்களென்று தனக்குளறிந்து, அருளைப்பொழிகின்ற கண்களை யுடைய அச்சீமந்தனி நகைமுகத்தைச் சற்றுவளைத்துக்கொண்டு விரைவுடன் இத்தக்காரியஞ் செய்தனள். எ - று. (உ௩)

எத்திறத்தானுமடைந்தவரெல்லாமீசனுமுமையுமேயென்று
அத்திரவிழியாள்வேதநூன்முறையுமாகமமுறையுமாயடுத்துப்
பத்திசெய்பூசைவிதிமுறைபுரிந்துபால்பழந்தேன்கழைத்தீம்பால்
சித்திரக்கனகவள்ளத்தினேந்திச்சிற்றுண்டியடிசிலோடளித்தாள்.

(இ - புரை.) எந்த வேடத்தினாலாவது சோமவாரதினத்தில் வந்தவர்க ளெல்லாரும் பரமசிவனும் பார்வதியுமேயென்று தனக்குள் பாவித்து, அத்திரம் போலும் கண்களையுடையவள் வேதமுறையையும் ஆகமமுறைமையினையுந் தழுவிப் பத்தியினையத்தக்க பூசையினை விதிதவறுமாற் செய்து, பால் பழம் தேன் மதுரமுள்ள கருப்பஞ்சாறு என்னு மிவைகளைத் தனித்தனியாகச் சித் திரமமைந்த பொன்வட்டிலினிலேந்திச் சிற்றுண்டியோடு அன்னமும்கொடுத் தாள். எ - று. (உ௪)

நறுமலர்மாலைசந்தனத்தேய்வைநவையறுமாடையாபரணம்
பிறையெனவொளிருங்கருப்புரநறியபிளவுவெள்ளிலையிவையுதவி
மறையவர்தம்மைவரதனோடுமையைவழுத்துவபோலநின்றேததி
நெறியிடைப்படர்திரெனவருள்செய்தாணிடததேசாதிபன்மனையாள்.

(இ - புரை) சீமந்தினியானவள் பூமாலை சந்தனக்குழம்பு நல்ல வஸ்த் திரம் ஆபரணம் பிறைபோல் விளங்கும் பச்சைக்கருப்பூரம் மணமுள்ள தாம் பூலமென்னு மிவைகளைக்கொடுத்துப் பரமசிவனையும் பார்வதிதேவியாரையும் பூசிப்பதுபோல பிராமணர்களைப்பூசித்து எதிரினின்று துதிசெய்து, நீங்கள் செல்லுங்களென்று உத்தரவுகொடுத்தாள். எ - று. (உ௫)

அன்னவளுமையுமீசனுமென்னவருச்சனைபுரிந்தபாவனையாற்
றன்னிகரிலாதசாமவானெடுத்தகோலம்போற்றளிரியலுனாய்
முன்னைநாண்மைந்தனென்பதுமறந்துமொய்குழலாமெனமுயங்கத்
தன்னொடுநெறியிற்போதருஞ்சுமேதாத்தனைமுகநோக்கிநின்றுரைக்கும்.

(இ - புரை.) அத்தன்மையுள்ள சீமந்தனியானவள் பார்வதியும் பரம சிவனுமாகப் பாவனைசெய்து பூசித்த நன்மையினாலே, கல்வியாற் றனக்கொப் பில்லாத சாமவானென்பவன் தான்கொண்ட கோலம்போலவே பெண்ணுரு வமைந்து முன்னம் தான் ஆண்மகனென்பதையு மறந்து, மாதர்போலவே

புணரவிரும்பித் தன்னோடு மார்க்கத்தில்வருகின்ற சுமேதாவென்பவன் முகத்தைப்பார்த்துச் சொல்லுகிறான். எ - று. (உசு)

துணைவநீபோதலொழிந்திந்தவனத்திற்றுணர்க்கொடிகுலாயமண்டபத்தென்
பணைமுலைநின்றுமணிப்புயத்தழுந்தப்பவளவாயிதழ்முறைபருகி
யணைகுதியலதுமறுத்தியேலின்னேயாருயிர்முடிக்குவனன்றிக்
கணைபுரைகண்ணார்விரும்பிடமறுத்தல்காளையர்க்கறனலகண்டாய்.

(இ - புரை.) துணைவனே! நீ போவதைவிட்டு இந்தவனத்திற் பூங்கொத்துக்களையுடைய கொடிகள் பிரகாசித்துக்கொண்டிருக்கும் இம்மண்டபத்தில் என்னுடைய பருத்ததனங்கள் உன்னுடைய அழகிய புயங்களில் அழுந்தும்படிப் பவளம்போன்ற அதரத்தை முறையாகப் பருகிப் புணர்ச்சி செய்குவை. அல்லது தடுப்பையேயானால், இப்பொழுதே சானிறந்துபோவேன். இதுவுமல்லாமல் கணையையொத்த கண்களையுடைய மாதர்கள் விரும்பினால் சம்மதியாமற் றடுப்பது ஆடவர்க்குத் தருமமல்ல. எ - று. (உஎ)

என்றிவைமொழிந்தகாமநோய்தலைக்கொண்டிரத்தலுமேகிடுஞ்
சுமேதா, தன்றுணைத்தோழன்வினோதவாய்மையினாற்சாற்றியதிதுவெ
னவெண்ணி, ஒன்றெடுத்துரையான்வழிச்செலக்கண்டவுற்பலவிழியி
னுண்மீட்டும், பொன்றிணிதோளாவெனையணைந்தன்றிப்போகலையெ
னச்சென்றுதடுத்தாள்.

(இ - புரை.) இந்த மாதானவள் இவ்வாறு மொழிந்து காமநோயதிகரித்து இரந்து சொல்லுதலும், செல்லுகின்ற சுமேதாவானவன் அந்தவார்த்தையைக்கேட்டுத் தன் சிநேகன் விநோத வார்த்தையினாலிப்படிச் சொல்லுகிறானென்று நினைத்துப் பிரதி யுத்தரவு வேறொன்றுஞ் சொல்லாமல் நடக்கவும், அதனைக்கண்ட நீலோற்பலம்போன்ற கண்களையுடைய அந்த மாது மறுபடியும் அழகுநிறைந்த தோளனே! என்னையணைந்தல்லது நீபோகக்கூடாதென்று சொல்லித்தடுத்தாள். எ - று (உஅ)

வனப்புறுபெண்மைமருவியதறியாமறையவனடுத்தவள்வதனந்
தனைப்பிரியாததோழனென்றெண்ணித்தருக்கொடுபொருக்கெனநோக்கித்
தினைத்துணையேனு நாண்வடிவின்றிச்செயற்கைசெய்வடிவமுங்கரந்து
கனத்தடிபரந்தமுலையிளங்கொடியாய்நிற்றலுங்கண்டதிசயித்தான்.

(இ - புரை.) பெண்ணுருவமைந்த சாமவானிவ்வாறு தடுக்கவே, தன் தோழன் அழகுள்ள பெண்ணுருவமானதை அறியாத சுமேதாவென்னும் பிராமணன் இவன் நம்முடைய தோழன்றானே, இப்போதிவ்வண்ணஞ் சொல்லுகிறானே, இதென்னகாரணமென்று தன்மனதிலெண்ணித் தருக்குடன் விரை

வாகச்சமீயத்திற்போய் அவள் முகத்தைப்பார்த்துத் தினையளவும் ஆண்வடிவ மென்பதில்லாமல் கோலஞ்செய்யும் அவயவங்களும் மறைந்து, கன்முள்ளதா யடிபரந்த தனங்களையுடைய இளங்கொடிபோன்ற பெண்ணுருவுக்குள்ள அடையாளத்துடனிருக்கவே, அவற்றைப்பார்த்து அதிசயித்தான். எ - று.

குங்குமமெழுதிக்கதிர்த்தடிபரந்தகுலவிளங்கொங்கையோமலர் சூழ், கங்குலிற்சிறந்து நெறித்து நெய்த்திருண்ட கருங்குழற் கற்றை யோகலைசேர், திங்களிற்பொலிந்ததிருமுகத்தழகோதிங்களிற்கிடந்த சேலெனப், பங்கயமலருங்காவியுங்கடந்தபடைநெடுந்துணைவிழிவ டிவோ.

(இ - புரை.) அப்படி அதிசயித்தவன், குங்குமப்பூக்குழம்பினல் ரேகை களெழுதப்பட்டுப்பூரித்து அடிபரந்து மேலேகுவிந்திருக்கும் தனங்களின் அழ கினையோ, இருளைப்போலக் கருமைநிறஞ்சிறந்து நெறிப்பாகி நெய்த்துக் கறுத்த அளகபாரத்தின் அழகினையோ, பதினாறுகலைகளும் நிறைந்துள்ள பூரணசந்தி ரன்போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் முகத்தினழகினையோ, அச்சந்திர னிடத்தி லிரண்டு சேற்கெண்டைகளிருக்கின்றதென்று சொல்லும்படி (முகத் தினிடத்திருக்கும்) செந்தாமரை மலரையும் நீலோற்பலமலரையும்வென்ற வாட்படைபோலும் நெடியதாகிய இரண்டு கண்கள் மாம்பிஞ்சினையொத்தி ருக்கும் அழகினையோ, எ - று. (௩௰)

மாந்தளிரனையமேனியின்வனப்போவரிவளைமுன்கையிற்கவினோ, காந்தளஞ்செங்கை மெல்விரலணியோ கதிர்மணிமேகலையொளியோ, ஏந்தெழிலல்குற்செவ்வியோவிவற்று ளேதையான்புகழ்ந்தெடுத்துரை க்கேன், பூந்தவிசுறையுந்திருமகளன்றிப்புவியில்வேருரிவள்போல்வார்.

(இ - புரை.) மாந்தளிரையொத்த மேனியினழகினையோ, வரிவளை யணிந்த முன்கையின் அழகினையோ, செங்காந்தள் மலர்போன்ற மெல்லியகை விரல் அழகினையோ, ஒளிபொருந்திய மணிவடத்தாலாகிய மேகலாபரணத்தின் ஒளியினையோ, அழகுபொருந்திய அல்குலினழகினையோ, இவைகளுக்குள் எதனை ப்பெரிதென்று நான் தனித்தனியாகப் புகழ்ந்து சொல்லுவேன். செந்தாமரை மலராகிய ஆசனத்தில் வீற்றிருக்கும் திருமகளே யல்லது இவ்வுலகத்திருக்கும் மாதர்களில் இவளுக்கொப்பாகின்றவர்கள் யாரிருக்கின்றார்கள். எ - று. (௩௧)

எனமனத்தெண்ணிமடந்தையேநானென்றேழனேடிவ்வனத்த டைந்தே, னனையவன்றன்னைக்காண்கிலேனின்னையருகுகண்டதிசய முற்றேன், புனைமலர்த்திருவேயாரைநீயிங்குப்புகுந்தவாறென்புகலெ ன்னச், சுனைமலர்க்குழலாண்முறுவலித்தெனதுதுணைவகேளென்றி துசொன்னாள்.

(இ - புரை.) இவ்வாறாக மனதிலெண்ணிச் சாமவான் கூறுகின்றான். மாதே! நான் என் சிநேகனுடன் இவ்வனத்தி லடைந்தேன், இப்போது அவனைக்காணேன், அருகில் உன்னைக்கண்டதிசயமடைந்தேன்; அலங்காரமமைந்த செந்தாமரைமலரில் வீற்றிருக்குந் திருமகள்போன்பவளே! நீ யாவள்? நீ இவ்விடத்தில் வந்த காரணம்யாது? சொல்லென்னவே, சுனைப்பூவணிந்த அளகத்தையுடைய அந்தமாதானவள் நகைத்து என் துணைவனே! என்வார்த்தையைக் கேளென்று சொல்லுகிறாள். எ - று. (௩௨)

முன்னைநின் றுணைவன்சாமவான்சாமவதியெனுமெய்ச்சூழலாகி, நின்னுடைமனையாயநின்னையேபுணருநேயத்தா னினைத்துதிசெய்தேன், பொன்னவிர்சுணங்கென்முலையுறுவண்ணம்புணருதிபொருபடைமாரன், கன்னலாம்மெலிநதேனென்றவளிரப்பக்காளைவேதியனிஃதுரைத்தான்.

(இ - புரை.) முன்னம் நான் உன் துணைவனாகிய சாமவானென்பவனே: இப்போது சாமவதியென்னு மாதாகி, உன்மனையவளாய் உன்னையே புணர வேண்டுமென்கிற இச்சையினால் உன்னைத் துதிசெய்தேன். பொன்போல் விளங்கும் தேமல் என்தனங்களில் பொருந்தாத வண்ணம் புணர்வாயாக. பொருகின்ற படையையுடைய மன்மதன் கரும்புவில்லினால் வருத்த வருந்தினேன். என்றவளிரந்துகூற, வாலிபனாகிய அந்த வேதியன் இந்த வார்த்தையைச் சொல்லுகிறான். எ - று. (௩௩)

தீங்குரைசெய்தாயபாவிநீபொல்லாய்மெதருண்டசாரச்சுதன்றந்தோ
யோங்கியமரபுநின்றிருக்குலமுமுயர்தவப்பெருமையுமறந்து
பூங்கணிகையர்போற்றீயுரைநவின்றுபொறபுமத்திறத்தவாய்வேதந்
தாங்கியநீதிநூலிவையெல்லாந்தணக்கவென்சமைந்தவாறென்றான்.

(இ - புரை.) பாவியே! கொடியவார்த்தைசொன்னாய், நீ பொல்லாதவள். வேதமுதலானவைகளை யோதியுணர்ந்த சாரச்சுதனால் பெறப்பட்ட நீ மேலான வுன்மரபினையும் சிறந்த குலத்தினையும் உயர்ந்த தவப்பெருமையினையுமறந்து அழகுள்ள வேசையர்போல் கொடியவார்த்தையினைச்சொல்லிக்குணமுமதற்குத்தக்கதாய், வேதத்திற்சொல்லப்பட்ட நீதிமுறைகளையெல்லாம் நீங்கும்படி இவ்வாறானதற்குக் காரணம்யாதோ? வென்றான். எ - று. (௩௪)

விரிகடலுலகின்மாதருக்கெல்லாம்வேண்டுவகலவியேயன்றோ
புரியுநூன்மார்பவென்றுணைக்கொழுநபுந்தியினையழின்றொழிக [ன்
வரிவையேயான்மற்றுணமேலெனன்பதமர்ந்துநின்றிருக்கணூற்காணெ
றெறிபசும்பூணளவயவமனைத்துமேந்தன்முன்புலப்படுத்தினளால்.

(இ - புரை.) பரந்தகடலாற் சூழப்பட்ட உலகத்தில்வாழு மாதர்களுக் கெல்லாம் வேண்டியபொருள் கலவியல்லவோ? முறுக்கியமுப்புரிநூலணிந்த மார்பனே! எனது கணவனே! உன் மனதிலிருக்குஞ் சந்தேகத்தை யிப்போ தொழியக்கடவை; நான் பெண்மகளே யல்லது ஆண்மகனல்லேனென்பதை உன்கண்ணால்நன்றாகப்பார்க்கக்கடவையென்று, விளங்குகின்றபூணணிந்திருப்ப வள் தன் அவயவங்களையெல்லாம்அந்தப்பிராமணனுக் கெதிரில் தெரியும்படிச் செய்தாள். எ - று. (கடு)

கண்டனன்மகிழாவதிசயித்திந்தக்காரிகைதன்னவயவம்போல்
மண்டுநீர்சுலாயவையகத்தெந்தமடந்தையரவயவமுடையா
ரண்டர்நாயகன்றன்சோமவாரத்தினமர்ந்தசீமந்தனியகத்திற்
கொண்டபாவனையில்விளைந்தவாறென்னக்குழைந்தனனுரைமறந்திரு
ந்தான்.

(இ - புரை.) அவள் தன்னவயவத்தைக்காட்டவே, கண்டுமகிழ்ந்து அதிசயமுற்று, இம்மாதின் அவயவம்போல அவயவமுடைய மாதர்கள் இவ்வுல கத்தில் யாருமில்லை, பரமசிவனுடைய சோமவாரதினத்தில்வருகிற (பிராமணர் களையும் அவர்கள் பத்தினிமார்களையும்) சீமந்தனி தனது மனதில் சத்தி சிவ ரூபமாகப் பாவனைசெய்யுந்தன்மையினால் இவ்வாறு விளைந்ததென்றெண்ணி மனங்குழைந்து வசனிப்பதுமின்றித் தன்னைமறந்திருந்தான். எ - று. (கசு)

காளைவேதியநீயவயவமூற்றுங் கண்டனையையமுங்கடிந்தாய், தோளையேவிரும்பியணைகெனவிரந்தேன் றுயர்விடாய் கெடவணைகெ ன்ன, வாளைநேர்விழியாளுரைத்தலுங்கேட்டமறைவலான்மனத்துய ரெய்திப், பாளைசேர்கமுகின் கழுத்தினாய்கேட்டியெனவவன் பற்பல மொழிந்தான்.

(இ - புரை.) கட்டிளமையனாகிய பிராமணனே! என்னவயவமெல்லாங் கண்டு சந்தேகமு நீங்கினை; இனி என்னுடைய தோளை விருப்பங்கொண்டு, புணருவா யென்று இரக்கின்றேன்; ஆதலால்; தடைசொல்லாமல் துயரமுள்ள காமவிடாய்க்கெடும்படி அணைவாயென்று வாளையொத்த கண்களையுடையவள் சொல்லலும், அந்தவார்த்தையைக்கேட்ட பிராமணன் மனதில் துயரமுற்றுப் பாளைகள்பொருந்திய கமுகம்போலும் கழுத்தினையுடையாய் கேளென்று பல மொழிகள் சொன்னான். எ - று. (கஎ)

வேறு.

வேதமும்பலமேதகுநூல்களும்
ஓதினன்கலைமுற்றுமுணர்ந்தேஞ்

சாதியுந்தருமத்தையும்விட்டிப்
பாதகந்தருபண்பையிழைத்தேம்.

(இ - புரை.) வேதங்களும் மற்றும் மேன்மைபொருந்திய பலசாஸ்திரங்களும் சொல்லுகின்ற கல்லகலைகள் முழுவதையும் உணர்ந்தோம், (இப்படிக்கொத்ததன்மையுள்ள நாம் இப்போது) குலாசாரத்தையுந் தருமநெறியையும் விட்டுப் பாவத்தைத்தரும்படியான இந்தச்செய்கையைச் செய்தோம். எ - று. சாஸ்திரங்களாவன:—வேதாந்தம் வைசேடிகம் பாட்டம் பிரபாகரம் பூருவமீமாஞ்சை உத்தரமீமாஞ்சை என்னும் ஆறுமாம். (௩௪)

உற்றதாதையரோர்
வெற்றிவேலிறைவஞ்சம்விளைப்பான்
சொற்றகைதவஞ்சூழ்ந்தனமாகி
நற்றவக்கொடிபானணுகுற்றேம்.

(இ - புரை.) (நாம் அரசனிடத்துக்குப்போனபோது அவன்சொன்னதை) நம்முடைய பிதாக்களுடன் சொல்லாமற் போனேம், கெடுதி நேரிடும்படி அரசன்சொன்ன வஞ்சனைக் குடன்பட்டவர்களாய் நல்லதவமுள்ள சீமந்தனியிடத்துக்குப் போனேம். எ - று. கைதவம்-வஞ்சனை. (௩௫)

கைதவத்தையறிந்துமகற்பினள்
செய்தவத்திற்சிவனோடுமையென
வையமற்றங்கருச்சனைசெய்தவிற்
றையலித்துயர்தன்னொடுசார்ந்தனம்.

(இ - புரை.) கற்பினையுடைய அந்தச்சீமந்தனி நம்முடையவஞ்சகத்தை அறிந்தும் அவள் தவத்தினால் பார்வதியும் பரமசிவனுமாக நம்மைப்பாவித்து உண்மையாகப்பூசித்ததினால், பெண்ணே! இந்தத்துயரத்துடன் வந்தோம்.

புன்மைநெஞ்சிற்பொறியறுபாதக
வன்மைவஞ்சகர்வருவதெண்ணுமலே
நன்மையோர்க்குநவைகளியற்றிடு
தன்மைதங்களுக்கேவந்துசாருமால்.

(இ - புரை.) அற்பநெஞ்சினையுடைய அறிவற்ற கர்மமுள்ள வஞ்சகர்கள்மேல் தமக்குவருவதையெண்ணுமல் பெரியோர்களுக்குச் செய்யுங் குற்றமானது தங்களுக்கேவந்துசாரும். எ - று. பொறி-அறிவு. (௩௬)

ஆதலாலிவ்விடரையருந்தவ
மாதவத்தினின்மாற்றுவமாந்திடரப்

போதுநின்னைப்புணர்வதுதிண்ணமென்
றோதினான்மறுத்தாள்பின்னுமோதினான்.

(இ - புரை.) ஆகையால், இப்போது நமக்குநேரிட்ட இத்துன்பத்தை அரியதவத்தினால் நீந்திக்கொள்ளுவோம்; அங்ஙனம்மாற்றக்கூடாதபோது நிச்சயமாக உன்னைப்புணருகிறேனென்று சொன்னான். அதனைக்கேட்ட அவள் விகாரத்தாற்றடுக்கவும் பின்னுங் கூறுகிறான். எ - று. (சஉ)

வேழமின்பிடிபோலும்விளங்கிழா
யாழினோர்மணநங்குலக்கேற்பதோ
சூழியானையமன்னர்தொழிலென்றன
மாழைமான்விழிமாதுமிதுசெய்தாள்.

(இ - புரை.) பிடியானையினைப்போன்ற பெண்ணே! காந்தருவவிவாகம் நம்முடைய குலத்துக்கேற்றதோ? அது முகபடாமணிந்த யானைகளையுடைய அரசர்க்குரிய தொழிலாயிற்றே என்றனன். அவனப்படிச் சொல்லியும் பொன் மானைப்போன்ற கண்களையுடைய அம்மாது பின்னரும் இதனைச்செய்தாள். எ - று. யாழினோர்மணம்-காந்தர்வமணம். இது தலைவனும் தலைவியும் தனித்தவிடத்திற் றாமாகக்கலத்தல். மாழை-பொன். (சங)

காமபாணங்கலக்கக்கருத்தழிந்
தாமதல்லவிதென்பதறிவுறாள்
வாமமுன்கைவலிவினிற்பற்றியே
தாமமென்குழறோய்ந்திடர்நீங்கினாள்

(இ - புரை.) காமபாணமானது கலக்குவதினாலே இது செய்வது இது விலக்குதென்பது உணராமற் கருத்தழிந்தவளாய், அவனுடைய அழகிய முன்கையைப்பற்றி யிழுத்துப் பலாத்காரமாகப்புணர்ந்து தனது காமத்துன்பம் நீங்கினாள். எ - று (சச)

வன்பிலன்னவள்புல்லவுமைந்தனு
மின்பமுற்றிலனின்னலுற்றேறுதுயான்
மீன்பயங்காந்காகையர்மன்சென்று
துன்பமுற்றதொடர்பையுணர்த்துவான்.

(இ - புரை.) அவள் இவ்வாறு பலாத்காரமாகப் புணர்ச்சிசெய்யவே அவனின்பமுறாமல் துன்பங்கொண்டு சொல்லுகிறான். முன்னம் நம்மிருவரையும் பெற்ற பிதாக்களிடத்திற்போய்த் துன்பமடைந்த இந்தச்சங்கதியைச்சொல்லுதற்கு, எ - று. (சரு)

வருதியென்னொடுமென்றவழிக்கொளா
வரி[illegible]றிடைநீந்தியகனகர்
பரிதியன்னதன்றாதைதன்பான்மரீஇச்
சுருதிநூல்வல்லவ்தான்றல்சொன்னனரோ.

(இ - புரை.) பெண்ணே! என்னுடன் வருவாயென்று கடந்து அரிய மார்க்கத்தைக் கடந்துபோய் விசாலமுள்ள நகரத்தையடைந்து, சூரியனைப் போன்ற தன் தகப்பனிடத்திற்சேர்ந்து, வேதமுணர்ந்த அந்தப்பிராமணச்சிறுவன் சொல்லுகிறான். எ - று. (௪௬)

நஞ்சையொத்தவிதர்ப்பத்திறைநவில்
வஞ்சகத்தருவஞ்சமரீயதும்
பஞ்சினிற்றிகழ்சீறடிப்பாவைகண்
டஞ்சலித்தவிலாயிழையானதும்.

(இ - புரை.) விஷத்தையொத்த விதர்ப்பதேசத்து அரசன்சொல்லிய வஞ்சகத்தினால் வஞ்சவேஷங்கொண்டு தாங்கள் சென்றதையும், சீமந்தனி தங்களைக்கண்டு பூசைசெய்தலினால் தன் துணைவன் பெண்ணானதும், எ - று. பஞ்சினிற்றிகழ்சீறடிப்பாவை-செம்பஞ்சுக்குழம்புடன் விளங்கும் பாதத்தையுடைய சீமந்தனி. (௪௭)

அழுதுகூறினனன்னவையாவையும்
பழுதிலாதவன்றாதையப்பாவையாந்
தொழுகுலத்தவன்றாதைக்குச்சொல்லனு
முழுதுங்கேட்டவன்மெய்ம்பொடுசீறியே.

(இ - புரை.) அழுதுகொண்டு சொன்னான், அவன் சொன்னதையெல்லாம் குற்றமில்லாத தந்தை கேட்டுப் பெண்ணுருவான பிராமணனுடைய தகப்பனிடத்திற்போய்ச்சொன்னான். அந்தச்சங்கதியெல்லாங் கேட்டவன் மிகுந்த கோபங்கொண்டு, எ - று. (௪௮)

காய்ந்தவெஞ்சினமோடுகனன்றெழா
வாய்ந்தசிந்தையனல்லவைசெய்திடும்
வேந்தன்முன்னர்விரைந்துசென்றேமைந்தன்
போந்தவாறும்புகுந்ததுமோதியே.

(இ - புரை.) வெதும்பிய வெவ்வியசினத்துடன்மனங்கொதித்தெழுந்து ஆய்ந்த சித்தத்தையுடைய அப்பிராமணன் தகாத காரியத்தைச்செய்த அரசனிடத்துக்குப்போனமுறைமையும் அதன்பின் நேரிட்டமுறைமையினையுஞ் சொல்லி, எ - று. (௪௯)

வேறு.

ஆதுலரும்பொருள்விரும்பினரடைந்தா
லீதலதுவன்றிநிதியிலையகல்வீரென்
றோதலிவையன்றியுலோபகபடத்தான்
மாதுயருழப்பவிடன்மன்னவழக்கோ.

(இ - ள்.) அரசனே! இரப்பவர்கள் பொருளை விரும்பி உன்னிடம் வந்தால், கொடுக்கவேண்டும்; அல்லது என்னிடத்தில் பொருளில்லையென்று சொல்லவேண்டும்; இவ்விரண்டு செய்கையுமில்லாமல் நீ உலோபத்தன்மையுள்ள கபடத்தினால் இரப்பவர்கள் மிகுந்த துயரத்தை யடைய விடுதல் மன்னவர்கள் முறைமையோ? எ-று.

ஈசன்விரதத்தினையற்றமவடன்பா
னீசாபுரிதீமைசெயுநீதுயருறாமே
மாசின்மறையோதியமகற்கிதுவிளைத்தாய்
சீசியெனமன்னவர்சிரிக்கவசைகொண்டாய்.

(இ - ள்) சிவவிரதம் அனுஷ்டிப்பவளிடத்தில் நீசர் செய்கின்ற பாபச்செய்கையைச் செய்வித்த நீ துன்பம் அடையாமல், குற்றமற்ற வேதங்களை யோதியுணர்ந்த என்புத்திரனுக்கு இப்படிக்கொத்த தீமையை உண்டாக்கினை, சீசீ யென்று அரசர்கள் உன்னைக்கண்டால் சிரிக்கும்படி வசை தேடிக்கொண்டாய். எ - று. (௫௧)

புத்திரனில்லாதவர்கள்பொன்னுலகெய்தாரென்
றித்தகையபுத்திரனையீன்றினிநமக்கே
யுத்தமவரும்பதமுமுண்டெனமதித்தேன்
சித்தமுமழித்துநரகச்சிறையில்விட்டாய்.

(இ - ள்.) புத்திரபாக்யமில்லாதார் சுவர்க்கலோகத்தை யடையார்களென்று கல்விகேள்விகளாற் பெருமையுடைய இந்தப்புத்திரனைநாம்பெற்று இனி நமக்கே அரியதாகிய நல்லபதமும் உண்டென்று மதித்துக்கொண்டிருந்தேன். என்னுடைய எண்ணத்தைக்கெடுத்து நரகமாகிய சிறையினிடத்திலிட்டனையே. எ - று. (௫௨)

மைந்தன்மணநல்லணிகள்கண்டுமகிழ்வெய்து
மிந்தவிழியாலிவனதிவ்வுருவுகாண
முந்தைவினையோவிதுமுடித்ததுகொலென்னாச்
சிந்தையலமந்தலறிமீட்டுமுரைசெய்தான்.

(இ - புரை.) புத்திரனுடைய நல்ல மணக்கோலத்தைக்கண்டு மகிழ்ச்சியடைய்த்தக்க இக்கண்களால் இவனுடைய இந்தப் பெண்ணுருவைக் காணுதற்குப் பழையவினை இவ்வகை விளைந்ததோ? அல்லது முற்பிறப்பிற்செய்தவிதிதானிப்படிமுடித்ததோ! என்று மனமானது சுழலும்படி அழுது மறுபடியுஞ் சொல்லுகின்றான். எ - று. (௫௩)

இவ்வுருவெடுத்திவனிருப்பவினியானும்
அவ்வையுமனத்துயர்பொறுத்தலரிதம்மா
கவ்வையுடலத்திலுயிரித்தலைகழிப்பேம்
பவ்வவுலகத்தவர்பழிக்கவுனையென்றான்.

(இ - புரை.) இந்தப்பெண்ணுருவெடுத்து இவனிருப்பதினால் இனிநானும் இவனுடையதாயு மனவியாகூலத்தைச் சகிப்பதரிதாகும். (ஆதலினால்) சமுத்திரஞ் சூழ்ந்த இந்த வுலகத்திலுள்ளவர் உனனைப்பழிக்கும்படி துன்பத்துக்கிடமாகிய சரீரத்திலிருக்கு முயிரை உனக்கெதிரிலே யொழித்துவிடுகிறேமென்று சொன்னான். எ-று. அவ்வை-தாய், கவ்வை-துயர், பவ்வம்-சமுத்திரம். (௫௪)

சொல்லியமொழிக்கனல்செவித்தொளைவெதுப்ப
கல்லுரைகொடுக்கவறியானடுநடுங்கிச்
சல்லியமுறைதப்பமருமங்கிழிதரச்சாய்
வல்லியமெனப்புவியின்மன்னவன்விழுந்தான்.

(இ - புரை.) இவவாறு அந்தப்பிராமணன் சொல்லிய தீச்சொற்கள் தனது காதின்றொளையைச் சுடுதலினால் பிராமணனுக்கு நல்லவார்த்தை சொல்லத் தெரியாதவனாய் நடுக்கங் கொண்டு, முள்ளம்பன்றி கிழிக்க மார்புபிளக்து விழுகின்ற புலியைப்போல அந்தராசன் மண்ணில்விழுந்தான். எ - று. சல்லியம்-முட்பன்றி. வல்லியம்-புலி. (௫௫)

வீழ்ந்தவன்மனத்தையிதுவெய்யசுடர்வேற்போற்
போழ்ந்திடவெருக்கொடுபொருக்கெனவெழுந்தாங்
காழ்ந்தவிரதத்திருவினற்புதம்வழுத்தாத்
தாழ்ந்தனன்முனித்தலைவர்தம்மொடிதுசொன்னான்.

(இ-புரை.) அப்படி விழுந்தவனுடைய மனதைப் பிராமணன் சொன்ன வார்த்தையானது கொடிய சுடர்வேற்போலப்பிளப்பதினால், அச்சங்கொண்டு விரைவில் எழுந்து முதிர்ந்த விரதத்தையுடைய சீமந்தனியின் அற்புதமான செய்கையைப் புகழ்ந்து வணங்கி, முனிச்சிரேஷ்டர்களுடன் இச்சேதியைச் சொல்லுகிறான். எ - று. (௫௬)

கேட்டயலிருந்தமுனிவீரிஃதுகேண்மி
ஞட்டமொருமூன்றுடையாநம்பனைவழுத்தும்
வாட்டமிறவத்தினண்மதித்தபடிமாதாய்க்
காட்டியதுபாவமொருகட்டுரையுமுண்டோ.

(இ - புரை.) வந்தபிராமணன் சொல்லியதைக் கேட்டுக்கொண்டு என்னருகிலிருக்கும் முனிவர்களே! நான்சொல்லுமிந்த மொழியையுங் கேளுங்கள், திரிநேத்திரங்களையுடைய பரமசிவனைத் துதிசெய்கின்ற தவறுதலில்லாத தவநெறியையுடைய சீமந்தனி தன்மனதில் பாவித்தபடி இந்தப்பிராமணன்மகன் பெண்ணுருவமானது என்பாவமே யல்லது வேறுசொல்ல ஒரு கட்டுரையுமுண்டோ? எ - று. (கூஎ)

வந்தமறைமாணிபெறுவல்லுருவொழிப்பா
னெந்தவழிமாதவமியற்றிடுவன்யானீர்
அந்தவகைகயோதுகெனவாங்கரசுரைப்பப்
பந்தமில்பரத்துவசமாமுனிபகர்ந்தான்.

(இ - புரை.) வேதங்களுணர்ந்த பிரமசாரியாகிய பிராமணச்சிறுவன் அடைந்த மாதுருவத்தையொழிக்க, நான் எந்தமுறைமையினால் பெரியதவத்தைச்செய்குவேன், நீங்கள் அந்தவகையைச் சொல்லுங்களென்று அரசன்சொல்ல; பாசங்களையொழித்த பாரத்துவாசமுனிவர் சொல்லுகின்றார். எ - று மாணி-பிரமசாரி. (கூஅ)

கண்ணுதல்கழற்றுணைகருத்துறவழுத்தும்
புண்ணியர்தருக்கும்விரதத்தினதுபொற்பும்
விண்ணுலகினிற்பழவிரிஞ்சன்முதறேறான்
மண்ணுலகினிற்சிறியமானிடர்கொறேர்வார்.

(இ - புரை.) பரமசிவனுடைய உபயதிருவடிகளுஞ் சித்தத்திற் பொருந்தும்படித் துதிசெய்யத்தக்க புண்ணியர்களுடைய களிப்புக்கொள்ளும் விரதத்தின் பெருமையைப் பழமையான பிரமன் முதலாகிய தேவர்களும் அறியமாட்டார்களென்றால், இம்மண்ணுலகிலிருக்கு மானிடர்களோ அறியத்தக்கவர்கள். எ - று. (கூகூ)

வேறு.

எப்பாதகஞ்செய்துபிணைப்பரிசுற்றுளோருஞ்
செப்பாரிளங்கொங்கைமனோன்மணிமீசன்றேவி
துப்பார்மலர்ச்சேவடிபோற்றித்துதிப்பராயிற்
றப்பாமலெய்துங்கதிநீமைதணந்துபோமால்.

(இ - புரை.) எவ்விதமான பாதகங்களைச்செய்து பின்பு எந்தத்தன்மையை அடைந்தவர்களும் செப்புபோலும் திருத்தனங்களையுடைய மஹேஸ்வரியாரான அம்பிகையாருடைய பவளம்போலும் திருவடிகளைத் துதிசெய்வார்களானால், தவறுபடாமல் நல்லகதிகிடைக்கப்பெறுவர்; தீமையும் நீங்கிவிடும். எ-று.

வெங்காரிருள்பானுவிளங்கவொர்துங்குமாபோற்
கொங்கார்குழற்பார்வதியேழுலகுங்கொடுத்தாண்
மங்காதவன்பின்வழிபட்டவர்தங்கண்மாட்டுத்
தங்காதுதீமையிதற்கேமறைசான்றுவேந்தே.

(இ - புரை.) சூரியன் உதயமானால் மிகுந்த கருமைநிறமுள்ள இருள் நீங்கிவிடுதல்போலப் பதினான்குலோகங்களையுமீன்ற இயற்கையான வாசனையுள்ள அளகத்தையுடைய பார்வதிதேவியாரைக் கெடுதலில்லாத அன்புடன் பூசைசெய்தவர்களிடத்தில் யாதொரு பொல்லாங்குந் தங்காது. அரசனே! இதற்கே வேதஞ்சாக்ஷியாயிருக்கின்றது. எ-று. கொங்கு - வாசனை. (சுக)

ஆறாதஅன்பமனக்கோட்டமகற்றிஞானக்
காறார்குழலம்மையைநாடிக்கருத்தினில்வைத்துப்
பாறாளிரவினிம்மந்திரம்பற்றியோதி
நாறுவிதமாம்வழிபாடுநயந்துசெய்வாய்.

(இ - புரை.) அரசனே! தேவிபூசை யித்தன்மையுடையதாதலால், நீங்காத அன்பமுள்ள மனதிற் பற்றியிருக்குங் காமமுதலாகிய குற்றங்களைநீக்கி, ஞானமாகிய வாசனைதங்கிய அளகபாரத்தையுடைய உமையம்மையைப் பாவனைசெய்து, சித்தத்தில்வைத்துப் பாதிராத்திரிப்பொழுதில் இந்தமந்திரத்தை இடைவிடாதுஉச்சரித்துப் பலவிதமான பூசையும் அன்புடன் செய்வாயாக.

என்றுமுனிவனுமைமந்திரமீதென்றீந்து
நன்றுயகிதன்றிருக்கோயிலினாளும்வைகிப்
பொன்றாரமார்பபுரிபூசனையென்னவோடுங்
கொன்றாளும்வேலானிமவான்மகள்கோயில்புக்கான்.

(இ - புரை.) பாரத்துவாசமுனிவ ரிவ்வாறு சொல்லி உமையம்மை மந்திரத்தையும் உபதேசித்துப் பொன்னாரமணிந்த மார்பனே! பார்வதிதேவியாருடைய ஆலயத்திற்போயிருந்து நாடோறும் பூசைசெய்யென்று சொல்லவும், அந்த வலிபெற்ற வேற்படையினையுடைய அரசன் பார்வதியார் கோயிலிற்போனான். எ - று. கொன் - வலிமை. (சுஉ)

பொறியைந்துமாற்றிப்புலனும்மனவையோடுபோக்கி
நெறிநின்றசிந்தைநிருபனருட்டொண்டுபூண்டு

மறியொன்றுசெங்கைவாதன்றிருந்தேவிபூசை
பிறிதன்றிக்கங்குலொருமூன்றவண்பேணலோடும்.

(இ - புரை.) ஐம்பொறிமாற்றி அவற்றுடன் ஐம்புலன்களேயுமொழித்து நன்னெறியினின்ற சிந்தையையுடைய அரசன் வரம்பெறுதற்கேதுவான அடிமைத்திறம்பூண்டு, மானேந்திய திருக்கரமுள்ள பரமசிவனுடைய சிறந்ததேவியாராகிய உமாதேவிபூசையினை யாதொருகுறைவுமில்லாமல் அந்த ஆலயத்தில் மூன்றுநாள் செய்யவும், எ - று. மறி - மான். (சுசு)

அற்றைப்படுகங்குலினம்மையுமுண்மகிழ்ந்து
கொற்றச்சுடர்வேலிறைவன்முனங்கோடிகோடி
கற்றைக்கதிர்வெண்மதிபோனிழன்மேனிகாட்டப்
பொற்றைத்திருக்கோயிலுணின்றும்புறம்புவந்தாள்.

(இ - புரை.) அந்த மூன்றுநாளிரவில் பார்வதியார் திருவுள்ளமகிழ்ந்து அவ்வரசனுக்கெதிரில் நிறைந்த வெண்கதிரையுடைய அநந்தங்கோடி சந்திரர்கள்போல ஒளிவிளங்கும் திருமேனியோடு தரிசனங்கொடுக்கப் பொன்மலைபோன்ற திருக்கோயிலின் புறத்துவந்தாள். எ - று. பொற்றை - மலை. (சுரு)

வந்தாளைவணங்கிவழுத்தியமன்னர்மன்னன்
முந்தாகுலந்தீர்ந்தனமென்றுளமுன்னிநின்று
னந்தாவிளக்கேயன்பார்கணயந்தபொன்னே
சிந்தாமணியேசிறியேன்றுயர்தீர்த்தியென்றான்.

(இ - புரை.) அந்த வரசன் தனக்குத் தரிசனங்கொடுத்த பார்வதிதேவியைத் தொழுது நம்முடைய துபரந்தீர்ந்தோமென்பதாக எண்ணங்கொண்டு நின்று, கெடாத ரத்தின தீபமே! பரமசிவனுடைய இடப்பாகத்தை விரும்பிய தாயே! அடியார்க்குச் சிந்தாமணிபோன்றவளே! எளியேனுடைய துயரத்தைத் தீர்த்தருளென்றான். எ - று. (சுசு)

அன்புற்றிரக்குமரசேயினியஞ்சனெஞ்சி
னின்புற்றதேதுபுகலாயென்றிறைவிகேட்பத்
துன்புற்றவிந்தமறையோன்சிறுதோன்றல்வேட
முன்பெற்றிகழுவருளென்றனன்மூரிவேலோன்.

(இ - புரை.) இவ்வாறு வரங்கேட்பவனைநோக்கி அன்புடையவனாய்த் துதிசெய்கின்ற அரசனே! இனியபயப்படாதே உன்மனதிலுண்டான விருப்பம் யாதென்று பார்வதிதேவியார்கேட்க; வலிய வேற்படையையுடைய மன்னவன் துன்பம் அடைந்திருக்கும் இந்தப்பிராமணப் பிள்ளையானவன் முன்போல

ஆணுருவம் அடையும்படித் தாயே! அருள்செய்யென்று விண்ணப்பம்பண்ணினான். எ - று. (௬எ)

பருவத்தொருகோடிதவத்துளம்பற்றினும்
நிருபற்கிறைகேளென தன்பர்நினைந்தபான்மை
யொருவர்க்குமெம்மீசர்தமக்குமொழிக்கலாமோ
தருகுற்றனம்வேறுளகேளெனத்தையல்சொன்னாள்.

(இ - புரை.) அரசனே! கேட்பாயாக; ஒருகோடிவருஷம் தவத்தில்மனதைவைத்தாலும் என்னன்பர்கள் நினைத்ததன்மையை எம்மிறைவருக்கும் மற்றயாவருக்கும் ஒழிக்கமுடியுமோ? ஆதலால், வேறேவரங்கேள்தருகிறோம் என்று பார்வதிதேவியார் சொல்லியருளினார். எ - று. (௬அ)

நல்லாயிவன்மைந்தனையின்றிநவையுறுமவ
வில்லாள்வயிற்றின்னுமோர்மைந்தனையீதியென்று
சொல்லாமுன்றந்தனமென்றுரைசொல்லிக்கோல
வில்லார்நுதலாளிதுமீட்டும்விளம்பலுற்றாள்,

(இ - புரை.) தாயே! இவன்புத்திரரின்றித் துன்பப்படாமல் இவன் மனைவியிற்றினிடமாக இன்னுமொரு புத்திரனை அருள்செய்யென்று அரசன் விண்ணப்பஞ்செய்வதற்குமுன் அப்படியே கிருபைசெய்கிறோமென்று சொல்லி, அழகிய வில்லையொத்த நெற்றியையுடைய பார்வதிதேவியார் மறுபடியும் இந்த வார்த்தை யருளிச்செய்கின்றார். எ - று. (௬௯)

மயிலொத்தசாமவதிதன்னையிம்மைந்தனுக்கே
பயில்வுற்றவேதவிதியேமணம்பண்ணுவிப்பாய்
வெயிலொத்தவேலோயெனச்சொல்லிவிரைவினேகிக்
குயிலொத்தமென்சொல்லுமையாடிருக்கோயில்புக்காள்.

(இ - புரை.) வெயில்போலும் காந்திபரப்பும் வேலினையுடைய அரசனே! மயிலையொத்த சாயலையுடைய சாமவதியென்னு மிந்தமாதினை வழங்கப்படுகின்ற வேதவிதிப்படி இந்தப் பிராமணப்பிள்ளைக்கே விவாகஞ்செய்விக்கக் கடவை என்று சொல்லி, குயில்போலும் வசனங்களையுடைய பார்வதிதேவியார் விரையத் திருக்கோயிலுக் கெழுந்தருளினார். எ - று. (எ0)

வெங்கோபயானைவிறன்மன்னன்வியந்துசாலப்
பொங்கோதவேலைப்புவிபோற்றவிப்பூவைதன்னை
சங்கோதவிம்மற்றுறைமாணிதனக்குநல்கிக்
கொங்கோதியோடுமனைவாழ்க்கைகுறித்துவாழ்ந்தான்.

(இ - புரை.) இவ்வாறு சொல்லிய பார்வதிதேவியாருடைய திருவாக்கைக்கேட்ட வெவ்விய யானைப்படையினையுடைய அவ்வரசன் மிகவும் சந்தோஷித்து, மிகவும் பொங்குகின்ற கடல்வளைந்தஇவ்வுலகத்திலுள்ளவர்கள் வாழ்த்தவும் சங்கநாதம்செய்யவும் சாமவதியென்பவளைப் பிரமசாரியாகிய பிராமணனுக்கு விவாகஞ்செய்வித்துத் தன்மனைவியினுடன் இல்லறம்வழுவாமல் வாழ்ந்தான். எ - று. (எக)

துயருற்றதாதைமனையாளொடுசோகநீங்கி
மயர்வற்றகேள்விமகப்பெற்றினிதூழிவாழ்ந்தான்
அயர்வுற்றமன்னன்மகிழ்வோங்கியனந்தகாலம்
உயர்வுற்றசெங்கோலினிதோச்சியுலகையாண்டான்.

(இ - புரை.) அதன்பின்பு தன்புத்திரனைக்குறித்துத் துன்பம் அடைந்த தகப்பனாகிய பிராமணனும் அவன்மனைவியும்துயரம்நீங்கி, மயக்கமில்லாத கேள்வியையுடைய புத்திரனைப்பெற்று நெடுங்காலம் இனிதாகவாழ்ந்தார்கள். சோர்வுற்ற அரசன் மிகுந்த மகிழ்ச்சிகொண்டு மேன்மைதங்கிய செங்கோலினிதாகச்செலுத்தி அனந்தங்காலம் உலகத்தையாண்டனன். எ-று. மயர்வு-மயக்கம்.

மாயாதஞானவரதனடிவாழ்த்துமன்பர்க்
கேயாதனவுமுளவோவெனறியம்பிமேபத்தித்
தேயாதசைவநெறிச்சூதன்றெரிந்துகூற
ஓயாதுவாழ்த்துமுனிவோர்நெஞ்சுவகைபூத்தார்.

(இ - புரை.) நிலைபெற்ற ஞானசொரூபராகிய பரமசிவனுடைய திருவடிகளைத் துதிசெய்யும் அடியார்களுக்குக் கிடையாதபொருள்களுமுண்டோ? என்றுசொல்லித்துதித்து, அழிவுபடாத சைவசமயநெறியையுடையசூதமுனிவர் தெரிந்துசொல்ல, அதைக்கேட்ட நைமிசாரணியமுனிவர்கள் இடைவிடாமல் வாழ்த்தி மனமகிழ்ந்தார்கள். எ - று. (எஉ)

ஒன்பதாவது சீமந்தனிபாவனைசெய்த அத்தியாயம் முற்றியது.

ஆ திருவிருத்தம் ருகஎ.



உ

சிவமயம்.

பத்தாவது

# சிவயோகிமகிமையுரைத்த அத்தியாயம்.

சீர்பெறுசித்திரவேள்விமுனித்தவர்தீவினையற்றிடநீள்
கார்விடமுற்றணியானகளத்திறைகாலன்வெருக்கொளவே
பாரினுதைத்தவர்தாளைவழுத்தியபான்மையர்பெற்றவெலாஞ்
சோர்வறவுத்தமகூறுகெனக்கதைசூதனுரைத்தனனே.

(இ - புரை.) சீர்பொருந்திய சிறந்த யாகஞ்செய்யும் தவசிகளாகிய முனிவர்கள் சூதமுனிவரைவணங்கி, உத்தமரே! எங்கள் தீவினைகளெல்லாம் நீங்கும்படி மிக்க கருநிறந்தங்கிய விஷபானஞ்செய்து அழகுபெற்ற கண்டத்தையுடைய இறையவரும் யமன் பயங்கொண்டு பூமியில் விழும்படி யுதைத்தவருமாகிய பரமசிவனுடைய திருவடிகளைத்துதிசெய்த அன்பினையுடையவர்கள் அடைந்த பேறுகளையெல்லாம் சோர்வில்லாமல் அருளிச் செய்யவேண்டுமென்ன; அந்தச் சிவசரித்திரத்தைச் சூதமுனிவர் உரைப்பாராயினர். எ - று.

நாதனுருத்திரனாதியினித்திறன்ஞாலம்விதித்ததுவும்
மேதினியிற்சிறுமானிடர்முத்தியின்மேவமறைப்பொருணூ
லோதியதத்துவநீதிவிகற்பமுமோகைகொள்பத்தர்கள்பால்
ஏதமில்சித்திரலீலைவிளைத்ததும்யாவருரைக்கவலார்.

(இ - புரை.) நாதனாகிய ருத்திரமூர்த்தியானவர் ஆதியிலே இந்தச்சிறந்தவுலகத்தைச் சிருட்டித்ததுவும், இவ்வுலகத்திலிருக்கும் சிறுமானிடர்கள் மோக்ஷத்திற்பொருந்த வேதப்பொருளாகிய சாம்பவமூர்த்தி வேதநூல்களிற் சொல்லிய தத்துவநீதியின் விகற்பமும், மகிழ்ச்சியுடைய அன்பர்களிடத்தில் குற்றமில்லாத விநோதமான திருவிளையாடல் செய்ததும், யாவர்தெரிந்து சொல்லத்தக்கவர்கள். எ - று. (௨)

ஆயினுமெற்குவியாதனுரைத்தமையாதரவத்துடனே
மேயமுனித்தலைவோர்கள்செவிப்புலன்மேவவுரைக்குவனற்
றாயனவிக்கதைபாவவனத்திரள்சூறைபடச்சுடவே
காயவனற்சிகைபோல்வனவற்புதகாரணமுற்றிடுமால்.

(இ - புரை.) முனிசிரேஷ்டர்களே! சிவசரித்திரம் அருமையுள்ளதாயிருந்தாலும் வியாசமுனிவர் எனக்குச் சொன்னவைகளை உங்கள் காதுகளிற் பொருந்தும்படிச்சொல்லுகிறேன்; தூய்மையதாகிய இந்தச் சிவசரித்திரம் விருப்பமுள்ளவர்களுடைய பாவமாகிய காடுகள்அழியும்படித் தீய்த்துக்காயும் தீச்சிகைபோல்வனவாகும், அற்புதமுள்ள காரணங்களும் அமைந்திருக்கும். எ - று.

மந்தியினஞ்செறிபொங்கரவந்தியின்மந்தரனென்றொருபே
ரந்தணன்முன்புளன்வண்கனகங்களனந்தமிருந்தமையாற்
சந்தியும்வந்தனையுஞ்செபமுங்குலதந்திரமும்பிறவுஞ்
சிந்தைமறந்திழியுங்குலமங்கையர்கொங்கைதனம்புணர்வான்.

(இ - புரை.) வானரக்கூட்ட மிகுந்துள்ள சோலைசூழ்ந்த அவந்தி தேசத்தில் மந்தரனென்கிற பெயருள்ள ஒருபிராமணன் முன்னமிருந்தான்; அவனுக்கு வளப்பம்பொருந்திய திரவியங்கள் அனந்தமாக இருந்ததினால் சந்தியாவந்தனத்தையும் சிவார்ச்சனையையும் செபத்தையும் தன்குலத்துக்குரிய கருமங்களையும் மற்றுமுள்ளவைகளையும் மனதிலும் நினையாமல் மறந்து, இழிவான சாதியிலுள்ள குலமாதரைத் தினந்தோறும் புணருவானாயினன். எ - று. (௬)

எக்குலமங்கையரெத்தொழிலினிழிப்பினொன்றுணரான்
மைக்கண்மடந்தையருற்றனரென்றமகிழ்ச்சியினங்கவர்பாற்
றுய்க்குமருப்பதமட்டினறுங்கசைதொட்பிகணண்டவெலா
மொக்கவிருந்துகளிப்பினருந்தியுளத்தின்மகிழ்ந்திடுவான்.

(இ - புரை.) இவர்கள் எந்தச்சாதிமாதரோ எவ்விதத் தொழில் செய்கின்ற இழிவுள்ளவர்களோ என்று ஆராய்ந்து பாராதவனாய், மையணிந்த கண்களையுடைய மாதர்கள் கிடைத்தார்களென்கிற மகிழ்ச்சியினால், அவர்களிடத்தில் உண்ணுதற்குரிய அன்னமும் அளவிலாத மாமிசமும் பலவிதமானகள்ளும் இவ்விதமாகக் கண்ணினாற் பார்த்தவைகளையெல்லாம் அம்மாதர்களுடனிருந்து களிப்புடனுண்டு, தன்னுள்ளத்தின் மகிழ்ச்சியடைவான். எ-று. தொப்பி-கள்.

கங்கையிளங்கொடிபிங்கலையென்றமடந்தையுடன்புணரா
வங்கவள்குங்குமகொங்கைமுயங்கியழிந்தவசம்பெறலா
லிங்கிதுநன்செயலன்றிதுபுன்செயலென்பதுளங்கருதான்
கங்குலுநண்பகலுங்களிகொண்டுகலந்துமயங்குறுவான்.

(இ - புரை.) மங்கைப் பருவமுள்ளவளா யிளங்கொடிபோன்ற பிங்கலையென்கிற பெயரையுடைய மாதுடன்சேர்ந்து, அவளுடைய குங்கும மணிந்துள்ள ஸ்தனங்களிற்புணர்ந்து, அந்த வின்பத்தினால் அறிவழிந்து, பரவசப்படுவதினால், இதுநல்லசெய்கையென்றும் இது தீச்செய்கையென்றும் மனதில்அறி

யாமல் இரவும் பகலும் களிப்புள்ளவனாய்ச் சேர்ந்து, மயங்கிக் கொண்டிருப்பான். எ - று. (சு)

வேறு.

கனிவெண்டிரைவருநஞ்சணிகளகந்தரனருளே
புனையுஞ்சிவதவமொன்றியபுனிதன்பயமறவே
நினைவொன்றியதுரியஞ்சுனினிமிருந்தனிமதியால்
வினையொன்றறநிலைநின்றிடுவிரதன்பெயர்விடபன்.

(இ - புரை.) ஒலிக்குங் கடலிலுண்டான விஷந்தங்கிய காளகண்டத்தையுடைய பரமசிவனது கிருபையைப்பெற்ற சிவதவம் பொருந்திய பரிசுத்தனும், பிறவிநீங்கும்படி அறிவடங்கிய துரியாவஸ்தைபோல சாக்கிராவஸ்தையிற் பொருந்திய மதியினும் நற்செயலென்ப தொன்றுமில்லாமல் நீங்கத்தக்கதாக நிலைதவறாமலிருக்கின்ற விரதமுள்ளவனும், விடபனென்னும் பெயருள்ளவருமாகிய ஒருசிவயோகியானவர். எ - று. துரியாவஸ்தையில் ஆன்மா தங்கினபோது ஒன்றுந் தோன்றாமலிருப்பதுபோல சாக்கிராவஸ்தையிலும் தத்துவவியாபகமின்றிச் சிவத்துடன் கலந்திருத்தலால், "வினையொன்றற நிலைநின்றிடுவிரதன்" எனக்கூறினர். சாக்கிரம சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்பன ஐவகை அவஸ்தைகள். (எ)

வந்தானிவருறையுந்திருமனைமுன்றிலின்வரலுங்
கொந்தார்குழலவளோடுமிம்மறையோனெதிர்குறுகி
முந்தாவுபசாரங்களுமுறையின்படியுதவிச்
சந்தார்நுகண்மலரொன்றியசயனத்திடைவையா.

(இ - புரை.) மேற்சொல்லிய பிராமணனும் அவனுடைய மனைவியும் வாழும் வீட்டின் முற்றத்தில் வந்தார். அவ்வாறு வரலும், கொத்தாகிய மலர்களணிந்த அளகபாரத்தையுடைய தன்மனைவியுடன் இந்தப்பிராமணன் சிவயோகிக்கெதிரிற் சென்று, முறையின்படி உபசாரங்கள் செய்து, அழகுபொருந்திய மகரந்தம் நிறைந்த மலர்பரப்பிய ஆசனத்தி லிருக்கச்செய்து, எ - று. உபசாரங்கள் அருக்கிய பாத்திய ஆசமனங்கள். (அ)

சேதாவினரும்பாலொடுதேமாங்கனிபழனும்
காதாறுகருதியென்றவர்களிநீரொடுநல்கிப்
போதார்மலர்தூவிக்குளிர்சந்தம்புனைவித்தங்
கோதாமுகமன்கூறிவெள்ளிலைபாகுடனுதவி.

(இ - புரை.) அவர்கள் நல்ல பசுவின்பாலும் மதுரமுள்ள மாம்பழமும் காதலே! உண்ணென்று கொடுத்தபின்பு, குளிர்ச்சி தங்கிய சலமுங் கொடு

த்து மலரால் அருச்சித்துச், சீதளமுள்ள சந்தனமணிந்து, நாலைந்தினோடும் நல்ல உபசார வார்த்தைகளுஞ் சொல்லி தாம்பூலமுங்கொடுத்து, எ - று. (௯)

அற்றைப்படுகங்குற்பொழுதகலுந்துணையளவுங்
கற்றைக்குழன்மடவாளொடுகலைமாமறையவனும்
பற்றற்றமுனித்தேவிருபாதத்துணைவருடச்
சிற்றச்சிறுகாலேமுனிசென்றானிவர்நின்றார்.

(இ - புரை.) அன்று ராத்திரிமுதல் விடியற்காலவரையில் அந்தப் பிராமணனும் அவன் மனைவியும் அம்முனிவருடைய இரண்டுபாதங்களையும் வருடிக் கொண்டிருக்கத்துயிலமர்ந்து, இருவகைப்பற்றும் நீங்கினவராகிய அம்முனிவர் உதயகாலத்துக்கு முன்னரே யெழுந்து போய்விட்டார். அவர்களிருவரும் தங்களிடத்திலேதானே யிருந்தார்கள். எ - று. இருவகைப்பற்று - உட்பற்று புறப்பற்று. (௰)

பின்னும்மறையவனுஞ்சிறுபிறைவாணுதலவளு
மன்னுங்கழைமதனுந்துணைவியுமென்னமணந்தே
துன்னுஞ்சிலநாள்சென்றனதொடரும்பழவினையால்
முன்னும்பினுமாயங்கவரிருவோருமுடிந்தார்.

(இ - புரை.) பின்னும் அப்பிராமணனும் சிறியபிறைபோலும் ஒளிதங்கியநெற்றியையுடையவளும் கரும்புவில்லையுடைய மதனும் ரதியும்போல இன்பமனுபவித்துக்கொண்டிருந்து, சிலநாள் சென்றபின்பு, பழவினைத்தொடர்ச்சியினால் முன்னும் பின்னுமாக அந்த இருவரு மிறந்துபோனார்கள். எ - று.

முடிந்தவேதியன்றருமமுநீதியுமுறைமையும்பிறழாது
தடிந்துமாமுகில்பொழிதரவளம்படுதசானனந்தனியாளுங்
கடிந்ததீவினைவச்சிரவாகுவின்காதலியுதரத்தி
னடைந்துநல்லுருத்தங்கியகருப்பமாயமர்ந்திடுமமையத்தில்.

(இ - புரை.) அவ்வாறு இறந்தபிராமணன், தருமமும் நீதியும் முறைமையும் மாறுபடாமல் மேகங்கள்மின்னி மழைபொழியும்படி வளப்பமுள்ள தசார்ணநகரத்தையாளுகின்ற பாவத்தைநீக்கிய வச்சிரவாகு வென்னும் அரசனுடைய மனைவியின் கருப்பத்தி லடைந்து, நல்லுருவந்தங்கிய கருப்பமாய்ப் பொருந்திய காலத்தில், எ - று. தனியாளுதல், ஐம்பத்தாறுதேசங்களையும் தானொருவனேயாளுதல். தடிந்து-மின்னி. (௰௧)

கருப்பமுற்றவள்பின்வரும்தேவியரனைவருங்கண்டீண்டி
யிருப்பமாயவளைகட்டுறைகுழலியை விளிவுசெய்குவமென்னி

உருப்பவல்விடமுணவினோடளித்தனருண்டனளுதரத்தின்
நெருப்பையொத்துநின்றெரிந்ததுகரிந்ததுகிகிரிலாளுருவம்மா.

(இ - புரை) கருப்பம் அடைந்தவளுக்குப் பின்வந்த தேவிமார்கள் (மனப்பொருமையினால்) கோபங்கொண்டு எல்லாரு மொன்ருகச் சேர்ந்து, மூத்தவள் வயிற்றில் பொருந்திய சிசுவைக் கொன்றுபோடுவோமென்று ஆலோசனைசெய்து, அவளுக்கு விருப்பமாய் ஆகாரங் கொடுப்பவர்போல் கொடியவிஷத்தைக் கலந்துகொடுத்தார்கள். அந்தவிஷம் அவள்வயிற்றில் நெருப்பையொத்து எரித்தது, அதனால் அவளுருவமுங் கரிந்தது. எ - று. ஆகடு - வயிறு. (மக)

உண்டவல்விடவெம்மையாற்பிணிபலவுதரத்துமுடன்புற்றுங
கொண்டேழ்வினைப்பகுதியான்முடிந்திலளகுழவியுமவிளியாம
லண்டர்நாயகனருளினலின்றனளின்றலும்பழிநோயின
புண்டனுணமெலிந்தரற்றினாசுமதியும்புதல்வனும்பொருதந்தோ.

(இ - புரை). உண்டவிஷத்தின்வெப்பத்தினால் வயிற்றிலும் உடல்முழுதிலும் பலவகையாகிய வியாதிகொண்டும், ஊழ்வினைப்பகுதியினால் இறந்திலளாய்ப் பரம[illegible]வனுடைய கிருபையினால் இறவாமலிருந்த சிசுவையும் பெற்ருள். பெற்றபின்பு சுமதியென்னுந் தாயும் அவள் புதல்வனும் அழிநோயுள்ள புண்ணினால் வருந்திச் சகிக்கமாட்டாமல் அழுதார்கள். எ - று.

அந்தோ இரக்க இடைச்சொல் (மச)

இடைவிடாதிவரரற்றிடுமோதைகேட்டிறையவனயர்வெய்தி
யடையும்வாகடர்தங்களேயிப்பிணியகற்றிடுமெனவோடு
மிடையுமாயுளுறகலவியானவழிக்குலவிஞ்சையான்வினையத்தால்
உடையநன்மருந்தளப்பிலசெய்தலுமுறுபிணிதணியாதால்.

(இ - புரை.) இவ்வண்ண மிவர்கள் இடைவிடாமல் அழுகிறவோசையை வச்சிரவாகுவென்னும் அரசன் கேட்டுத் துயரமடைந்து, வருகின்ற வயித்தியர்களைநோக்கி இந்தவியாதியை நீக்குங்களென்று சொல; தாங்கள் ஆராய்ச்சிசெய்திருக்கின்ற வைத்தியசாஸ்திரப் பயிற்சியின் திறத்தினாலும் தங்கள் முன்னோர்கள் கற்பித்திருக்கும் கல்வியினாலும் உத்தியினாலும் செய்யப்பட்டிருக்கும் நல்ல அவுஷதங்கள் பலபலவாக கொடுத்தும், அப்பெரியபிணிதீர்ந்ததில்லை. எ - று. வாகடர் என்னு மொரு முனிவரால்செய்யப்பட்ட வைத்தியசாஸ்திரத்துக்கு வாகடமென்றுபெயர்; வைத்தியர்கள் அந்தசாஸ்திரத்தை வாசித்துணர்ந்தவர்களாதலால் அவர்களுக்கும் வாகடரெனப்பெயர் வழங்குவர்.

பிணிமுதிர்ந்திடவாகடரெங்களர்ற்பெயர்க்கரிதரிதென்ன
மணிபுனைந்ததார்மன்னவற்குரைத்தலுமன்னவன்மனக்கொள்வா

ணணிகொண்மேகலைமடவரலழுகையுமரும்பெறற்புதல்வன்றன்
றணிவிலர்தரற்றொலையுங்கேட்டியார்தனிவிழிதுயில்கிற்பார்.

(இ - புரை.) வைத்தியர்கள் தங்களால் கூடியமட்டும் பார்த்தும் பிணி தீராமல் அதிகரித்ததினால் ரத்தினமாலையணிந்த அரசனைநோக்கி,இந்த நோயை த்தீர்க்க எங்களாலாகாதென்றுசொல்ல;அதைக்கேட்ட அவ்வரசன்பெறுதற்கரிய நம்முடைய புத்திரன் ஓயாமல் அழுகிறஓசையையும் அதைக்குறித்து அழகுபொருந்திய மேகலாபரணமணிந்த நம்முடைய மனைவியானவள் அழுகிற ஓசையையுங்கேட்டு, யார்தான் நித்திரைசெய்வார்களென்று கருதி, எ - று. தனிவிழி - ஒப்பில்லாதகண் எனப்பொருளுரைத்துக்கொள்க. (௧௬)

நோவினாலுயிரிறப்பரோவிறக்கிலரன்றியிந்நோய்நீங்கி
மேவுநல்லுருப்பெறுவரோபெறுகிலர்வினையையார்விலக்கிற்பார்
பாவகாரியரிவர்நமனுலபப்பழநரகாற்றாது
நாவினாலெடுத்தோதொணாநரகுறநானிலந்தனில்வந்தார்.

(இ - புரை.) நோவினால உயிரிறப்பார்களோவென்றால், இறக்கிறதுமில்லை. அல்லது இந்த நோய்நீங்கி நல்லுருவத்தை அடைவார்களோ வென்றால், அடைவதுமில்லை. அடையக்கூடாத வினையை எவாகள் நீக்கிக் கொள்ளத்தக்கவர்கள், இவர்கள் மகாபாவிகள், நமனுடைய ஆலயத்திலிருக்கும் பழமையான நரகத்தில் வைத்தால் அதுவுஞ் சகிக்கமாட்டாது, ஆகையால் நாவினாலெடுத்துச் சொல்லவொண்ணாத கொடியநரகம் ஒன்றுண்டாகி யதில்விழும்படி யிவ்வுலகத்தில் வந்தார்கள். எ - று. (௧௭)

என்றுசிந்தையினவர்களையிகழ்ந்துமற்றிளையாமனைவியர்மாட
டொன்றுமன்பினனுகிமற்றவர்நலனுண்டுவாழிகல்வேந்தன்
கன்றுநெஞ்சினன்சூதனைக்கூவியிக்கயத்தியைமகவோடும [ன்.
இன்றுதேர்மிசைக்கொண்டுபோய்க்காட்டகத்திடைவிட்டுமீள்கென்று

(இ - புரை) இவ்வாறு மனதிலெண்ணி அப்பிள்ளையையும் மனைவியையும் இகழ்ந்து, இளையமனைவியர்களிடத்தில ஆசைபொருந்தி அவர்களுடைய இன்பம் அனுபவித்துக்கொண்டிருக்கும் அவ்வரசன், ஒருதினம் மூத்தமனைவியையும் புத்திரனையும் வெறுத்து, வெம்பிய மனதையுடையவனாய்த் தேர்ப்பாகனை அழைத்து, இந்தப்பாவியையும் இவள் புத்திரனையும் இன்று தேரிலேற்றிக்கொண்டுபோய்க் காட்டினிடத்தில் விடுத்து மீளுவாயென்றனன். எ - று.

சூதன் - தேர்ப்பாகன். (௧௮)

விட்டுமீடியென்றுரைத்தலுமவலவனும்வேந்தாவேந்துரைபேணிக்
கட்டுவாம்பரிக்கொடிநெடுந்தேர்மிசைக்கன்னியைமகவோடும்

றிட்டுநீயென்றுரைத்திருட்கானகத்திறக்கிவிட்டனன்மீண்டு
வட்டவாழிசூழ்புவனிகாவலவன்முன்வந்தடியிணைதாழ்ந்தான்.

(இ - புரை) இவர்களைக் காட்டில் விட்டுவாவென்று அரசன் சொல்லிய வார்த்தையைத் தேர்ப்பாகன் ஏற்றுக்கொண்டு, அவர்களிருவரையும் தாவிச்செல்லும் குதிரைபூட்டிய தேரின்மேலேற்றிக்கொண்டுபோய் நல்லமார்க்கத்தைக் கடந்து, முள்ளுகளையுடைய காட்டிலிறக்கிவிட்டுவந்து, வட்டமாகிய சமுத்திரஞ்சூழ்ந்த வுலகத்திற் காவல்பூண்ட அவ்வரசன் பாதத்தில் வணங்கினான். எ - று. (௧௯)

அப்புறத்துவெங்கானிடைத்தமியளாயரும்பெறன்மகவோடும்
வெப்புறத்துநோய்முதிர்வினுவினன்கதிர்வெதுப்பலாவிடரெய்தி
யெப்புறத்திலுமலகையுமுழுவையுமேனவுமிடர்செய்யச்
செப்பெனத்திரண்முலையினளொருசிறைசெல்லவும்வழிகாணாள்.

(இ - புரை.) தேர்ப்பாகன்போய்விட்டபின் செப்புச்சிமிழ்போல் திரண்டதனமுடைய இராசஸ்திரியானவள் அந்தவெவ்வியகாட்டில் தனித்தவளாய் வருத்தப்படுத்துகிறநோயின் மிகுதியினாலும்சூரியகிரணவெப்பத்தினாலும்தானும் தன்புத்திரனும் துன்பமடைந்து, நாலுபுறத்திலும் பேய்களும் புலிகளும் பன்றிகளும்துன்பப்படுத்த, ஒரு இடத்துக்குப்போகவும்வழிகாணாதவளானாள். எ-று. இனன்-சூரியன். (௨0)

அரியதாகியவிதியினைவெறுக்குநொந்தயர்வுறுமழுதெங்கும்
உரியகாதலன்கொடுமையைநினைந்துகண்ணுறுபுனலிடைத்தோயும்
விரியுநோய்பொறாதழியகுழவிவாய்மென்முலையிணைத்தூட்டும்
எரியினின்றுதன்னுடல்சுடுபசியினாலிடருழந்திதுசெய்தாள்.

(இ - புரை.) அரியதாகிய விதியைவெறுப்பாள், நொந்து சோர்வுறுவாள், தனக்குரிய கணவனுடைய கொடுமையை நினைந்து கண்கள்பொழிகின்ற நீரிற்றோய்வாள், மிகுந்தநோயைச் சகிக்கமாட்டாமல் அழுகிறதன்பிள்ளையை மார்புடனணைத்துப் பாலூட்டுவாள், தீயையொத்து இடைவிடாமலிருந்து தன்னுடலைச் சுடுகின்ற பசியினால் துன்பங் கொண்டு ஒருகாரியஞ்செய்தாள். எ-று.

வெஞ்சினக்கொலைமாப்பயில்கானகம்விலங்கியோர்புடையேகி
பஞ்சின்மெல்லடிகுருதிகான்றிடத்தனிப்பயப்பயச்செல்லுங்கால்
அஞ்சிலோதியோரணிநகர்கண்டதனிடைப்புகுந்தனளந்த
இஞ்சிமாநகர்தனக்கிறையாகியவெறுழ்வலிவணிகேசன்.

(இ - புரை) கொடிய கோபங்கொண்டு கொல்லுந்தொழிலையுடைய மிருகங்கள் சஞ்சரிக்கிற காட்டைவிட்டு நீங்கி ஒருபுறத்திற்சென்று, பஞ்சினை மெல்

வியதாகிய தன்பாதத்தில் உதிரம்பெருகும்படி மெல்ல மெல்ல நடந்து போம் போது, அழகிய பொன்வட்டத்தகடணிந்த கூந்தலையுடைய அந்த ராஜஸ்திரீ யானவள் அழகுள்ளதாகிய ஒருநகரத்தைக்கண்டு அதனிடத்திற்போனாள் (அப் பொழுது) மதில்சூழ்ந்த அந்த நகரத்திற்குத் தலைவனாகிய சிறப்புள்ள வர்த்த கன், எ - று, பைய - மெல்ல. சில்-சடைப்பில்லையென்னும் பொன்வட்டத் தகடு. இஞ்சி - மதில். (௨௨)

மல்குமாநிதியுடைப்பதுமாகரன்மனையினிலொருகோடிப்
பல்கிளையவல்செய்சிலதியர்தம்மினோர்பாவைமற்றவட்கண்டு
செல்வமைந்தனுந்திருமகணீயுமிக்தெருவினூதலர்போல
ஒல்கியொல்கிவந்தடைந்தவாறெனக்குணர்த்தினீயெனச்சொன்னாள்.

(இ - புரை.) மிகுந்த திரவியத்தையுடைய பதுமாகரனென்னும் பெய ரையுடைய அந்தவர்த்தகன் வீட்டிற் றொழில் செய்துகொண்டிருக்கும் ஒரு கோடித்தோழிகளில் ஒருதோழியானவள் அந்த ராஜஸ்திரீயைப்பார்த்து, நீ இராஜஸ்திரிபோலிருக்கின்றனை, அப்படியிருக்க நீயும் இந்தப் புத்திரனும் ஏழைகள் போலச் சோர்வடைந்து இந்தத்தெருவில வந்ததற்குக் காரணம் யாது? எனக்குச்சொல்லென்றாள். எ - று.

சிலதியர்-தோழியர்; ஏதலர்-ஏழைகள். (௨௩)

விம்மிவிம்மிநெஞ்சழிந்துவாய்புலர்ந்திடவிழிவழிநீர்சோர
அம்மவம்மவோவூழ்வினைவிளைந்தமையார்க்குரைக்குவனென்று
வெம்மைநெஞ்சுடைத்தலைமகனிழைத்ததுமேதிலார்வினையீட்ட
இம்மையிவ்விடருற்றிவண்புகுந்ததுமிற்றெனவுரைசெய்தாள்.

(இ - புரை.) அவ்வாறு தோழிகேட்டவுடன் விம்மி விம்மி நெஞ்சழிந்து அழுதுகொண்டு கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகவும், வாயுலரவும், தாயே! விளைந்த ஊழ்வினை எவர்களுக்குச் சொல்லுவேனென்று இரக்கமில் லாத தன்கணவன் செய்ததையும், அயலவர்களாகிய சக்களத்திமார் கொடிய செய்கைசெய்ய (அதனால்) இப்பிறப்பிலேதானே இப்படிக்கொத்த துன்ப மடைந்து இவ்விடத்தில் அடைந்ததும், இவ்வாறென்றுசொன்னாள். எ - று.

அம்மா - இரக்க விடைச்சொல். (௨௪)

கேட்டுவல்விரைந்தோடினள்சென்றனள்கெழுமுசீர்வணிகேசன்
றாட்டுணைத்தொழுதையநங்கடிநகர்சார்ந்தொருகுலத்தையல்
வாட்டடங்கணுளேந்தியமகவினள்வருந்தியழுதகோயாள்
கட்டிடும்மன்னவன்விடுத்திடவந்துநங்கடையடைந்தனளென்றாள்.

(இ - புரை) இதனைக்கேட்ட அத்தோழியானவள் மிக்கவிநயத்தோடு சென்று, செல்வச்சிறப்பினையுடைய வணிகனைவணங்கி, ஐயனே! நமது காவலமைந்தநகரத்தை வாள்போலும்கண்களையுடைய ஒருமாதானவள் கையிலொரு மகவையேந்திக்கொண்டு அடைந்திருக்கின்றாள். அவள் மிக்கநோயுடையவள், அவள் புருடனை அரசன் காட்டில்விட்டுவிடவந்தவளாம் என்றனள், எ - று.

தரும்சிந்தையினீதியிற்கொடையினிற்றயவினினிகரில்லான்
கருமமங்கதுகேட்டலுங்குழைவுறுங்கருத்தினன்புறம்போந்தாங்
கருமருந்தனமகவையுந்தாயையுங்கண்டதிசயித்திங்கண்
வருதிரென்றொருவேதியன்மனையினின்மற்றவர்தமைவைத்தே.

(இ - புரை) தரும்சிந்தையிலும் தியாகத்திலும் நீதியிலும் தயையிலும் தனக்கொப்பில்லாதவனாகிய அந்த வணிகேசன் அவள் சொன்ன காரியத்தைக்கேட்டமாத்திரத்தில் வருந்துகின்ற மனதையுடையவனாய் வெளியில் வந்து, அவ்விடத்திலிருக்கும் அருமருந்தையொத்தகுழந்தையையுந் தாயையும்பார்த்து அதிசயித்து, இங்கேவாருங்களென்று அழைத்துக் கொண்டுபோய் ஒரு பிராமணனவீட்டில் அவர்களைவைத்து, எ - று. (௨௬)

உற்றவாயுள்வேதியரெலாம்வருகவென்றுறுநிதிமழைசிந்தி
முற்றும்வல்விடநோயினைமருந்தினான்முரித்திர்மறறிவளென்னைப்
பெற்றதாயிவண்மகவுமென்பெருந்துணையென்றவன்பலபேசக்
கற்றநூலபுகன்மருந்தெலாமருத்தவுங்கனன்றதுமுதுநோயே.

(இ - புரை) அவ்விடத்திலிருக்கும் வைத்தியர்களையெல்லாம் வரவழைத்து மிகுந்ததிரவியங்கொடுத்து, இந்த ராசஸ்திரி யென்னைப்பெற்றதாய், இவள் குழந்தை எனனுடைய சகோதரன, ஆதலால் இவர்களுக்குப் பொருந்திய கொடிய விஷநோயை அவுஷதங்களால் முரித்துவிடுங்களென்று அவர்களுக்குச்சொல்ல; அதைக்கேட்ட வைத்தியர்கள் தாங்கள் கற்றுணர்ந்த வைத்திய சாஸ்திரத்திற் சொல்லும் அவுஷதங்களையெல்லாம் வகையறிந்து கொடுத்தார்கள். அப்படியவர்கள் கொடுக்கக் கொடுக்கப் பழமையாகிய வியாதியானது கொடுமையுடன் அதிகரித்தது. எ - று. (௨௭)

இழுதுபெய்குடமெறிதலுங்கனற்சிகையெழுவபோலெண்ணில்லாப்
பழுதினன்மருந்திடுதொறுமுதிர்நதுநோய்படர்செயப்பல்காலும்
அழுதுமாழ்கிபால்கனிறத்தலுமளவிலாத்துயர்பொங்கப்
புழுதிநீணிலத்துருண்டனளுருமுவீழ்புற்றுறையரவென்ன.

(இ - புரை.) 'நெய்நிறைந்த குடத்தை எறிந்தமாத்திரத்தில் அக்கினியானது கிளர்ந்தெழுந்த தன்மைபோல, அளவில்லாத நல்ல மருந்துகளை

கொடுக்குந்தோறும் அந்தவியாதி மேலிட்டுத் துன்பஞ்செய்தலினால், இடைவிடாமல் அழுதுசோர்ந்த புத்திரனிறந்தனன். அவனிறக்கவே, அளவிலாத துயரம் உண்டாகப் புற்றிலிருக்குஞ் சர்ப்பமானது இடிவிழுந்தாற் றுடிப்பது போலப் பூமியில்விழுந்து புரண்டாள். எ - று.

இழுது - நெய். படர் - துன்பம். உருமு - இடி. (உஅ)

வீழுமெய்பதைத்தெழுமழும்வெதும்பிடும்விம்மும்வெந்துயருள்ளித்
தாழுங்கைகளான்முலைமுகட்டெற்றிடுந்தளர்வொடுநனிசோரும்
போழுமம்புபாய்மயிலெனமாழ்குறும்பொருமும்புத்திரசோபத்
தாழுநின்றுநின்றுருகும்வெய்துயிர்த்திடுமலக்கணுறிடுமன்னோ.

(இ - புரை) பூமியில் விழுவள், உடல்பதைத்தெழுந்தழுவள், வெதும்பி விம்முவள், தனக்கு நேரிட்ட துயரத்தை நினைத்துச்சோர்வள், இரண்டு கைகளாலும் முலைமுகட்டில் மோதிக்கொள்வள், மிகுந்தமெலிவோடுசோர்வள், அம்புபாய்ந்த மயிலைப்போல மாழ்குவள், தேம்புவள், புத்திரசோகத்தில் அமிழ்ந்து நின்று நின்றுருகுவள், பெருமூச்சுவிடுவள், இத்தகைய துன்பம் அடைவாள.

வேறு.

அயலகத்துறையந்தணமாதரு
மயலகத்துவணிகமகளிருங்
கயலையொத்தகட்காரிகைபால்லெய்திச்
செயலுணர்த்தித்தெருட்டவுந்தேறலாள்.

(இ - புரை.) இவ்வாறு துயரப்படுகிறவளைப் பார்த்து அயல் வீட்டிலிருக்கும் பிராமணஸ்திரிகளும் இம்மாதின் றுயரத்தால் மயங்கிய வைசிய மாதர்களும் கயல்போலும் கண்களையுடைய அக்தராசஸ்திரியினிடத்திற் சென்று, இவ்வுடல் அநித்தியமே யல்லாமல் நித்தியமல்லவென்பதை அனேக திருஷ்டாந்தங்களாற்சொல்லித் தெளிவிக்கவும் அவள் துக்கம் நீங்காதவளாகி, எ - று.

கையறத்தளர்வேனை நீகைவிடும்
வெய்யகேண்மைவெதுப்பமெலிக்துளேன்
உய்யலேனினியுன்னை விடுத்துமே.

(இ - புரை.) அப்பனே! என்னை அரசன் நீக்கிவிட்டபடியால், இடமின்றி வருந்துகிற என்னை நீயுங்கைவிட நேர்ந்த இக்கேண்மையானது என்னை மெலிவிக்க மெலிவடைந்தேன், உன்னைப்பிரிந்தும் இனிப் பிழைத்திருக்கமாட்டேன். எ - று. கை - இடம், சண்டுச்சார்விடத்தைக்குறித்தது. (கக)

என்றுபன்னியிரங்குஞ்சுமதிதான்
சென்றுநாய்கன்றெருட்டவுந்தேறலாள்
கன்றிமாழ்குறுங்காலையிலாங்கணே
தொனறுதேர்விடபன்வந்துதோன்றினன்.

(இ - புரை.) இவ்வாறு சொல்லிச்சொல்லி அழுகின்ற சுமதியென்பவள், தன்னை யாதரிக்கும் வர்த்தகன் வந்து பலவார்த்தைகளாற் றேற்றவுந் தேறாமல் மனம்வருந்திச் சோபமுறும்போது, பழைமை அறியத்தக்க விடபன் என்னும் ஒரு சிவயோகி அவ்விடத்திலெழுந்தருளினார். எ - று.

பன்னுதல் - கூறுதல். (௧௨)

வந்தயோகிமலரடிதாழ்ந்தெழூஉ
தெந்தைநீயிவளித்துயர்தீர்த்தியென்
றந்தநாய்கனுரைப்பவருந்தவன்
கொந்துலர்க்குழலிக்கிவைகூறினன்.

(இ - புரை.) வந்த சிவயோகியை அந்த வர்த்தகன் கண்டு பாதங்களில் வணங்கி, என்னையனே ! இந்தராசஸ்திரியின் அரிய துயரத்தை எவ்வாறாவது தீர்த்தருளவேண்டு மென்று சொல்ல, பூங்கொத்துகளணிந்த கூந்தலையுடைய அவளைப்பார்த்துச் சிவயோகி யிந்தவார்த்தை சொல்லுகின்றார். எ - று. (௧௩)

என்னைமாழ்கியிரங்குவதேழைநீ
பொன்னுமாவிபொருந்தியகாயமு
மின்னுமொக்குளும்போனனிவீந்திடும்
அன்னதுள்ளியறிஞராழிவுறார்.

(இ - புரை.) ஏழைத்தன்மையுடையமாதே! நீ யிரங்கித் துயரப்படுவதில் என்ன பிரயோசனம், திரவியமும் உயிர்பொருந்திய இவ்வுடலமும் மின்னலைப்போலவும் நீர்க்குமிழியைப்போலவும் விரைவில் அழியத்தக்கவையே: ஆகையால், அவற்றைக்கருதி அறிவுள்ளவர்கள் வருந்தார்கள். எ - று. மின்னல் தோன்றி மறைதலால் அது செல்வத்திற்கும், குமிழி தோன்றும்போதேயழிதலால் அது உடலுக்கும் உவமானமாயின. "தோற்றமுண்டேல்மரணமுண்டு" என்ற சுந்தரமூர்த்திநாயனார் திருப்பாட்டினையும் அறிக. (௧௪)

கூறுசாத்திகங்கூடிடிற்றேவரா
மாறிராசதஞ்சேர்ந்திடின்மாந்தராம்
வேறு தாமதமேவில விலங்கதாம
மாறுதோற்றமென்றுக்குணைத்துற்றிடும்.

(இ - புரை.) சொல்லுகின்ற சத்துவகுணம் கூடுமானால் தேவர்களாவார்கள், அக்குணத்துக்கு மாறுகிய இராசதகுணங்கூடினால் மனிதராவார்கள், அதிலும் வேறுகிய தாமதகுணங் கூடினால் மிருகமாவார்கள், இவ்வாறு முக்குணத்தினால் பிறப்புண்டாகும். எ - று. (௩௫)

முக்குணத்தின்முயற்சியிலோரொன்று
தொக்கவாறுதுவன்றுங்குறியினன்
மக்கடேவர்விலங்கெனவந்தவை
துய்க்கும்போகந்தொலையத்தொலையுமே.

(இ - புரை.) மூன்று விதகுணத்தின் முயற்சியில் ஒவ்வொரு குணஞ் சேர்ந்தமுறைமைப்படி உண்டாகும் குறியினால், மனிதர்களென்றும் தேவர்களென்றும் மிருகங்களென்றும்ஜனித்து, அவைகள் அனுபவிக்கவேண்டிய போகங்களை அனுபவித்துத் தொலைந்தபின் உடலும் அழிந்துபோம். எ - று.

துய்த்தல் - அனுபவித்தல். போகநுகர்வுமுடிவே, தேகமுடிவாதலால், "போகந்தொலையத்தொலையும்" என்றார். "வினைதானொழிந்தால் தினைப்போதளவுநில்லாது" என்று ஆன்றோர்கூறியதும் இக்கருத்தே. (௩௬)

பண்டைவாசனைதொக்கபயிற்சியாற்
கொண்டகாயநிலையெனக்கொள்வரோ
அண்டரேனும்பிறப்புளதாமெனின்
விண்டுகாயம்பிறப்பதுமெய்யரோ.

(இ - புரை.) பூர்வவாசனைசேர்ந்த பயிற்சியினா லுண்டான இச்சரீரத்தை நிலைமையென்று எண்ணுவார்களோ? தேவர்களேயானாலும் மறுபிறப்புண்டென்றால், உயிரானது சரீரத்தைவிட்டு நீங்கிப்போவது உண்மையாகும் அல்லவா! எ - று. (௩௭)

அங்குமொன்றினருந்தியவற்றினாற்
றங்குதீமலநாளுந்தணந்திடு
மங்கைநீயதற்கித்துயர்வைத்திலை
யிங்குமாண்டமலத்துக்கெனேங்குவாய்.

(இ - புரை.) ஒருசரீரத்தில் உண்ட புசிப்பினாற் பொருந்தியதீயமலமானது நாடோறும் நீங்கிவிடும், தாயே! நீ அதைக்குறித்து உன்மனதில்இப்படிக்கொத்த துயரத்தை வையாதே, இப்போது இச்சிறுவனுக்கு நீங்கிய மலத்தைக் குறித்து என் ஏக்கங்கொள்கின்றனை? எ - று. (௩௮)

சாவதும்பிறப்பும்மெனுந்தன்மையைத்
தேவருங்கடவாரிதுதிண்ணமே

பாலைவேற் றுயர்பட்டழு தற்றுமோ
யார்.

(இ - புரை.) இறப்பதும் பிறப்பதுமாகிய தன்மையைத் தேவர்களுங் கடக்கமாட்டார்கள், இதுஉறுதியாகும்; தாயே! நீ துயரப்படுவதினால்வந்தது துக்கம் நீங்குமோ? சென்றவுயிரைப்பற்றி அழுது மீட்டுக்கொண்டவர்கள் முன்னர் யாரிருக்கின்றார்கள். எ - று. (௩௯)

பட்டர்கிரித்தலைப்பான்மதிபோற்கரிப்
பிடர்நிழற்றுகவிகையிற்போந்தவர்
கடனிலத்திற்கவிழ்ந்தனரன்றிமற்
றுடலெடுத்தெவர்சாவையொருவினர்.

(இ - புரை.) பெரியமலையினுச்சியில் சந்திரோதயமானதுபோல யானையின்பிடரியிலேறிக்கொண்டு நிழலைச்செய்கின்ற குடையினகீழாகப் பவனிவந்த அரசர்களும் கடல்சூழ்ந்த உலகத்தில் வீழ்ந்திறந்து போனார்களேயல்லது இவ்வுடலையெடுத்தவர்களுள் எவர்கள் இறப்பை நீங்கினவர்கள். எ - று. (௪0)

உற்றுநும்விருப்பானுதித்தானலன்
மற்றுநும்வெறுப்பான்மடிந்தானலன்
சுற்றுங்கட்சியொழியத்துறந்துவா
னுற்றபுள்ளினுடல்விட்டொளித்துள்ளான்.

(இ - புரை) இறந்துபோன இப்புத்திரன் உங்கள் விருப்பத்தினால் பிறந்தவனுமல்லன், மேலும் உங்கள் வெறுப்பினால் மடிந்தவனு மல்லன்; பின்னப்பட்ட கூட்டைவிட்டு நீங்கி யாகாயத்திற் பறந்துபோகின்ற பட்சியைப்போல இவ்வுடலை விட்டு மறைந்துபோனான். எ - று. கட்சி - பக்ஷிக்கூடு. (௪௧)

தாயர்தந்தையரின்பத்தருக்கினா
லாயசுக்கிலசோணிதமங்கொரு
காயமாகக்கருக்கொளுமுன்னமே
மாயுமங்கவர்நொந்துவருந்தவே.

(இ - புரை) மாதாபிதாக்களுடைய இன்பச்செருக்கினால் உண்டாகிய சுக்கிலசோணிதமானது கருவாகத் தரிப்பதற்கு முன்னரே அவர்கள் நொந்து வருந்தும்படி மாயவுங்கூடும். எ - று. (௪௨)

அங்குமாய்ந்ததின்றென்னினவயவந்
தங்கியையிருதிங்கடணந்தபின்

வங்கவாரிசூழ்மண்ணிடைத்தோன்றியே
பொங்குஞற்கிளைகண்டழப்பொன்றுமே,

(இ - புளா.) கருப்பத்திலேதானே இறக்காவிட்டாலும் உறுப்புக்களெல்லாம் பொருந்திப் பத்துமாதமுமானபின்பு கப்பல்கள் செல்லும் கடல்வளைந்த இவ்வுலகத்திற்பிறந்து பந்துசெனங்கள் கண்டழும்படி இறந்து போகவுங்கூடும். எ - று. வங்கம்-கப்பல். (சஅ)

பொன்றறீர்ந்திடிற்பொற்பிறைபோல்வளர்ந்
தொன்றுகேள்வியுணரவமையுநாட்
டென்றுபூங்குழறுஞ்சினுந்துஞ்சுமற்
றன்றுவீதலொழிந்தெழிலாகியே.

(இ - புளா.) பூவையணிந்த அளகத்தையுடையவளே! பிறந்தவுடன் இறவாமலிருந்தால், அழகிய பிறைபோல்வளர்ந்து பொருந்திய கல்விகளைப் பகுத்தறிந்து கொள்ளும்படியான பருவத்திலிறந்தாலு மிறக்கக் கூடும், அல்லது அப்போது இறத்தலின்றி அழகுடன் வளர்ந்து, எ - று. (சக)

காமனேயெனக்கண்டவர்கண்கவர்
வாமநல்லுருவோடுமரீஇயபின்
சேமநல்லிடைபோன்மணஞ்செய்வுழித்
தூமவார்குழறுஞ்சினுந்துஞ்சுமே.

(இ - புளா) அகிற்புகையூட்டத்தக்க அளகத்தையுடையவளே! மன்மதனைப்போலக் கண்டவர்கள் பார்வையைக் கிரகிக்கும் படியான சௌந்தரியமுள்ள உருவத்துடன் வளர்ந்தபின்பு இன்பமுள்ள நல்ல ருஷயம்போலக் காளைப்பருவம் பொருந்தி விவாகஞ் செய்யுங்காலத்தில் இறந்தாலும் இருக்கவுங்கூடும். எ - று. வாமம் - அழகு. (சஉ)

கல்விமைந்தர்களிப்புந்திருவொடு
செல்வவூக்கமுந்துய்த்துச்செழிக்குநாட்
பல்குபாவப்பயப்புலிபற்றலு
மொல்கிவாவுழைமையெனமாயுமே.

(இ - புளா) கல்விநிறைந்த வாலிபர்கள் சந்தோஷத்தையுஞ் செல்வச் செருக்கையும் அனுபவித்துச் செழுமையாக வாழுநாளில், மிகுந்தபாவமாகிய அச்சந்தரும் புலிபற்றினமாத்திரத்திற்சோர்ந்து, மானிறப்பதுபோல இறந்துவிடுவார்கள். எ - று. உழை - மான். (சங)

கூனிமூத்தகுரங்கெனக்கோல்பிடித்
தேனையோருமிகழவிருகலந்

தானேயோடுசெறிந்திடச்சாவது
மானிநோக்கினெல்லாயொருவண்ணமே.

(இ - புரை,) மான்பார்வைபோல் மருண்டபார்வையையுடைய நல்லவளே! கிழக்குரங்குபோல உடல்வளைந்து கையிற கோல்பிடித்தூன்றிக்கொண்டு, மற்றயாவரும் இகழும்படி மலசலங்கள் வஸ்திரத்திலேதானே கழல ஒன்றுந் தெரியாமலிருந்து இறந்துபோவதும் ஒருவிதமாம். எ - று. (சுஎ)

காலமென்பர்சிலர்சிலர்கன்மமே
மூலமென்பர்சிலர்முக்குணமென்பர்
ஞாலமென்புனலாதியநல்லுட
லேலுமூன்றிற்குமேற்றதென்பார்சிலர்.

(இ - புரை) இறப்பதற்குக் காலந்தான் காரணமென்று சிலர் சொல்லுவார்கள், அவனவனுடைய கர்மந்தான்காரணமென்று சிலர் சொல்லுவார்கள், சிலர் முக்குணமே காரணமென்பார், பிருதிவி அப்பு முதலாகிய பஞ்சபூத சம்பந்தமான இவ்வுடல் மேற்சொல்லிய மூன்றுக்கும் ஏறறதென்று சிலர் சொல்வார்கள். எ - று. (சுஅ)

ஆதலானித்திறமுடையாக்கையைப்
போதமுற்றவர்பொய்யெனக்கொண்டுபின்
சாதலுக்குமபிறத்தற்குநதம்மனத்
தேதமோவெப்பின்றியிருப்பரே.

(இ - புரை.) ஆகையினாலே, இப்படிப்பட்ட சரீரத்தை ஞானமுறற பெரியோர்கள் பொய்யென வெண்ணிச சாதலிலும்பிறத்தலிலும் துககமுஞ்சந்தோஷமு மில்லாமலிருப்பார்கள். எ - று. (சுகூ)

எவ்விகற்பத்தவெவ்வடலங்களு
மவ்வியத்ததிற்றோன்றியடங்கிடும்
பவ்வமுறறியபாரினெழுந்துகள்
கொவ்வைவாய்க்கொடிமீணடதிறகூடல்போல்'

(இ - புரை.) கொவ்வைக்கனிபோலும் வாயினையுடைய கொடிபோனறவளே! பூமியில் எழுகின்ற துகள்கள் மறுபடியும் அநதப்பூமியிலேதானே அடங்குவதுபோல, எவ்விதமாகிய விகற்பங்களை யுடைய எவ்வித சரீரங்களும் மாயையிற்றோனறி அதிலேதானே ஒடுங்கும். எ - று. அவ்வியத்தம்-பிரகிருதி, மாயை. (எ0)

உன்னையீன்றவருன்னுதித்தவர்
மன்னுமூறபவந்தோறுமணந்தவ

ரன்னமேதிரையாழியினுண்மணை
மணனுறுந்தராத்தரோ.

(இ - புரை) அன்னம்போல்பவளே! பொருந்திய பூர்வசென்மத்தில் உன்னைப்பெற்றவர்களும், உன்னாற் பெறப்பட்டவர்களும் உன்னை விவாகஞ்செய்துகொண்டவர்களும் அலைகளையுடைய சமுத்திரத்தின் சிறியமணலையெண்ணினாலும் எண்ணும் அளவையுடையவர்களோ? எ - று. (ருக)

பாகெனுஞ்சொலினாய்படர்காலமா
நாகவாயினினாலிலந்தன்னில்வாழ்
போகமானிடத்தேரைபொருந்தியு
மோகையுஞ்சிறிதுற்றிடுமோசொலாய்.

(இ-புரை.) பாகுபோலும் மதுரமுள்ள வசனத்தையுடையவளே! காலமாகிய பாம்பின்வாயிலகப்பட்டுக்கொண்டு போகத்தையே விரும்பும் மனிதர்களாகிய தேரைகளுக்குச் சந்தோஷமுஞ் சிறிது முண்டாகுமோ? சொல்லுவாய். எ - று. (ருஉ)

முந்தைநான்முகன்முன்னம்படைத்துட
றந்தநாளிற்றனுகரணங்களும்
புந்திசேர்புவனத்தொடுபோகமும்
பந்தமாமிடைவேறொன்றுபற்றுமோ.

(இ - புரை) பழமையாகிய பிரமதேவன் ஆதியிலிந்த உடலைச் சிருட்டித்துத் தந்தநாளிலேயே, தனுகரணங்களும் நினைக்கும்படியாகிய புவனபோகங்களும் தொடர்ச்சியாகவே அமைந்திருக்கின்றமையால், மத்தியில் நூதனமாக ஒன்று வரவுங்கூடுமோ? எ - று. (ருங)

தோலுமென்புநரம்புமிறைச்சியு
மேலுமீரலும்பித்துமிரத்தமும்
சீழுமிட்டகுழிசில்சிதைந்தது
போலுநீயிதற்கென்கொல்புலம்பலே.

(இ - புரை.) தோலும் எலும்பும் நரம்பும் மாமிசமும் ஈரலும் பித்தநீரும் உதிரமும் சீழும் நிறைத்துவைத்த ஒருகடமானது உடைந்துபோய்விட்டது போலாக்கும் இச்சரீரம் இறந்தது. இதற்காக நீபுலம்புவது என்னகாரணம். ()

முக்கணாயகன்முப்புரந்தீயெழு
நக்கநாயகனுஞ்மலர்த்தாடொழு

மக்களன்றிமறலியைவென்றிடத்
தக்கதன்மையர்யாரெனச்சாற்றினன்.

(இ - புரை.) சீரம் இத்தன்மைத்தா யிருப்பதினாலே, திரிநேத்திரங்களை யுடையவரும் திரிபுரங்களில் தீபற்றநகைத்தவருமாகிய பரமசிவனுடைய அன்றலர்ந்த அம்புஜம்போன்ற பாதங்களைவணங்கும் அன்பர்கள் நமனை வெல்லுவாரேயன்றி, மற்றவர்களுள் யார்தான் வெல்லத்தக்கவர்களென்று சிவயோகி சொல்லியருளினார். எ - று. (௫௫)

வேறு.

கேட்டாளெழுந்தாள்கிளியென்னமிழற்றுசொல்லாள்
வாட்டாரைக்காந்தண்மலர்கொண்டெதிர்நீவுமாபோற்
றீட்டாதமைக்கண்பொழியாலிசிறந்தசங்கம்
பூட்டாதகையாற்றுடைத்தின்னபுகல்வதானாள்.

(இ-புரை.) கிளிபோல் வசனிக்குஞ் சொல்லையுடைய ராசஸ்திரியானவள் சிவயோகிகள் சொன்னதை யெல்லாங்கேட்டு உடனேயெழுந்து, வாளினுண்டாகும் நீர்த்தாரையைக் காந்தள்மலரால் துடைப்பதுபோல, மைதீட்டாத கண்பொழிகின்ற நீர்த்துளியை வளையலணியாமலிருக்கின்ற கையால் துடைத்து, இந்தவார்த்தை சொல்லுகின்றாள். எ- று. காட்டில்வாசம்பண்ணநேர்ந்தமையால், மைதீட்டாதகண்ணென்றும் சங்கம்பூட்டாதகையென்றுங்கூறினார்.

கள்ளாருமாலைமுடிவேந்துகனன்றுநீக்க
வுள்ளாவிவாட்டுமுதுநோயினுணங்குவேற்குத்
தள்ளாவிழுச்சீர்ப்புதல்வன்னொடுசாதருனே
விள்ளாததுன்பத்துழலாதவிரதமென்னு.

(இ - புரை.) தேனிறைந்த பூமாலையணிந்த மகுடந்தரித்த அரசன் கோபங்கொண்டு நீக்கிவிட்டதினால், உள்ளுயிரைவருத்தும் காமநோயினால் மெலிகின்ற எனக்கு, நீக்கமற்றசிறப்பினையுடைய இறந்துபோன என்புத்திரனுடன் நானும் இறந்துபோவதே நீங்காத துன்பத்தில் விழாதவிரதமென்றுசொல்லி, ()

அளிகொண்டசிந்தையறத்தோய்நின்னருட்கணோக்கம்
விளிகின்றகாலத்தெதிர்ந்தேன்விளைவெம்மைதீர்ந்தேன்
முளிகொண்டபைங்கூழ்த்தெறுகோடைமுதிர்ச்சிதீரத்
தளிகொண்டல்சிந்திப்புரந்தாற்றிடுதன்மைபோலும்.

(இ - புரை.) தீயுந்தன்மைகொண்ட பயிரைவாட்டுகின்ற கோடைவெப்பந்தீரும்படியாக மேகங்கள் நீர்த்துளியைச்சிந்தி வெப்பத்தையாற்றுந் தன்மை

போலக் கிருபைபொருந்திய மனதையுடைய முனிவரரே! தேவரீர் தந்தருளிய கிருபாநோக்கத்தை நானிறக்குஞ் சமயத்திற் பெற்றுக்கொண்டு தீவினைக்கொடுமையை நீங்கினேன். எ - று. மூளிதல் - தீய்தல். (௩௮)

என்றுவிவள்சாதற்கியைந்துளமெய்ம்மையுள்ள
முன்றுமுராணுவழிபாடுபுரிந்ததுமுற்பவத்திற்
பொன்றாரமார்பின்மகவென்பதுந்தேர்ந்துபூவை
தன்றாவமைந்தனுயிர்மீட்குந்தகைமைசெய்தான்.

(இ - புரை.) இவ்வாறு சொல்லி அந்த ராசஸ்திரி இறப்பதற்குத் துணிந்த நிச்சயத்தையறிந்து, பொன்றாரமணிந்த மார்பினனான இந்தப்புத்திரன் முற்பிறப்பில் தனக்கு உபசாரஞ் செய்தவனென்பதையுமெண்ணி, அவனுடைய ஆசைப்புத்திர னுயிரைமீட்கும்வகையை அம்முனிவர் செய்தருளினார். எ-று.

பாலொத்திலகுந்திருநீறுபரிந்தெடுத்து
வாலப்பிறைபோல்பவனெற்றிவயங்கச்சாத்தி
யாலத்திருண்டகளத்தான்பொன்னடியையேத்தி
மூலத்திருமந்திரங்காதின்மொழியலோடும்.

(இ - புரை.) பாலைப்போன்ற வெண்மைநிறங்கொண்டு விளங்காநின்ற திருநீற்றினைப் பரிவுடனெடுத்து, பாலசந்திரன் போல்பவனாகிய அப்புத்திரனுடைய நெற்றியில் பிரகாசிக்கும்படி தரித்து, விஷத்தினால் கறுத்த கண்டத்தையுடைய பரமசிவத்தின் திருவடிகளைத் துதிசெய்து, பஞ்சாக்ஷரத்தைக் காதில் உபதேசித்த அளவில், எ - று. (௪0)

பைந்தாட்கமலங்கண்மலர்ந்தெனப்பாலன்செங்க
ணந்தாதுவிழித்திடநற்றுயினீங்கினான்போன்
முந்தாவெழுந்தேமுலையுண்ணமுயலும்வேலை
செந்தாமரைமேற்றிருவன்னவள்சேர்ந்துபுல்லி.

(இ - புரை.) பசியதாளையுடைய தாமரைமலர்கள் மலர்ந்ததுபோல இறந்திருக்கும்புத்திரன் கண்களைத்திறந்து நித்திரைநீங்கினவன்போ லெழுந்து முந்தி முலையுண்ணத்தாவினபோது, திருமகளையொத்த அந்த ராசஸ்திரி தன் புத்திரனைக்கட்டி அணைத்துக்கொண்டு, எ - று. (௪௧)

பொல்லாவறுமைத்துயர்பூண்டபொறியிலாள
னில்லாதசெம்பொன்கிடைத்தாங்கணிமுந்துமீள
நல்லாதரவத்தொடுபெற்றனனங்கையோகை
நில்லாதுபொங்கக்களியெய்தினள்நின்றகாலை. ௭௨

(இ - புரை.) கொடியவறுமைத் துயரத்தைக் கொண்டிருந்த அங்கப் பழுதுமுள்ளவனாகிய ஒருவன்தனக்கில்லாத திரவியத்தைப்பெற்று உடனேயிழந்து, மறுபடியும் அந்தத்திரவியத்தை மிகுந்தஆசையுடன் பெற்றுக்கொண்டது போல, அந்த ராசஸ்திரியானவள் சந்தோஷத்தனக்குள் ளடங்காமல்பொங்கக் களிப்பை அடைந்துநின்றபோது, எ - று. நங்கை-பெண்தகுதியின்மிக்கவள்.

மீட்டுங்கருணைக்கடல்போலவிளங்கும்யோகி
தோட்டங்கமலத்துகட்டாதுசொரிவதேபோல்
வாட்டங்குழையான்மகன்மேலுமனைவிமேலுங்
காட்டுந்தளிர்ச்செங்கையினீறுகவினவிட்டான்.

(இ - புரை.) கிருபாசமுத்திரம்போல் விளங்குகின்ற அந்தச் சிவயோகி யானவர் இதழ்களையுடைய தாமரைமலரானது மகரந்தப்பொடியைச் சிந்துவதுபோலத் தம்முடைய கையினால் விபூதியை ராசகுமாரன்மேலும் ராசன் மனைவிமேலும் தரித்தார். எ - று. தோடு - இதழ். (௬௩)

வெண்ணீறவனன்பொடுசாத்தலும்வெற்றிரும்பு
தெண்ணீரிரதத்துளிகுத்தச்செழும்பொனாகி
மண்ணீர்பெற்றாலெனமற்றவர்மேனிநோயின்
புண்ணீர்மைநீங்கிப்பசும்பொன்னுருவெய்தினின்றார்.

(இ - புரை.) அவர் விபூதி தரித்தமாத்திரத்தில் வெறுவிய இரும்பினிடத்தில் தெளிவானதன்மையுள்ள ரசத்துளியைச்சேர்த்தினவுடன் அவ்விரும்பு நல்லபொன்னாகி அலங்காரமுள்ள தன்மையைப் பெற்றதுபோல, நோயினையுடைய புண்தன்மைநீங்கி, அவர்கள் சரீரம் பொன்னிறம் பொருந்தினார்கள். எ - று. மண்ணல் - விளக்கமடைதல். (௬௪)

கங்காதரனன்புறுதொண்டன்கழிந்தவாவி
மங்காதுமீட்கவுயிர்வந்தபின்மைந்தனோடு
கொங்கார்குழலாடிருமேனியிற்கொண்டபுண்ணோய்
தங்காதுநீங்கத்திருநீறவன்சாத்தலோடும்.

(இ - புரை.) இறந்துபோனவுயிர் அப்படியே போகாமல் "பரமசிவனிடத்தில் அன்புள்ள தொண்டராகிய சிவயோகியானவர்மீட்க, உயிர்பெற்ற புத்திரனுடைய சரீரத்திலும் தாயின் சரீரத்திலும் பொருந்திய புண்ணானது கொஞ்சமுமிராமல் நீங்கும்படி விபூதிதரித்த அளவில், எ - று. (௬௫)

தண்டாதவேள்விமறையோர்குலத்தையலாரும்
வண்டாதரிக்குந்தொடையாய்கன்மடந்தையாருங்

கண்டார்மகிழ்ந்தார்வியந்தார்களித்தார்கடனஞ்
சுண்டான்றிருத்தாடொழுதேத்தெடுத்தோதுகின்றார்.

(இ - புரை.) எப்போதும் யாகஞ்செய்துகொண்டிருக்கும் பிராமணகுல மாதர்களும், வண்டுகள்மொய்க்கும் முல்லைமாலையணிந்த அந்தவர்த்தகனுடைய வீட்டு மாதர்களும், பார்த்துச் சந்தோஷித்து அதிசயமடைந்து களிப்புற்று விஷபானம்பண்ணிய பரமசிவனுடைய திருவடிகளைத்தொழுது தோத்திரஞ் செய்தார்கள். எ - று. (சுசு)

வாவுந்திரையார்கலிசூழும்வளாகங்காக்குங்
கோவின்பெருந்தேவியுமைந்தனுங்கோதிலாத
தேவின்கழற்றாள்பணியோகிதன்செய்யபொற்றா
ளாவின்புறவேத்திவணங்கிநவிலலுற்றார்.

(இ - புரை) தாவிமேலெழுகின்ற அலையையுடைய சமுத்திரஞ் சூழ்ந்த பூமியைக் காக்கும் அரசன்மனைவியும் புத்திரனும் பாசரகிதராகிய பரமசிவனுடைய வீரகண்டையணிந்த திருவடியைப்பணிகின்ற சிவயோகியின் செவ்விய பாதங்களை நாவினால் துதிசெய்துபணிந்து சொல்லுகின்றார்கள். எ-று. ஆர்கலி-சமுத்திரம். வளாகம் - பூமி. (சுஎ)

துஞ்சுஞ்சிறுவனுயிரீந்துந்தொடர்ந்தநோயா
லஞ்சுந்துயரங்களைக்காத்துமளியையின்றாய்
வஞ்சம்புணர்மானிடரேதுகைம்மாறுசெய்வேந்
தஞ்சந்திருத்தாளெனயோகிதன்றாளில்வீழ்ந்தார்.

(இ - புரை) இறந்த புத்திரனுடைய பிராணனைக்கொடுத்தும் எங்களுக்குநேரிட்டநோயினால் அஞ்சுகின்ற துயரந்தீர்த்தும் கிருபையுள்ளவரா யிருக்கின்ற தேவரீருக்கு, வஞ்சந்தையுடைய மானிடர்களாகிய நாங்கள் என்ன பிறிது உபகாரஞ்செய்வோம்; எங்களுக்கு உம்முடைய திருவடியே ஆதார வென்றுசிவயோகியினுடைய பாதத்தைவணங்கினார்கள். எ - று. (சுஅ)

வேறு.

இறைஞ்சிவீழ்ந்திடுமிருவர்தம்மையுஞ்
சிறந்தகைகளாலெடுத்துச்சீரியோ
னிறைந்தவோகையானிகழ்த்துமாசிக
ளறைந்துநாமமுமறியக்கூறினான்.

(இ - புரை.) இவ்வாறுசொல்லிவணங்கிய அவ்விருவரையும் சிவயோகியானவர் தம்முடைய திருக்கைகளாலெடுத்து நிறைந்த சந்தோஷத்துடன் சொல்லத்தக்க ஆசீர்வாதஞ்செய்து, அந்தப்புத்திரனுக்குப் பெயருங் கூறியருளினார். எ - று. (சுசு)

பத்திராயுவிப்பாலனும்மென்
றெத்தலங்களுமிசைக்கநின்மகன்
மைத்தடங்கணுய்வளருங்காறுமில்
லுய்த்துநீணிதிவணிகனேய்பவே.

(இ - புரை.) இந்தப்புத்திரன்பெயர் பத்திராயு என்று எவ்விடத்தும் எல்லாருஞ்சொல்லக்கடவர். மைதீட்டுங்கண்களையுடையவளே! உன்புத்திரன் வளர்கிறவரைக்கும் தனவீட்டில் இவவர்த்தகன் ஆதரிக்கக்கடவன். எ-று. (எ௦)

இங்குவைகுநின்னெழில்கொள்பாலகன்
பொங்குநற்கலைப்புணரிநீந்தினன்
மங்கில்செல்வமுமாசிலாட்சியு
மெங்கணுயகனருளினெய்திடிய.

(இ - புரை.) இவ்விடத்திலிருக்கும் உன்புத்திரன் மிக்க நல்ல சாஸ்திரங்களை யெல்லா மோதியுணர்ந்து எம்மிறைவன் கிருபையால் கெடாத செல்வமும் நல்ல அரசாட்சியும் அடையக்கடவன். எ - று. (எக)

வனைந்தநீண்முடிமன்னனுகியே
யனந்தகாலமுமவனிகாத்திடு
மினைந்தமூப்புநோயிகந்ததேவர்போற்
கனைந்துவண்டுலாங்கண்ணிமைந்தனே.

(இ - புரை) வண்டுகள் இசைபாடிக்கொண்டிருக்கும்படியான பூமாலையணிந்த உன்புத்திரன் மகுடந்தரித்துக்கொண்டு மன்னவனாகி வருந்துகின்ற மூப்புப்பருவமும் வியாதியுமில்லாமலிருக்கிற தேவர்களைப்போல இவ்வுலகத்தைக் காத்துக்கொண்டு நெடுநாளிருப்பான். எ - று. கண்ணி-மாலை. (எ௨)

என்றுபாலனுக்கெதிர்பயாவையு
மன்றல்வார்குழற்கியம்பிமாதவன்
சென்றனன்னெனுத்தெளியக்கூறினன்
றொன்றுமாக்கதைசூதனென்பவே.,

(இ - புரை) இவ்வாறு சொல்லியதுமன்றி அந்தப்புத்திரனுக்கு மேல்வரத்தக்கவைகளையும் அவன் தாயுடன் சொல்லிச் சிவயோகி போய்விட்டாரென்று, சூதமுனிவரானவர் மகத்துவமுள்ள பழமையான இந்தச்சரித்திரத்தை நைமிசாரணிய முனிவர்களுக்குத் தெளியும்படிச்சொன்னார். எ - று.

எதிர்ப - வரத்தக்கவை. (எ௩)

சிவயோகிமகிமையுரைத்த - அத்தியாயமுற்றிற்று.

ஆக திருவிருத்தம், கூஎ௦.



## பதினொன்றாவது

# பத்திராயுவுக்கு அரசியலளித்த அத்தியாயம்

ஐந்துமுகத்தானடியார்செயல்கேட்டிங்
குய்ந்தனம்யாமென்னுமுனிவோருளங்களிக்க
மைந்துடலம்பெற்றூர்க்குமுத்திவழிகாட்டும்
பந்தமற்றஞானமுனிமீட்டும்பகர்ந்தனனே.

(இ - புரை.) ஐந்து திருமுகங்களுள்ள பரமசிவனுடைய அடியார் செய்கையைக்கேட்டு, நாங்கள் உய்ந்தோமென்று சொல்லிய நைமிசாரணியமுனிவர்கள் மனஞ் சந்தோஷிக்க, வன்மையுடன் உடல்பெற்றவர்களுக்கு மோக்ஷ வழியைக் காட்டுகின்ற ஞானவானுகிய சூதமுனிவர் மறுபடியுஞ் சொல்லுகின்றூர். எ - று.

ஐந்து திருமுகங்களாவன: ஈசானம் தற்புருஷம் வாமம் அகோரம் சத்தியோசாதம் என்பன. ஈசானமுகம் படிகநிறமுள்ளதாக மேல்நோக்கிய பார்வையாயிருக்கும், தற்புருஷமுகம் பொன்னிறமுள்ளதாய்க் கீழ்த்திசைநோக்கியிருக்கும், அகோரமுகம் தெற்குநோக்கி நீலநிறமுள்ளதாயிருக்கும், வாமமுகம் பொன்னிறமுடன் வடக்குநோக்கியிருக்கும், சத்தியோசாதமுகம் வெண்மைநிறமுள்ளதாய் மேற்குநோக்கியிருக்கும். சிவாலயங்களில் தீபாராதனைசெய்யும் போது நாலுதீபத்தட்டும் நாலுதிக்கிலும் அந்தநாலின் மத்தியில் ஒருதட்டுமாக வைத்தல் சிவபெருமானுக்கு பஞ்சமுகங்களுக்குந் தீபாராதனை செய்கிறபாவனையாம். மத்தியில்வைத்திருக்கிற ஈசானமுகத்தட்டு முதலிலும் பின்பு தற்புருடமுகத்தட்டுமுதல் நான்குதட்டும் மேற்சொல்லிய திருமுகக்கிரமப்படி யெடுத்துத் தீபாராதனைசெய்வது மரபு. சிவலிங்கப்பெருமான் மேற்குநோக்கிய சந்நிதியாயிருந்தால் அந்தத்திக்குநோக்கிய திருமுகமே தற்புருஷமுகமாகத் தற்புருஷத் தட்டுவைத்துத் தீபாராதனைசெய்யும்படி ஆகமவிதியாம். தெற்கு வடக்கு நோக்கிய சந்நிதிகளாயிருந்தால் அந்தந்தத்திசையே தற்புருஷமாகக் கொள்ளவேண்டும். இவ்விடயம் ஈண்டு விரிக்கிற்பெருகும். (க)

பிங்கலையென்றேதும்பெருங்கணிகையோரிராத்
துங்கமிகுதவத்துத்தொல்லோன்விடபனுக்குச்

செங்கமலத்தாள்வருடிச்செய்தவழிபாட்டிறு
லங்கவளுஞாலத்தலர்மடந்தைபோலவே.

(இ - புரை.) பிங்கலையென்று சொல்லப்படுகிற ஒருகணிகை மாதான வள் நவத்துய்மையுடைய விடபனென்னுஞ் சிவயோகிக்கு ஒருநாளிராத்திரி திருவடிகள் வருடிச்செய்த உபசாரத்தினுல், அந்தப்பிங்கலையானவள் இவ்வுல கத்தில் திருமகள்வந்துற்பவித்ததுபோல, எ - று. (உ)

போர்கெழுவேல்வேந்தன் புகழ்ச்சந்திராங்கதற்குச்
சீர்கெழுமுதாரமாஞ்சீமந்தனிவயிற்றின்
வார்பெய்முலைக்கீர்த்திமாலினியென்னுமமொடுந்
தார்புனைமெல்லோதித்தளிரியலாய்த்தோன்றினுள்.

(இ - புரை.) போர்செய்வதற் கேதுவாகப்பொருந்திய வேலாயுதத்தை யுடையவனுய்ப் புகழ்பெற்ற சந்திராங்கதனென்னும் அரசனுக்குக் கற்புள்ள மனைவியாகிய சீமந்தனிவயிற்றில கச்சையாலிறுக்கும் தனங்களும் தாரணிந்த மெல்லியகூந்தலும் தளிர்போலும்சாயலுமுடைய கீர்த்திமாலினி என்னும் பெயர்பெற்ற பெண்ணுகப் பிறந்தாள். எ - று. (ந)

வானமிருடீரவளருமதிப்பிள்ளையைப்போற்
றேனமருந்தார்வேந்தன்செல்வக்குலமோங்கக்
கானமருங்கூந்தற்கனிவாய்க்கழைமென்றோட்
பானல்விழியாள்வளர்காளுற்றசெயல்பன்னுவாம்,

(இ - புரை.) ஆகாயத்தில் இருள்நீங்க வளர்கின்ற இளஞ்சந்திரனைப் போல, சந்திராங்கதனுடைய குலமானது ஒங்கும்படி வாசனையமர்ந்த கூந்தலும் கனிபோலும் வாயும் கழைபோலும் தோளும் நீலோற்பலம்போலும் கண்களும் பெற்றுக், கீர்த்திமாலினியென்னும் பெண்ணனவள் வளருகிறநாளில் பொருந்திய செய்கையைச் சொல்லுகிறேம். எ - று. (ச)

விஞ்சையறிநல்யாழ்விதம்பயின்றுவேதமுதல்
வஞ்சமிலாவாறங்கநீதிமனுவாராய்ந்து
கொஞ்சுகரிபரிதேரூர்ந்துகொலைப்படைக
ணெஞ்சங்களிக்கநிகரில்லார்கற்றுணர்ந்தார்.

(இ - புரை.) தங்களுக்கு ஒப்பில்லாத பத்திராயு சுனையன் என்பவர்கள் வித்தியாதரரைப்போல வீணையின் வகைகளைக்கற்றும், வேதமுதலாக ஆறங்கங்களும் மனு என்னும் நீதிசாஸ்திரமும், மெதுவாக அடிபெயர்த்துவைத்து நடக்கும் யானை யேற்றம் குதிரையேற்றம் தேரேற்றம் தனுமுதலாகிய ஆயுதப் பயிற்சியும் மனங்களிக்கக் கற்றுணர்ந்தார்கள். எ - று. (ரு)

மற்றநிருபன்மகன் பத்திராயுவெனுஞ்
சிற்றச்சிறுகுடுமிச்செவ்வாய்மழகளிறுஞ் (ட)
சொற்றவணிகன்றநயன் சுனேயனுமா
யுற்றுமருவிபுடலுயிர்போல்வைகினர்.

(இ - புரை.) சிறியகுடுமியும் செவ்வாயுமுள்ள இளமையான யானைக் கன்றினையொத்த ராசபுத்திரனாகிய பத்திராயுவென்பவனும் இவர்களை யாதரிக்கும் வணிகனுடைய புத்திரனாகிய சுனேயன் என்பவனும் ஒருவனைவிட்டொருவன் பிரியாமல் உடலுமுயிரும்போல இருந்தார்கள். எ - று. (௬)

தக்கமறையோர்தழன்மாட்டவிசொரிந்து
மிக்கசடங்கியற்றநாயகன்விழைவோடுந்
தொக்கவிரவலர்பாற்சொன்னமழைபொழிய
வொக்கவிருவோருமுன்னூலுவந்தணிந்தார்.

(இ - புரை.) தகுதியுள்ள பிராமணர்கள் ஓமாக்கினியினிடத்தில் அவிர்ப்பாகங்கொடுத்துச் சடங்குகள்செய்ய, அந்தவணிகன் வந்திருக்கிற இரவலர்களுக்கு மழைபொழிவதுபோல விழைவினுடன் திரவியங்கொடுக்கவும், அந்த இரண்டுபுத்திரர்களும் ஏககாலத்தில் உபநயனஞ் செய்துகொண்டார்கள். எ - று. நாய்கன் - வணிகன். (௭)

ஞானநூலாதிபலவிஞ்சைநயந்தளித்த
வானவர்தன்தேசிகனேபோல்வான்மனமகிழ
வூனமில்சிரோமணியும்பொன்னுமுவந்தளித்துத்
தேனமர்தார்மைந்தர்திருவயதீரெட்டடைந்தார்.

(இ - புரை.) ஞானசாஸ்திர முதலாகிய பலகலைகளை விருப்பத்துடன் அருள்செய்த தேவகுருவையொத்த ஆசாரியர் மகிழும்படிக் காணிக்கையாக சிரேட்டமான ரத்தினங்களும் பொன்னு மகிழ்ந்துகொடுத்துப் பதினாறு வயதுள்ளவர்களானார்கள். எ - று. (அ)

மண்டுபுருவச்சிலைகுனித்துவாட்கண்ணே
கொண்டகொடுங்கணையாயெய்வான்குழூஉக்கொண்டு
கண்டமகளிர்கடற்பார்முழுதாளுந்
திண்டிறல்வேற்காளைதிருமார்பத்தெய்யுநாள்.

(இ - புரை.) நெருங்கிய புருவச்சிலையைக்குனித்து வாள்போன்ற கண்களை கணையாகக்கொண்டு எய்யும்படிக் கூட்டங்கூட்டமாகத் திரண்டுகண்ட மகளிர்கள், கடல்வளைந்த உலகத்தையாளும் திண்ணிய திறலமைந்த வேற்ப

டையிணையுடைய காளைபோலும் அவ்வரசகுமாரனுடைய மார்பகத்தெய்வாரா ஞர். எ - று. கட்கணையை எய்தலாவது, காண்டலென்னும் பொருளது. (கூ)

தீர்ந்தவுயிர்முன்னளித்தசிவயோகி
வார்ந்தசடிலஞ்சுவற்புரளவங்கெய்த ...
நேர்ந்துசுமதியெனுநேரிழையுநெஞ்சமருள்
கூர்ந்தகுமரனுமக்கோதிலான்ருடொழுதார்.

(இ - புரை.) நீங்கிய உயிரை முன்னங்கொடுத்த சிவயோகியானவர் நீண்ட சடையானது தோளினிடத்துப்புரண்டசையும்படிவர, நேரிற்கண்டு அந்த ராசஸ்திரியும் மனதில்மிகுந்த கிருபையுள்ள அவள்புத்திரனும் பரிசுத்தரான அந்தச்சிவயோகியின் பாதத்தில் வணங்கினர்கள். சுவல்-தோள். எ-று.

மாண்டபெருந்தவத்தோன்சிந்தைமகிழ்வெய்தப்
பூண்டபரிவினராய்ப்பொன்ருண்மலர்தூவிக்
காண்டகுபால்செந்தேன்கனிபொற்கலத்தேந்தி
யாண்டுமிகும்பூசைவழிபாட்டொடனளித்தார்.

(இ - புரை.) மாட்சிமைதங்கிய சிவயோகி மனமகிழ்ச்சியடையத்தக்கதாக அன்புள்ளவர்களாய் நல்லமலர்கள்தூவிப், பார்வைக்கினிய மதுரமுள்ள பால் தேன் பழங்களைப்பொற்கலத்தில்வைத்து ஆராதனைசெய்து,அமுதுகொள்ளச் செய்தார்கள். எ - று. (கக)

கோடும்பவளக்குறுஞ்சடிலமாவிரதி
வாடுஞ்சிறுமருங்குற்செல்வியையுமைந்தனையு
நாடுங்கருணைபுரிந்துநகைமுகத்தாற்
றேடும்பொருளனையீர்தீதிலவேயென்றுரையா.

(இ-புரை-) வளைவாகத்தொங்குகின்ற பவளம்போலும் சடையையுடைய சிவயோகியானவர், தம்மைவணங்கிய வாட்டமுற்ற சிறிய மருங்கிணையுடைய அம்மாதையும் குமரனையும் ஆசீர்வசனஞ்சொல்லிக் கருணைபுரிந்து நகைமுகத்தராய் தேடுதற்குரிய நற்பொருள்போன்றவரே! சுகமாயிருக்கிறீர்களா என்று வினவினர். எ - று. (கஉ)

வாவுபரித்தேர்வேந்தன்மைந்தன்முகநோக்கி
மேவுகலையுள்ளவிகற்பமெல்லாங்கற்றனையோ
தேவனெனத்தேசிகனைச்சிந்தைமகிழ்வித்தனையோ
வேவுசுடர்வேலோயெமையுநினைப்பாயோ.

(இ - புரை.) தாவிச்செல்லுகின்ற குதிரைக்கட்டிய தேரினையுடைய ராசகுமாரன் முகத்தைப்பார்த்து, யாவரும் விரும்புகின்ற (அறுபத்து நான்குகலை

களுங் கற்றுக்கொண்டனையா? ஆசாரியனைக் கடவுளாகப் பாவனைசெய்து அவர் மனம் சந்தோஷிக்கும்படிச் செய்தனையா? பகைவர்மேல் செலுத்தும்படியான வேலையுடைய புத்திரனே! எம்மையும் எப்போதாவது நினைத்திருப்பையா? எ - று. (௧௩)

சொல்லாயெனமுனிவன்சொல்லுமுறைகேட்டு
நல்லாளடிதொழுதுநானிலத்துமாய்ந்தவர்போற்
புல்லார்புறங்காட்டிற்போடாதுயிரளித்த
வல்லாய்நினையுமறந்திருக்கவல்லோமோ.

(இ - புரை.) சொல்லென்று சிவயோகி சொல்லியவார்த்தையை ராசஸ்திரிகேட்டு, அவர்பாதத்தைவணங்கிச் சுவாமி! இவ்வுலகத்தில்இறந்தவர்களைக் கொண்டுபோய்ப் போடுவதுபோல முனனிறந்திருந்த புத்திரனைப் புற்கள் நிறைந்த சுடலையிற் போட்டுவிடாதபடிக்கு உயிர்கொடுத்தவல்லவரே! உம்மையும் நாங்கள் மறந்திருக்கவல்லமா? எ - று. (௧௪)

நீணிலமேல்வீந்தவுயிர்நீயளிக்கப்பெற்றேனை
மாணவகனாகமறைமுனியேகொண்டருளிக்
காணரியசெய்யகோற்காவலவர்நீதிபுகன்
றூணவநீடாதவறிவுமளிப்பாயென்றாள்.

(இ - புரை.) சிவயோகியே இந்தப்பெரிய வுலகில் இறந்த வுயிரை தேவரீர் கொடுக்கப்பிழைத்திருக்கும் என்புத்திரனைச் சீஷனாகக்கொண்டு, இத்தன்மைத்தென்று எளிதில் அறியக்கூடாத செங்கோல் செலுத்தும் அரசர்களுக்குரிய நீதிகளைச்சொல்லி, ஆணவம் மேலிடாத வண்ணம் ஞானமும அருள் செய்யுமென்று சொன்னாள். எ - று. மாணவகன - மாணாக்கன். (௧௫)

இத்தகையமாற்றமிவளுரைப்பக்கேட்டமுனி
சித்தமுவந்தசிறுவன்முகநோக்கிக்
கொத்தவிழும்பைந்தார்க்குமரநீகேட்டியென
உத்தமன்னீதிமனுநூலுணர்த்தினன்.

(இ - புரை.) இத்தன்மையுள்ள வசனங்களை அந்தராசஸ்திரி சொல்லக்கேட்ட சிவயோகியானவர் மனஞ் சந்தோஷித்துப் புத்திரன் முகத்தைப்பார்த்துப் பூங்கொத்துக்கள் மலர்ந்திருக்கும் மாலையணிந்தகுமரனே! நீ கேளென்று நல்ல நீதிகளைச் சொல்லும் மனுநூலை அருளிச்செய்தார். எ - று. (௧௬)

ஆழியுலகத்தினந்தணரேயாதியாய்
வாழுமொருநான்குவருணத்தோர்தம்மையெல்லா

ழூழிமுதல்வனுருவெடுத்துச்செங்கோலாற்
சூழிமதயானைத்தொல்வேந்தாய்க்காக்குமே.

(இ - புரை.) சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தில் வாழுகின்ற பிராமணர் முதலாகிய நான்குவருணத்தாரை யெல்லாம் ஊழிமுதல்வனாகிய பரமசிவனே நெற்றிப்பட்டங்கட்டிய மதத்தயானையையுடைய பழமையாகிய அரசர்களாகத்திருமேனிகொண்டு நீதியினாற்காத்தருளுவர். எ - று. (௧௭)

வேந்தன்முறைதிறம்பின்வேதவிதிதிறம்பு
மேந்திழையார்தங்கற்புமில்லறமுநில்லாவா
மாந்தர்பசியாலுணங்கமழைவறந்து
பாந்தண்முடிக்கிடந்தபாரின்விளைவஃகுமால்.

(இ - புரை.) அரசன் நீதிதவறினால் வேதவிதிகள் தவறும், மாதர்களுடைய கற்பும் இல்லறமும் மாறிப்போம், மனிதர்கள் பசியால்வருந்தும்படி மழை பெய்யாமல் ஆதிசேடன் முடியிலிருக்கும் பூமியினிடத்தில் பயிர்விளைவுங்குறைந்துவிடும். எ - று. (௧௮)

தீயூட்டித்தாமுண்ணுஞ்செய்தவத்தோராவினங்க
ணோயூட்டுகாயமிகழ்ந்தியற்றுநோன்பினோர்
வேயூட்டுதோளார்விருத்தர்சிறுபாலர்தமைத்
தாயூட்டிப்போற்றுதல்போற்றார்வேந்தன்காக்குமால்.

(இ - புரை.) 'அக்கினிதேவனுக்கு அவிர்ப்பாகங்கொடுத்து உண்ணுகின்ற பிராமணர்கள் பசுக்கள் நோயைத்தருகின்ற உடலைவெறுத்துத் தவஞ்செய்கின்ற முனிவர்கள் பசியமூங்கிலையொத்த தோள்களையுடைய ஸ்திரிகள் விருத்தர்கள் இவர்களைத் தாயானவள் சிறுபிள்ளைகளை யூட்டிவளர்ப்பதுபோல, வெற்றி அரசன் காப்பன். எ - று. (௧௯)

தேவர்நிலைகடவார்மேலோர்திறம்பிழையார்
நாவினிரண்டுரையார்நன்கல்லவைபுரியார்
காவன்முறைதிறம்பார்காமச்செயல்பெருக்கார்
பூவலயங்காவல்புரியும்புரவலரே.

(இ - புரை.) இவ்வுலகத்தைக்காக்கும் அரசரானவர்கள் தேவர்கள் நிலைமையைக்கடவார்கள், பெரியோரிடத்துக் குற்றஞ் செய்யார்கள், நாவினாற்றவறியுரையார்கள், நன்றல்லாத காரியங்களைச் செய்யார்கள், காவலின்முறைமை மாறார்கள், காமச்செய்கை அதிகப்படுத்தார்கள். எ - று. (௨௦)

அங்கிலேயேகளவொழுக்கமனகமகாளளாளமவறுததகனறவயல ன்கற்பிற், பன்னியிளமுலேகிடந்தவெஃகரவாலறிவழிந்துயையுரு ரேன், கன்னலடுசிலேகுழைத்துவேனிலானமராடுங்கணேகளாகஞ் சின்னபின்னஞ் செயக்காமவிடந்தலேக்கொண்டகல்வானஞ் சேர்ந்தா னன்றே.

(இ - புனா.) அவ்வாறு சோரப்புணர்ச்சிக்குச் சம்மதியாமல் வெறுத்துப் போய்விட்ட அன்னியனுடைய மனேவியினிடத்திருந்த அவாவினுல் அறிவிழந்து துன்பமடைந்து, மன்மதன் கரும்புவில்லேவளேத்துப் போர்செய்யுங்கணேகள் தன்னுடைய சரீரத்தைச் சின்னபின்னஞ்செய்வதினுல் காமமாகிய விஷந் தலேயேற இறந்துபோனுன். எ - று. வெஃகரவு-விருப்பம். (௧௩)

கற்பினிலேகடவாதநிறையிருந்தும்பொறையிருந்துங்கமழ்தார்சூ ட்டி, முற்படத்தன்கேண்மணந்தமுற்றிழையையொருஞான்றுமுய ங்கவொட்டாள், பொற்புடைத்தன்புணர்முலேயின்புதுநலமேறுகரும் வண்ணம்புரிதலாலே; யிற்பழியில்லாவிவளுமிளமையிலேகைமையுற் றுங்கிருந்தாளன்றே.

(இ-புனா.) கற்புத்தன்மைகடவாத நிலேமையிவளிடத்திருந்தும் பொறுமை யிருந்தும் தனக்குமுன் தன்கணவனுக்கு மாலேசூட்டியவள் ஒருநாளாவதுகண வனுடன் இன்பமனுபவிக்க வொட்டாதவளாய் அழகுள்ளதன்கொங்கையின் பத்தையே அனுபவிக்கும்படிச்செய்தலினுலே, பதிவிரதாதர்மத்துக்குப் பழிநே ரிடாமற் காத்துக்கொண்ட இவளும் கைம்பெண்ணுகியிருந்தாள். எ-று. (௧௪)

வளமலிசீர்மகளிரொடுமகிணரிளநலநுகராவண்ணமாற்றி
யுளமல்யுமனக்களியாற்றமதுவழியேயொழுகலூடல்கூருந்
தளவநகைக்கயல்விழியார்தமைக்காமவிடாய்கனற்றத்தளர்ந்துமாழ்கி
யிளமையிலேநான்குபவங்கயினியாயளவிறுன்பமெய்துவாரே.

(இ - புனா.) வளமையுஞ் சீருமுள்ள மனேவியருடன் கணவன் இன்பம் அனுபவியாதவண்ணமாற்றி உள்ளத்திற்பொருந்திய களிப்புடன் தங்கள்சொற் படிநடக்கும்படி ஊடல்கொள்ளுகின்ற முல்லேயரும்பினேயொத்தநகையினேயும் சேல்மீனேயொத்த கண்களேயுமுடையமாதர்கள், மறுபிறப்பில் தங்களேக்காம விடாயானது வருத்தச்சோர்ந்து துயரமுற்று இளமையிலேதானே நான்கு பிறப்புவரைக்கும் கைம்பெண்ணுகி அளவில்லாத துன்பத்தைப் பொருந்துவார் கள். எ - று. (௧௫)

அறந்தழையுந்தூயமனத்தருந்தவனேயருந்ததிகற்பனேயகற்பாற் சிறந்தமலர்க்குழலிவடன்சிந்தைகளிகூர்ந்துநறுந்தேங்கொள்போதா,

(இ - புரை.) உதயகாலத்தில் நித்திரைதெளிந்தெழுந்து பரிசுத்தமுள்ள நீரில் ஸ்நானஞ்செய்து, ஆகமவிதிப்படிப் பரமசிவனைப்பணிந்து, தெய்வத்தன்மையுள்ள பிராமணர்களுக்குப் பசுக்களும் திரவியமும் தெளிவாகிய நீர் நிறைந்த விளைநிலங்களுந் தானமாகக்கொடுத்து, பரமசிவனுடைய அடியார்களுக்கும் முனிவர்களுக்கும் யதிதிகளுக்கும் கையிற்பற்றிக்கொள்ளத்தக்க வாசனையுள்ள நெய் மதுரமுள்ளபருப்பு பசுவின்பால் வெல்லக்கட்டி முப்பழங்கள் இவைகளுடன்சேர்த்து, எ - று. வைகறை-விடியற்காலம். பகவர்-முனிவர். ()

வாசனன்கருனையடிசிலுமருத்திமருவியவிருந்தொடுந்துய்த்துப்
பாசிலைபிளவுகருப்புரமருந்திப்பரிமளக்கலவைத்தண்சந்தம்
யோசனைகமழவணிந்துநல்லணிகளொளிமுடியாதியபுனைந்து
கீசகத்தடைக்குமரவியர்த்தானைகிளரொளிமருங்குறச்சாத்தி.

(இ - புரை.) வாசனைதங்கிய நல்லபொரியலுடன் அன்னம் உண்பித்து, வந்திருக்கிற விருந்தாளிகளுடன் தாமுமுண்டு, பச்சைக்கருப்பூர முதலாகிய வாசனையுடன்தாம்பூலம்தரித்துக்கொண்டு, வாசனையுள்ளகூட்டுவர்க்கஞ்சேர்ந்த சந்தனக்குழம்பு யோசனைதூரம் பரிமளிக்கும்படிப்பூசிக்கொண்டு, மகுடமுதலாகிய நல்ல ஆபரணங்களணிந்துகொண்டு, மூங்கிற்குழையில் அடைக்கத்தக்கதாகப் பாலின்புகையையொத்துள்ள அதிக மெல்லியவஸ்திரத்தை இடையிலுடுத்துக்கொண்டும், எ. று. கருனை-பொரிக்கறி, கீசகம்-மூங்கிற்குழை. ()

அண்டர்கள்சூழப்புரந்தரனிருந்தவவையெனவருமணிசுயின்ற
திண்டிறன்மடங்கற்றவிசின்வீற்றிருந்துவேந்தர்வந்திடுந்திறையளிப்பக்
கொண்டலின்முரசமுன்றிலின்முழங்கவரசிளங்குமரருங்கதிர்வேன்
மண்டலாதிபருஞ்சேனைகாவலருமந்திரத்தலைவரும்வணங்க.

(இ - புரை) தேவர்கள் தன்னைச் சூழ்ந்துகொண்டிருக்கும்படித் தேவேந்திரன் வீற்றிருக்கும் சபையைப்போல் கிடைப்பதற்கரிய ரத்தினங்கள்பதித்த மிருகபலமுள்ள சிங்காசனத்தில்வீற்றிருந்து, பகைவர்கள்வந்து தாங்கள் கட்டுகிற திறையை அளந்துகொடுக்கவும், அரண்மனை முகப்பில் மேகம்போல் பேரிகைமுழங்கவும், ராசகுமாரர்களும் ஒளிதங்கிய வேலையுடைய மண்டலாதிபரும், சேனாதிபர்களும் மந்திரிமார்களும் வணங்கவும், எ - று. (உசு)

நீதியுமொற்றுங்கிரிலாக்கண்ணுநீணிலத்தில்லவையொழிதரும்
வேதியர்தேவர்மெலிந்துளோர்வறிஞர்மெலிவறக்குறைத்திறம்வினவி
மோதருங்குடியுமுலப்பிலாநிதியுமுயர்ந்திடவனுதினங்காத்துஞ்
சூதுணரபகைவர்திருவினைக்கவருஞ்சூட்சியுமனைமுருகுழாது.

(இ - புரை.) நீதியும் தூதர்களுமே தமக்குக் கண்களாகக்கொண்டு, இவ்வுலகில் பாவத்தையொழித்தும், பிராமணர்கள் தேவர்கள் மெலிவடைந்தவர்கள் வறுமையாளர் இவர்கள் வருந்தம் நீங்கும்படிக் குறைப்பாட்டைவினவியும், சொல்லுதற்கரியகுடிகளும், அழியாதநிதியும் அதிகரிக்கும்படி அனுதினங்காத்தும், சூதினாலே பகைவருடைய செல்வத்தை அபகரிக்கும்படியான தந்திரத்தையும் அதற்கேற்ற முயற்சியையும் ஆலோசித்தும், எ - று. (உஎ)

தருமநூலாய்ந்துமடைந்தவர்ப்புரந்துந்தடுப்பருங்காலங்களுணர்ந்து
மெரிபசும்பூணார்நடத்தொழில்கண்டுமியாழினோரின்னிசைகேட்டும்
விரியிருண்மாலைப்பொழுதெலாமனங்கன்விழாவணிநடத்துதல்போல
புரிகுழன்மடவார்கலவியிற்றிளைத்தும்போக்குவர்புரவலர்பொழுதே.

(இ - புரை.) பகற்பொழுதில் தருமசாஸ்திரங்களை ஆராய்ந்தும், தம்மை அடைந்தவர்களைக் காப்பாற்றியும், தடுப்பதற்கரிய காலங்களை அறிந்தும், பிரகாசிக்கும் பொன்னாபரணமணிந்த நடனப்பெண்கள் ஆடும் நாடகத்தைப்பார்த்தும், வீணைவாசிப்பவர்கள் இனிய இசையைக்கேட்டும், இராப்பொழுதில் மன்மதனுக்குத் திருவிழாச்செய்வதுபோல் தங்களுக்குரிய மனைவியரிடத்தில் கலவித்தொழில்புரிந்தும், அரசர்கள் பொழுதுபோக்குவார்கள். எ - று. காலங்களுணர்தல் தனக்குச் செயம்வரத்தக்க காலங்களையறிதல். (உஅ)

இத்திறமவனிபுரந்தவேலிறைவரெண்ணில ரெண்ணிலகாலஞ்
சத்திரமொன்றிற்றரைமுழுதாண்டுதமனியநெடும்பதியாள
உத்தமவேள்விக்கனறநுறைமுடித்திவ்வுருவொழித்தும்பராய்வான்மேற்
சித்திரவிமானத்தரம்பையரோடும்வைகுவர்சிறுவகேளின்னம்.

(இ - புரை.) இத்தன்மையாகப் பூமியைக்காத்த அனேகம் அரசர்கள் அனேகங்காலம் ஒருகுடையின்கீழ் உலகமுழுவதையும் ஆண்டு, பொன்னுலகமாகிய சுவர்க்கத்தை யாள்வதற்காக யாகங்கள்செய்து, நிறைவேற்றி இவ்வுருவத்தையொழித்துத் தேவர்களாய் வானுலகத்தில் சித்திரவிமானமேறிச்சென்று, அரம்பாஸ்திரிகளுடன் இருக்கின்றார்கள். புத்திரனே! இன்னமுஞ் சொல்லுகிறேன்கேள். எ - று. (உகூ)

அவ்வணநீயுங்கடைப்பிடித்தொழுகியானடிக்கமலமேயரணாப்
பவ்வநீருலகமுழுவதுந்தனிவெண்பனிமதிக்கவிகையிற்புரப்பாய்
வெவ்வினையகற்றுஞ்சிவகவசமும்யான்விளம்புகேனுனக்கதுவிரவாத்
தெவ்வினையொறுக்குஞ்சயந்தரும்பாவமறுத்திடுமென்றுசெப்பினனால்.

(இ - புரை.) அந்தத்தன்மையை நீயுமனங்கொண்டுநடந்து, பரமசிவனுடைய திருவடித்தாமரையே துணையாகச் சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகமுழு

வதையும் ஒப்பில்லாததாய்க் குளிர்ச்சிதங்கிய சந்திரவட்டக் குடையின்கீழ் ஆளுவாயாக; அன்றியும், கொடியவினைகளை நீக்கத்தக்கதான சிவகவசமும் உனக்குநான் சொல்லுகிறேன், அந்தச் சிவகவசமானது உன்னைக்கூடியிராத பகைகளை அறுக்கும், வெற்றியைக்கொடுக்கும், பாவங்களை நீக்கிவிடும், என்று சிவயோகி சொல்லியருளினார். எ - று. கவசம்போன்று காத்தலையுடைமையால் கவசமென்று பெயர்பெற்றது. (௯௦)

சிவயோகி பத்திராயுவுக்கு அரசியலளித்த அத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - எ௦௦.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

பன்னிரண்டாவது.

# சிவகசவமுரைத்த அத்தியாயம்.



பங்கயத்தவிசின்மேவியிருந்துடற்பற்றுநீக்கி
யங்குரற்பூதசுத்தியடைவுடன்செய்தபின்னர்க்
கங்கையைத்தரித்தசென்னிக்கற்பகத்தருவைச்செம்பொற்
கொங்கைவெற்பனையபச்சைக்கொடியொடுமுளத்தின்வைத்தே.

(இ - ள்.) பதமாசனத்திலிருந்து சரீரப்பற்றினையொழித்துப் பூதசுத்தி கிரமப்படி செய்தபிற்பாடு, கங்கையைத்தரித்த திருமுடியுடைய கற்பக விருக்ஷம்போன்ற பரமசிவத்தையும் பொன்மலைபோன்ற தனங்களையுடைய பச்சைக்கொடியொத்த பார்வதிதேவியாரையும் மனதில் தியானித்து, எ - று. பெருமான் வேண்டுவார்வேண்டியதை ஈயவல்லவராதலால், கற்பகத்தரு என்று கூறினார். பத்மாசனமாவது இரண்டுதொடைமேலும் இரண்டு உள்ளங் காலையுமாறித்தோன்றவைத்தல். (க)

அகிலநாயகனுய்ஞானவானந்தரூபியாகித்
துகடருமணுவாய்வெற்பின்றோற்றமாயுயிரையெல்லாந்
தகவுடனவனியாகித்தரிப்பவனெம்மையிந்த
மகிதலமதனிற்றீமைமருவிடாதருளிக்காக்க.

(இ - புரை.) எல்லாவற்றிற்குந் தலைவனாகியும், ஞானானந்த சொரூபியாகியும், அகளாகிய அணுத்தன்மையாகியும், மலைபோலப் பெரியதாகியும், பூமியுமாகித் தகுதியுடன் ஆத்துமகோடிகளைத் தாங்குகின்ற கடவுள் இந்த உலகத்தில் தீங்குநேரிடாவண்ணம் அருள்செய்து எங்களைக் காக்கக்கடவர். எ - று

குரைபுனலுருவங்கொண்டுசூழ்தொறும்பயன்களைல்கித்
தரையிடையுயிர்கள்யாவுந்தளர்ந்திடாவண்ணங்காப்போ
னிரைநிரைமுகில்களீண்டிநெடுவரைமுகட்டிற்பெய்ய
விரைபுனலதனுள்வீழ்ந்துவிளிந்திடாதெம்மைக்காக்க.

(இ - புரை.) ஒலிக்காநின்ற சலரூபங்கொண்டு பயிர்கள்தோறும் பயன் கொடுத்து, இவ்வுலகத்திலிருக்கும் உயிர்களெல்லாந் தளர்ச்சியடையாதபடிக் காப்பவனாகிய கடவுள், வரிசைவரிசையாய்வருகின்ற மேகங்கள்சேர்ந்து பெரியமலைகளில் மழைபொழியப் பெருக்கெடுத்தோடும் சலத்தில் விழுந்து இறவாவண்ணம் எங்களைக்காக்கக்கடவர். எ - று. (௩)

கடையுகந்தன்னிலெல்லாவுலகமுங்கடவுட்டீயா
லடலைசெய்தமலைதாளமறைதரநடிக்குமீச
னிடைநெறிவளைதாபத்திலெறிதருகுறைக்காற்றிற்
றடைபடாதெம்மையிந்தத்தடங்கடலுலகிற்காக்க.

(இ - புரை.) யுகத்தின் இறுதியில் எல்லாவுலகத்தையும் தெய்வத்தன்மையுள்ள தீயினாற் சாம்பராகச் செய்து, பார்வதிதேவியார் தாளமறையும்படி நடஞ்செய்யும் பரமசிவன் மார்க்கத்தின் மத்தியில் வளைத்துக்கொள்ளும் தீவெப்பத்துடன் வீசுகின்ற குறைக்காற்றினாற் றடைபடாமல் பெரிய சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தில் எம்மைக்காக்கக்கடவர். எ - று. அடல் - சாம்பர். தாபம் - அக்னி. (௪)

தூயகண்மூன்றினோடுசுடருட்பொன்வதனநான்கும்
பாயுமான்மழுவினோடும்பகர்வரதாபயங்கண்
மேயதிண்புயங்களான்குமிளிருமின்னனையதேசு
மாயதற்புருடனெம்மைக்குணதிசையதனிற்காக்க.

(இ - புரை.) பரிசுத்தமுள்ள திரிநேத்திரங்களும் பிரகாசியாநின்றபொன்னிறமுள்ள நான்கு திருமுகங்களும், பாய்கின்ற மான் மழுவினுடன் சொல்லுகின்றவரதமும் அபயமும் பொருந்திய திண்ணிய நான்குபுயங்களும், விளங்

குகின்ற மின்னலை யொத்த திருமேனிக் காந்தியுமுள்ள தற்புருட மூர்த்தியானவர் கிழக்குத் திசையில் எம்மைக் காக்கக்கடவர். எ - று. வரதம்-வரங்கள் கொடுக்கிற குறிப்பால் கீழ்நோக்கிய இடதுதிருக்கரம். அபயம்-சரணஞ்செய்த அன்பர்கட்கு அச்சமில்லாமையைக்குறிக்கு மேனோக்கிய வலதுதிருக்கரம். (௫)

மான்மழுசூலந்தோட்டிவனைதருநயனமாலை
கூன்மலியங்குசந்தீத்தமருகங்கொண்டசெங்கை
நான்முகமுக்கணீலநள்ளிருள்வருணங்கொண்டே
யான்வருமகோரமூர்த்திதென்றிசையதனிற்காக்க.

(இ - புரை.) மான் மழு சூலம் கோடரி புனையப்பட்டஉருத்திராக்ஷ மாலை வளைவாகிய அங்குசம் தீ தமருகம் என்னு மிவைகளைத்தாங்கியசெங் கைகளும் நான்குதிருமுகங்களும் திரிநேத்திரங்களும் நீலம்போலச் செறிந்த இருணிறமுங்கொண்டு ருஷபத்தி லேறிவருகின்ற அகோரமூர்த்தியானவர் தெற்குத்திசையில் எம்மைக்காக்கக்கடவர். எ - று. தோட்டி - கோடரி. நயனமாலை - ருத்திராக்ஷமாலை, அக்ஷம் - கண். தமருகம் - உடுக்கை என்னும் வாச்சியம். (௬)

திவண் மறியக்கமாலைசெங்கையோரிரண்டுந்தாங்க
அவிர்தருமிரண்டுசெங்கைவரதத்தோடபயந்தாங்கக்
கவினிறைவதனநான்குங்கண்ணொருமூன்றுங்காட்டுந்
தவளமாமேனிச்சத்தியோசாதன்மேற்றிசையிற்காக்க.

(இ - புரை.) தாவுகின்ற மானையும் உருத்திராக்ஷ மாலையினையும் இரண்டு திருக்கரங்கள் தாங்கவும், பிரகாசியாநின்ற இரண்டு திருக்கரங்கள் அபயவரதம் தாங்கவும், அழகு நிறைந்த நான்குமுகங்களும் மூன்றுகண்களும் விளங்குகின்ற வெண்மை நிறமுமுள்ள சத்தியோசாதமூர்த்தியானவர் மேற்குத்திசையில் எம்மைக்காக்கக்கடவர். எ - று. மறி - மான். (௭)

கறைகெழுமழுவுமானுமபயமுங்கண்ணிணும
மறைதருந்தொடையுஞ்செய்யவங்கைகணான்குமேந்திப்
பொறைகொணான்முகத்துமுக்கட்பொன்னிறமேனியோடு
மறைபுகழ்வாமதேவன்வடதிசையதனிற்காக்க.

(இ - புரை.) உதிரந்தோயப்பெற்ற மழுவாயுதத்தையும் மானையும் அபயவரதங்களையும் உருத்திராக்ஷமாலையினையும் சிவந்த நான்கு திருவத்தங்களிலும் தாங்கிச் சாந்தந்தங்கிய நான்குதிருமுகங்களிலும் மும்மூன்று கண்களும்

பொன்னிறமேனியுமுள்ள வேதங்களாற் புகழத்தக்க வாமதேவமூர்த்தி வடக்குத்திசையிற் காக்கக்கடவர். எ - று. (அ)

அங்குசங்கபாலஞ்சூலமணிவரதாபயங்கள்
சங்குமான்பாசமக்கந்தமருகங்கரங்களேந்தித்
திங்களிற்றவளமேனித்திருமுகமைந்தும்பெற்ற
வெங்களீசானதேவனிருவிசும்பெங்குங்காக்க.

(இ - பொ.) அங்குசம் கபாலம் சூலம் அழகிய வரதாபயங்கள் சங்கம் மான் பாசம் ருத்திராக்ஷம் தமருகம் என்னு மிவைகளைப் பத்துத் திருக்கரங்களிலுமேந்தி, சந்திரனைப்போல வெண்மைநிறங்கொண்ட திருமேனியும் ஐந்து திருமுகங்களும் பெற்றுள்ள எங்கள் ஈசானமூர்த்தியானவர் பெரிய ஆகாயமெங்குங் காக்கக்கடவர். எ - று. (கூ)

சந்திரமவுலிசென்னிதனிநுதற்கண்ணனெற்றி
மைந்துறுபகன்கண்கொட்டோன்வரிவிழியகிலநாதன்
கொந்துணர்நாசிவேதங்கூறுவோன்செவிகபாலி
யந்தில்செங்கபோலந்தூயவைம்முகன்வதனமுற்றும்.

(இ - பொ.) சந்திரசேகர மூர்த்தியானவர் எங்கள் சிரசினையும், ஒப்பற்ற நெற்றிக்கண்ணையுடையவரான பாலலோசனமூர்த்தியானவர் நெற்றியையும், வலிபொருந்திய பகனென்னுஞ்சூரியனுடைய கண்ணைப்பறித்த மூர்த்தியானவர் நீண்டகண்களையும், விசுவநாதரானவர் பூங்கொத்தின் வாசனையை அறியத்தக்க நாசியினையும், வேதமருளிச்செய்த மூர்த்தியானவர் காதுகளையும், கபாலியென்பவர் செவ்விதாகிய கபோலத்தையும், பரிசுத்தமுள்ள பஞ்சானன மூர்த்தியானவர் முகத்தினையும், (காக்கக்கடவர்.) எ - று. அந்தில் - அசை. பன்னிரண்டுசூரியரில் பகன் ஒருசூரியன், இச்சூரியன்கண் தக்க யாகத்தில்பறிக்கப்பட்டது. அகிலநாதரென்றது - விசுவநாதரை, விசுவம் - உலகம். (௧௦)

வளமறைபயிலுநாவனுமணிநீலகண்டன்
களமடுபிநாகபாணிகையினீர்தருமவாகு 1௭௱
கிளர்புயந்தக்கன்யாகங்கெடுத்தவன்மார்புதூய
வொளிதருமேருவில்லியுதரமன்மதனைக்காய்ந்தோன்.

(இ - பொ.) வளப்பமுள்ள வேதங்களைப் பயில்கின்ற நாவுள்ள மூர்த்தியானவர் நாவினையும், நீலகண்ட மூர்த்தியானவர் கண்டத்தினையும், போர் செய்யத்தக்க பிநாகமென்னும் வில்லேந்திய பிநாகபாணியானவர் கைகளையும், தர்மவாகு என்பவர் விளங்குகின்ற புயங்களையும், தக்கனுடைய யாகத்தைஅழித்

நமூர்த்தியானவர் மார்பினையும், நல்ல ஒளியைத் தருகின்ற மேருவில்லியென்னு மூர்த்தியானவர் வயிற்றினையும், (காக்கக்கடவர்) எ - று. களம் - கண்டம். (கக)

இடையிபமுகத்தோன்றாதையுந்நம்மீசன்மன்னும்
புடைவளரரைகுபேரமித்திரன்பொருவில்வாமம்
படர்சகதீசன்சானுபாய்தருமிடபகேது
விடைநெறிகணைக்காலெய்ந்தவிமலன்செம்பாதங்காக்க.

(இ-புரை.) காமதகன மூர்த்தியானவர், இடையினையும், கணபதியின் பிதாவாகிய சிவபெருமானானவர் நாபியினையும், நம்முடைய ஈசுவரரானவர் புடைபரந்த அரையினையும், குபேரன்றோழனாகிய மூர்த்தியானவர் ஒப்பில்லாத தொடையினையும், வியாபகராகிய சகதீசன்முழங்காலையும், பாய்கின்ற ருஷபகேதுவானவர் ருஷபத்தின் திமிலையொத்த கணைக்காலையும், பொருந்திய விமலமூர்த்தியானவர் செவ்வியபாதத்தையுந் தனித்தனிகாக்கக்கடவர் எ-று. சானு - முழந்தாள். மேற்பாட்டினீற்றில் 'மதனைக்காய்ந்தோன்' என்பதின் உரையை இங்கு கூட்டப்பட்டது. (கஉ)

வருபவன்முதல்யாமத்துமகேசன்பின்னிரண்டாம்யாமம்
பொருவருவாமதேவன்புகன்றிடுமூன்றும்யாமந்
செருமலிமழுவாளங்கைத்திரியம்பகனலாம்யாமம்
பெருவலியிடபவூர்திபிணியறவினிதுகாக்க.

(இ - புரை.) வேதங்களில் வழங்கப்படுகிற பவன் என்னும் திருப்பெயருள்ள மூர்த்தியானவர் முதற்சாமத்தும், மகேசுரன் இரண்டாஞ் சாமத்தும், ஒப்பில்லாத வாமதேவர் மூன்றுஞ்சாமத்தும், போருக்கேற்ற மழுவாயுதமேந்திய திருக்கரத்தையுடைய திரியம்பகர் நாலாஞ்சாமத்தும், மிகுந்த சரீரவன்மையானது பிணியால் சோர்வுறாதபடி ருஷபவாகன மூர்த்தியானவர் காக்கக்கடவர். எ - று. (கங)

கங்குலின்முதல்யாமக்துக்கலைமதிமுடித்தோன்காக்க
தங்கியவிரண்டாமியாமஞ்கானவிதரித்தோன்காக்க
பொங்கியமூன்றும்யாமம்புரிசடையண்ணல்காக்க,
பங்கமினாலாமியாமங்கவுரிதன்பதியேகாக்க.

(இ-புரை.) இராத்திரியின் முதற்சாமத்தில் சந்திரசேகரமூர்த்தி காக்கக்கடவர். இரண்டாஞ்சாமத்தில் கங்காதரமூர்த்திகாக்கக்கடவர், மூன்றுஞ் சாமத்தில் சடாமகுட மூர்த்தியானவர் காக்கக்கடவர், கெடுதலில்லாத நாலாஞ் சாமத்தில் உமாபதிகாக்கக்கடவர். எ - று. (கச)

அனைத்துளகாலமெல்லாமந்தகற்கடிந்தோனுள்ளுந்
தனிப்பெருமுதலாயுள்ளசங்கரன்புறமுந்தாணு
வனப்புறுநடுவுந்தூயபசுபதிமற்றுமெங்கு
நினைத்திடற்கரியதொன்மைச்சதாசிவநிமலன்காக்க.

(இ - புரை.) எல்லாக் காலங்களிலும் காலசங்காரமூர்த்தியும், உட்புறத்தில் ஒப்பற்ற முதற்காரண கர்த்தாவாகிய சங்கரமூர்த்தியும், வெளிப்புறத்து ஸ்தாணுமூர்த்தியும், நடுப்புறத்துத்தூயபசுபதியும், மற்றெவ்விடத்திலும் நினைப்பதற்கரிய சதாசிவமூர்த்தியுமாகத் தனித்தனிக்காக்கக்கடவர். எ - று. (௧௫)

நிற்புழிபுவனநாதனேகுழிநிமலன்மேனி
பொற்புறுமாதிநாதனிருப்புழிபொருவிலாத
வற்புதவேதவெத்தியருந்துயில்கொள்ளுமாங்கண்
டற்பரசிவன்விழிக்கிற்சாமளருத்திரன்காக்க.

(இ - புரை.) நிற்குமிடத்துப் புவனநாதரும், நடக்குமிடத்து நிர்மலமூர்த்தியும், சரீரத்தின் அழகினை ஆதிமூர்த்தியும், இருக்குமிடத்து ஒப்பில்லாத அற்புத மூர்த்தியாகிய வேதவேத்தியனும், நித்திரை செய்யுமிடத்துத் தற்பரசிவனும், விழிக்கும்பொழுதிற் சாமளருத்திரனுமாகத் தனித்தனிக்காக்கக்கடவர்கள். எ - று. (௧௬)

மலைமுதற்றுருக்கர்தன்னிற்புராரிகாத்திடுகமன்னுஞ்
சிலைமலிவேடரூபன்செறிந்தகானகத்திற்காக்க
கொலையமர்கற்பத்தண்டகோடிகள்குலுங்கநக்குப்
பலபடநடிக்கும்வீரபத்திரன்முழுதுங்காக்க.

(இ - புரை.) மலைமுதலாகிய துருக்கங்களில் புராரிகாக்கக்கடவர், சாவசங்கார முண்டாகுங் கற்பகாலத்தில் அண்டகோடிகளெல்லாம் நடுங்கும்படி நடனஞ்செய்கின்ற வீரபத்திரரானவர் முழுதுங்காக்கக்கடவர். எ - று. (௧௭)

பல்லுளைப்புரவித்திண்டேர்படுமதக்களிறுபாய்மா
வில்லுடைப்பதாதிதொக்குமிடைந்திடுமெண்ணில்கோடி
கொல்லியன்மாலைவைவேற்குறுகலர்குறுகுங்காலை
வல்லியோர்பாகன்செங்கைமழுப்படைதுணித்துமாய்க்க.

(இ-புரை.) பிடரி மயிரினையுடைய குதிரைகள்கட்டிய பலமுள்ளதேர்கள் மதநீரொழுகும் யானைகள் தாவிச்செல்லுங் குதிரைகள் வில்லேந்தியபதாதிகள் என்னுமிவைகள் சேர்ந்துநெருங்கி, அளவில்லாதவர்களாய்ப்போரில் வெற்றி மாலையணிந்த கூர்மையான கொலைவேலுள்ள பகைவர்கள் போருக்கு வந்தகாலத்தில், அவர்களைப் பார்வதிபாகன் திருக்கரத்திலிருக்கும் மழுவாயுதம் துணித்துக்காக்கக்கடவது. எ - று. (௧௮)

தத்துநீர்ப்புணரியாடைத்தரணியைச்சுமந்துமாணப்
பைத்தலைநெடியபாந்தள்பஃறலையனைத்துந்தேய்ந்து
முத்தலைபடைத்ததொக்குமூரிவெங்கனற்கொள்சூலம்
பொய்த்தொழிற்கள்வர்தம்மைப்பொருதழித்தினிதுகாக்க.

(இ - பொ.) பெருமைபெற்ற படத்தினையுடைய பெரியஆதிசேஷன், தாவுகின்ற அலைகளையுடைய நீர்நிறைந்த சமுத்திரத்தையே ஆடையாக உடுத்தபூமியைத்தாங்கி, பலதலைகள்தேய்ந்து மூன்றுதலை படைத்ததைப்போலும் பலமும் வெவ்விய தீயையுங் கொண்ட சூலமானது, பொய்த்தொழிலை யுடைய கள்வர்களைப் போர்புரிந்து அழித்து இனிதாகக் காக்கக்கடவது. எ - று. சூலம் காக்க என முடிக்க. (௧௯)

மூடங்குளைமுதலாய்நின்றமுழுவலிக்கொடியமாக்க
ளடங்கலும்பினாகங்கொல்கவென்றிவையனைத்துமுள்ளந்
திடம்படநினைந்துபாவந்தெறுஞ்சிவகவசந்தன்னை
யுடன்படத்தரிப்பையானாலும்பொருகுவவுத்தோளாய்.

(இ . பொ.) திரண்டகல்லையொத்துக் குவிந்த தோள்களையுடையவனே! மடங்கிய பிடரிமயிரினையுடைய சிங்கமுதலாயிருக்கும் மிகுந்த பலமுள்ள கொடிய மிருகங்களை யெல்லாம் பினாகம் என்கிற வில்லானது கொல்லக்கடவது, என்றிவ்வாறு எல்லாவற்றையும் இருதயத்தில் உறுதிகொள்ள தியானித்துப் பாவங்களைவெல்லும் சிவகவசத்தைத் தரித்துக் கொள்வையானால், எ-று. சிவகவசத்தைத் தரித்தலென்பது விபூதியைத்தரித்தல். (௨௦)

பஞ்சபாதங்கள்போம்பகைகண்மாய்ந்திடு
மஞ்சலின்மறலியுமஞ்சியாட்செயும்
வஞ்சனோயொழிந்திடும்வறுமைதீர்ந்திடுந்
தஞ்சமென்றிதனைநீதரித்தல்வேண்டுமால்.

(இ - பொ.) பஞ்சமாபாதகங்கள் நீங்கும், பகைகள் கெட்டுப்போம், ஒருவருக்கும் அஞ்சாதயமனும் உனக்குப்பயந்து பணிவிடை செய்குவான், கொடியவியாதிகளுந்தீர்ந்து விடும், தரித்திரந்தொலையும், ஆதலால் இதுவே நமக்காதாரமென்று நீதரித்துக்கொள்ளவேண்டும். எ - று. (௨௧)

என்றிறைகவசத்தினியல்பியம்பினா
னன்றறிமாதவனயந்துபின்னரும்
வன்றிறல்புரிவடிவாளுந்தெவ்வரை
வென்றிகொள்சங்கமும்விருப்பினல்கியே.

(மு - புரை.) இவ்வாறு சிவகவசத்தின்றன்மையைச்சொல்லி, நன்மார்க்க மறிந்த அச்சிவயோகியானவர் பின்னும் ராசபுத்திரனிடத்தில் கிருபைவைத்து, யுத்தமுகத்தில் மிகுந்தபராக்கிரமஞ் செய்யத்தக்க வடிவாளும், பகைவரைச் செயங்கொள்ளுகின்ற சங்கமும், விருப்பத்துடன் கொடுத்து, எ - று. (உஉ)

கடவுணீறவனுடல்கவினச்சாத்தியே
யடுகரிபன்னிரண்டாயிரத்துடை
நெடுவலியளித்தூநீடுவாழ்கென
வடுவறவாழ்த்தியேவழிக்கொண்டானரோ.

(இ-புரை.) தெய்வத்தன்மையுள்ள விபூதியை அவன் சரீரத்தில் அழகுபெறத் தரித்து, போரில் பகைவரை வெல்லத்தக்க பன்னீராயிரம் யானைபலமுங் கொடுத்து, நீநெடுங்காலம் தீர்க்காயுசுள்ளவனாய் வாழக்கடவையென்று நன்றாக ஆசீர்வதித்துப் போய்விட்டார். எ - று. (உ௩)

பன்னிரண்டாவது-சிவகவசமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-எஉ௩.

---

உ

சிவமயம்.

## பதின்மூன்றாவது

# பத்திராயுவின்கதையுரைத்த அத்தியாயம்.

---

ஈதுவீறுயர்சிவகவசத்தியல்பென்ன
வேதவேள்விசெய்முனிவரர்யாவர்க்கும்விளம்பிக்
காதுவென்றிவேற்பத்திராயுவின்கதைதன்னிற்
சூதமாமுனிபின்னருமொருகதைசொன்னான்.

(இ-ரை.) சிவகவசத்தின்தன்மை யிப்படிக்கொத்ததென்று வேதங்களின் விதிப்படி யாகஞ்செய்கின்ற முனிவர்களுக்குச்சொல்லி, பின்னும் பகைவரை வெல்லத்தக்க வெற்றிவேலையுடைய பத்திராயுவின் சரித்திரங்களில் ஒரு சரித்திரஞ் சூதமுனிவர் சொல்லுவாராயினர். எ - று. (க)

வணிகமைந்தனுமன்னவன்சிறுவனும்வளர்நாட்
பிணியினண்பொரீஇமனையொடுமதலையைப்பிரித்த
வணிகொள்வச்சிரவாகுவின்குலப்பகையான
திணிதடம்புயனளப்பருஞ்செறிகடற்படையோன்.

(இ-புரை.) வணிகனுடைய புத்திரனும் ராசபுத்திரனும் வளருநாளில், தன்மனைவிக்கும் புத்திரனுக்குங்கண்டிருந்த வியாதியினால் அவர்களிடத்தில் விருப்பம்நீங்கிக் காட்டுக்கு அவர்களை யனுப்பிவிட்ட வச்சிரவாகுவென்னும் அரசனுக்குக் குலப்பகையாகிய மிகுந்த புசபலமுள்ளவனும் அளவிடுதற்கரியசேனா சமுத்திரத்தை யுடையவனும், எ - று. (உ)

ஏமத்தேரினனெனும்பெயர்மகதர்கோனெழுந்து
சேமத்தேர்பதினாயிரஞ்சூழ்வரச்சென்று
வாமத்திண்சிலைவச்சிரவாகுவென்றுரைக்குந்
தாமத்தோளினன்றசானனங்கொள்வதுசமைந்தான்.

(இ - ரை.) பதினாயிரம் சேமத்தேர்கள் சூழ்ந்துவரும்படிப் புறப்பட்டுப் போய் அழகும்பலமுமுள்ள வில்லேந்திய ஏமத்தேரினன் என்னும் பெயருள்ள மகததேசாதிபதியானவன் மாலையணிந்த தோளையுடைய வச்சிரவாகுவினது தசானனமென்னும் பதியை யபகரித்துக்கொள்ள எண்ணங்கொண்டான்.எ-று.

வதிகடோறுநின்றுறலைப்படுத்தியும்வாவிக்
குதிகொள்கன்றினந்துயருறவானிரைகொண்டும்
பதிகடோறும்வெங்கனலெரிபரப்பியும்பனிவான்
மதியுலாவருபுரிசையைவளைந்தனன்மறவோன்.

(இ - புரை.) அவ்வாறு எண்ணங்கொண்ட மகததேசாதிபதி மார்க்கங்கள்தோறுமிருந்து வழிநடக்கும் அத்தேசத்தாரை அடித்துப் பறித்தும், தாவிக் குதிக்குங் கன்றுகள் துன்பமுறும்படிப் பசுமந்தைகளை யபகரித்தும், ஊர்களையெல்லாந் தீயினால் கொளுத்தியும், குளிர்ச்சியும் வெண்மைநிறமுமுள்ள சந்திர மண்டலத்தைஅளாவுகின்றமதிலைவளைந்துகொண்டான். எ-று. வதி-வழி. (ச)

வேறு.

மாறுசெயமன்னனவந்துவளைந்தானமதுமெனனச்
சீறியமன்னன்வச்சிரவாகுசெருவேட்டு
வீறுடுமென்னுந்தோளிணையுண்டாம்விறலுண்டாம்
பாறுகடின்னுங்கூரயிலுண்டாம்பகையுண்டோ.

(இ - புரை.) பகைகொண்ட மகததேசத்தான்வந்து மதிலைவளைத்துக் கொண்டானென்று சொல்லக்கேட்ட வச்சிரவாகு வென்னும் அரசன், கோபத்துடன் யுத்தஞ்செய்ய விருப்பங்கொண்டு, வீறுப்புடன் பொருந்தும் நம்முடைய இரண்டுதோள்களும் துணையாயிருக்கின்றன; பராக்கிரமமுண்டாயிருக்கின்றது; பருந்துகள் மாம்சப்பற்றுக்காக மேலேசுழலத்தக்ககூர்மையுள்ளவேலாயுதமுண்டா யிருக்கின்றது; நமக்குப்பகைவருமுண்டோ? எ-று. பாறு-பருந்து.

என்னவுரைத்தாங்கேறினனற்றேரேறுமுன்
றுன்னினகொற்றஞ்சேர்படைவெற்றந்தொலையாத
மன்னரெதிர்த்தஞ்சாரணிமுற்றும்மடிவெய்த
வந்நிலைமைக்கண்டேவர்வியக்குமமர்செய்தான்.

(இ - புரை.) இவ்வாறுசொல்லி நல்லதேரிலேறினன், அப்படியேறுவ தற்குமுன்னே, வெற்றியுள்ளபடைகளும்வந்துசூழ்ந்தன; அழியாத வெற்றியை யுடைய அரசர்களாகிய எதிர்த்த பகைவருடைய சேனைவகுப்பெல்லாம் மடி யும்படித் தேவர்களுங்கண்டு ஆச்சரியப்படயுத்தஞ்செய்தான். எ - று.
வெற்றம் - வெற்றி. (சு)

திண்டிறல்வேலான்செய்தகொடும்போர்த்திறனெல்லாங்
கண்டுபொறுதேகின்றிருகண்ணுங்கனல்பொங்க
வண்டமர்தாரோனேமரதன்போர்வயவேந்தன்
புண்டருவேலான்செங்களமஞ்சப்போர்செய்தான்.

(இ - புரை.) மிகுந்தபலம்பொருந்திய வேலாயுதத்தையுடைய வச்சிரவா குசெய்த கொடிதான சண்டைத்திறத்தை யெல்லாங்கண்டு மனம்பொறாமல், தன்னிரு கண்களிலும் தீப்பொறிபொங்க, வண்டுகள்பொருந்திய மாலையணிந் திருக்கும் மெரதனென்னும் வெற்றியுள்ள அரசனவன் பகைவருடைய உட லில் எய்யத்தக்க வேலையுடைய வச்சிரவாகுவின்போர்க்களம் அஞ்சும்படி யுத் தஞ்செய்தான். எ - று. (எ)

மாறுறுமென்னரோரிருவோருமமொன்றிச்
சீறினர்தீயின்கண்கள்சிவந்தார்சிலைநாணமே
ஞாறுடுநூறுமம்புநொடுத்தார்நொடியிற்று
மேறியதிண்டேர்முட்டவிடுத்தாரிகல்செய்தார்.

(இ - புரை.) பெருமை பெற்ற அவ்விருமன்னவரும் பகையுடன்கோபங் கொண்டுசீறிக் கண்கள் தீப்போலச்சிவந்து, வில்லினுணில்வைத்து ஒவ்வொரு தரத்துக்கு நூறுநூறாகப் பாணங்களை அமோகமாகவிட்டு, நொடிப்பொழுதில் தாங்கள் ஏறிக்கொண்டிருக்கிற தேர்கள் ஒன்றுடனொன்று முட்டவிட்டுப் போர் செய்தார்கள். எ - று. (அ)

ஆயிரமம்போரொருவன்விடுக்கவலைவையெல்லா
மாயிரமம்பாலோரொருமன்னனறவெய்யு
மாயிருஞாலத்திருவருமெய்யும்வலிகண்டே
சேயிருவானத்தேவருநன்றேசெருவென்றார்.

(இ - புரை.) ஒருவன் ஆயிரம்பாணங்கள் விடுக்க அவைகளையெல்லாம் ஆயிரம் அம்புகளால் மற்றொரு அரசன் அறுத்துத்தள்ளுவான், இவ்வாறுபெரிய

இவ்வுலகத்தில் இவ்விருவரும் அம்புகள் விடுக்குந்திறங்கண்டு அதிதூரத்திலிருக்கும் தேவர்கள் இவர்கள் செய்யும்போரானது அதிசயிக்கத்தக்கதென்றுகொண்டாடினார்கள். எ - று. (௯)

இத்திறம்வெம்போர்மன்னரியற்றிடுமேல்வைக்கண்
கொத்தலர்பைந்தாரேமரதன்றன்குலமைந்தர்
முத்தணிமார்பனவச்சிரவாகுபடைமுற்று
மத்திரமேவிக்கொன்றுகுவித்துமமையாராய்.

(இ - புரை.) இவ்வகையாக அவர்கள் கொடிய போர்செய்யும் சமயத்தில் கொத்தாகிய பூமாலையணிந்த ஏமரதனுடைய புத்திரர்கள் முத்துமாலையணிந்த மார்பையுடைய வச்சிரவாகுவின் சேனைகளை யெல்லாம் அம்புகளைவிக்கொன்று, பிணமலையாகக் குவித்துங் கோபந்தணியாதவர்களாய், எ - று.

ஏல்வை-சமயம். (௧௦)

வேறு.

சேர்த்தார்கலினமான்றிண்டேர்த்தசானனனை
யார்த்தார்தந்தாதையதிர்மணித்தேர்க்கட்டிவிட்டார்
தீர்த்தாமொருநாளுந்தீராப்பகையென்றார்
பார்த்தார்திண்டோளைப்பணைமுரசஞ்சாற்றுகென்றார்.

(இ - புரை.) சேணமபூட்டிய குதிரைகட்டியபலமுள்ள தேரையுடைய தசானன் என்னும் அரசனைக்கட்டித் தந்தகப்பன் தேர்த்தட்டிலிவிட்டு, ஒருநாளுந் தீராதிருந்தபகையை இன்றேயொழித்தோமென்று தங்கள் புசபலத்தை வியந்து செயபேரி அடிக்கச்சொன்னார்கள். எ - று. கலினம்-குதிரைச்சேணம்.

மாதங்கந்திண்டேர்வயமாத்தொகைகவர்ந்தார்
காதம்பலதோன்றுங்கன்னிமெயின்மடித்தார்
சீதஞ்செய்சோலைநகர்செந்தீக்குணவளித்தார்
கோதம்புரிமனத்தார்கோயில்வளங்கூட்டுண்டார்.

(இ - புரை.) யானைகள் தேர்கள் குதிரைகள் என்னுஞ் சேனைத்தொகையைத் தங்கள்வசப்படுத்திக்கொண்டு, பலகாதவழியில் தோன்றுகின்ற உயரமுள்ள அழியாதமதிலை இடித்தார்கள்; குளிர்ச்சிதருகிற சோலையையும் நகரத்தையும் அக்கினிக்கு ஆகாரமாகக் கொடுத்துப் பின்னுங் குரோதங்கொண்ட மனத்தர்களாய் ராசன் அரண்மனையிலுள்ள பொருள்களையெல்லா கொள்ளைகொண்டார்கள். எ-று.மாதங்கம்-யானை.குரோதம் என்னும் வடமொழித்திரிபுகோதம்.

காடுகரந்தார்கடற்படைகைவிட்டாரென்
றோடுநெடுந்தேர்மகதற்கோகையெல்லாங்கூறியே

வீடுபெறநண்ணும்விழைவினர்போற்றங்கடிரு
நாடணையுங்காவலர்க்குநண்ணியதுகூறுவாம்.

(இ - புரை.) எதிர்த்தசேனையிலுள்ளார் கையிலிருந்த ஆயுதங்களையெல்லாம் போட்டுவிட்டுக் காட்டிலோடிப்போயொளித்துக்கொண்டார்களென்று, செல்லுகின்ற பெரிய சேனையுடைய மகததேசத்தரசனுக்குச் சந்தோஷ சமாசாரமெல்லாஞ்சொல்லி, மோக்ஷவீட்டினை அடைவதற்கு விருப்பமுள்ள ஞானவான்களைப்போல அதிக சந்தோஷத்தை யுடையவர்களாய்த் தங்கள்சிறப்புள்ள தேசத்துக்குச் செல்லும் அந்த அரசர்களுக்குச் சம்பவித்ததைச் சொல்லுகிறோம். எ - று. (௧௩)

தாமமணித்தோள்விடபன்றந்தசுடர்வாளு
மேமமுறுவெண்சங்குமேந்திநெடுவீதியின்வாய்
காமனுருவாய்ந்தனையகாளையிளந்தோழனொடுங்
கோமகனுநின்றான்பதிகரிதுகூறுவார்.

(இ - புரை.) விடபன் என்னும் சிவயோகிகொடுத்த ஒளியுள்ள வாளாயுதத்தையும் இன்பந்தரத்தக்க ஐயசங்கத்தையும் பூமாலையணிகின்ற தோளில் தாங்கிகொண்டு மன்மதன் உருவம்பெற்றதுபோலஅழகுள்ள காளையாகிய இளமைப்பருவமுள்ள தன் தோழனுடன் ராசகுமாரன் நெடிய வீதியினிடத்து நின்றான். அப்போது வழிநடப்பவர்கள் இந்தவார்த்தை சொல்லுகிறார்கள். எ-று.

மாவியலுந்திண்டேர்மகதர்கோன்வாளமரிற்
கோவியலுமாற்றிக்கொடிநகருந்தீக்கொளுவி
யேவியலுந்திண்சிலையான்வச்சிரவாகென்னுமொரு
சேவகனைச்சேர்த்துக்கொடுபதியிற்செல்கின்றான்.

(இ - புரை.) குதிரைகட்டிய திண்ணியதேரையுடைய மகததேசத்தரசன் கொலைசெய்யும்போரினால் அரசாட்சியைமாற்றிக் கொடிகட்டியபட்டணத்தைக்கொளுத்திவிட்டுப் பாணங்கள் தொடுக்கும்படியான வில்லையுடைய வச்சிரவாகு என்னும் ஒருராசனைக் கட்டிக்கொண்டு தன்னகரத்துக்குப் போகின்றான். எ - று. (௧௫)

மன்னனழுதரற்றல்கேட்டுமதிமயங்கி
யின்னலொடும்போகின்றோமென்றாரெனுங்கடுஞ்சொற்
கன்னமுறநாராசங்காய்ச்சிச்செருகியபோற்
பொன்னமருந்தோள்விடலைகேட்டுப்புகைந்துசொன்னான்.

(இ - புரை.) அந்த வரசன் அழுகிறதைக்கேட்டு மதிமயங்கித் துன்பத்துடன் போகின்றோமென்றுசொன்னார்கள்; அவ்வாறு அவர்கள்சொல்லிய கொ

ஞ்சொல் நாராசத்தைக்காய்ச்சிக் காதில் சொருகினதுபோலக் கேட்டு வீர லக்ஷ்மி குடிகொண்ட தோளையுடைய பத்திராயுகோபங்கொண்டு சொல்லுகிறான். எ - று. (கசு)

எங்கள்குலவேந்துக்கிந்திறையிட்டேவல்செய்த
மங்குல்பொதியிஞ்சிமகதனுமவலிபெற்றனனுமை
சிங்கவடலோயச்சிறுமுயலுமவெல்லுமினிப்
பொங்கொளியோன்மங்கப்புதைஇருளுங்காயுமே.

(இ-புரை.) எங்கள்குலத்து அரசனுக்குத் திறைகொண்டுவந்துகொடுத்து ஏவற்பணிசெய்கின்ற மேகமண்டலத்தையளாவிய மதில்சூழ்ந்தமகததேசத்தான் இப்போது பலம்பெற்றான். இனிமேல் சிங்கத்தின்வலிகெடச் சிறியமுயலும் வெல்லும்; சூரியன் மழுங்கத்தக்கதாக உலகத்தைமூடும் இருளுங்காயும். எ-று.

ஆறுதசெங்கோலடன்மகதன் சேனையெல்லாம்
வாறுடுகொள்ளவின்றுவாளாற்றுணித்திலனேற்
பாலுறுதேன்மொழியாளேத்தப்பதஞ்சலிக்காத்
தாணுடுவானடியார்தம்படியானல்லேனே.

(இ-ரை.) நீங்காத செங்கோல்நடத்தும் வலியுள்ள மகதனுடைய சேனைகளையெல்லாம் வீரசுவர்க்கத்திற் சேரும்படி இப்போது என்வாளால் துண்டஞ்செய்யாவிட்டால், பால்போல்மதுரிக்குந் திருமொழியினையுடைய பார்வதிதேவியார் ஏத்தும்படிப் பதஞ்சலிக்காக நடனஞ்செய்யும் பரமசிவனுடைய அடியார்க்கடிய னல்லனாகக்கடவேன்.என்று சபதங்கூறி, எ - று. (கஅ)

என்றான்கடிதினெழுந்தான்றுணைவனொடுஞ்
சென்றான்வெகுண்டான்றிறல்வாளுறைகழித்தான்
குன்றாதகுலத்தின்கொற்றம்பழிபடுத்த
தன்றாதையின்னறவிர்க்குந்தகவோனே.

(இ - புரை.) குன்றாத தங்கள் குலத்தின் வெற்றிக்குப் பழியுண்டாக்கிய தன்பிதாவின் துன்பத்தை நீக்குந் தகுதியுள்ள பத்திராயு இவ்வாறு சொல்லி, விரைவாக எழுந்து தன்தோழனோடு சென்று, சேனையைப்பார்த்துக் கோபங்கொண்டு வாளை உறையினின்றும் நீக்கினான். எ - று. (கக)

இந்தனஞ்சேர்கானகத்தைநுங்குமெரிபோலச்
சந்தமுடைமார்பன்றடக்கையுடைவாளினன்
மந்தரம்போனீடுகலிமான்றேர்மதவேழம்
பந்தியணிவரம்புரவிபாரின்விழநூறினான்.

(இ - புரை.) விறகுகள் சேர்ந்திருக்கும் காட்டினை அக்கினிபற்றி யெரிப்பதுபோல, அழகுள்ளமார்பனுகிய பத்திராயு உறையினின்றும் நீக்கிய தன்பெரியவாளினால், ஒலிக்குங் குதிரைகட்டியதாய்மந்தரகிரிபோல் உயர்ந்ததேர்களும் மதயானைகளும் பந்திபந்தியாகிய குதிரைகளும் பூமியில் விழும்படி வெட்டியெறிந்தான். எ - று. இந்தனம்-விறகு. (உ0)

வந்தவந்தவீரர்மணித்தோள்படையோடுஞ்
சிந்திவிழக்கொய் துஞ்சினம்பெருகத்தீராதா
னுந்துதடந்தேரோனொருவன்றனைமுருக்கி
யந்தநெடுந்தேரேறியண்டமுறநின்றுருத்தான்.

(இ - ரை.) எதிரிட்டுவந்த வீரர்களுடைய அழகியதோள்களைப் பிடித்த ஆயுதங்களுடன் துண்டித்துவிழும்படிஅறுத்தும், கோபம் அடங்காமல் மேலுமேலுமுளப்பெரியதேரிலேறிக்கொண்டுபோர்செய்யும் ஒருவீரனைக்கொன்றும், அந்தத்தேரில்தானேறிக்கொண்டு ஆகாயத்தில்பொருந்த ஆரவாரித்தான். எ-று.

காகம்பொருந்துங்களப்போர்கடந்துதந்தை
சோகந்தவிர்க்குஞ்சுடர்மணித்தேர்வாள்வேந்த
னுகங்குருதியணிதோழன்சூதனு
மாகந்துறந்தமழகதிர்போற்றோன்றினான்-

(இ - புரை.) காக்கைக்கூட்டங்கள் பொருந்திய போர்க்களத்தைக் கடந்து, பிதாவின் சோகத்தைநீக்கும் பத்திராயுவானவன், தன்சரீரத்தில் உதிரம் பொருந்தநிற்கும் தோழனே தேர்ப்பாகனுக அமைத்துக்கொண்டு, ஒளிதங்கிய தேரிலேறி ஆகாயத்தை விட்டுவந்த இளஞ் சூரியனைப்போலத் தோன்றினான். எ - று. சூதனுக என்பது சூதனு எனநின்றது. (உஉ)

பாறுதாழ்செவ்வேற்படைப்பத்திராயுவினான்
மாறிலாவெம்போர்மகதர்கோன்வாட்டானை
சீறியோர்கானிலடுஞ்சிங்கந்தெறவெருவி
யாறலாவாறுபடரான்குலம்போலாயினவே.

(இ-புரை.) பருந்துகள் வட்டமிட்டுத்தவழும் வேலையேந்தித் (தேரேறிய) பத்திராயுவினால், மாறுபடாதவெவ்வியபோர்செய்யும் வாளேந்தியமகதர்கோன் சேனையெல்லாம், மிருகங்களைக்கொன்று காட்டில் சஞ்சரிக்கும் ஒரு சிங்கம் வந்து கொல்லப்பயந்து, மார்க்கமல்லாத மார்க்கத்தில் ஓடிப்போகிற பசுக்கூட்டம்போல ஓடின. எ - று. (உங)

கண்டான்படையுடைதலேமரதன்கண்டுபெயங்
கொண்டானிவனுமொருகூற்றமோவென்றுளையாத்

திண்டேர்திரித்துப்புறங்கொடுப்பத்தேர்ந்திடலும்
வண்டாமரைமுகத்தான்வண்சங்கம்வாய்வைத்தான்.

(இ - புரை.) தன்சேனைகள் தோற்று ஓடிப்போவதை ஏமரதனென்னு மரசன் பார்த்தான், அப்படிப்பார்த்தவன் பயங்கொண்டு இவனுமொரு யமனேயென்றுசொல்லி, தன்னுடைய தேரைத்திருப்பிமுதுகுகாட்டியோட எத்தனித்தவளவில், அதையறிந்த நல்ல செந்தாமரைபோன்ற முகத்தையுடைய பத்திராயுவானவன் தனது வெற்றிச்சங்கத்தை முழக்கினான். எ - று. (உச)

முற்றுமிடிமுழக்கங்கேட்டுமுழையொடுங்கிப்
புற்றரவமஞ்சிப்புரளுந்தகைமைபோல்
வெற்றியுறுவேல்வேந்தன்வெண்சங்கவோசையினாற்
கொற்றமுறுஞ்சேனையொடுகோவேந்தனவீழ்ந்தயர்ந்தான்.

(இ - புரை.) மிகுந்த இடியின் முழக்கத்தைக்கேட்டுச் சர்ப்பங்கள்பயந்து புற்றுகளில் ஒடுங்கிப் புரளுந்தன்மைபோல, ஜயந்தங்கிய வேல்வேந்தனாகிய பத்திராயு தொனிசெய்த ஜயசங்கநாதத்தினால், மகததேசத்தான் தனது சைந்நியங்களோடுதானும் கீழேவிழுந்து மூர்ச்சையடைந்தான். எ - று. (உரு)

கோதைபுனைவேன்மகதர்கோமானையுமவன்றன்
காதலுறுமைந்தரையுங்காவற்றளைப்படுத்தித்
தாதைசிறைநீக்கியவன்றாடொழுதுதங்குலத்துக்
கோதுபழிதீர்த்தானுயர்வெண்குடையோனே.

(இ - புரை.) உயர்ந்த வெண்குடையோனாகிய பத்திராயு வெற்றிமாலையணிந்த வேலையுடைய மகததேசத்தானையும் அவனுடைய ஆசைபொருந்திய புத்திரர்களையும் காவலிலே விலங்கினையிட்டு, பிதாவின்சிறையைநீக்கி, அவன் பாதத்தில் வணங்கித் தங்கள்குலத்துக்கு நேரிட்ட பழியைத்தீர்த்தான். எ-று.

தந்நிகரில்சேனாபதிகடமைவிடுத்து
மன்னுடனேநீவிர்வளநகரத்தெய்துகெனச்
சொன்னமொழிகேட்டுத்துயர்தீர்தசானனர்கோ
னந்நிலையேயார்வநிறைந்தாங்கவனைப்பார்த்துரைத்தான்.

(இ - புரை.) தங்களுக்கு ஒப்பில்லாத சேனாதிபதிகளையும் விடுவித்து நம்முடைய அரசனுடன் வளப்பம்பொருந்திய நகரத்துக்குச் செல்லுங்களென்று பத்திராயு சொன்ன வார்த்தையைக்கேட்டு, துயரநீங்கிய தசாணதேசத்தரசன் மிகுந்த அன்புள்ளவனாய் அப்பொழுதே பத்திராயுவைப் பார்த்துச்சொல்லுகிறான். எ - று. (உ௭)

எங்கள்குலவேந்தர்தவப்பயன்போலிங்கெதிர்ந்து
பங்கமுமென்னேயும்பழியுந்தவிர்த்தோனே
சிங்கமனையாய்நினக்குச்செய்யுங்கைமாறுண்டேன்
மங்குலுக்குக்கைமாறுமன்னுயிருஞ்செய்திடுமே.

(இ - புரை.) எங்கள்குலத்தரசர்செய்த தவப்பயன்வந்துஉதவியதுபோல வந்து, எனக்குநேரிட்ட பங்கத்தையுந் துயரத்தையும் இழிவையும் நீக்கிய புண்ணியகீர்த்தியே சிங்கத்தையொத்தவனே! நான் உனக்குச்செய்யத்தக்க பிரதியுபகார முண்டாயிருக்குமானல், மழைபொழிந்துகாக்கும் மேகத்துக்கு இவ்வுலகத்தில் நிலைபெற்றிருக்கும் உயிர்களும் கைம்மாறுசெய்யும். எ-று. எனவே ஒப்பிலா உபகாரமென்பதாயிற்று. (உ௮)

நின்றமர்யார்நிற்பயந்தார்யாவர்நினதூரேது
வன்றிறலாய்நின்பெயரென்வந்தவரவேதுரையா
யொன்றொழிபத்தக்குரோணிசேனையொருங்கவிய
வென்றுருத்துவொள்வாள்விதிர்த்தவிறலோனே.

(இ - புரை.) மகதனுடைய ஒன்பது, அக்ரோணிசேனையையும் வென்று உருத்தும் ஒள்ளிய வாளினைவிதிர்க்கும் மிகுந்தபலமுள்ளவனே! உன்னுடைய சுற்றத்தார்யாவர்? உன்னைப்பெற்றவர்கள்யாவர்? உன்னுடைய ஊர் எது? உன்பெயரென்ன? நீ யிங்குவந்ததற்குக் காரணமென்னை? வீரனே கூறுவாயாக. எ - று. (உ௯)

வில்லாயெனதுபெயர்வீறுபத்திராயுமற்ற
வெல்லாமுணரவியம்புகேன்மேலென்று
சொல்லாவென்றேழன்சுனதனிவன்றாதை
நல்லாதரவணிகனன்கியற்றவாழ்கின்றோம்.

(இ - புரை.) வில்லையுடைய மகாராசனே! என்பெயர் பத்திராயு, மற்றவையெல்லாம் உனக்குத்தெரியும்படிப் பின்னர்ச் சொல்லுகிறேனென்று சொல்லி, இந்தச்சுனதனென்பவன் என் துணைவன், இவன்பிதாவாகிய மிகுந்த அன்புள்ள வணிகேசனென்பவன் எங்களை ஆதரிக்க யாங்கள் வாழ்ந்துகொண்டிருக்கிறோம்." எ - று. (௩0)

என்றுவிறைஞ்சியிகல்வேந்தன்வெஞ்சிறையை
மன்றுவிடேல்யான்வருந்துணையுமென்றுரைத்துத்
தன்னேடுதோழனெடுஞ்சார்ந்தானற்றயடைந்து
பொன்னூரமார்பிர்புகுந்ததுரையீரென்றாள்.

(இ - புரை.) என்றிவ்வாறு சொல்லிப்பணிந்து, மகாராசாவே! இந்தப் பகைமன்னவன் சிறையை மறுபடியும் நான்வருகிறவளாயில் விடாதேயெ

ன்றுசொல்லித் தோழனைக்கூட்டிக்கொண்டு தன்னூட்டிற்போய்ச் சேர்ந்தான். தாயானவள் அவர்கள் யுத்தகோலங்களைக்கண்டு பொன்னூரமணிந்த மார்பையுடையவர்களே! நடந்தசேதியென்ன சொல்லுங்களென்று கேட்டனள். எ-று.

மாறுபடும்போரின்மகதர்கோன்வாகைகொண்டு
சாறயருமூதூர்த்தசானனமுந்தீமடுத்து
நீறுசெய்துமெந்தைநெடுஞ்சிறையிற்கொண்டேகச்
சீறியமர்வென்றுசிறைவிடுத்தோமென்றுரைத்தான்.

(இ - புரை.) பகைகொண்ட யுத்தமுகத்தில் மகததேசத்தன் வெற்றியடைந்து, விழாக்கள்நடந்து கொண்டிருக்கும் பழமையான தசானனமென்னும் ஊரைக்கொளுத்தி நீறுக்கி, என்பிதாவை விடாத காவற்படுத்திக்கொண்டுபோக; அதையறிந்து நாங்கள் அம்மகத்தனோடு போர்செய்துவென்றுதந்தையின் சிறையினையும்மீட்டோம் என்று சொன்னான். எ - று. சாறு-திருவிழா.

(வேறு.)

கேட்டாளரசன்பெருந்தேவிதன்கேள்வனின்னல்
வாட்டாரைகண்ணீர்முலைமுன்றில்வரக்கலுழ்ந்தாள்
கோட்டானைவீரர்குலையச்செருச்செய்துமைந்தன்
மீட்டானெனலுங்குளிர்ந்தாளறன்வேண்டநின்றாள்.

(இ - புரை.) தருமதேவதை வேண்டும்படிக்கு நிற்பவளான அவ்வரசன் மனைவி அவர்கள் தன்கணவனுக்கு நேரிட்ட துன்பத்தைச் சொல்லக்கேட்டு, வாளையொத்த கண்ணீர் தனங்களின்மேல் விழும்படி அழுதாள்; வலிதங்கிய பகைவராகிய சேனைவீரர் அணிகுலைந்து ஓடும்படி உன்மகன் போர்செய்து உன்கணவனைமீட்டானென்று சொன்னவளவில் சந்தோஷமுடையவளானாள் எ - று. தருமம் அவளிடத்திலிருக்க விரும்பும் என்றமையால், அப்பெண்ணின் கற்புவிசேடம் கூறியபடியாயிற்று. (நடங)

துணிவுற்றவேந்தின்சிறைதீர்த்தனன்றோன்றலென்னத்
தணிவுற்றதொல்சீர்வணிகேசரந்தக்கதென்றான்
மணிமொய்த்தமாலைப்புயன்வச்சிரவாகுவொன்னார்
பணியத்திருநாடடைந்தேபகையின்றிவாழ்ந்தான்.

(இ - புரை.) துணிவுபொருந்திய வச்சிரவாகுவென்னும் அரசனைப் பத்திராயு சிறைமீட்டானென்று பழமையாக மிகுந்தசெல்வமுள்ள வணிகன்கேள்விப்பட்டு, இது புத்திரன் செய்யத்தக்க நன்மையான காரியந்தானென்றான். இரத்தினமாலையணிந்த புயங்களையுடைய வச்சிரவாகுவானவன் பகைவர்வந்து தன்னைவணங்கும்படித் தன்னூட்டிற்சேர்ந்து பகையில்லாமல் வாழ்ந்துகொண்டிருந்தான். எ - று. (நடச)

வேதப்பொருளினடிபேணும்விடபனென்னுஞ்
சீதபயலறறைமயிராவனாறசஙகைதமயணணா
நீதிப்பயிருக்கறநீர்பெய்கிடதாசன்
கோதற்றகேள்விக்குலபூபதிகோயில்சார்ந்தான்.

(இ-புரை.) வேதப்பொருளாகிய பரமசிவனுடைய திருவடியையே விரும்பிக்கொண்டிருக்கும் குளிர்ச்சியுள்ள மேகம்போன்ற விடபனென்னுஞ் சிவயோகியானவர் அன்றிராத்திரி தமதுமனதில் ஆலோசித்து, தருமமாகிய பயிருக்கு நீதியாகிய நீர்ப்பாய்ச்சும் குற்றமற்ற கேள்விகளையுடைய நிடததேசத்தரசன் அரண்மனைக்குப்போனார். எ - று. (௩௫)

வந்தமுனிக்குமகிழ்சீமந்தனியும்வேந்துஞ்
சிந்தைகுளிர்ந்துவழிபாடுகள்செய்துபோற்றி
யந்தந்தருமாரணந்தேறுமடிகள்பாத
நொந்துசிவப்பவருமாறுநுவறியென்றான்.

(இ - புரை.) அவ்வாறுவந்த விடபன் என்னுஞ் சிவயோகிக்கு சீமந்தனியும் அவள் கணவனும் மனமகிழ்ந்து ஆராதனைசெய்து துதித்து,முக்தியென்னும் அழகினைத்தரும் வேதங்களை யுணர்ந்த சுவாமிகளுடைய திருவடிகள் வருந்திச் சிவக்கும்படி நடந்துவந்தருளியதற்குக் காரணம் என்னையோ? அதனைக் கட்டளையிடவேண்டுமென்றான். எ - று. (௩௬)

வந்தாமிறைவமகட்பேசவயற்கண்வாளை
நந்தோலிடப்பாயுந்தசான்னநாட்டின்மன்னன்
கந்தார்களிற்றானவன்காதலிமைந்தனோடுஞ்
சிந்தாகுலத்தாற்கடுங்கானகஞ்செல்லநீத்தான்.

(இ - புரை.) அரசனே! நாம் பெண்பேச வந்திருக்கின்றோம், சங்குகள் ஒலிக்க வயல்களில் வாளைமீன்கள் பாயும்படியான நீர்வளப்பத்தையுடைய தசான்னன நாட்டிற்கு அரசனாகிய கம்பத்திற் கட்டற்குரிய யானைப்படைகளுடைய வச்சிரவாகு என்னும் மன்னன், ஏதோ வியாகுலத்தால் தன் மனைவியைப் புத்திரனுடன் காட்டிற்குப்போகும்படி நீக்கிவிட்டான். எ-று. (௩௭)

பொம்மன்முலையாள்கடுங்கானிற்புகுந்துவேறோர்
மைம்மன்னுசோலைநகர்வைகிடமாதுகாத
லம்மைந்தனையாமளித்தோமவனன்புபூண்டு
தெம்மன்னர்தாதைக்கிடர்செய்யச்செருத்துமீட்டான்.

(இ - புரை.) பொலிவுள்ள தனத்தையுடைய அந்தராசஸ்திரியானவள் கொடியகாட்டிற்போய் மேகங்கள்வந்து தவழ்கின்ற சோலைசூழ்ந்த ஒருநகரத்

திற்சேர்ந்திருக்க;(அவ்விடத்தில்அவள்புத்திரன் இறந்துபோனான்.) அவனைநாம் பிழைப்பித்து வாட்படை முதலியவைகளைக் கொடுத்து ரக்ஷித்தோம்; அங்ஙன மிருக்க அவன் பிதாவை மறுதேசத்தரசன் யுத்தஞ்செய்துவென்று தேரிற் கட்டிக்கொண்டுபோவதை அந்தப்புத்திர னறிந்து பிதாவென்கிற அன்புகொண்டு போய்ப் போர்செய்து பகைவனைவென்று தந்தையை மீட்டுவிட்டான். எ - று.

வேறு.

அன்னவன்றனக்கருளவேண்டுநின்
கன்னிகீர்த்திமாலினியைக்கற்புடைப்
பொன்னையென்றவன்புகழ்ந்துகூறலு
மன்னன்சந்திராங்கதன்வழங்குவான்.

(இ - புரை.) அந்தப்புத்திரனுக்கு உன்குமாரத்தியாகிய கற்புள்ள கீர்த்திமாலினியைக் கொடுக்கவேண்டுமென்று சிவயோகி புகழ்ந்துசொன்னார், அதற்குச் சந்திராங்கதன் என்னும் அரசன் மகிழ்ந்துசொல்லுகிறான். எ - று.

கோசிகன்னெனவுலகங்கூறிடுந்
தேசிகாவினிச்செப்பவேண்டுமோ
காசுலாமுலைக்காமர்கன்னியை
மாசிலானுக்கேவழங்குகேனெனா.

(இ - புரை.) கோசிகனே யென்று பெரியோர்கள் சொல்லத்தக்க தேசிகனே! நான்வேறே சொல்லவேண்டுமோ? அரதனவடம் பொருந்திய தனங்களையுடைய என்மகளைக் குற்றமில்லாத அந்த ராசகுமாரனுக்கே கொடுக்கிறேனென்று கூறி, எ - று. காசு-மணி. காமர்-அழகு. (௪0)

முனிவனன்புறமுகமன்கூறியே
புனிதவேகெனவிடுத்துப்பூபதி
யனிகவீரர்போயரசன்மைந்தனை
யினிதுகொண்டிவண்வருதிரென்றனன்.

(இ - புரை.) சிவயோகியானவர் அன்புறும்படி வார்த்தைகளைச் சொல்விச் சுவாமிகளே! ஆசிரமத்துக்கு எழுந்தருளலாமென்று அனுப்பிவிட்டுச் சந்திராங்கதனென்னும் மன்னவன் தன்தளகர்த்தனை யனுப்பி, அந்தராசகுமாரனை இவ்விடத்துக்கு அழைத்துக்கொண்டுவாருங்களென்றேவினான். எ - று.

தத்துவாம்பரித்தானைகாவலர்
பத்திராயுவைப்பணிந்துகாளைநீ
யுய்த்துணர்கெனவெவையுமோதினார்
மத்தயானையான்மகிழ்ச்சிமேயினான்.

(இ - புரை.) தாவிச்செல்லுங் குதிரைகளையுடைய சேனாதிபதிகள்போய்ப் பத்திராயுவைக்கண்டுபணிந்து, அரசனே! நீயிதனைக்கேளென்று நடந்தசேதிக ளெல்லாம் சொன்னார்கள். அதைக்கேட்டு மதயானைகளையுடைய அந்தப்புத்தி ரன் மகிழ்ச்சியடைந்தான். எ - று. (சஉ)

தாயுமின்னரோய்தவிர்த்தநாய்கனுஞ் றுட ந
சேயுமுன்செலச்சேனைசூழ்வரப்
போய்மணம்புணர்பதிபுகுந்தனன்
பாயும்வாம்பரிப்பத்திராயுவே.

(இ - புரை.) பாய்ந்துசெல்லுங் குதிரைகளையுடைய பத்திராயுவானவன் தன்தாயும் தங்கள் துன்பத்தைநீக்கி ஆதரித்தவணிகேசனும் அவன் புத்திரனு முன்னேபோகும்படித் தான் அவர்கள் பின்னே சேனைசூழ்ந்துவரப் புறப்பட் டுப்போய் விவாகஞ் செய்துகொள்ளும் பட்டணஞ்சேர்ந்தான். எ - று. (சங)

சார்ந்தபோழ்தினேசந்திராங்கத
னார்ந்தநண்புகூர்ந்தளவளாவியே
பூந்தண்வார்குழற்பொருவில்கன்னியை
யீந்தனன்மகிழ்ந்திளவற்கென்பவே.

(இ - புரை.) இவ்வாறு பத்திராயுவந்தபோது சந்திராங்கதன் மிகுந்த அன்புகொண்டு அளவளாவி, பூமாலையணிந்து குளிர்ச்சிதங்கிய நீண்ட அளகத் தையுடைய ஒப்பற்ற தன்கன்னிகையை விவாகஞ்செய்துகொடுத்தான். எ - று.

பையராவணைப்பச்சைமேகமுஞ்
செய்யதாமரைத்திருவும்போலவே
யையநுண்ணிடையணங்குமண்ணலுந்
துய்யபூவணைத்துறக்கமேவினார்.

(இ - புரை.) படமுள்ள சர்ப்பசயனத்தில் பள்ளிகொண்டிருக்கும் திரு மாலும் செந்தாமரைப்பூவில் வீற்றிருக்கும் திருமகளும்போல், உண்டோ இல் லையோவென்று சந்தேகிக்கும் இடையினையுடைய கீர்த்திமாலினியும் பத்திரா யுவும் சுவர்க்கலோகம்போன்ற பரிசுத்தமுள்ள புட்பசயனத்திற்பொருந்தினார் கள். எ - று. துறக்கம்-தேவலோகம். (சரு)

குங்குமஞ்செறிகுவவுக்கொங்கைமேற்
றங்கியின்பமார்சலதிமூழ்கினா
னங்கவன்புயத்தடங்கிமாதரும்
பொங்குகாதலம்புணரிமூழ்கினாள்.

(இ - புரை.) பத்திராயு குங்குமப்பூசேர்த்த சந்தனக்குழம்பணிந்தநாய்க் குவிவாயிருக்கும் தன்மனைவிதனத்திலிடத்தில் பொருந்தி, இன்பசமுத்திரத்தி லாழ்ந்தான். கீர்த்திமாலினியும் அவன் புயத்திலடங்கி ஆசைவெள்ளத்தி லாழ்ந்தாள். எ- று. (சுகூ)

இடையறுமலேயெழில்கொண்மைந்தனு
மடைமமாதருமருவிவைகுநா
ளடையலாருயிருந்துங்காலவே
னிடதராசனுனிகழ்ந்தகூறுவாம்.

(இ - புரை.) அழகுபொருந்திய பத்திராயுவும்பேதமைத்தன்மையுடைய கீர்த்திமாலினியும் இவ்வாறு பிரியாமல் வாழுநாளில், சத்துருக்களுடைய உயிரைவாங்கத்தக்க வேலையுடைய நிடதராசனால் நடந்த சேதிகளைச் சொல்லுகிறோம். எ - று.

மன்னர்மன்னனுமவச்சிரப்புய
னென்னும்வேந்தனை யீண்டழைத்தவன்
பன்னிதன்னையும்பாலன்றன்னையுந்
துன்னுவிப்பதேசூழ்ச்சியாமென.

(இ - புரை) அரசர்க்கரசனாகிய வச்சிரவாகு என்னும் அரசனை இவ்விடத்துக்கு வரவழைத்து, அவன் மனைவியையும் புத்திரனையும் அவனுடன் கூட்டி அனுப்புவதே தக்க யோசனையென்று துணிந்து, எ - று. (ஙஅ)

மடங்கலன்னவோர்மன்னற்காணவே
யிடங்கொள்சிந்தைமீதெழுந்தவார்வத்தேன்
கடங்கணீங்கியேகாணவம்மென
முடங்கல்போக்கினுன்முழவுத்தோளினுன்.

(இ - புரை.) மத்தளம்போலத் திரண்டதோளையுடைய நிடதராசன் சிங்கம்போன்ற வச்சிரவாகு மகாராசாவே! உம்மைப்பார்க்க என்மனம் விரும்புகின்றமையால், நீர் உம்முடைய தேசம்விட்டுப்புறப்பட்டு வழிகளைக்கடந்து நான் பார்க்கும்படி வரவேண்டுமென்று திருமுகமனுப்பினுன். எ-று. முடங்கல்-திருமுகம். இது ஓலை. (ஙகூ)

வேறு.

தன்னிகரினிடதர்பிரான்றருந்தூதர்தசாணர்கோன்றன்மாட்டெய்திப், பொன்னியலுங்கனைகழலான்வரவிடுத்தவோலையெனப்புகன்றுகாட்ட, மின்னியலுங்கதிர்வேலான்குறிப்புணர்ந்துவேறொருவன்விரைந்துவாங்கிப், பன்னுவனேவெனக்கேட்டாங்கிறைபணிப்பப் பாசுரத்தைப்பகரலுற்றுன்.

(இ - புரை.) தனக்கொப்பில்லாதவனாகிய நிடததேசத்தரசனால் அனுப்பப்பட்ட தூதர்கள் தசான்னதேசத் தரசனிடத்திற்போய், பொன்னாற்செய்யப்பட்டு ஒலிக்காநின்ற வீரகண்டையணிந்த காலையுடைய நிடதமகாராசன் வரவிடுத்த திருமுகத்தைக்கொண்டுவந்தோமென்றுசொல்லி அதைக்காண்பித்தவளவில், அங்கிருந்த ஒருகருணீகன் அரசன் குறிப்பறிந்து விளைய அவ்வோலையை வாங்கிவாசிக்கும்படிக் கட்டளைவேண்டுமென்று கேட்டு, அரசன் உத்தரவு கொடுக்க அவ்வோலையை வாசிக்கின்றான். எ - று. (௫0)

போராண்மைநிலவேந்தர்முடியுழுதுசிவந்தபொற்றாட்புகழோய்காண்க
நீராருநிடதத்தோன்வரவிடுத்தவோலையொன் றுநின்னைக்காணும்
பேராசைமிகவுடையேனாதலினானின்னகரம்பெயர்ந்துவந்தென்
சீராருநகரடைந்துபின்னினதுதிருநகர்நீசேறல்வேண்டும்.

(இ - புரை.) மிகுந்த பராக்கிரமமுள்ள மறுதேசத்தரசர்கள் மகுடங்கள் பட்டுச் சிவந்த வீரகண்டையணிந்த காலையுடைய வச்சிரவாகு மகாராசாவே! நிடததேசத்தரசனாகிய நாம் உமக்கு எழுதியனுப்பிய ஓலையைவாசித்துக் காண்பீராக; என்னவெனில், உம்மைக்காணவேண்டுமென்று நாம் அதிக அபேக்ஷைகொண்டிருக்கிறோமாதலால், உம்முடைய நகரம்விட்டுப் புறப்பட்டு வந்து சிறப்புள்ள எமதுதேசத்திற் சேர்ந்திருந்து பின்பு உம்முடைய நகரத்திற்குப் போகவேண்டும். எ - று. (௫க)

என்றரசன்வரவிடுத்த வோலையிற்பாசுரமுழுது மியம்பக்கேட்டுக், குன்றெனவான்முகடணவுங் குடுமிநெடுங்குருமணித்தேர் கொணர்கென்றேறி, மின்றிகழும்படைவேந்தர்தற்சூழமுரசதிரவெண்சங்கார்ப்பத், தொன்றுவரும்படைநடுங்கவெழுந்தனன்மன்னவனோடுந்தொடர்புகொள்வான்.

(இ - புரை.) இவ்வண்ணம் எழுதி நிடதராசன் அனுப்பிய ஓலையிலிருந்தவாக்கியங்களைச் சொல்லக்கேட்டு, அவ்வரசனுடனட்புகொள்ள மேருமலைபோல் வான்முகட்டை யளாவுஞ் சிகரத்தையுடைய நிறமுள்ள ரத்தினங்கள் பதித்த தேரைக்கொண்டுவரச்சொல்லி அதிலேறிக்கொண்டு, ஒளிவிளங்கும் ஆயுதங்களையுடைய அரசர்கள் தன்னைச்சூழ்ந்துவரவும் பேரியொலிக்கவும் தவளச்சங்கம் ஆரவாரிக்கவும் பழமையாய்வருகின்ற எதிரிகள் படை நடுங்கவும் புறப்பட்டான். எ - று. (௫உ)

மாறிலாப்பெருங்குணத்தான் வருகின்றானெனக்கேட்டமன்னர்மன்னன்
றாறியோசனையளவாயணிபரப்பியெதிர்ந்தவனையன்பிற்புல்லி
வீறினாலுயர்ந்தபெருந்தன்பதியினமைவித்துவியட்பினோடுந்
தாறினானெடும்பூகந்தலைவணங்குந்தசான்னர்க்குத்தக்கசெய்தான்.

(இ - புரை.) எக்காலத்திலு மாறுபடாத பெருங்குணத்தையுடைய வச்சிரவாகுமகராசன் வருகின்றானெனக்கேள்விப்பட்ட நிடதராசன் ஆறுயோசனை தூரவளவில் தன்சேனைகள் பரந்திருக்கும்படி அனுப்பித் தானும் புறப்பட்டுப் போய் அந்தராசனைக்கண்டு, அன்புடன் அளவளாவி, எல்லாச்செல்வத்தினாலும் உயர்ந்ததான தன்னகரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்ச்சேர்த்துச் சந்தோஷத்துடன் குலைகளின் மிகுதியால் கமுகமரங்கள் தலைவளைந்திருக்கும்படியான தசான்னதேசத்தரசனுக்குத் தக்கபடி உபசாரஞ்செய்தான். எ-று. தாறு குலை.

காவலவன்றனைக்களித்தசிறப்பெவையுங்கண்டுநெடுங்கதிர்வேன் மன்னன், பூவலயந்தனினிவன்போனட்பினர்வேறிலரென்னப்புகழ்ந்தவேலை, மாவலவன்பலகலையும்பயிலபத்திராயுவெனுமைந்தனெய்தியாவலுடன்றிருத்தாளையடிபணிந்துவாய்புதைத்தங்கருகுநின்றான்.

(இ-புரை.) நிடததேசத்தரசன் தனக்குச்செய்த உபசாரங்களையெல்லாம் காந்தியுடைய வேற்படையைத் தாங்கிய வச்சிரவாகுவென்னுமரசன் பார்த்துச் சந்தோஷித்துப், பூலோகத்தி லிவனைப்போல நம்மிடத்தில் நட்புள்ளவர்கள் வேறொருவருமில்லையென்று புகழ்ச்சிசெய்தபோது, குதிரையேறிப்பொருதுவதில் வல்லவனும் பலசாஸ்திரங்களை யுணர்ந்தவனுமாகிய பத்திராயுவந்து அன்புடன் தன்தகப்பன்பாதத்திற்பணிந்து வாய்புதைத்து, அவனுக்குச் சமீபமாக நின்றான். எ - று. (௫௪)

கண்டவுடன்வச்சிரவாகென்னுமடல்வேந்தனகங் களித்துநோக்கித், திண்டிறலாய்வடிவாட்கைச்சேவகனேயிவண்வருகவருகவென்று, வண்டமர்தார்நிடதர்பிரான்றனைமுகம்பார்த்திவன்கொடியமகதன்றன்னை, பொண்டிறலும்படைச்செருக்குமழித்தெனைக்காத்துயிரளித்தவுரவோனென்றான்.

(இ - புரை.) அவனைப் பார்த்தவுடன் வச்சிரவாகு என்கிற பராக்கிரமமுள்ள அரசன் மனக்களிப்புடனே நோக்கி, மிகுந்த பலமுள்ளவனே! வடிவாளேந்திய கையையுடையவீரனே! என்சமீபத்தில் வருவாயென்று சொல்லி, வண்டுகள்பொருந்திய மாலையணிந்த நிடதராசன் முகத்தைப்பார்த்து, இந்தச் சிறுவன் கொடியவனாகிய மகததேசத்தன் பலத்தையும் அவன்சேனையின் இறுமாப்பையும் அழித்து என்னைக்காத்துஉயிர்கொடுத்தபுண்ணியவானென்று சொன்னான். எ - று. (௫௫)

பின்னுமிஃதுரைக்கின்றானிவனையருந்தவப்பயன்போற்பெற்றோன்யாவன், மன்னுமிவன் பதியேது மரபேதெற்குதவிசெயவந்ததேது, பொன்னமரும்புயத்தோய்நின்மருகனிலையெனக்கடைவே புகரியென்னப், பன்னினனங்கதுகேட்டநிடதர்பிரான் முறுவலித்துப் பகராநின்றான்.

(இ - புரை.) மேலுஞ்சொல்லுகிறான், இந்தப்பிள்ளையை அரிய தவப்பயன்போலப்பெற்றவன்யாவன், இவனிருக்கும்பதி எது, மரபென்ன, எனக்கு உதவிசெய்யும்படிவந்த காரணமென்ன, ஜயலக்ஷ்மி வாசமாயிருக்கும்புயத்தையுடைய அரசனே! உன்மருமகனுடையவரலாறெல்லாம் எனக்கு விவரமாகச் சொல்லவேண்டுமென்றான். அதைக்கேட்ட விடததேசத்து அரசன் நகைத்துச்சொல்லுகின்றான். எ - று. முறுவல்-புன்சிரிப்பு. (௫௬)

திங்களெனப்பொலிதாமவெண்குடையோயொருகதையான்செப்பக்கேட்டி, மங்குலைவளமுறுதொருதிருநாடுண்டதுபுரக்குமன்னர்மன்ன, னங்கவன்றன்மனைவியையும்பாலனையும்பழிகருதாதகற்றிவிட்டான், சங்கணிவார்குழைப்பரமனருளினொருவணிகனவர்தம்மைக்காத்தான்.

(இ - புரை.) சந்திரனைப்போல விளங்கும் முத்துமாலை அலங்கரித்த வெண்குடையையுடைய ராசனே! நான் ஒருகதை சொல்லுகிறேன், அதை நீ கேட்பாயாக, மேகங்கள் காலந்தப்பாமல் மழைபொழிகின்ற வளப்பந்தங்கிய ஒருநகரமுண்டு, அதை ஆளுகின்ற அரசன் ஒருவனுண்டு, அவன்பழியையெண்ணமல் தன்மனைவியையும் புத்திரனையும் நீக்கிவிட்டான், சங்கக்குழையணிந்த பரமசிவனுடைய கிருபையினால் ஒருவணிகன் அவர்களைக்காப்பாற்றினான். எ-று.

குலநாயகன்றன் மருநிப்புரந்தளிக்குநாளினந்தக்குமரன்மாய்ந்தான்
சிலைமானுந்திருப்புருவத்தேவியழக்கண்டெதிர்ந்ததெய்வயோகி
யலையாமலின்னுயிர்பெற்றெழுகவெனவெழுந்தவனுக்கறமுங்கூறித்
தொலையாதவலியுமொருசங்கமும்வாளுங்கொடுத்துத்துயரந்தீர்த்தான்

(இ - புரை.) உத்தமகுலத்தானாகிய அந்தவணிகன் ஆதரிக்கும்நாளில் அச்சிறுவனே உயிர்துறந்துவிட்டான், அந்தத்துயரத்தினால் வில்லையொத்த புருவத்தையுடைய ராசஸ்திரி அழுதுகொண்டிருக்க, அப்போது அவிடத்தில் வந்த ஒருசிவயோகியானவர் அவள் அழுவதைக்கண்டு (மனமிரங்கி)வருந்தாமலிருக்கும்படி இறந்தவனுக்கு உயிர்கொடுத்தெழுப்பி, அதன் பின்பு அந்தப்புத்திரனுக்கு ராசநீதிகளைப்போதித்து, மாறுதலிருந்தபலமும்வாளுஞ்சங்கமும் கொடுத்து அச்சிறுவனுடைய துயரத்தை நீக்கினான். எ - று. (௫௭)

கற்றவத்தோன்றிருவருளாலிறைமகனுமெறும்பெருகாளுநாளுங், கற்றிரளிற்பொலிதிணிதோட்காளையாயிளமையெழில் கனியுநாளிற், பற்றலர்தன்றந்தையைவென்றிருந்தனையிட் டென்கொடுபோம்படி கேட்டெய்திச், செற்றவரைத்தளைப்படுத்தித்தாதைசிறைமீட்டனன் போர்ச்சிங்கமன்னன்.

(இ - புரை) இவ்வாறு சிவயோகி அருளினல் ராசபுத்திரன் நாளுக்கு நாள் பலம் அதிகரிக்கத் திரண்டகல்லைப்போலப் பருத்ததோளையுடைய காளைப்பருவமாய் இளமையும் சௌந்தரியமும் மிகுதியாகுங்காலத்தில், தன் தகப்பனிடத்தில் பகைவர் போர்செய்து செயம்பெற்று அவனைச் சிறைப்படுத்திக் கொண்டுபோகக் கேள்விப்பட்டு, அழகிய சிங்கத்தையொத்த அந்தப்புத்திரன் அவ்விடத்திற்போய் அவர்களைவென்று சிறைப்படுத்தித் தன் தகப்பன் சிறையையும் நீக்கிவிட்டான். எ - று. எறுழ் - வலி. (௫௯)

இக்கதைபோலொருகதைமுன்கேட்டதுண்டே லியம்புகெனவியம்பிவீறு, தக்கபெரும்புகழாவோயுரைத்தகதைக்குரியரையுஞ்சாற்றக்கேட்டி, செக்கமலச்செங்கனிவாய்ச்சேயுமிவன்ருதையுநீ சிறந்த கற்பான், மிக்ககுலத்தேவியுநின் மனையென்ருன்மதிமயங்கிவேந்தன் வீழ்ந்தான்.

(இ - புரை.) இந்தக் கதைபோல ஒருகதை நீ கேள்விப்பட்டதுண்டாயிருந்தால் சொல்லென்று சொல்லி, விளங்குகின்ற தகுதியுள்ள பெரும்புகழ் பெற்ற மகாராசனே! இப்போது நான் சொல்லிய கதைக்கு உரியவர்களையுஞ் சொல்லக் கேட்பாயாக; செந்தாமரைமலர்போன்ற வாயையுடைய அந்தப்புத்திரனும் இந்தப் புத்திரன்ருன், தகப்பனும் நீதான், கற்பினுற்சிறந்த இவன் தாயானவள் உன்மனைவிதான், என்று சொன்னன். அதைக்கேட்ட அரசன் அறிவுமயங்கிக் கீழேவிழுந்துவிட்டான். எ - று. (௬0)

வீழ்ந்தமன்னன்தனையெடுத்துவெயர்புலரமுகம்விளக்கிவேந்தேயெம்மை, யாழ்ந்தவிதிசெய்ததுயர்பாமுழந்தோநீயதனலழுங்கவேண்டாந், தாழ்ந்தமனந்தனைத்தெளிவித்தெழுகவெனத்தான்புரிந்த தவறு நெஞ்சைப், போழ்ந்துணர்வையழிக்கவிருந்தயர்வுயிர்த்துமகனையுறப் புல்லிச்சொன்னன்.

(இ - புரை.) அப்படிவிழுந்த அரசனையெடுத்து வியர்வைமாற்றி முகந் துடைத்து மூர்ச்சைநீக்கி, என்னையனே! எங்களைப்பற்றிய வினைவிளைத்த துன்பத்தை நாங்களனுபவித்தோம், அதற்காக நீர் வருந்தவேண்டிய தில்லையென்று மனதைத்தெளிவித்து, எழுந்திருவென்று சொல்ல; எழுந்து அவ்வரசன் தான்செய்தகுற்றந் தன்மனதைப்பிளந்து அறிவைக் கலக்கிவிட ஒன்றுந் தோன்ருமலிருந்து பின்புதேறி, மகனை அணைத்துக்கொண்டு சொல்லுகிருன். எ-று.

கடுங்கானத்திடைதனியேநுமைவிடுத்துவரப்பணித்தகடியனெஞ்சக்
கொடும்பாவிதனைமகதன்கொல்லாமலுயிரளித்தகுமாரவீண்டு
நடுங்காமலுயிர்பொருந்தப்புல்லவுநீகருணைசெய்தாய்ஞாலமென்னை
யடுங்காலமென்பதலாலரசனென்றுசொலத்தகுமோ வந்தோவந்தோ.

(இ - புரை.) கடுமையாகிய காட்டில் உங்களை விட்டுவரும்படி உத்தரவு செய்த வலியநெஞ்சையுடைய கொடும்பாவியாகிய என்னை, மகதேசத்தான் கொல்லாமல் உயிர்கொடுத்த புத்திரனே! இப்போது நான் அஞ்சாமல் உடலோ டுடல்பொருந்தும்படிப் புல்லிக்கொள்ளவும் கிருபைசெய்தாய், இதையறிந்த உலகத்தார் என்னை நமனென்று சொல்லுவார்களேயல்லது அரசனென்று சொல்லமாட்டார்கள் அந்தோ என்றிரங்கி, எ - று. (௬௨)

அறத்திநெறிகருதாமலரிவையையும்புதல்வனையுமகன்கானத்தின், மறத்தின்வழிவிடுத்தேனுமன்னவனோ நீசர்தொழின் மருவிநின்றே, னிறப்பதுவே கருமமெனத்துணிந்தெழுந்ததசானனர்கோன்சூட்சிநூ லோர், சிறக்கதிர்வேனிடதர்பிரான்றெருட்டவருந்துயர்சிறிதுநீங்கிச் சின்னாள்.

(இ - புரை.) தருமநெறியை எண்ணாமல் மனைவியையும் புத்திரனையும் காட்டினிடத்தி லனுப்பிவிட்ட நானும் அரசனா? புலையர்செய்யுந் தொழிலுள்ளவனாயிருந்தேன்; ஆதலாலினி இவ்வாழ்க்கை நீங்கிவிடுவதே தருமமென்று துணிவுகொண்டு எழுந்த தசான்னதேசத்துராசன் அங்கிருந்த மந்திரிகளும் ஒளிதங்கிய வேலாயுதத்தையுடைய நிடததேசத்து அரசனும் சமாதானஞ்சொன்னதினால் துன்பஞ் சற்றுநீங்கிச் சிறிதுநாள் இருந்து, எ - று. (௬௩)

வேறு.

சந்திராங்கதனன்புகூறவேதங்கிநீங்கருந்தொடர்புகொண்டுபின்
சிந்துராननச்சுமதிதன்னொடுஞ் செம்பொனீள்கொடித்தேரிலேறியே
மைந்தன்வீரவேற்பத்திராயுவுமருகிகீர்த்திமாலினியும்பின்வரக்
கொந்துலாமலர்க்கானுமாறுநீள்குன்றுநீக்கிப்போநகரங்கூடினான்.

(இ-புரை.) நிடததேசத்து அரசனாகிய சந்திராங்கதன் அன்புகூரும்படி அவனிடமிருந்து, அவ்வரசன் சினேகத்தை மிகுதியாகப் பெற்றுக்கொண்டு, பின்பு சிந்துரத்திலகமணிந்த முகத்தையுடைய தன்மனைவியுடன் செம்பொன்மயமாய்ப் பெரிய கொடிகட்டப்பட்ட தேரிலேறிக்கொண்டு, தன்புத்திரனாகிய பத்திராயுவும் மருமகளாகிய கீர்த்திமாலினியும் பின்னேவரக் கொத்தாகியமலரையுடைய காடும் நதிகளும் உயர்ந்தமலைகளும் நீங்கித் தன்னகரத்திற்போய்ச் சேர்ந்தான். எ - று. (௬௪)

நகரின்வாழுநர்கண்டுமைந்தனைநறியமாமலர்சிதறியேத்துவார்
புகர்செயானையாழிகாறுநீபூமிகாத்தெமைப்புரத்தியாலென்பார்
தகரவார்குழல்வனிதைசெவ்விசாரங்கபாணியேயிவனென்றோதுவார்
நிகரின்மைந்தனுக்காவதாகயாநெடிதுவாழுநாளெனநிகழ்த்துவார்.

(இ - புரை.) அந்தநகரத்தில் வாழ்கின்றவர்கள் பத்திராயுவைப்பார்த்து வாசனைதங்கிய மலர்கள்தூவித் துதிசெய்வார்கள்; சிலர் புகர்முகயானைப்படையையுடைய அரசனே! ஊழிகாலவரையில் இவ்வுலகத்தைக்காத்து எம்மை ரக்ஷிக்கக்கடவையென்று சொல்வார்கள். சிலர் இப்பத்திராயு மகாவிஷ்ணுவே மயிர்ச்சார்தணிந்த நீண்டகுழலையுடைய இவன் மனைவி மகாலட்சுமியே என்பார்கள். சிலர் நாம்வாழுநாளாகிய நம்முடைய ஆயுசு இந்தப்புத்திரனுக்கே யாகக்கடவதென்று வாழ்த்துவார்கள். எ - று. (௬௫)

பகைஞரஞ்சவேபொருது தந்தை தம்படர்களைந்ததோள்பார்த்தி லீரென்பார், புகைசெய்வேலினனிறைமை பூண்டிவண்புகுதமெய்த்தவம்புரிந்துளோமென்பார், மகதராசன்றன்வல்லியிறபடவாகைகொண்டகூர்வாளிதோவென்பார், சகரநீர்சூலாம்புவியிவன்றிருத்தாணிழற்கணேதங்குமாமென்பார்.

(இ-புரை.) சிலர் சத்துருக்கள்பயப்படத்தக்கதாகப் போர்செய்து தகப்பனுக்கு நேரிட்ட மனவருத்தத்தை நீக்கியபுயத்தைப் பாருங்களென்பார்கள். சிலர் புகையைத்தருவதாகிய வேலாயுதத்தையுடைய இவன் அரசாட்சிபெற்றுக்கொண்டு இவ்விடத்தில்வர நாம் உண்மையான தவஞ்செய்தோமென்பார்கள். சிலர் மகதராசன் விலங்கிற்படும்படி வெற்றிகொண்ட கூரியவாள் இதுதான் பாருங்களென்பார்கள். சிலர் சமுத்திரஞ்சூழ்ந்த உலகமெல்லாம் இவன் காலின்கீழே தங்குமென்பார்கள். எ - று. வல்லி - விலங்கு. (௬௬)

என்றுகூறியமாந்தரின்புறவேந்தலோடும்போ யெழில்கொண்மன்னவன், குன்றுபோலுயர்கோயில்வைகியோர்குடைநிழற்புவிகாத்தனந்தநாட், சென்றபின்மகதன்றன்னையுந்திறையளக்கெனச் செப்பிவிட்டபின், பொன்றிவானுலகாடன்மேயினன்புதல்வன்பூதலம்புரப்பதாயினன். ௩

(இ - புரை.) என்று இவ்வாறு சொல்லிய நகர்ச்செனங்கள் இன்பம் பொருந்தும்படித் தன்புத்திரனுடன்போய், வச்சிரவாகுமகாராசன் மகமேருவையொத்த தன் அரண்மனையிலிருந்து, ஒருகுடைநீழலில் பூமியைக்காத்து நெடுநாள் சென்றபின்பு, மகதராசனைச்சிறைநீக்கி இனிநீ திறைகட்டிக்கொண்டிருவென்று சொல்லி அனுப்பிவிட்டபின் இந்தத்தேகத்தைவிட்டு நீக்கிச் சுவர்க்கலோகம்பெற்றான். பத்திராயு அரசுசெய்துகொண்டிருந்தான். எ - று.

பத்திராயுவின் கதையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.
ஆக திருவிருத்தம் - எ௬௦.



சிவமயம்.

பதினான்காவது

# பத்திராயுமுத்திபெற்ற அத்தியாயம்.

திருந்தலர்வணங்கநீடுநிதிமல்கச்செங்கோலோச்சிப்
புரந்தனனுலகமெல்லாமபொதுவறவென்றுசூத
னிருந்தவமுனிவர்க்கெல்லாமியல்பினினியம்பிமீட்டு
மருந்தவனனையபத்திராயுவின்சரிதஞ்சொன்னான.

(இ - பொ.) சத்துருக்கள்வந்து பணியவும் மிகுந்தநிதிகள்வந்து சேரவும் செங்கோல்செலுத்திப் பொதுவில்லாமல் உலகத்தைக்காத்து அரசுசெய்துகொண்டிருந்தானென்று, சூதமுனிவர் நைமிசாரணியமுனிவர்களுக்குச் சொல்லிப் பின்னும் அம்முனிவர் பத்திராயுவின் சரித்திரஞ்சொல்லுகிறார். எ - று.

கன்னவிதிரடோண்முத்தங்கதிர்மணிக்கவிகைச்செங்கோன்
மன்னவனமைச்சரோடுமலிகடற்றானையோடும்
பொன்னணித்திகிரிமனனுபுரவியந்தோமேற்கொண்டு
மின்னிடைத்துணைவியோடுவிரைமலர்க்கானம்புக்கான்.

(இ - பொ,) மலைக்கொப்பாகச் சொல்லுகின்ற திரண்டவடிவாயிருக்குந்தோள்களையும்முத்துகளால் அலங்கரித்தகுடையினையுமுடையவனுய்ச்செங்கோல்நடத்தும் பத்திராயு என்னும்அரசன,மந்திரிகளும்மிகுதியாயுள்ளசேனையுஞ் சூழ்ந்துவரப் பொனனாற்செய்யப்பட்ட உருளைபூண்டதேரில் தானும்மின்னல்போலு மிடையையுடைய தனமனைவியுமாக ஏறிக்கொண்டுவாசனையுள்ள கானகத்திற்சென்றான். எ - று. (௨)

சண்பகம்பனசம்பூகஞ்சந்தனந்தமாலந்தேமா
விண்பகிருமிருங்கோங்குவெள்ளின்மந்தாரந்துற்றுக்
கண்புகவரிதாய்வாசங்காவதங்கமழுஞ்சோலை
பண்பயில்வண்டுந்தேனுங்கிள்ளையும்படிவதம்மா.

(இ - பொ.) அங்கு, சண்பகம் பலாகமுகு சந்தனம் தேமா பச்சிலை அண்டமுகடு பிளக்கும்படி உயர்ந்திருக்கும் கோங்கு விளா மந்தாரம் என்னும் விருக்ஷங்கள் பார்ப்பவர்கள் பார்வை நுழைவதற்கிடமில்லாமல் நெருங்கி, ஒருகாத

தாரமட்டும் வாசனை பரிமளிக்கும்படி விளங்கிய சோலையானது, இசைபாடும் வண்டுகளும் தேனென்கிற வண்டுகளுங் கிள்ளைகளும் வாசமாயிருக்கத்தக்கது. எ - று. தமாலம் - பச்சிலைமரம். (௩)

மவ்வலங்குழலாள்கீர்த்திமாலினியணங்கினோடு
மவ்வனந்தன்னின்மன்னனயர்வுயிர்த்திருந்தகாலை
கொவ்வையங்கனிவாய்க்கற்பிற் கொடியொடோரந்தணாளன்
கவ்வையான்முறையிட்டெய்திக்காவலற்கிதனைச்சொன்னான்.

(இ - புரை.) இந்தன்மையுள்ள வனத்தில் பத்திராயு என்னும் அரசன் முல்லைமுடித்த கூந்தலையுடைய கீர்த்திமாலினியென்னு மனைவியுடன்வழிவந்த இளைப்புநீங்கி யிருக்கும்போது, ஒருபிராமணன் கோவைககனியையொத்த செவ்வியவாயினையுடைய மனைவியுடன் துயரமுள்ளவனாய் முறையிட்டுக்கொண்டு வந்து அரசனுக்கு இந்தவார்த்தை சொல்லுகிறான். எ - று. மவ்வல் - முல்லை. கவ்வை - துன்பம். (௪)

அறத்தினிலுலகங்காக்குமரசனேயாசமேறே
மறப்புலிதொடர்ந்துகொல்வான்வருகின்றததனைநீயுன்
திறப்படையேவியாங்கேசெகுத்துயிர்கவர்ந்துயாங்க
ளிறப்பதுதவிர்த்துளாவியீந்தெமைப்புரப்பாயென்றான்.

(இ - புரை.) தர்மத்துடன் உலகத்தைக்காக்கும் அரசனே! அரசர்களாகிய யானைகளுக்குச் சிங்கம்போலிருப்பவனே! கொடிதான ஒருபுலி எங்களைக் கொல்லத் தொடர்ந்துவருகின்றது, அதனை உன்கையிலிருக்கும் வலியபாணத்தையேவி அவ்விடத்திலேவிழுந்து சாம்படிகொன்று, நாங்கள் இறப்பதைநீக்கிப் பிழைக்கும்படி எங்கள் பிராணனைக்கொடுத்துக் காப்பாற்றவேண்டுமென்று சொன்னான். எ - று. (௫)

வேறு.

மறையவனோதியவாசகம்வந்தே
யறைகழன்மன்னவனஞ்செவியெய்தப்
பிறைநிகர்வார்சிலைவாளிபிடித்துக்
கறுவுகொள்வெம்புலியைக்கடிதெய்வான்.

(இ - புரை.) இவ்வாறு பிராமணன்சொல்லிய வார்த்தையானது, ஒலிக்கும் வீரகண்டைகட்டிய அவ்வரசன் காதிற்கேட்டவுடன், பிறைபோல்வளைந்த பெரியவில்லையும் பாணத்தையும் கையிலேந்திக் கோபங்கொண்டுவருகிற வெய்யபுலியை விரைவினிற் கொல்லுவதற்கு எத்தனித்தான். எ - று. (௬)

உற்றனனுற்றவனென்றுதன்முன்னம்
பற்றியவெம்புலிபார்ப்பினிதன்னை

யெற்றியணைந்துபிடித்தலுமேங்கு
முற்றிழையாளரசன்முகநோக்கி.

(இ - புரை.) அப்படி யெத்தனித்தவன் வருவதற்குமுன் தொடர்ந்து வந்த புலியானது, அந்தப் பிராமணத்தியை அடித்துப் பிடித்துக்கொள்ளவே, அழுகிற அந்தப் பிராமணஸ்திரியானவள் அரசன் முகத்தைப்பார்த்து, எ-று.

மன்னவனே புலிவாயிடையுற்றே
னென்னுயிர்நின்பரமென்றிது கூறி
மின்னவிர்செஞ்சடைமெய்ப்பொருணாமம்
பன்னினிளாவிநடந்ததுபாவம்.

(இ - புரை.) அரசனே! நான் புலிவாயி லகப்பட்டுக்கொண்டேன், என் உயிரைக்காப்பது உன்பாரம் என்று சொல்லி, மின்னலைப்போலவிளங்குஞ் செஞ்சடையையுடைய உண்மைப்பொருளாகிய சிவபெருமானுடைய திருநாமத்தை யுச்சரித்தாள் பிராணனுநீங்கிவிட்டது; இதுபாவமானகாரியம். எ-று.()

வேதியன்மாதுவிளம்பியசொல்லான்
மாதுயரெய்தியமன்னன்வெகுண்டே
காதவிடுத்தகடுங்கணைசென்றே
போதெனவீழ்ந்ததுபுண்டரிகத்தின்.

(இ-புரை.) அந்தப் பிராமணஸ்திரியானவள்சொல்லியசொல்லினால்துயரங்கொண்ட அவ்வரசன் கோபமுள்ளவனாய்க் கொல்லும்படிவிடுத்த பாணமானது சென்று, புலியின்மேல், பூவைப்போல்விழுந்தது. எ - று. காதல்-கொல்லுதல். புண்டரீகம் - புலி. (கூ)

கண்டுபொறாமைகருத்தைவெதுப்பத்
திண்டிறல்வேலவனின்றுதிகைத்தான்
புண்டரிகந்தெறுபூவையையுங்கொண்
டுண்டிடவெம்முழைதேடியோதுங்க.

(இ - புரை.) தன்பாணம் பூவைப்போல விழுந்ததைக்கண்டு பொறாத நெஞ்சமானது மனதைவருத்த, மிகுந்த பலமுள்ள வேலேந்தும் அவ்வரசன் ஒன்றுந் தோன்றாமல் திகைத்து நின்றுவிட்டான். புலியானது தன்னாற்கொல்லப்பட்ட அவளை யுண்ணுதற்குக் கவ்விக்கொண்டு ஓர் மலையில்கொடிய குகையை நாடிச்சென்றது. எ - று. (௧௦)

அச்சமுறாதவரும்புலிபோக
வச்சிரவாகுமகன்றுயருற்றான்

ரர்ந்தறிவேதியன்மாதை
யிச்சகமீதிலிழந்தனனென்றான்.

(இ - புரை.) எவ்வளவும் பயமில்லாமல் அந்தப்பெரும்புலியானதுபோய் விடவே, வச்சிரவாகு புத்திரனாகிய பத்திராயு என்பவன் மிக்கதுயரமடைந்தான். வேதசாஸ்திரங்களுணர்ந்த பிராமணனானவன் என் மனைவியை இவவுலகத்தி லிழந்துவிட்டேனே யென்றுசொல்லி, எ - று, விச்சை - கல்வி. (கக)

வேறு.

அருந்ததியுமொவ்வாதகற்புடையமனையவளே யந்தோவந்தோ,
பெரும்புலியின்பகுவாயினுயிரிழக்குமுற்பவத்திற்பிழைந்ததுணடோ,
குரும்பைமுலைத்தாளநகைக்கொடியிடையாய் நீவிளிந்த கொடுமைகண்டு, மிரும்பனையகொடுமனங்கொண்டின்னமுநாணிறவாமலிருக்கின்றேனே.

(இ - புரை.) பதிவிரதாதருமத்தில் அருந்ததியும் நிகராகாத மனைவியே! ஐயையோ? பெரும்புலியின் பிளந்த வாயில் அகப்பட்டுக்கொள்ளும்படி முன்சென்மத்திற்செய்த வினையுண்டோ? தென்னங் குரும்பையையொத்த தனங்களும் முத்துக்களை யொத்த தந்தங்களும் பூங்கொடியையொத்த இடையினையும் உடையவளே! நீஇறந்த கொடுமையைக்கண்டும் இரும்பையொத்த வன்னெஞ்சங்கொண்டு இன்னமும் நாணிறவாமலிருக்கின்றேனே, என்று புலம்பினன். எ - று. (கஉ)

என்றென்றுபற்பலவும்பன்னியெடுத்தழைத்துமனமிடரின்மூழ்கிக்
கன்றொன்றுதனையிழந்தகறவைபோனெடிதுயிர்த்துக்கவன்றுமாழ்கி
யின்றொன்றுதுணிகுவன்யானிங்கென்னநினைந்துகடிதெழுந்துநின்று
குன்றொன்றுதிரள்புயத்துக்கோமகன்மேல்வெகுண்டினையகூறினனே

(இ - புரை.) என்றென்று பலபலவாக தன் மனைவியின் குணாதிசயங்களை எடுத்தெடுத்துச்சொல்லி, துன்பத்தில் மனது அழுந்திடக், கன்றினையிழந்த பசுவைப்போலப் பெருமூச்சுவிட்டுக் கவலையுடன் சோர்ந்து, இப்போது ஒரு காரியஞ்செய்யத் துணிகுவனென்று தன்மனதில் நிச்சயித்துக்கொண்டெழுந்து, மலையையொத்த திரண்டபுயத்தையுடைய பத்திராயுவாகிய அரசன்மேல் கோபித்துக்கொண்டு இந்த வார்த்தைகளைச்சொல்லுகிறான். எ - று கறவை-ஈன்றபசு. (கங)

மறையவருக்கிறுதிவந்தாலவருயிருக்குதவிசெய்யாமன்னரேறே
கறையிருக்குந்தீவாய்வெங்கனற்றறுகட்கொடுவரிநின்கண்முன்னாகப்
பிறைநுதற்குப்படரியற்றியுயிர்கவர்ந்துபிலம்புகுதப்பிடித்தவில்லோ
மறைகழித்தகணையேந்திநின்றனைநின்னரசியலுக்குவமையுண்டோ.

(இ - புரை.) பிராமணர்களுக்குத் துன்பநேரிட்டவிடத்தில் அவர்களுயி ரினுக்கு உதவிசெய்யாத மன்னவர்கள் சிங்கமே! உதிரம் பொருந்தியிருக்கும் பொல்லாதவாயும் வெவ்விய தீப்பொறியைக் கக்கும் கண்களுமுள்ள ஒரு புலி யானது, உன்கண்ணுக்கெதிராகப் பிறைபோலும்நெற்றியினையுடைய என்மனை விக்கு வருத்தத்தைச்செய்து உயிரைவாங்கிக் குகையிற்போகவும், பிடித்தவில் லும் தூணியிலிருந்தெடுத்த அம்பும் ஏந்திக்கொண்டுநின்றாய்; ஆதலால், உன் னரசியலுக்கொப்பான அரசியல்வேறொன்றுமில்லையென்று பழித்து, எ - று. தறுகண் - அஞ்சாமை. படர் - துன்பம். (கச)

ஆறிரட்டியாயிரம்வெங்களியானைபலமுனக்குண்டதனைவேந்தே,
பாறிரட்டுங்கதிர்வடிவேற்பகைவரிடத்தீந்தவாற்பயங்கொண்டாயோ,
தூறிரட்டித்தெழுந்தமரக்கானகத்திலென்றுணையைத்தொடர்ந்துநெ
ய்த்தோர்ச், சேறிரட்டித்திரும்பிலவாய்ப்புலிகவரமீட்டிலைநீ செய்த

(இ - புரை.) பன்னீராயிரம் யானைபலம் உனக்கு இருக்கின்றது, அர சனே! அந்தப்பலத்தினைப் பருந்துகளைக் கூட்டமாய்ச்சேர்க்கும் ஒளிதங்கிய வடிவேலையுடைய பகைமன்னரிடத்திற் கொடுத்துவிட்டுப் பயம்பெற்றுக் கொண்டனையோ! சிறுசெடிகளால் நெருங்கப்பட்டு மரங்கள் மேலோங்கியிருக் கும் இந்தப்பெரியகாட்டில் உதிரஞ்சோரும்படிப் பிலம்போன்றவாயையுடைய புலியானதுதொடர்ந்து என் மனையாளைப்பிடித்துக்கொண்டுபோய்விட்டதே, அதனைத்தடுக்காமல் என்னசெய்தாய். எ - று. தூறு-சிறுசெடியின் நெருக்கம். நெய்த்தோர்-இரத்தம். (கரு)

கடுங்கானிற்புலியெனதுகனங்குழையைக்குருதியுண்ணக்கருதிநின்மு
னடுங்காலத்ததனையுயிரழித்திலைநின்னுயிர்ப்புறங்காத்தஞ்சிநின்றாய்
கொடுங்காலதூதரடுகளத்தினிற்பப்பகைவர்வந்துகொடும்போர்செய்யி
னடுங்காதுபகைதுரந்துன்னரசுநிலைநிறுத்துவையோகாமவேலோய்.

(இ - புரை.) பகைவர் அஞ்சத்தக்க வேலாயுதமேந்திய அரசனே! கொடு மையுள்ள இந்தக்காட்டில் இப்புலியானது என்மனையவளை உதிரமுண்ணும் படிநினைத்துக் கொல்லும்போது, அந்தப்புலியைக்கொல்லாமல் உன்னுயிரைக் காத்துக்கொள்ளும்பொருட்டுப் பயந்துநின்றனை; கொடுமையுள்ள யமதூதர் வந்து போர்க்களத்தி லிருக்க உன்னெதிரிகள் வெவ்வியதான யுத்தஞ்செய்தால் அந்தச்சமயத்தில் நடுங்காமல் பகைவரைத்துரத்தி உன்னரசாட்சியை நிலைநிறு த்துவையோ? எ - று. (கசு)

பெண்ணாகியந்தணர்தம்பேதையுமாய்நினக்கபயம்பேசினாளை
யும்வேங்கைக்குணவளித்துனுயிர்காத்தவேனைவேந்தே

மண்ணுளவென்ணுதியோவின்னமுமாருயிர்சுமந்துவலியிற்றாழ்ந்து
நண்ணார்தமிழிபுரைக்குநாணுயோவென்றுபலநடுங்கச்சொன்னான்.

(இ - புரை.) பெண்பிறப்பாகியும் அந்தப்பிறப்பிலும் பிராமணஸ்திரியா கியும்உனக்கு அபயமென்று முறையிட்ட இவளைக்காக்கவேண்டுமென்று உன்ம னதி லெண்ணாமல், கொல்லும்புலிக்கு ஆகாரமாகக் கொடுத்துவிட்டு, உன்னுயி ரைக் காத்துக்கொண்ட ஏழ்மையுள்ள அரசனே! பலத்தினிற்குறைந்தும் இன் னமும் பிராணனைத் தாங்கிக்கொண்டு ஊராள எண்ணுகிறாயோ? பகைவர்கள் இழிவாகப்பேசுவார்களே அதற்கும் நாணமுறாயோ? என்றிவ்வாறு பலபலதூஷ ண வார்த்தைகளை அவனடுங்கும்படிச் சொன்னான். எ - று. (கஎ)

என்னலுமேமதிமயங்கிவடிவேல்கொண்டகன்மார்பத் தெறிந்த
தென்னக், கன்னியைவெம்புலிகவர்ந்தகொடும்பழிபுநான்மறையோன்
கடியசொல்லு, மந்நிலையேயகம்வெதுப்பவருந்துயரக்கடலிடையாழ்ந்
தழுங்குதோறு, மன்னர்பிரானரசியலுஞ்செல்வமுநீத்திறப்பனெனு
மனத்தனானான்.

(இ - புரை.) இவ்வாறு அந்தப்பிராமணன் சொல்லவே, அரசன் மதி மயங்கி வடிவேலைப்பரந்தமார்பில் எறிந்ததுபோலப் பிராமண ஸ்திரியைப்புலி கொன்ற கொடும்பழியும் பிராமணன்சொல்லுங் கடுமையான வார்த்தையும் அப்போதே மனதை வெதுப்ப, நீங்குதற்கரிய துக்கசாகரத்தி லழுந்த வருந் துந்தோறும் அவ்வரசன் இந்த அரசாட்சியையும் செல்வத்தையும் ஒழித்து விட்டு இறக்கவேண்டுமென்கிற எண்ணமுள்ளவனானான். எ - று. எறிந்த தென்ன வெதுப்ப என முடித்துக்கொள்க. (கஅ)

வேதியருக்கிடர்களையாவேந்தனொருவிலங்கெனவேவேதங்கூற
லாதியினிற்கேட்டிருந்துமவர்க்கிறுதிவந்தவிடத்தஞ்சிநின்றேன்
போதுமினியுயிர்சுமத்தல்சுமந்தாலும்பழியலதுபுகழுமுண்டோ
தீதுதரும்வாழ்க்கையினுஞ்சீர்த்தியுறப்பொன்றுவதேசீரிதென்னா.

(இ - புரை.) பிராமணர்களுக்கு நேரிட்ட இடரைநீக்காத அரசன் ஒரு மிருகமே யல்லது அரசனல்லன் என்று வேதஞ்சொல்லுவதை ஆதியிலே கேட் டறிந்தும், இப்போது பிராமணருக்கு இடர்நேரிட்டவிடத்தில் பயந்து நின் றேன்; உயிரைத் தாங்கிக்கொண்டிருந்தது இம்மட்டிற்போதும், அல்லது உயி ரைச்சுமந்துகொண்டிருந்தாலும் பழிவருமே யல்லது புகழுண்டாவதில்லை; ஆத லால், தீங்கைத்தருகிற இந்தவாழ்வி லிருப்பதைப்பார்க்கிலும் உயிரைவிடுவதே நன்மையுண்டாக்கும் புகழாகமுடியும். எ - று. (ககூ)

மடமாதைப்புலிக்குணவாவழங்கிநெடுந்துயருழக்குமறையோன்றளிற்
றடமார்புமணிமுடியுநிலம்படியவீழ்ந்துதுயர்தவிர்தியென்னா
மிடலானதொன்றுமிலாத்தமியேன்றீநரகத்தின்வீழ்கின்றேனென்
னுடைநூடுமென்குலமுநிதியமுநின்வயத்தவென்றானுறவுத்தோளான்.

(இ - புரை.) என்றிவ்வாறெண்ணித் தன்மனைவியைப் புலிக்கு ஆகாரமாகக்கொடுத்துவிட்டுத் துயரப்பட்டுக்கொண்டிருக்கிற பிராமணனுடைய பாதத்தில் அகன்றமார்பும் ரத்தினங்கள் பதித்த மகுடமும் பூமியிற்படும்படிப் பத்திராயுவென்னும் அரசன்பணிந்து, ஐயரே! துன்பப்படவேண்டாமென்று சொல்லிப் பலமென்ப தொன்றுமில்லாத தமியேன் தீநரகத்தில் விழுகின்றேன், என்னுடைய தேசமுங் குலமும் திரவியமும் தேவரீர்வசமாக ஒப்புவித்தேனென்று சொன்னான். எ - று. (௨௦)

மாறிலாத்திறல்வேந்தன்வாய்மொழிகேட்டருமறையோன்வழுங்குங்கண்ணின், வீறிலான்விறலிழந்தான்பலியெடுத்தான்சுகமிழந்தான் வினையின்மூங்கைப், பேறுளானூலிழந்தான்மனையிழந்தானுரிமைதரும்பேறநீத்தா, ஞறினனுரைப்பதென்னோவரசவெனக்கூறியிவ்விதறையலுற்றான்.

(இ - புரை.) மாறாத வெற்றியையுடைய அரசன் சொன்ன வார்த்தையைக்கேட்டு அந்தப்பிராமணன் சொல்லுகிறான், அரசனே! கண்ணொளியிழந்தவனும் வன்மையிழந்தவனும் பிக்ஷையெடுத்தவனும் சுகமிழந்தவனும் பாவத்தினால் ஊமைத்தன்மையுடையவனும் பூணூலிழந்தவனும் மனைவியையிழந்தவனும் இம்மைப்பயனிழந்தவனுமாயிருப்பவன் விசனம்நீங்கிச் சொல்லத்தக்கதென்னிருக்கின்றது, என்றுசொல்லிப் பின்னும் அந்தப்பிராமணன் இந்த வார்த்தையைச் சொல்லத்தொடங்கினான். எ - று. ஆறினான் என்பது, முற்றெச்சம். (௨௧)

என்னுடையதுயரமுந்தீர்ந்தாவியுங்கொண்டிருந்தவங்களியற்றவேண்டி, னுன்னுடையகுலவனிதைகீர்த்திமாலினியையெனக்குதவல்வேண்டு, மன்னவவென்றலுங்கொடியவடுவுரைவேல்போலரசன்மருமத்தூன்ற, நன்னெறிதீரிழிபுரைநீயிங்குரைத்தாயிவ்வுரையைநவிலற்பாற்றோ.

(இ - புரை.) அரசனே! என்னுடைய துயரம்நீங்கிப் பிராணனை வைத்துக்கொண்டு நான் தவங்கள் செய்யவேண்டுமென்கிற எண்ணம் உனக்கிருக்குமானால், உன்னுடைய தருமபத்தினியாகிய கீர்த்திமாலினியை யெனக்குக் கொடுக்கவேண்டுமென்றுசொன்னான்; அப்படிச்சொன்னவுடன் அந்தக்கொடிய வார்த்தையானது அரசனுடைய மார்பில் வேல் தைத்ததுபோலிருந்ததினால், ஐயரே! தர்மத்துக்கு மாறான இழிவுள்ள வசனஞ்சொன்னீர், இந்தவார்த்தை சொல்லலாமோ? என்றுஅரசன்சொல்லிப் பின்னுஞ்சொல்லுகிறான். எ - று.

கனைகுரற்றெண்கடலுடுத்தகாசினியின்மறைவல்லோய்கலைவல்லோர்க்கு, முனையிடத்தினுயிர்கொடுப்பர்முழுநிதியத்தொகைகொடுப்

பர்மூகமன்சொல்வர், துணைபரித்தேர்கொடுப்பர்கரிகொடுப்பர்பரிகொ டுப்பரன்றித்துணையாயுள்ள, மனைகொடுத்துப்புகழ்படைத்தமன்னரு ண்டேலுரையென்றான்மன்னர்கோமான்.

(இ - புரை.) பத்ராயு என்னும் மன்னர்பெருமான் அந்தணனைநோக்கி, பிராணமச்சிரேஷ்டரே! ஒலிக்கும் ஓசையுடையதாய்த்தெளிவுள்ளகடல்சூழ்ந்த இவ்வுலகில் அரசர்களாயிருப்பவர்கள், பிராமணர்கள் பொருட்டுத் தங்களுயி ரைக்கொடுப்பார்கள், மிகுந்ததிரவியங்கொடுப்பார்கள், உபசாரவார்த்தைசொல் வார்கள், விரைவாகச்செல்லுங் குதிரைகட்டியதேர்கொடுப்பார்கள், குதிரை கள் யானைகள் கொடுப்பார்கள், இவ்வளவே யல்லது இல்லறத்துக்குத் துணை யாகிய மனைவியைக்கொடுத்துஇந்நிலவுலகத்தில் புகழ்படைத்த அரசர்களுண் டாயிருந்தால் சொல்லுமென்றான் எ - று. (உங)

செங்கோன்மையரசர்பிரான்செப்பியசொல்செவிபுகுதச்சிவந்துநோக்கி
வெங்கோன்மையரசியற்றும்விறல்வேந்தேபழியிதனன்மேவினுலுந்
தங்காதவகையியற்றுஞ்சாந்தியடுவேனணங்கைத்தருதியின்றே
னுங்காருந்தழனரகம்புகுதியெனச்சபிப்பனினிநுவறியென்றான்.

(இ - புரை) செங்கோன்மையுடைய வரசனிவ்வாறு சொல்லிய சொல் லானது காதிற்பட்டமாத்திரத்தில் பிராமணன் கண்சிவக்கநோக்கிக் கொடுங் கோன்மை செலுத்தி ராசாங்கஞ்செய்யும் அரசனே! இதனாலே யெனக்குப் பாவஞ் சம்பவிப்பதாயிருந்தாலும் அது தொடராதவண்ணம் சாந்திசெய்துகொ ள்ள என்னலாகும்; ஆதலால், உன்மனையாளைக்கொடு, கொடாவிட்டால் பாவி களை யுண்ணத்தக்க நிரகில்விழும்படி உனக்குச்சாபங்கொடுப்பேன்; இனியெ ன்ன சொல்லுகிறாய் சொல் என்றான். எ - று. (உச)

வேறு.

ஆழ்ந்தகேள்விமறையோனறையுஞ்சுடுசொல்வாளாற்
போழ்ந்தநெஞ்சங்கருகப்பொருமிப்பொருமிப்புவிமேல்
வீழ்ந்துவீழ்ந்தாங்கெழுந்துவிழிநீர்க்கடலுள்ளழியா
தாழ்ந்தநெஞ்சங்கூர்ந்துதகைவேந்திவைகணிணையும்.

(இ - புரை.) வேதக்கேள்வியில் ஆராய்தலுடைய அந்தப்பிராமணன் சொல்லுஞ் சுடுசொல்லாகிய வாளினால் பிளக்கப்பட்ட மனம்வெதும்பி அழு தழுது, பூமியில்விழுந்து விழுந்து, பின்னுமெழுந்து கண்ணீர்த்தாரைக் கடல் போற்பெருக அதிலாழ்ந்தவனாய் ஒன்றுந்தோன்றாத மனமுள்ளவனான பெரு மைப்பாடுள்ள வவ்வரசன் இவைகளை யெண்ணுகிறான். எ - று. (உரு)

மாறாக்கற்பினிவளைமறையோற்களிக்கின்வசையாம்
வேறாய்மறுத்தின்றுரைத்தால்வினையேபுரியுமறையோன்

கூறுய்வளரும்பிறையுங்கொன்றைத்துணருஞ்செருகி
யாறுதரிக்குஞ்சடையோனருளேதெனவுமறியேன்.

(இ - புரை.) அழியாத கற்புநிலையுள்ள இவளைப் பிராமணனுக்குக்கொடுத்தால் வசைவந்துநேரிடும், அல்லது மறுத்து வேறாகச்சொன்னால் பிராமணன் சாபங்கொடுப்பான், ஒருகலையுடனிருக்கும் பிறையினையுங் கொன்றைமாலையினையுந்தரித்துக் கங்கையினையும்ஆதரித்துவிளங்கும் முடியையுடைய பரமசிவத்தின் திருவருள் எவ்வாறிருக்கின்றதோ தெரிந்திலன். எ - று. (உசு)

பொல்லாநரகத்திடையேபுகுமாறயிருக்கெளிதோ
நல்லாடனையுமிங்ஙனயந்தமறையோர்க்குதவி
வில்லார்மணிப்பூண்வேந்தர்வினையங்கேட்டுவியப்பக்
கல்லாமாந்தரிழிப்பக்கனல்வாய்ப்புகுவேனென்று,

(இ - புரை.) பொல்லாத நரகத்தில் உயிர் விழுகிறதென்றால் அது எளிதானதல்லவே; ஆதலால், மனையவளைவிரும்பிக்கேட்கிற பிராமணனுக்குக் கொடுத்து, ஒளியுள்ள ரத்தினாபரணங்களணிந்த மன்னவர்கள் இந்தச் சேதியைக் கேட்டுச் சந்தோஷிக்கவும் கல்வியுணராத மாந்தர்கள் இழிவுசொல்லவும் தீயில் விழுவேனென்று துணிந்து, எ - று. (உஎ)

இருந்தமறையோய்நினக்கேயீந்தேனிவளையீந்தேன்
பொருந்தும்பதியிற்கொடுநீபோவாயென்றேபுகலாத்
திருந்துமனையாடன்னைத்தாயேசெல்கென்றேத்தி
யருந்துமமிர்தம்போல்வானனலைக்கடிதினமைத்தே.

(இ - புரை.) தனக்குள் எண்ணிக்கொண்டு, கோபங்கொண்டிருக்கும் வேதப் பிராமணரே! இவளை யுமக்குக்கொடுத்தேன் கொடுத்தேன், நீர்வாசமாயிருக்கும் நகரத்துக்குக் கொண்டுபோமென்று சொல்லிக் கற்புள்ளமனைவியைப்பார்த்து, தாயே! இந்தப் பிராமணனுடன்போவாயென்று சொல்லித் துதித்து, உண்ணுமமிர்தம்போன்ற அரசன் விரைவாகத்தீவளர்த்து, எ - று. பிராமணருக்கு மனைவியாகக்கொடுக்க இசைந்தபின் அவள் பரதாரமானாளாதலால், தன்மனையைத் தாயே என்று விளித்தான். (உஅ)

கண்ணீர்கலுழ்தன்மாற்றிக்கருத்துமொருபானிறுவித்
தெண்ணீர்மூழ்கியெழுந்துசிவமந்திரமுட்கருதி
விண்ணூருலவுங்கதிரும்வெதும்பச்சிகைகொள்கனல்வா
யுண்ணீர்மையினான்வீழ்வானொருப்பட்டுலவுங்காலை.

(இ . புரை.) கண்ணிலிருந்து நீர்வருதலைமாற்றி, மனதை யொருவழிப் படுத்தித் தெளிவுள்ள நீரில் ஸ்நானஞ்செய்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யுள்ளேயுச்

சரித்து, ஆகாயத்திற்செல்லுஞ் சூரியனும் வெப்பங்கொள்ளச் சிகைவிட்டெழு கின்ற தீயில் அன்புடன்விழ ஒருமைப்பட்டு அக்குண்டத்தைப் பிரதக்ஷிணஞ் செய்யும்போது. எ - று. (உகூ)

ஐந்துமுகமுமொளிரவவிர்செஞ்சடையின்மீதே
யிந்துமொளிகொண்டிலகவிடையேயிடையேயிதழிக்
கொந்தின்றுணர்நின்றசையக்கொக்கின்சிறகுமறுகுஞ்
சிந்தும்பனிநுண்டிவலைச்செழுநீர்மகளுந்திகழ.

(இ - புரை.) ஐந்து திருமுகங்களும் பிரகாசிக்கவும் விளங்குகின்ற செஞ் சடையில் இளந்திங்கள் ஒளியுடன் பிரகாசிக்கவும் அதன்மத்திகளில் கொன் றைப்பூங்கொத்துக்களிருந்தசையவும் கொக்கினிறகும் அறுகும் சிந்துகின்ற குளிர்ந்த துளிகளையுடைய கங்கையும் பிரகாசிக்கவும், எ - று. (௩0)

மூன்றுகண்ணுஞ்சுடரமுரலுஞ்சங்கக்கடல்வாய்
கான்றவிடமுண்டிருண்டகண்டமணியிற்கனிய
வான்றவீரேழுலகுமல்லாப்புவனத்தடுக்கு
மீன்றுங்கன்னியென்னவிருந்தாள்வாமத்திலக.

(இ-புரை.) திரிநேத்திரங்களும் பிரகாசிக்கவும் ஒலிக்குங்கடலிற்றோன்றி விஷபானஞ் செய்து கறுத்த காளகண்டம் நீலரத்தினம்போல விளங்கவும் நிறைந்துள்ள பதினான்குலோகங்களும் அவைகளேயன்றி மற்றப்புவனகோடி களையும் பெற்றும் கன்னியாயிருக்கும் உமையவள் இடப்பாகத்தில் விளங்க வும், எ - று. (௩க)

பவளவரையிற்சூழ்ந்துபடியுநீலப்புயல்போற்
கவளயானையுரியைக்கவினுருவம்போர்ப்பத்
திவளும்புலியினதளைச்சேர்த்திட்ட
துவளநீற்றின்றவளச்சுடர்ப்புண்டரமுந்தோற்ற.

(இ - புரை.) பவளமலையிற் கருமேகம் படிந்திருப்பதுபோல யானைத் தோற்போர்வை திருமேனி போர்ப்பவும், விளங்குகின்ற புலித்தோலையுடுத்து அதன்மேற் சர்ப்பக்கச்சணியப்பட்டுத் தொங்கி அசையவும், வெள்ளியவிபூ தித் திரிபுண்டரங்களும் பிரகாசிக்கவும், எ - று. (௩உ)

தெய்வமகளிர்நடிக்கச்சிறந்தமுழவங்கறங்க
வையமனுங்கநடிக்குமழுவெள்விடையினேறிக்
கொய்யுமலர்கொண்டடியிற்குளிரப்புனைவார்க்கெளிதிற்
கைவல்லியமின்றருளுங்கருணைக்கடல்வந்தெதிர்ந்தான்.

(இ-புரை.) அரம்பாஸ்திரிகள் நடனஞ்செய்யவும்சிறந்ததாகிய குடமுழா ஒலிக்கவும், திரிபுரதகனஞ்செய்யும்போதமைந்த தேரினச்சு முறியக்கண்டு எதிரில்வந்து நடித்ததாகிய இளமையும் வெண்மைநிறமுமுள்ள திருமாலாகிய ருஷபவாகனத்தின்மேல் ஆரோகணித்துக்கொண்டு, கொய்த திருப்பள்ளித் தாமங்கொண்டு குளிரும்படித்திருவடியில் அருச்சிப்பவர்களுக்கு எளிதாகமோக்ஷத்தையருளுங் கிருபைக்கடலாகிய பரமசிவம் தரிசனங்கொடுத்தருளினார். எ-று. வையம் நுங்க நடிக்குமென்றுபாடமாயின், இவ்வுலகத்தை யுண்ணநடித்த மால்விடையெனப் பொருளுரைத்துக்கொள்க. முன்னுரைக்கு வையம்-தேர்.

கண்ணுமனமுங்குளிரக்கண்டானரசர்க்கரசன்
றிண்ணம்பிறவிப்பகையைச்செற்றேமென்றுகருதி
யுண்ணுமமிர்தமுண்டாளொருவனெனக்களித்து
விண்ணுமண்ணும்பிறவுமானோனடியில்வீழ்ந்தான்.

(இ - புரை.) இங்ஙனம் பெருமான் விடையிவர்ந்து காட்சிதரவே, அரசர்க்கரசனானவன் தன்கண்களு மனமுங் குளிரும்படித்தரிசித்து, நிச்சயமாக இப்பிறவிப்பகையை ஒழித்தோமென்றெண்ணித் தேவர்களா லுண்ணத்தக்க அமுதத்தை யுண்டுகளித்த ஒருவனைப்போலக் களித்து, ஆகாயமும் பூமியும் மற்றவைகளுமாய் நிறைந்துள்ள பரமசிவத்தின் திருவடியிற்பணிந்தான்' எ - று.

வேறு.

தேவாதிதேவனுய்ச்சிற்குணனுயற்புதனுய்
மூவாமுதலாய்முழுப்பொருளாய்நின்றாயை।
காவாய்பிறவிக்கடனீந்திக்கையினேத்தே
னுவாயெனவேநின்னுண்மலர்த்தாள்பெற்றேனே.

(இ - புரை.) தேவர்களுக்கெல்லாம் முதலாகிய தேவனாகியும் சிற்குணனாகியும் அற்புதனாகியும் மூவாமுதலாகியும் கடவுட்டன்மைநிறைந்தபொருளாகியும் வீற்றிருக்குங்கடவுளே! அடியேனைக்காத்தருளவேண்டும்; பிறவிச்சமுத்திரத்தை நீந்திக் கரையேறமாட்டாமல் கையிளைத்தேன், அந்தக்கடலைநீந்துவதற்குக் கப்பலைப்போல உம்முடைய திருவடித்தாமரைமலரை இப்போது பெற்றுக்கொண்டேன். எ - று. மூவாமுதல்-கொடாதமுதல். நாவாய்-ஓடம்.

உண்ணறையாயுவட்டாததெள்ளமுதாய்
மண்ணுமணியாய்மறைப்பொருளாய்நின்றாயை
யெண்ணுளவுபடாத்துன்பத்திடருழந்தேன்
கண்ணுவறநோக்கிக்கையாற்றொழுகின்றேன்.

(இ - புரை.) 'உண்ணப்படாத தேனாகியும் தெவிட்டாத மதுரமுள்ள அமிர்தமாகியும் கழுவப்படாத மாணிக்கமணியாகியும் வேதப்பொருளாகியு மிரு

க்கும் கடவுளே! இலக்கத்தினுல் அளவுபடாத தன்பத்தினுல் வருத்தங்கொண்ட அடியேன் உம்மைக் கண்ணினுற்றரிசித்துக் கைகளாற்றொழுகின்றேன். எ - று. மண்ணுமணி - சாணையாலொளிபெருது இயற்கையால் ஒளிபெற்ற மணி. மண்ணல்-கழுவல் சாணைபிடித்தல் முதலிய பலபொருளொருசொல்.

அன்புக்கோரன்பாயறத்துக்குநல்லறமாய்
வன்புக்குவன்பாய்வடிவொருவிநின்ருயை
முன்புக்குணர்விலனுய்மூங்கைத்தொழில்புரிந்தே
னென்புக்குருகவெளிதிற்பணிகின்றேன்.

(இ - புரை.) அன்புக்கு அன்பாகியும் தருமத்துக்குத் தருமமாகியும் கடினத்துக்குக் கடினமாகியும், உருவமின்றிநின்ற தேவரீரை, முன்பு சேரத்தக்க ஞானமில்லாதவனுய் ஊமைத்தன்மை யுள்ளவன்போலிருந்தேன்; இப்போது எலும்புகள் நெக்குவிட்டுருகும்படி எளிதில் பணிகின்றேன். எ - று. (௩எ)

என்றேயரசன்களிபெருகியேத்தெடுப்பக்
குன்ருவியயக்குலக்கொழுந்தின்கோமானும்
பின்ருதகாட்சிப்பெரியோயெழுகவெனத்
தன்ருளில்வீழ்ந்தானைத்தன்றிருக்கையாலெடுத்தான்.

(இ - புரை) பத்திராயு என்னும் அரசன் இவ்வாறு சொல்லி ஆனந்த பரவசனுய்த் தோத்திரஞ்செய்ய, குன்றுதலிலாத மலையரையன் புத்திரியாகிய அம்பிகை பாகரானவர் அன்புமுதிர்ந்தவனே! எழுந்திருவென்று தன்திருவடியில் பணிந்தவனைத் திருக்கரங்களால் எடுத்தருளினுர். எ - று. (௩அ)

எந்நிலையுந்தானுமிறைவனெடுத்துனது
மன்னுநிலைதோவான்மறையவனுய்வந்தநாம்
பொன்னவிர்மாமேனிப்பொருப்பரையன்றன்மகள்காண்
டன்னிகரில்பார்ப்பனியாய்ச்சார்ந்ததளிரியலே.

(இ - புரை,) எப்பொருளும்தானுகிய இறைவன் எடுத்தருளி, அன்பனே! உன்னுடைய பத்திநிலையை எல்லாரும் அறியத்தக்கதாக நாமே பிராமணனுக வந்தோம்; தனக்குநிகரில்லாத பிராமணஸ்திரியாகவந்ததும் பொன்மயமான மேனியையுடைய மலையரையன் புத்திரியாகிய பார்வதிதேவியாம். எ - று. ()

வந்துமறஞ்செய்தமறப்புலியுமாயைகாண்
சிந்தைகவலாதொழிநீயுன்தேவியுமா
யிந்தவுமையுடனேயெம்மையும்பூசித்ததனுற்
புந்திமகிழ்ந்தேம்பொருந்துவரங்கேளென்ருன்.

(இ - புரை.) இக்கேவக்து பிராமணஸ்திரியை அடித்துத் தூக்கிக்கொண்டுபோன வீரமுள்ள புலியோவென்றால் மாயையாகும்; நீ உன்மனதிற் கவலைப்படவேண்டுவதில்லை, நீயும் உன்மனைவியும் எம்மையும் உமையவளையும் பூசித்ததனால் உள்ளத்தில் மகிழ்ந்தோம்; உனக்குவேண்டிய வரங்கேளென்றார். எ - று. (சo)

வேந்தர்பிரானுமதுகேட்டுமெய்பனிப்ப
வேந்துமுலைமென்றோளிமயத்திற்றேவியொடும்
போந்தபரிசெளிதோவேறோர்பொருளுமுண்டோ
நீந்துதுயரக்கடலைநீந்தினேற்கென்றுரைத்தான்.

(இ - புரை.) பரமசிவன் அருளிச்செய்த திருவாக்கைக்கேட்ட பத்திராயு உடல் கம்பிதங்கொண்டு, உயர்ந்ததனங்களும்மென்மையானதோள்களுமுடைய பார்வதிதேவியாருடன் சுவாமிகள் எழுந்தருளியது எளிதானதோ? துயரக்கடலைநீந்திய அடியேற்குக் கேட்கவேண்டிய வரமும் வேறேயிருக்கிறதோ? எ-று.

நீதிவரம்பிகந்துநின்றேனுமென்மனையுந்
தாதையுமென்யாயுந்தமியேம்படருழந்த
வேதமறக்காத்தவிளங்கோவுமைந்தனுநின்
பாதமலர்சேரப்பணிப்பாயெனவேரடும்.

(இ - புரை.) நீதிவரம்பைக் கடந்துநின்ற அடியனேும் என்மனைவியும் அடியேன் தாயுந் தகப்பனும் எங்களைக் காத்துரக்ஷித்த வணிகேசனும் அவன் புத்திரனும் தேவரீருடைய திருவடிமலரைச் சேரும்படி அருள்செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தான். எ - று. (சஉ)

காவலவன்றேவியுமெங்காரணனேயெற்பயந்த
மாவலவன்வண்புகழான்மன்னுசந்திராங்கதனு
மேவலருங்கண்ணுளிலங்கிழைசீமந்தனியாம்
பூவையுநின்பாதம்புகுதப்பணியென்றாள்.

(இ - புரை.) அந்தராசன்தேவியானவள் சுவாமியை நோக்கி, எங்கள் ஆண்டவரே! அடியாளைப்பெற்ற குதிரைச்சேவகத்தில் வல்லவனும் புகழுள்ளவனுமான சந்திராங்கதனும் பாணங்களையொத்தகண்களையுடைய சீமந்தனியும் தேவரீர் திருவடிகளை அடையும்படி அருள்செய்யவேண்டுமென்றாள். எ - று. மாவலவன் - என்பதற்கு - மிக்கவல்லமையுடையவன்என்னலுமொன்று. (சங)

இயாவையுந்தானனவிறையோன்றனதுதிருத்
தேவியொடுமாங்கவர்கள்செப்பும்வரமீந்தகன்றான்

மாவியலுக்தேர்தூண்டிமாணவேன்மன்னவனுங்
காவிநெடுங்கண்ணியொடுங்காயர்பதிபுகுந்தான்.

(இ - புரை.) எல்லாப்பொருளுந் தாமாயிருக்கும் கயிலாசபதியானவர் அவர்கள் சொல்லியவரம் அருளிச்செய்து, பார்வதிதேவியாருடன் எழுந்தருளி விட்டார். பத்திராயு நீலோற்பலமலர்போன்ற கண்களையுடையதன்மனையுடன் தேரிலேறிக்கொண்டு தன் அழகியபதியிற்சேர்ந்தான். எ - று. (சச)

வையம்பொதுநீங்கமன்னர்திறைபளப்பச்
செய்யதனியாணைசெல்லவொருகோலோச்சிப்
பொய்யில்பதினுயிரம்பருவம்பூதலங்காத்
தெய்யும்வரிசிலையானேந்தற்கரசளித்தான்.

(இ - புரை.) தன்பதியிற்சேர்ந்த அவ்வரசன் இவ்வுலகம் பொதுவின் றித் தன்னதேயாகவும், மறுதேசத்தரசர்கள் திறைகொண்டுவந்தளக்கவும், நன் மையுள்ள தன் ஆக்கினுசக்கரம் நிகரின்றிநடக்கவும் செங்கோல்செலுத்திச் சரி யாகப் பதினுயிரம்வருஷம் பூமியைக்காத்து அரசுசெய்து, பாணமெய்தற்குரிய வில்லேந்திய அவ்வரசன் தன்புத்திரனுக்கு அரசாட்சியைக் கொடுத்தான். எ - று. (சரு)

வேயனையமென்றோள்விளங்கிழையினேடெதிர்ந்த
பாயும்விடையோன்வரமளித்தபான்மையினுன்
மாயனுநான்முகனுந்தேராமறைமுடியின்
சேயபதந்தேவியொடுசேர்வேந்தன்சேர்ந்தானே.

(இ - புரை.) பாயாநின்ற ருஷபவாகனமுடைய சாம்பசிவமூர்த்தியான வர் முன்னம் பசியமூங்கிலையொத்த தோள்களையுடைய பார்வதிதேவியாரு டன் எழுந்தருளிவந்து வரமருளிச்செய்த தன்மையினுல், பத்திராயுவென் னும் அரசன் தன்மனையாளுடன் திருமாலும் பிரமதேவனுங் காணுத வேதாந் தப்பொருளாய் விளங்கும் மோக்ஷத்தையடைந்தான். எ - று. (சசு)

மன்னர்பரவவருஞ்சந்திராங்கதனுந்
தன்னிகரிறேவியொடுஞ்சார்ந்தான்சிவலோக
மென்னமுனிசூதனியம்பவதுகேளாமு
னன்னெறிசேர்மாமுனிவர்நாதனிசைபாடினுர்.

(இ - புரை.) அரசர்களெல்லாரும் புகழும்படி ராசாங்கஞ் செலுத்திய சந்திராங்கதராசன் தன்தேவியுடன் சிவலோகஞ்சேர்ந்தானென்று சூதமுனிவர் சொல்ல; நல்லொழுக்கமுள்ள நைமிசாரணியமுனிவர்கள் அந்தச்சரித்திரங் கேட்டவுடன் பரமசிவத்தின் அருட்டிறப் பெருமையைப் புகழ்ந்து பாடி னுர்கள். எ - று. (சஎ)

பதினுன்காவது பத்திராயுமுத்திப்பெற்ற அத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அருஎ.

சிவமயம்.

# பதினைந்தாவது

# விபூதிமகிமையுரைத்த அத்தியாயம்.

மற்றுமோர்கதைவிளம்பெனவருதவர்வழங்கச்
செற்றமால்குணவாமதேவன்புரிசெயலுஞ்
கற்றைபஞ்சடைக்கடவுள்வெண்ணீற்றின்மாக்கதையுஞ்
சொற்றதன்மைநூற்சூதமாமுனிவரன்சொல்வான்.

(இ - புரை.) இன்னமுஞ் சிவசரித்திரம் அருளிச்செய்யவேண்டுமென்று நைமிசாரணிய முனிவர்கள்கேட்க, நற்குணங்களையுடைய வாமதேவனென்னும் ஒரு முனிவர்செய்தசெய்கையும், செஞ்சடையையுடைய கயிலாசபதியின் பரிசுத்தமான நிறமுள்ளதாய்ப் பெருமைதங்கிய விபூதிமான்மியமும், சொல்லுகின்ற தன்மையுடைய வேதமுதலான சாத்திரங்களுணர்ந்த சூதமுனிவர் சொல்லுவாராயினர். எ - று. (க)

கொலைபெருக்கியகொடுந்தொழில்வாழ்க்கையரேனுந்
தலைமைபெற்றவிக்கதையினைக்கேட்டதன்மையினோர்
நிலைமைபற்றியபவத்தொடுமும்மலநீங்கி
யலைவறப்பரசிவபதமுத்தியேயடைவார்.

(இ - புரை.) எப்போதும் உயிர்க்கொலைசெய்கின்ற கொடிய தொழிலையுடைய பாதகரேயானாலும், முதன்மையாகிய இந்தச்சரிதையைக்கேட்குந்தன்மையர்கள் தொடர்ந்துவருகின்ற பிறவியும் மும்மலமும் நீங்கி, அலைவற்றிருக்கும்படிச் சிவபதமாகிய முத்தியை அடைவார்கள். எ - று. (உ)

காமதேவனைமுருக்கியகடவுளைக்கடுக்கைத்
தாமதேவனைவழிபடுதகுதியன்றவத்தாற்
றாமதேவனும்புனிதநற்றுறவினர்துதிக்கும்
வாமதேவனென்றுளனொருமாசிலாக்குணத்தோன்.

(இ - புரை.) மன்மதனை நெற்றிக்கண்ணினலெரித்தவரும் கொன்றைப் பூமாலையணிந்தவருமாகிய பரமபதியினை ஆராதிக்கும் அன்பினையுடையவனும்,

தவத்தினால் அக்கினிதேவனு முனிவர்களும் புகழும்படியாகிய பரிசுத்தமான குணமுள்ளவனுமாகிய வாமதேவனென்னும் ஒருமுனிவனுளன். எ - று.

தூமம் - அக்னி. (௩)

கருத்துகேவலத் துற்றவன் புறத்துறைக்கருமத்
தருக்கியில்லவனீற்றினால்விளங்குமெய்யணியன்
விரித்தவேணியன்சீரையன்விளங்குவெண்கபாலந்
தரித்தசெங்கையனையமேற்குநரெனச்சமையா.

(இ - புரை.) மோக்ஷத்தில் கருத்தைவைத்திருப்பவன், உலகசம்பந்தமான காரியத்தில் விருப்பமில்லாதவன், விபூதியே பூஷணமாகத் தரித்துக்கொண்டு விளங்கும் திருமேனியையுள்ளவன், பரந்தசடையினையுடையவன், அரையில் மரவுரிதரித்திருப்பவன், விளங்குகின்ற வெண்கபாலந்தரித்த செங்கையனாய்ப்பிக்ஷைவாங்குகின்றவர்கள்போலவேஷம்பூண்டு, எ-று, கேவலம்-மோக்ஷம்.

புவனிமாந்தருக்கின்னருள்சுரந்திடும்பொறையாற்
கவனமோடுலகெங்கணுந்திரிந்திடுகழலான்
சிவனைநேர்பவன்செய்தொழிலிகந்தவனொருநாள்
றவனியோர்புகழன்றிலப்பெருவனமடைந்தான்.

(இ - புரை.) இவ்வுலகத்தி லிருப்பவர்களுக்கு இனிய அருள்பொழியுஞ் சாந்தகுணத்தினால் விரைவாகத் தேசமெங்குஞ் சஞ்சரிக்கும் பாதத்தையுடையவனும், சிவனுக்கொப்பானவனும் செய்யுந்தொழிலை நீங்கினவனுமான அம்முனிவன் ஒருநாள் இவ்வுலகத்தார் புகழும் அன்றில் வனத்தையடைந்தான். எ - று.

அரியமாமுனியடைதலுமயிலெயிற்றகல்வாய்க்
கரியமாசுணக்கச்சினனுரககங்கணத்தா
னெரியுநீள்கடற்றிரையெனநெளிபுருவத்தான்
பெரியமால்வரைமுழையெனவிரிந்தபேழ்வாயான்.

(இ - புரை.) அருமையாகிய தவமுள்ள வாமதேவமுனிவர் அந்தவனத்தில் அடைந்தவளவில், வேலையொத்த பற்களும் அகன்றவாயும் கருநாகக்கச்சும் சர்ப்பகங்கணமும் நெருங்கிய நீண்டகடலின் அலைபோல் மேலேறிட்ட புருவமும் பெரியமலையின் குகைபோலிருக்கும் ஆழ்ந்த வாயுமுடையவனாய், எ - று.

நெட்டைவெண்பிறையிரண்டெனநிணப்புலால்கமழுந்
தட்டமென்றுமென்றரக்கியவதரத்தன்றழலாய்
வட்டமிட்டுழல்கண்ணினன்வடவையஞ்சிகைபோல்
விட்டெழுந்தசெங்குஞ்சியன்வெடிகுரனமையான்.

(இ - ரை.) நீண்டு வெண்மையாகிய இரண்டுபிறையை வைத்திருப்பது போன்று நிணங்கள் நாறிக்கொண்டிருக்கும் பற்களால் மென்று மென்று அரக்கிக்கொண்டிருக்கும் உதட்டினையும் அக்கினிமயமாய் வட்டமிட்டுச் சுழன்று கொண்டிருக்கும் கண்களையும் வடவாமுகாக்கினியின் சிகைபோலச் கொழுந்துவிட்டு மேலெழுந்த செம்மயிரினையுடையவனும் இடிபோல ஒலிக்குங் குரலோசையுட னகைசெய்கின்றவனுமாய், எ - று. (எ)

அஞ்சனக்கிரிதாள்கொடுநடந்தெனவடைந்து
வஞ்சகத்துவல்லரக்கன்மாமுனிவனைவதைப்பான்
நெஞ்சுருத்துநீபோகலைநிற்றியென் றுரையா
வெஞ்சினத்தொடுதழீஇயதன்கரங்களால்விசித்தான்.

(இ - புரை.) வஞ்சகத்தையுடைய வலிய ஒருராக்ஷதன் நீலமலையானது கால்பெற்றுக்கொண்டு நடந்து வருவதுபோல வந்து, பெருமை பொருந்திய வாமதேவமுனிவனைக்கொல்ல மனதிற்கோபங்கொண்டு, அம்முனிவனைப்பார்த்து நீ போகாதே நில்லுநில்லென்று உருத்துச்சொல்லிக் கொடியதான கோபத்துடன் பிடித்துக்கொண்ட தன்கைகளால் இறுக்கினன், எ - று. (அ)

நீள்பனைக்கையாற்றழுவினனிறுக்கவந்நிமலன்
றோள்களிற்றிருநீறுமெய்படுதலாற்றொடலான்
வாளரக்கன்வல்லுருவமும்பாவமுமாய
வேளெனத்திகழுருவொடுநின்றனன்விளங்க.

(இ - புரை) பனைபோன்ற நீண்டகைகளால் தழுவியிறுக்கவும் பரிசுத்தனாகிய அம்முனிவனுடைய திருந்தோள்களிற் பூசியிருக்கும் விபூதியானது அவ்வரக்கன்சரீரத்திற் பட்டதினாலும் அம்முனிவன் திருமேனியைப் பரிசித்ததினாலும், அந்தராக்ஷதனுடைய கோரரூபமும் பாபமுந் தொலையவே, மன்மதன் போலப் பிரகாசியாநின்ற சௌந்தரியமுள்ள சரீரத்துடன் நின்றான். எ - று. (கூ)

எரிசிகைத்தழற்கடவுளையடைந்தவையாவும்
விரியுநல்லழலுருவமாய்விளங்குமாறென்னக்
கரியவல்லுருவொழியவல்லரக்கனக்கணத்தி
னுருவப்பைம்பொனினொளியவிர்மேனிபெற்றுயர்ந்தான்.

(இ - புரை.) எரிகின்ற சிகையையுடைய அக்கினிதேவனை அடைந்த பொருள்களெல்லாம் பரந்த நல்ல அக்கினிமயமாய் விளங்குவதுபோல, கருமைநிறமுள்ள வலிய உருவமொழிந்த மாத்திரத்தில் அப்பொழுதே அவ்வரக்கன்மாற்றுயர்ந்த பொன்போலவிளங்கு மேனிபெற்றுயர்ந்தான். எ - று. (கo)

தன்னுருக்கரந்தொழிந்திடத்தாகமும்பசியுந்
துன்னுதீக்குணந்தொலைந்ததுபாவங்கடொலைய
மன்னுமுற்பவத்தியற்றியதோன்றலுமனத்தான்
முன்னிமாதவகேட்டியென்றிறைஞ்சினன்மொழிந்தான்.

(இ - புரை.) தன்னுருவம் மறைந்து நீங்கவே, அந்தராக்ஷதனுக்குத் தாகமும் பசியும் மாறுமலிருந்த தீயகுணமுந்தொலைந்தது, இப்போது பாவங்கள் தொலையவே பூர்வசென்மத்தின் இயற்கைகளையறிந்து, மனதாற்றியானித்து வாமதேவமுனிவனைவணங்கி மகாதபசியாகிய முனிவரேகேளுமென்று சொல்லுகிறான். எ - று. (கக)

வெப்பினுலுறுபசியினுன்வனத்திடைமெலிந்தே
னொப்பிலாத்தவமுனிவநின்னூறுபெற்றதனு
லப்புலாலுடலரும்பசிகொலைத்தொழிலகலச்
செப்பலாயதன்றுயதோர்திருவுருவமைந்தேன்.

(இ - புரை.) வெப்பத்துடன் எப்போது மாறுமலிருக்கும் பசியினுல் இக்காட்டில் வருந்தினேன், ஒப்பில்லாத தவமுனிவரே! உம்முடைய பரிசத்தை அடியேன்பெற்றதினுல் அந்தராக்ஷத உருவமும் அடக்கக்கூடாத பசியும் கொலைத்தொழிலும் நீங்கிச் சொல்லத்தகாத நல்லுருவத்தையு மடைந்தேன். எ-று. ஊறு - பரிசம். (கஉ)

உற்றுநின்றிருக்கண்களாலொருகணநோக்கப்
பெற்றநாயடியேனுழல்பிறவிநோயகற்றப்
பற்றறுங்குணப்பரமன்வாழ்பரகதியடைய
முற்றுமென்னைநீபுரப்பதுகடனெனமொழிந்தான்.

(இ - புரை.) ஒருக்ஷணப்போது உம்முடைய கண்களால் என்னைப்பார்க்கும்படிப்பாக்கியம்பெற்ற நாயடியேன், இயல்பாகவே பற்றற்றகுணத்தையுடைய பரசிவத்தின் திருப்பதியைப்பெறவும் இன்னமும் இவ்வுலகத்தில் உழலுகின்ற பிறவிப்பிணி நீங்கவும் என்னை ரக்ஷிப்பது தேவரீர் கடமையேயாமென்றுசொன்னுன். எ - று. (கந)

கேட்டமாமுனியுவகையுங்கருணையுங்கெழுமிக்
காட்டகந்தொறுந்திரிதருகடுந்தொழிலரக்க
நாட்டுநீயெவனிங்குவந்தமையெதுநவையா
வீட்டுதீயுருவெடுக்கவென்னியற்றினையென்றான்.

(இ - புரை.) நல்லுருவம்பெற்றவன் இப்படிச் சொல்லியதைக்கேட்ட வாமமுனிவர் சந்தோஷமும் கிருபையும் பொருந்தி அவனைப்பார்த்து, காட்டிடமெங்குஞ் சஞ்சரிக்கின்ற கொடியசெய்கையையுடைய அரக்கனே! இவ்வண்ணம்பேசுகிறநீயாவன்? இவ்விடத்தில் வந்தகாரணமென்னை? பாவத்தினால்வரத் தக்க தீயநாகிய ராக்ஷதரூபம் எடுக்கும்படி என்னபிழை செய்தனை? என்று கேட்டருளினர். எ - று. (௧௪)

அந்தவாசகங்கேட்ட லுமகமகிழ்ந்தரக்க
னெந்தைநின்னருட்பேற்றினாலெழுமையுமுணர்ந்தேன்
வந்தவாறெலாமோதுகேன்கேளெனவணங்கி
முந்தையுற்றதும்புகுந்ததுஞ்சோர்வறமொழிந்தான்.

(இ - புரை.) அந்த வார்த்தையை அவ்வரக்கன் கேட்டவுடன் மனமகிழ்ந்து வணங்கி, என்னையனே! உன்னுடைய கிருபையைப் பெற்றதினால் எழுபிறப்பும் அறிந்தேன், நான்வந்த வரலாற்றையெல்லாஞ் சொல்லுகிறேன், கேட்பீரென்று, முன்னே சம்பவித்ததையும்வனத்தில்வந்ததையும் ஒழிவில்லாமற் சொல்லுவானாயினன். எ - று. (௧௫)

வேறு

ஐயனேகேட்டியிந்தப்பிறவிக்கையைந்தாந்தோற்றம்
வையகம்புகழவாழ்துச்சயனென்னுமன்னனென்ன
வெய்யபாதகங்கள்செய்யுமிலேச்சர்க்குவேந்தனாகிச்
செய்தொழிலனன்கெண்ணாதுசிறுதொழிலியற்றிநின்றேன்.

(இ-புரை.) ஐயனே! கேட்பீராக, இந்தச் ஜெனனத்துக்குமுன் இருபத்தைந்தாம்பிறவியில் இவ்வுலகம் புகழும்படிவாழ்கின்ற துச்சயனென்னும் ராசனாய்க் கொடுமையான பாவங்களைச்செய்யும் மிலேச்சர்களுக்கிறைவனாகி, நல்ல தொழிலைச்செய்ய எண்ணாமல், இழிதொழிலைச்செய்துகொண்டிருந்தேன். எ-று

வாழுநாளுலகுக்கெல்லாம்வருந்திடக்கொடுங்கோல்செய்தேன்
வீழிவாய்மயிலன்னார்கள்வேண்டுநர்தமைவருத்துஞ்
சூழிமாவியானையென்னவொருபகற்றோய்ந்துகாத்துப்
பாழியஞ்சிறையிலெண்ணரில்பாவையர்க்கலக்கண்செய்தேன்.

(இ - புரை.) அவ்வாறு வாழுநாளில் உலகுக்கெல்லாம் வருத்தம் உண்டாகும்படிக் கொடுங்கோல் செலுத்தினேன், வீழிக்கனிபோன்றவாயும் மயில் போன்றசாயலுமுடையமாதர்களில எனக்கு விருப்பமானவர்களையெல்லாம் விவாகஞ்செய்துகொண்டு வருத்துகின்ற முகபடாத்தினையுடைய யானைபோல ஒருநாளவர்களைப்புணர்ந்து, அதன்பின்பு பலமான சிறையினிடத்திற் காவற்படுத்தி, அனேகமாதர்களுக்குத் துன்பத்தைச் செய்தேன். எ-று. சூழி-முகபடாம்.

பின்னரோர்போழ்துந்தோயேன்பிடுசாறெழுகுலத்திற்
கன்னிமாரரசர்மாதர்வணிகாதங்கற்பின்மிக்கோர்
தொன்னெறிவேளாண்செல்வத்தோகையராதியாக
வன்னியவருணத்துள்ளமகளிர்களனந்தங்கோடி.

(இ - புரை.) விவாகஞ் செய்துகொண்ட தினத்தில் புணர்வதேயன்றி மறுபடியும் ஒருநாளாவது அம்மாதரைப்புணரேன், பெருமைமிகுந்தபிராமண குலமாதர்கள் க்ஷத்திரியகுலமாதர்கள் வைசியகுலமாதர்கள் பழமையானமுறையையுடைய சூத்திரகுலமாதர்கள் முதலாக அன்னியசாதியிலுள்ள மாதர்கள் அனந்தங்கோடியரும், எ - று. (கக)

கம்மியமகளிர்சூனமடந்தையர்கழிகாரோடக்
கொம்மைவெம்முலையார்குன்றக்கொடிச்சியர்குணுங்கமாதர்
தம்மியற்குலாலமாதர்மஞ்சிகத்தையனல்லார்
சும்மையம்பரதமாதர்சுடுதொழிற்புலையமாதர்.

(இ - புரை.) கம்மாளக்குலமாதர்களும் ஊன்விற்குமாதர்களும் காரோடர்குலத்திற்பிறந்த விருப்பத்தைத்தருந் தனமுள்ளமாதர்களும் மலையில்வாழுங் குறமாதர்களும் தோல்வினைஞர் மாதர்களும் தம்மியற்கைமாறுத குயவர்குலமாதர்களும் நாவிதக்குலமாதர்களும் நுளையர்குலமாதர்களும் நீசகுலமாதர்களும், எ-று. சூனர்-ஊன்விற்போர். குணுங்கர்-தோல்தொழிலோர்.மஞ்சிகர்-நாவிதர்.

பங்கயன்படைத்தவிந்தவருணத்தின்பகுதிதம்மை
யிங்கியான்கணித்துக்கூறற்கெளியவன்றவற்றிலுள்ள
மங்கையர்குலங்கடோறுமனந்தமாய்வரைந்ததன்றித்
தங்கியகாதற்றீரப்பெற்றிலேன்காமந்தன்னால்.

(இ - புரை.) பிரமதேவன் சிருஷ்டித்த இந்தப்பகுப்புள்ள சாதிகளை நான் அளவிட்டுச்சொல்ல எளிதல்ல, அந்தந்தச் சாதிகடோறும் அனந்தமாதர்களை விவாகஞ்செய்ததேயல்லது காமமிகுதியால் எனக்குண்டாகிய ஆசை நீங்கினேனில்லை. எ - று. (உ0)

பிறிதொறுசெயலுஞ்செய்யேன்காமநோய்பிணித்தநெஞ்சி
னறிவொருசிறிதும்வையேனமைச்சர்தமொழியுங்கொள்ளேன்
சிறுதொழின்மருவிநின்றேனரசியல்சிறிதுந்தேரே
னுறுதில்பரிப்புதல்வர்தாமுமிகழ்ந்திடநோயின்மாய்ந்தேன்.

(இ - புரை.) வேறொருதொழிலுஞ் செய்கிறதில்லை, காமமென்கிறநோய் பொருந்திய நெஞ்சில் கொஞ்சமேனும் அறிவைவைப்பதில்லை, மந்திரிகள் சொல்லையும் ஏற்றுக்கொள்ளேன், ஈனத்தொழிலைப் பொருந்தியிருந்தேன். அரசாட்

சியின் தன்மையைச்சிறிதும் விசாரித்தறியேன், வேகத்தையுடைய வெற்றி பொருந்திய குதிரையேறிச்செலுத்தும் புத்திரர்களும் இகழத்தக்க நோய்கொண்டு இறந்தேன். எ - று. நொறில் - விரைவு. (உ௧)

இறந்தபின்காலதூதர்பாசத்தாலார்த்துவீக்கி
நிறைந்தொளிர்பரப்பிரும்புத்தூண்டிலென்குறியினேரோ
யறைந்தனர்பற்றியீர்த்தந்தகன்றிருமுன்காட்டச்
சிறந்தொளிபரந்தபூணான்சிலதரைநோக்கிச்சொன்னான்.

(இ-புரை.) இவ்விதமாக இறந்தபின்பு, காலதூதர்கள்பாசத்தினா லிறுக்கி, ஒளிநிறைந்துபரந்த இருப்புத்தூண்டின்முள்ளை என்னுடையகோசத்தினேராக அறைந்து இழுத்துக்கொண்டுபோய் இயமன் முன்னேகாட்ட; சிறந்து ஒளி மிகுந்த ஆபரணமணிந்த அத்தருமன ஏவலாளிகளைப்பார்த்துச் சொல்லி னான். எ - று. (உஉ)

ஆவியந்துகின்மின்னாரையணைகலான்சிறையிற்செய்த
பாவியையென்றுந்தீராப்படிற்றொழுக்கத்தினானைக்
கோவியலழியத்தாதுகுழம்புசேர்கும்பிதன்னுண்
மேவநீர்விடுதிரென்னவெடிபடவிளம்பினானே.

(இ - புரை.) பாலின்புகைபோல வெண்மையு மிருதுவுமுள்ள அழகிய வஸ்திரமணிந்த தன்மனைவியரைப்புணராமல், சிறையில்வைத்த பாவியும், எப்போதும் நீங்காத பொய்யொழுக்கமுள்ளவனுமாகிய இவனைப் பெருமைப் பாடுகெடும்படி இந்திரியக்குழம்புநிறைந்த கும்பிபாகமென்னும் நரகில் நீங்கள் விடுங்களென்று மிகுந்தொனியுடன் சொன்னான். எ - று. (உ௩)

கடலினும்பெரியவாயநரகிடைக்கடிதினுய்ப்ப
முடைகொளிந்திரியந்தன்னின்மூழ்கியுநீந்திநீந்திக்
குடவயிறகல்விலாவுநிறைதரக்குடித்துமிவ்வா
றடைவுறுவருடமைபாறுயிரமலக்கணுற்றேன்.

(இ - புரை.) அத்தூதவர்கள் சமுத்திரத்தைப் பார்க்கிலும் பெரியதாகிய நரகத்தில் விரைவாகக் கொண்டுபோய்ச் சேர்க்க; நாறுகின்ற இந்திரியத்தில் முழுகியும் நீந்தியும் குடம்போன்ற வயிறும் பரந்தவிலாப்புறமும் நிறையும்படி குடித்தும் இவ்வாறு முப்பதினாயிரம்வருஷந் துன்பமுற்றேன். எ - று. (உ௪)

அழிமுடைநரகநீங்கியாண்குறிகோடிதாங்கும்
பழியுறுமுடலங்கொண்டபசாசுருவெடுத்துக்கானிற்
கழிவுறுத்தெய்வயாண்டுநூறவண்கழித்துமாய்ந்து
விழியழல்பொழியுஞ்சீற்றவெங்கொலையுழுவையானேன்.

(இ - புரை.) கெட்டநாற்றத்தையுடைய நரகத்தைவிட்டுநீங்கி ஒருகோடி ஆண்குறியோடு பழிபொருந்திய பேயுருவங்கொண்டு காட்டில் நீங்காமல் நூறுதேவவருஷம் கழித்து, பின்பிறந்து கண்களில்தீப்பொறியைச்சொரிகின்ற கொலைத்தொழிலையுடைய புலியாகப்பிறந்தேன். எ - று. (உரு)

படுமலைமுழையின்வைகும்பாந்தளாய்த்தோன்றினேன்பின்
சடைமயிர்ச்செந்நாயாகத்தரணியிலுதித்துமாய்ந்தேன்
கடைமலமருந்தும்பன்றியாயினேன்காமரூபி
யுடையதீயுருவைப்பெற்றேன்ஞமலியாயுதித்துநின்றேன்.

(இ - புரை.) பின்பு மலைக்குகையிலிருக்கும் பாம்பாக இம்பூமியிற்பிறந் தேன், பின்பு சடை மயிரையுடைய செந்நாயாகப் பூமியிற்பிறந்து மாண் டேன், அதன் பின்பு மலத்தைப்புசிக்கும் கடைப்பட்ட பன்றியாகப்பிறந் தேன, பச்சோந்தியினுடைய உருவத்தைப்பெற்றேன், நாயாய்ப்பிறந்திருந் தேன். எ - று. காமரூபி - பச்சோந்தி. (உசு)

வீழ்முகநரியாய்வந்தேன்விளிந்துபின்முயலாய்வந்தேன்
றாழ்வுறமானுமானேன்றத்துவானரமுமானேன்
காழ்சிறைக்கங்கமானேன்கடுநடைநகுலமானே
னூழ்வினை துரப்பக்காகத்துருவெடுத்துழன்றுவீந்தேன்.

(இ-புரை.) நீண்டமுகமுள்ளநரியாய்ப்பிறந்தேன், இறந்தபின்புமுசலாய்ப் பிறந்தேன், பின்பு தாழ்ச்சியுற்ற மானாய்ப்பிறந்தேன், அதன்பின்பு தத்துகின்ற குரங்காயும்பிறந்தேன்,பின்பு உறுதியான சிறகுள்ள பருந்தாய்ப்பிறந்தேன்,கடு நடையுள்ள கீரியுமானேன், ஊழ்வினையானது துரத்தலைச்செய்யக்காக்கையா ய்ப்பிறந்துழன்று இறந்தேன். எ - று. (உஎ)

வல்லுகிரெண்குமானேன்வருபுவனத்துவாழும்
பல்பொறிக்கோழியானேன்பாதகக்கரமுமானே
னில்லுறைபூசையானேனெறிகுரற்றவளையானேன்
கல்லிநீருண்ணுங்கூவக்கயத்துறைகமடமானேன்.

(இ - புரை.) வலியநகத்தையுடைய கரடியாயும்பிறந்தேன், இந்தப் பூமி யில்வாழும் பலபுள்ளிகளையுடைய கோழியானேன், பாவமுள்ள கழுதையுமா னேன், இல்லங்களில்வாழும் பூனையானேன், கத்துகிறகுரலையுடைய தவளை யானேன், தோண்டுதலால் உண்ணும்படியுண்டான நீர்நிறைந்த கிணறு குளங் களில் ஆமையாய்ப்பிறந்தேன். எ - று. பூசை - பூனை. (உஅ)

வரியுடைமீனுமானேன்மாய்ந்துமூடிகமுமானேன்
பரியபைங்கழலவுண்கட்படர்சிறைக்கூகையானேன்

சொரிமதத்தருவிதூங்குந்துளைக்கைமாவியானையானே
னிருபத்தோடைந்தாந்தோற்றமிவ்வனத்தரக்கனானேன்.

(இ - புரை.) வரிகள்பொருந்திய மீனானேன், இறந்து பெருச்சாளியுமா னேன், பருத்தகாலும் தீப்பொறிக்கும் கண்களும் பரந்தசிறகுமுள்ள கோட் டானானேன், அருவிபோல மதநீர்பொழியுந் துதிக்கையுள்ள யானையுமானேன், இருபத்தைந்தாம்பிறப்பில் இவ்வனத்தில் ராக்ஷதனானேன். எ - று.

பரிய - பருத்த. (உ௯)

பரந்தவெங்கானந்தன்னிற்பறவைபல்விலங்குமக்க
ணிரந்தரந்தொடர்ந்துபற்றிக்கொலைசெய்துணங்கடித்து
மரந்தைவெம்பசிதீராமலயர்வுற்றேனமுதவாரி
சொரிந்திடும்புயலையொப்பாய்நினைக்கண்டேன்றுயரங்காணேன்.

(இ-புரை.) விசாலமாகிய இக்காட்டில் பலபக்ஷிகளையும் மிருகங்களையும் பலமனிதர்களையும் கண்டுபிடித்துக் கொன்று மாமிசங்களைத்தின்றும் வருத்தத் தைத்தருகிற பசியடங்காமல் துன்பங்கொண்டிருந்தேன், இப்படியிருக்கையில் அமிர்தமழைபொழியும் மேகம்போலக் கிருபைபொழியும் உம்மைக்கண்டேன்; முன்னிருந்த துயரத்தையும் விண்டவனானேன். எ - று. (௩0)

படியினானெடுத்தகாயம்பலபலவவற்றினெல்லாங்
கொடியவெம்பாவமன்றித்தருமத்தைக்குறிக்கொண்டில்லே
னடியனேனின்னைக்கண்டின்றமரனானதற்கென்செய்தே
னொடியெனவரக்கன்சொல்லத்தவமுனிநுவல்வதானான்.

(இ - புரை.) இவ்வுலகத்தில் நானெடுத்த சரீரம் அனேகங்களாகும், அவ் வுடலங்கடோறும் கொடிய பாவத்தைச்செய்ததல்லது புண்ணியமென்பதை நினைத்ததுமில்லை; அடியேன் இப்போது தேவரீரைத்தரிசித்துத் தேவனானேன். இப்படியாவதற்கு என்னபுண்ணியஞ்செய்திருக்கிறேன் சொல்லவேண்டும், ஐய னே! என்று அரக்கன்சொல்லத் தவமுனி சொல்லுகிறார். எ - று.

நொடித்தல் - கூறல். (௩௧)

முட்டெறுகானத்தென்னைமுடுகிநின்கைகளாரக்
கட்டியகாலையென்மேற்கவினியதிருவெண்ணீறு
பட்டதுநின்மேலந்தப்பான்மையாற்பாவநீங்கி
விட்டதவ்வளவோமுன்னைப்பிறவியுமவிளங்கமேலோய்.

(இ - புரை.) முட்கள் தைக்கும் இந்தக்கானகத்தில் ஓடிவந்து என்னை உன் கைகளாற் கட்டிப்பிடித்தபோது என்சரீரத்தில் அழகுள்ளதாயிருந்த திரு நீறானது உன்மேற்பட்டது; அதனால்உன்பாவம்நீங்கிவிட்டது, அவ்வளவுதானா? முற்பிறப்பின் தன்மைகளும் தெரியப்பெற்றனை. எ - று. (௩உ)

நோயிலாதியன்றயாக்கைத்தேவனாய்நோய்தினின்றாய்
வேயுலாந்தோளியங்கன்விபூதியின்பெருமைமுற்றுந்
தூயநான்முகனுமாலுந்துணிகலாந்தகைமைத்தென்றாற்
காயமாறுடிச்செல்லுமனிதரோகருதற்பாலார்.

(இ-புரை.) புண்ணியமுடையானே! எளிதாகப் பிணியென்பதில்லாமற் பொருந்திய திவ்யசரீரத்தையுடைய தேவனாய் நின்றனே, மூங்கிலையொத்த தோள்களையுடைய பார்வதிபாகனாகிய பரமசிவந்தினுடைய திருநீற்றின்பெருமையை முழுவதும் பரிசுத்தனான பிரமதேவனும் மாயவனும் நிச்சயித்து அறியக்கூடாத தன்மையையுடையதென்றால்,வெவ்வேறு தேகமெடுத்துப்பிறந்து உழலுகிற மனிதர்களோ அறியத்தக்கவர்கள். எ - று. மேலோய் என்றதை இக்குகூட்டி உரைக்கப்பட்டது. (௩௩)

என்னினுந்திருநீற்றுண்மையியம்புவன்சிறிதுகேட்டி
தென்னவன்தமிழ்நாட்டங்கோர்தீத்தொழின்மறைவல்லாளன்
பன்னெடுங்காலம்பாரிற்பாவமும்பழியுமீட்டி
யந்நிலைநெறியுநீங்கியந்தணர்திறனும்விட்டான்.

(இ - புரை.) மனிதர்களுக்கு அரிதென்றாலும் திருநீற்றின் பெருமையைச் சிறிதுசொல்லுகிறேன்கேட்பாயாக; பாண்டியனுடைய தமிழ்நாட்டினிடத்தில் கொடிய செய்கையையுடைய ஒருபிராமணன் இவ்வுலகத்தில் பாவமும் பழியுஞ்சம்பாதித்து அதற்குச்சரியாக ஒழுக்கத்திலு மாறுபட்டுப் பிராமணத்தன்மையும் விட்டான். எ - று. (௩௪)

பொய்க்களவூறாடலானும்புன்றொழிற்களவினாலுங்
கைக்கொள்வான்பொருள்களெல்லாங்கணிகையர்திறத்திலீந்து
மைக்கணார்வயத்தனாகிக்காமநோய்மலியமேன்மே
லிக்குவேள்கணைகள்பாயநிறையழிந்திடையுநாளில்.

(இ - புரை.) பொய் சொல்லத்தக்க சூதாடுதலினாலும் இழிவான செய்கையென்கிற திருட்டினாலும் சம்பாதித்த மிகுந்ததிரவியங்களை யெல்லாம் வேசையர்களுக்குக்கொடுத்து, மையணிந்தகண்களையுடைய அந்தவேசையர் வசப்பட்டவனாகிக் காயநோய் வருத்துதலினாலும் காமசரம் பாய்தலினாலும் நிறையழிந்து இளைக்கு நாளில், எ - று. (௩௫)

ஒருபெருங்கங்குற்போழ்தினூன்விழைபுலையனில்லின்
மருவியமனைவிதன்னைக்காவினின்மணக்குங்காலைத்
திருகுவெஞ்சினத்திலீசன்செங்கைவாளுறையினீக்கி
வெருவரத்தோன்றியார்த்துவீசினன்விளிந்துவீழ்ந்தான்.

(இ - புரை.) ஒருநாள் அர்த்தராத்திரியில் ஊனையே விரும்புகின்ற ஒரு நீசன்வீட்டிலிருக்கும் அவன்மனையாளைச்சோரத்தனயாகப் புணரும்போது, அந்த நீசன் கண்டு மிகுந்த கோபமுள்ளவனாய்க் கைவாளை உறையினின்றுங் கழற்றி அக்கொடியன் பயப்படும்படி ஆரவாரித்து வீச அவனிறந்தான். எ - று. (௩௯)

பட்டபின்றாளைப்பற்றிப்புலைமகன்படர்ந்தசேரிக்
கிட்டமுள்வேலிக்கப்பாலெறிந்திடும்பிணத்தின்மீதச்
சுட்டவெண்சாம்பலேறுய்காற்சுணங்கன்வெம்பசியாலேறித்
தட்டவாய்கொண்டுகவ்வித்தசைபறித்தருந்துங்காலை.

(இ - புரை.) அந்தச்சோரன் இறந்தபின்பு அந்நீசனானவன் பிணத்தின் காலைப் பற்றிச் சேரிக்கிட்டிருக்கிறமுள்வேலிக்கு அப்புறத்திலெறிந்துவிட்டான்; அந்தப்பிணத்தின்மேல் வேறொருபிணத்தைச் சுட்டவெண்சாம்பலிற் படிந்த காலையுடைய நாயானது ஏறித் தனக்குள்ள பசியினால் பற்களையுடைய வாயைக் கொண்டு கவ்வி மாமிசத்தைப் பிடுங்கித்தின்னும்போது, எ - று. தடம்-பல்.

திண்டிறற்காலதூதர்சேர்ந்தவன்காலைப்பற்றிக்
கொண்டனரேகித்தீவாய்கும்பியின்வீழ்த்துமாங்கண்
கண்டனருமையாள்பங்கன்கணங்களக்கணத்தினெய்தித்
தண்டஞ்செய்காலதூதர்தங்களைத்தண்டஞ்செய்யா.

(இ - புரை.) மிகுந்த பலமுள்ள யமதூதர்கள் வந்து இறந்தவனைப் பிடித்துக்கொண்டுபோய்த் தீநரகிற் றள்ளும்போது பரமசிவனுடைய கணங் கள்கண்டு இறந்தவனைத் தண்டிக்கிற காலதூதர்களைத் தண்டித்து, எ - று. ()

கும்பியின்வீழ்வோன்றன்னைக்குருமணிவிமானத்தேற்றி
யும்பரினேகுவார்முன்கரியகோட்டெருமையூர்ந்து
வெம்பியமறலியெய்திவிழுத்தகவொன்றிலானை
யம்பிகைபாகன்றன்பால்விடுவதற்கடுத்ததென்னே.

(இ - புரை.) நரகத்தில் விழுகின்றவனை நிறமுள்ள ரத்தினங்கள் பதித்த விமானத்திலேற்றி ஆகாயத்திற் செல்லுகின்றவர்களெதிரில், மனக்கொதிப் புள்ள இயமன் கரியகொம்பினையுடைய எருமைக்கடாவிலேறிவந்து மேலான தகுதிஎவ்வளவுமில்லாதஇவனைப் பார்வதிபாகனிடத்தில் விடுப்பதற்குண்டான நிமித்தமென்னை? கூறவேண்டுமென்றான். எ - று. (௩௬)

சொல்லுதிரெனலுமீசன்றூதுவர்சொல்வரின்னேன்
புல்லியபிரேதவங்கம்பூதியிற்பொலிதலாலே
வல்லியத்துரிவையார்த்தமறைமுதன்மறையோன்றன்பாற்
செல்லுதிர்கொணர்திரென்னவிடைதரயாங்கள்சேர்ந்தோம்.

(இ - புரை.) சொல்லுங்களென்று இயமன் கூறவே சிவதூதர்கள் சொல்லுகிறார்கள், இவனுடைய பிரேதசரீரம் பூதியிற்படிந்தபடியினாலே புலித்தோல் உடைதரித்தருளியபரமசிவன் நீங்கள்சென்றுஅவனைநம்மிடத்துக்குக் கொண்டு வாருங்களென்று கட்டளையிட்டதினால் நாங்கள் வந்தோம். எ - று. (௪0)

பொன்னவிர்சடையினன்றனேவலிற்புகுந்துநின்றே
மின்னவிர்பூணினாய்நீவிலக்குதற்கெளியமல்லே
மென்னவோர்மாற்றங்கூறியெரிமணிவிமானத்தோடு
மன்னவன்றன்னைக்கொண்டாங்கரனுலகடைந்தாரன்றே.

(இ-புரை.) பொன்னிறம்வாய்ந்த சடைமுடியையுடைய பரமசிவன் கட்டளையினால் நாங்கள் வந்தோம், ஒளிவிளக்கும் ஆபரணமணிந்தவனே; நாங்கள் உன்னால் விலக்கத்தக்க எளியர்களல்லோம் என்று ஒருவார்த்தை சொல்லிவிட்டு, அவனை ரத்தின விமானத்தி லிருத்திக்கொண்டு சிவலோகங்கொண்டு போய்ச் சேர்ந்தார்கள். எ - று. (௪௧)

ஆதலினிருதவண்ணலவ்ணிதிருநீற்றின்றன்மை
யோதுதற்கெளிதோபொல்லாவுருவெடுத்துலகிற்றீராப்
பேதுறுமுணர்வின்பாவப்பிணியினரேனுந்தொட்ட
போதினேபுனிதராகிப்பொன்னுலகடைவரன்றே.

(இ - புரை.) ஆதலால் ராக்ஷத அண்ணலே! திருநீற்றின்பெருமை சொல்லுதற் கெளிதானதல்ல; பொல்லாத உருவமெடுத்து உலகில் நீங்காத துன்பமடைகின்ற உணர்வற்ற பாவிகளேயானாலும் விபூதியைத் தொட்டமாத்திரத்திற் புனிதர்களாய்ப் பொன்னுலகமடைவார்கள். எ - று. (௪௨)

அந்தவெண்ணீற்றையானுமரன்றிருவடியார்போல
விந்தமெய்முழுதும்பால்போலிலங்கிடவணிந்துநின்றேன்
மந்தரச்சிகரிபோலுமணிப்புயத்தரக்கவென்று
சிந்தையிலளியவாமதேவன்றான்செப்பினனே.

(இ - புரை.) மந்தரமலையின் சிகரத்தை யொத்திருக்கின்ற அழகியபுயமுள்ள அரக்கனே! அந்தவிபூதியை நானும் சிவனடியாாகள் தரித்துக்கொண்டிருப்பதுபோல இந்தச்சரீர முழுவதும் பாலைப்போல விளங்கும்படி தரித்துக்கொண்டிருக்கிறேன் என்று, மனதில் கிருபையுள்ள வாமதேவ முனிவர்சொல்லியருளினார், எ - று. (௪௩)

ஐயனேபோற்றிபோற்றியமலனேபோற்றிபோற்றி
துய்யநீறளித்தென்பாவத்தொடர்பறித்திட்டாய்போற்றி

யுய்யுமாறடியேனின்னையெதிர்தரவுய்த்தநன்மை
மைமிறுகுணத்தாயுன்றன்றிருவருள்வளத்தாற்சொல்வேன்,

(இ - புரை) ஐயனே போற்றி போற்றி, நிர்மலனே போற்றி போற்றி, தூயதாகிய திருநீறு கொடுத்து அடியேன் பாவத்தொடர்ச்சியை அறுத்தவனே போற்றி, அடியேன் கடைத்தேறும்படித் தேவரீரைத் தரிசிக்கக் கூட்டிய நன்மை எனக்கு நேர்ந்தது குற்றமற்றகுணச்சிரேட்டரே! உம்முடைய அருளின் பெருமையென்றே சொல்லுவேன். எ - று. (சச)

முடங்குளைத்தவிசினேறிமுநதைமுற்பிறப்பினுயே
னடுங்கொடிமிலேச்சதேசத்தரசியனடாத்துங்காலைத்
தொடங்கியமறையோன்றன்பாற்றூநீர்பழனமொன்றைக் ய
குடங்கையிறறெண்ணீரேந்திக்கோடியென்றுதகஞ்செய்தேன்.

(இ - புரை.) நாயேன் முற்பிறப்பில் சிங்காசனத்திலிருந்து மிலேச்ச தேசத்தில் அரசாட்சிசெய்யும்போது, வேதமோதிய ஒருபிராமணனிடத்தில் என்னுள்ளங்கையில நீர்வார்த்துக்கொண்டு இந்தவிளைநிலத்தை நீ தானம் வாங்கிக்கொள்ளென்று தத்தஞ்செய்து கொடுத்தேன், எ - று. (சரு)

பருமரத்துடவையோடும்பருவங்கள்பலன்கள்பொய்யாத்
திருமலிகழனியொன்றையளித்தருளசெய்தநன்கா
லிருபதோடைந்தாந்தோற்றத்திருந்தவயோகியைக்கண்
டருவினைதுலைப்பாயென்னமறலியுமன்றுசொன்னான்.

(இ - புரை.) பருத்தமரங்களுள்ள சோலையுடன் காலந்தோறும் பலன் தப்பாமற் கொடுக்கும் வளமிகுந்த ஒருவிளைநிலத்தைத் தானஞ்செய்த நன்மையால், இருபத்தைந்தாம் பிறவியில் ஒருசிவயோகியைத் தரிசித்துப் பாவம் நீங்குவாயென்று யமதர்மராசனும் அந்நாளிற்சொன்னான். எ - று. (சசு)

அன்னதேவிளைந்தநன்காலடியனேனின்னைக்கண்டு
துன்னியபாவநீங்கித்தூயநல்லுருவமெய்தி
நன்னிலைவுணர்வும்பெறறேனவையிலாயின்னுமொன்று
பன்னுவதுண்டுகேட்டியென்றடிபணிந்துசொன்னான்.

(இ - புரை) அத்தன்மையாகவே, இப்போது விளைந்தநன்மையால் அடியேன் தேவரீரைத்தரிசித்து, பற்றிய பாவங்களை நீங்கப்பெறறுப் பரிசுத்தமான தேவரூபத்துடன் நல்லநிலைமையுள்ள உணர்ச்சியும் பெற்றேன்; குற்றமில்லாதவரே! இன்னமொன்று சொல்வதுண்டு, அதையுங் கேட்கக்கடவீரென்று அவர்பாதத்தைப் பணிந்து சொல்லுகிறான், எ - று. (சஎ)

வெள்ளைவெண்ணீறுதன்னைமேனியிலணியுமாறுந்
தொல்லைவெம்பிறவிநீக்குமந்திரந்துதிக்குமாறும்
பிள்ளைவெண்பிறையானீறுபிடித்திடுங்காலந்தானுங்
கொள்ளைவெவ்வினைகடீர்த்தாய்கூறெனமேலோன்கூறும்.

(இ - பொ.) மிகுந்தகொடுமையுள்ள என் வினைதீர்த்தவரே! வெண்மை நிறமுள்ள திருநீற்றைச் சரீரத்தில் தரித்துக் கொள்ளுகிற கிரமமும், கொடியதாகிய பழையபிறவியைக் கெடுக்கத்தக்க திருமந்திரஞ் செபிக்கிற கிரமமும், இளம்பிறையணிந்த பரமசிவன் விபூதியை உண்டாக்குங்காலமும், சொல்லியருளவேண்டுமென்ன முனிவர்சொல்லுகிறார். எ - று. (சஅ)

பதினைந்தாவது விபூதிமான்மியமுரைத்தஅத்தியாயம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் அஅடு.

---

சிவமயம்.

பதினாறாவது

# திரிபுண்டர அத்தியாயம்.

அந்தரத்தகடணவியசிகரத்துமகன்ற
கந்தரத்தினும்விஞ்சையர்கடிமணமயரும்
சுந்தரத்துணர்க்கற்பகப்பொங்கர்சூழ்சாரன்
மந்தரக்கிரியெனப்பெயருடையமால்வரையின்.

(இ - பொ.) ஆகாயமுகட்டை யளாவிய சிகரத்திலும் விசாலமாகிய குகைகளிலும் வித்தியாதரர்கள் விவாகஞ் செய்து கொள்ளத்தக்க சுந்தரமான பூங்கொத்துக்களையுடைய கற்பகச்சோலைசூழ்ந்த சாரலுள்ள மந்தரகிரியெனப்பெயர்பெற்ற பெரியமலையில், எ - று. கந்தரம் - குகை. (க)

தேங்குகங்கையுந்திங்களுந்திருமுடிக்கணியா
வோங்கல்போல்வருமுருத்திரருலப்பில்பல்கோடி
தாங்குமால்விடைப்பரிநின்றுமிழிந்தடிதாழ்ந்து
வீங்குதோளினர்மான்மழுக்கரத்தினர்மிடைய.

(இ - பொ.) நிறைந்த நீர்வடிவமாகிய கங்கையையும் சந்திரனையுமணிந்து, மலைகள்போலப் பருத்த சரீரிகளாகி வருகின்ற பலகோடி ருத்திரர்கள்,

தாங்குகின்ற பெரியருஷபவாகனத்தினின்றிழிந்து, பரமசிவனுடையபாதத்தில் வணங்கிப் பருத்த தோள்களையுடையவர்களும் மான்மழுவேந்திய கையை யுடையவர்களுமாய் நெருங்கவும், எ - று. பரித்தலுடையது பரி - தாங்கல். இங்கு வாகனம் என்னும் பொருள். தாழ்ந்து மிடைய எனக்கூட்ட. (உ)

ஆழியேமுதலைம்படையங்கையினேந்தி
வாழிநாரணரெண்ணிலர்வழுத்துபுநிற்ப
வூழிநாண்முதலுலகுயிர்யாவையும்படைக்கும்
பாழியம்புயநான்முகரளப்பிலர்பணிய.

(இ - புரை.) சக்கரமுதலாகிய பஞ்சாயுதங்களை அழகிய கைகளில் தாங் கிக்கொண்டு அளவில்லாத விஷ்ணுக்கள் துதிசெய்துகொண்டுநிற்கவும், ஊழி காலமுதல் உலகத்துயிரையெல்லாம் சிருட்டிக்கும் தாமரைப்பூவாசியான நான் முகங்களையுடைய அளவற்ற பிரமர்கள்பணியவும், எ - று. (ஙூ)

இந்திராதியர்வானவர்விஞ்சையரியக்கர்
சந்திராதித்தர்கின்னரர்தானவரரக்கர்
சிந்துரானனவனமுலைத்தெரிவையரெழுவர்
விந்தையீன்றருளைங்கரன்வேலிளங்குமரன்.

(இ - புரை.) தேவேந்திரன் முதலானதேவர்களும் வித்தியாதரர்கள் இயக்கர்கள் சந்திரசூரியாகள் கின்னரர்கள் தானவர்கள் அரக்கர்களும் சிந்தூரப் பொட்டணிந்த முகத்தையும் அழகிய தனங்களையுமுடைய சப்தமாதர்களும் பார்வதிதேவியார் பெற்றருளிய விநாயகர் வேலாயுதமேந்திய சுப்பிரமணியக் கடவுளும், எ-று.

சப்தமாதர்கள்:அபிராமி மாகேச்சுவரி கௌமாரி நாராயணி வராகி இந்தி ராணி காளி. ஆனனம் - முகம், (ச)

நாகமன்னவர்நாரதாதியர்நவிலும்
போகமேவியபொன்னுலகத்துமாமுனிவர்
யாகநூனெறிவசிட்டனுமிருந்தவன்முதலாச்
சோகமோகமின்மறைமுனித்தலைவர்கள்சூழ.

(இ - புரை) நாகராசர்களும் நாரதர் முதலாகச் சொல்லப்பட்ட போகம் பொருந்திய தேவலோகத்துமுனிவர்களும் யாகங்கள்செய்யும் வேதசாஸ்திர முறைமைதெரிந்த வசிஷ்டர்முதலாகிய காமாதிகளைநீக்கிய பிராமணருஷிசிரே ஷ்டர்களும் சூழவும், எ - று. (ரு)

கருப்புவிற்றுணையெனப்பொலிகரியகீள்புருவ
வுருப்பசித்திருமுதலியவரம்பையரோடும்

பொருப்பினிற்பிறந்திழிதருபுனிதநீர்க்கங்கைத்
திருத்தமாதியநதிக்குலவனிதையர்செறிய.

(இ - புரை.) இரண்டு கருப்புவில்லை வளைத்துவைத்ததுபோ லிருக்கும் கரியநிறமுள்ள நீண்டபுருவமுடைய உருப்பசிமுதலாகிய ரம்பாஸ்திரிகளும், இமயமலையில் உற்பத்தியாய்வருகின்ற கங்கைநதிமுதலான நல்லநதிக்குலமாதர்களும் சூழவும், எ - று. (௬)

எண்டொகைப்படும்வசுக்களுமருத்துவரெவரு
மண்டர்வர்க்கத்தில்பிதிர்க்களுமாடிநின்றேத்தக்
கொண்டலொத்துநின்றிரைத்திடுவயிரவக்குழாமு
மண்டுவேள்விசெய்தக்கனுமுறைமுறைவழுத்த.

(இ - புரை.) அஷ்டவசுக்களும் மருத்துவதேவர்களும் தேவர் வர்க்கத்திற்சேர்ந்த பிதிரர்களும் ஆனந்தக்கூத்தாடிக்கொண்டுதுதிக்கவும், மேகம்போல ஒலிக்கும் வயிரவக்கூட்டமும் யாகஞ்செய்ததக்கனும் முறைமுறையாக நின்று துதிக்கவும். எ - று.

அஷ்டவசுக்கள் - அனலன் அனிலன் ஆபச்சைவன் சோமன் தரன் துருவன் பிரத்தியூசன் பிரபாசன். (௭)

தமரநூபுரநெட்டைவேதாளவாகனத்துக்
குமரனாகியவீரன்வெம்படையொடுங்குறுக
வமரில்வந்தெதிர்த்தணிமுறிந்தவுணர்கெட்டோடச்
சமரில்வாரணப்பிடர்வருசாத்தனுந்தழுவ.

(இ - புரை.) ஒலியுள்ள சிலம்பணிந்த நெடியவேதாளவாகனத்தையுடைய வீரபத்திரர் படையுடன்வரவும், அவுணர்கள் போரில்வந்தெதிர்த்துப் படைமுறிந்து கெட்டோடும்படி யுத்தகளத்தில் யானையின் பிடரியில் ஏறிவரும் அரிகரபுத்திரர் வரவும், எ - று. (௮)

ஊதுலைக்கனற்புகையெனவுயிர்ப்புலாந்துண்டக்
கோதினெட்டெயிற்றகல்பிலவாய்க்குறுங்கூளிப்
பூதமுற்றியகணங்களும்பொருவில்வெண்சங்க
நாதநற்றொழிற்பானுகம்பனும்வந்துநண்ண.

(இ - புரை.) உலைக்களத்தில் ஊதுகின்ற தீப்புகைபோல உயிர்ப்பினைப் பெற்ற நாசியினையும் பழுதில்லாமல் நீண்டபறகளையும் அகன்ற பிலத்துவாரம் போன்ற வாயையுமுடைய குட்டையாகிய பூதகணங்களும், ஒப்பில்லாத தவளச் சங்கநாதத்தொழில்செய்யும் பானுகம்பனும் வந்துபொருந்தவும், எ - று.

சங்ககன்னனற்றனிமணிக்கரத்தினன்றயவின்
மங்குல்போலருள்மாணிபத்திரன்மகோதரன்சொற்
பிங்கிரீடிவிருகோதரப்பெருந்தகைப்பெரும்பூண்
பொங்குநீளொளிவிகடன்குண்டோதரன்பொருந்த.

(இ - புரை.) சங்குகன்னனும் ஒப்பற்ற மணிகன்னனும் தயையில்மேகத்தையொத்து அருளும் மாணிபத்திரனும் மகோதரனும் சொல்லுகின்ற பிருங்கிருஷியும் மேலான தகுதியையுடைய விருகோதரனும் பெரிய ஆபரணங்களணிந்து மிகுதியான ஒளியையுடைய விகடனும் குண்டோதரனும் பொருந்தவும், எ - று. (௧0)

மாலையம்புயமகாகாளர்புலிவதனத்தோ
ராலும்வாரணமுகத்தினராளிமாமுகத்தோர்
வாலவெள்ளெயிற்றரவமுமடங்கன்மாவேறும்
போலுநீள்வதனத்தினரெண்ணிலர்பொருந்த.

(இ - புரை.) மாலையணிந்த புயமுள்ள மகாகாளரும் புலிமுகத்தரும் அசைகின்ற யானைமுகத்தரும் ஆளிமுகத்தரும் வெண்மையாகிய தந்தங்களையுடைய சர்ப்பமுகத்தரும் சிங்கமுகத்தரும் ஆகிய கணத்தவர்கள் அளவில்லாதவர்களாய் வந்து பொருந்தவும், எ - று. (௧௧)

முகடுபோழ்ந்திடநீண்டவர்மொழிவதற்கரிதாம்
விகடமாகியவேறுவேறுருவத்தர்விளங்கும்
பகடுபோலுமோர்கரத்தினர்பலபலகரத்தர்
தகடுவேய்பொலன்கழலினரெண்ணிலர்தழுவ.

(இ - புரை.) அண்டமுகடும் பிளக்கும்படி உயர்ந்த வடிவமுள்ளவர்களும் சொல்லுதற்கரிய விகடமான பற்பலவுருவத்தையுடையவர்களும் விளங்குகின்ற யானைபோல ஒருகையுடையவர்களும் பலவாகிய கைகளுடையவர்களும் தகட்டுவடிவாய்ப்பொன்னாற்செய்த வீரகண்டையுடையவர்களுமாக எண்ணில்லாதவர்கள் பொருந்தவும், எ - று. (௧௨)

படர்ந்தநீணிலஞ்சுமந்தசேடன்பஃறலைபோன்
மிடைந்தெழுந்ததிண்டோட்களிலார்த்தவார்விசித் துக்
குடங்கையாயிரமெடுத்துவாணசுரன்கொண்ட
லடங்குமாமுழவாயிரமுகத்தினுமறைய.

(இ - புரை.) பரந்தநீண்ட பூமியைத்தாங்குகின்ற ஆதிசேஷனுடைய ஆயிரந்தலைபோல நெருங்கியுயர்ந்திருக்குந் திண்ணிய தோள்களில், கட்டியவா

ரை விசிந்துக்கொண்டு,தனது ஆயிரங்கைகளையுங்கொண்டுவாணசுரனுனவன் மேகத்தி னிடியோசையுங் குறையும்படிப் பெரியகுடமுழாவை ஆயிரமுகத்தி னும் அறையவும், எ - று. (கங)

முருகுவிண்டதார்த்தேவரைமுறைமுறைநிறுவித்
திருகுவெஞ்சினத்தவுணரையொருபுடைசேர்த்தி
யுருகுபொன்னிறக்கணங்களையொருவழிசெறித்துப்
பெருகுவான்புகழ்நந்திகைப்பிரம்பெடுத்துலவ.

(இ - புரை.) வாசனையுடன் மலர்ந்த மாலையணிந்த தேவர்களை வரிசை வரிசையாய் நிற்கச்செய்து, மாறுபடுகின்ற கோபமுள்ள அசுரர்களை யொருபுற த்தில் வரிசையாகநிறுத்தி, உருகிய பொன்னிறமுள்ள கணங்களையொருபுறத் தில்நிறுத்தி, மிகுந்த சிறப்புள்ள நந்திதேவர் கையிற் பிரம்பேந்திக்கொண்டு உலாவவும், எ - று. (கச)

இலகுநல்லவைநடுவணையெழிலரிசுமந்த
வலகிலாநவமணிகளுமொளிகெடவவிருங்
குலவுமாணிக்கங்குயிற்றியகொழுந்தவிசேறி
யுலகமூன்றுக்குமொருபொருளெம்மையாளுடையான்.

(இ - புரை.) திரிலோகங்களுக்கும் ஒப்பற்றபொருளாகி எம்மையுமடிமை யாகவுடைய பமசிவன் பிரகாசிக்கும் நல்லசபையினடுவில் அழகிய சிங்கங்கள் சுமந்த அளவில்லாத நவரத்தினங்களும் ஒளிமழுங்கும்படிப் பிரகாசிக்கும் மாணிக்கங்கள்பதித்த செழுமையுள்ள ஆசனத்தில் வீற்றிருந்து, எ - று. அரி சுமந்த தவிசு எனமுடிக்க. (கரு)

கோடிசெங்கதிராதபர்கோடிவெண்மதியங்
கோடியூழியின்வடவனலோரிடங்குழுமி
நீடுமோருருவெடுத்தனநிரயத்தினிருளு
மோடியெங்கணுநிலையறவலோகத்திலொதுங்க.

(இ - புரை.) செவ்விய கிரணங்களுடைய கோடிசூரியர்களும் கோடி சந்திரர்களும் கோடிவடவாமுகாக்கினியும் ஓரிடத்திற்கூடி பெரியவுருவம் எடு த்ததுபோன்றதாய், நரகத்தினிருளும் ஓடி எவ்விடத்தும் நிலைபெருமல் அவ லோகத்தில் ஒதுங்கத் தக்கதாகவும், எ - று. ஆதபர் - சூரியர், அவலோகம்- இல்லாலோகம்; எனவே வெளி என்றபடி. (கசு)

வேலையேழையுமொருகணவேலையினுகருங்
காலவூழிவெங்கனலெனச்செஞ்சடைகவினப்

பாலலோசனந்துணைவிழிமுச்சுடர்பகைப்பச்
சூலமாதியபண்டையொடுந்தோள்பலதுளங்க.

(இ - புரை.) ஏழுசமுத்திரங்களையும் ஒருகணப்பொழுதில் உண்ணத்தக்க ஊழித்தீப்போலச் செய்யசடைகள்பொலியவும், நெற்றிக்கண்ணும் மற்ற இரண்டுகண்களுமாகிய சோமசூரியாக்கினிகளுடன்பகைக்கும் காந்திபெற்ற சூலாயுதமுதலிய ஆயுதங்களோடு பலதோள்கள் விளங்கவும், எ - று. வேலை என்பனவற்றுள் முன்னது சமுத்திரம், பின்னது காலம். (௧எ)

அனந்தன்வாசுகிதக்ககன்முதலியவரவம்
புனைந்தபல்கலனெனவடிமுடிமுதல்புனைந்து
கனைந்துவண்டுணுமிதழிவாசிகையிடைகவின
வனைந்தவிந்துவுங்கங்கையுமமுதலைவழங்க.

(இ - புரை.) ஆதிசேஷன் வாசுகி தக்ஷகன் முதலான நாகங்களை ஆபரணங்களாகத் திருமுடிமுதல் திருவடிவரையும் அணிந்தும், இசைபாடும் வண்டுகள் தேனுண்ணும் கொன்றைப்பூவாற்றொடுத்தமாலை அழகுடன் மத்தியில் விளங்கவும், திருமுடியில்தரித்த சந்திரன் அமுதத்தைவழங்கவும், கங்கை அலைவீசவும், எ - று. வாசிகை - தொடுத்தமாலை. (௧அ)

காய்சினக்கொடுவரியுரிகலையினிற்பொலியப்
பூசலிட்டடுபுழைக்கைமாவுரிவைமெய்போர்ப்பத்
தேசுபெற்றிடுமுத்தரீயத்தொளிதிகழ
மாசறுத்தொளிர்மின்னெனமார்பினூல்வயங்க.

(இ - புரை.) காய்கின்ற கோபத்தையுடைய புலியின்றோல் வஸ்திரமாகத் திருவரையில்விளங்கவும், போர்செய்து கொல்லுந்தன்மையையுடைய யானையின்றோல் போர்வையாகத் திருமேனியிற்போர்ப்பவும், ஒளிபொருந்திய உத்தரீயத்தின் பிரகாசம்விளங்கவும், மாசுநீக்கி யொளிர்கின்ற மின்னல்போல பூணூல் திருமார்பில் விளங்கவும், எ - று. (௧௯)

தொல்லையம்பழமறையெலாமிறுதியிற்சொல்லு
மெல்லைகண்டவரல்லதுகாண்கிலாவிறைவ
னல்லியந்துணர்த்தேறன்மொண்டிலகுதாதள்ளிச்
செல்லுமன்றலந்தென்றல்வந்துலவவீற்றிருந்தான்.

(இ - புரை.) பழமையாகிய வேதங்களெல்லா முடிவிற்சொல்லும் அளவையைக்கண்டவர்கள் காணலாமேயன்றி மற்றவர்களாற் காணப்படாத பரமசிவன் அகவிதழினையுடைய பூங்கொத்துக்களிற் றேனையும் மகரந்தங்களையும் அள்ளிக்கொண்டுவரும் இளந்தென்றற்காற்று உலவும்படி வீற்றிருந்தார். எ-று.

முதற்செய்யுள்தொடங்கி இதுவரையும் குளகமாகடந்து (மேற்கூறிய விசேடங்கள் விளங்க.) பரமசிவம் வீற்றிருந்தாரென முடிந்ததுகாண்க. (உ௦)

அந்தவேலையிலாதிநான்முகனுளத்தறிவில்
வந்துதோன்றியமவுனஞானத்தினின்வதிந்தோன்
பந்தமற்றிடுசனற்குமாரன்பணிந்தேத்தி
முந்துநல்லிசைபணிதொறும்பணிதொறுமொழிந்தே.

(இ - புரை.) அக்காலத்தில், ஆதியாகிய பிரமதேவனுடைய உள்ளத்தில் ஞானத்துடன் அவதரித்த மவுனஞானநிலையிற் பொருந்தியவராய்ப் பாசபந்தங் களைவிட்டொழித்த சனற்குமாரமுனிவர் பெருமானைப்பணிந்து துதித்துப் பரமசிவனுடைய முதன்மையான நல்லபுகழினைக்கூறி, எ - று, (உக)

ஐயகேட்டிநீயகலிடத்தரியதாந்தரும
முய்யுமாறெனக்குரையெனவொளிநிலாமுறுவற்
செய்யவாய்மலர்திறநதுதேன்றுளிக்குமாபோல
வையமேழுடைநாயகன்மகிழ்வுறவுரைத்தான்.

(இ - புரை.) எங்கள் ஐயனே! இவ்வுலகத்தில் அரியதாகிய தருமங்களை அடியேன் உய்யுமாறு கட்டளையிட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்து கொள்ளவே, ஏழுலகத்தையுமுடைய பரமசிவன் ஒளியுள்ள நிலாவையொத்த நகையுடன் திருவாய்மலர்த்து தேன்றுளி துளிப்பதுபோல மகிழ்ச்சியுண்டாக அருள்செய்கின்றார். எ - று. (உஉ)

கேட்டஞானநூலனைத்தையுங்கிளத்தினை புவியி
லீட்டுகன்மத்திலிருவினையியற்றியமுறையே
யூட்டவுண்ணுமானிடர்களுமுத்தியையுறுவா
னூட்டுநற்சிவதருமமாய்நாடுதற்கெளிதாய்.

(இ - புரை.) அடியேன் விண்ணப்பம் பண்ணிக்கொண்டபடி ஞான சாஸ்திரமெல்லாம் அருளினீர், உலகத்திற செய்கின்ற கர்மத்தினால் நல்வினை தீவினைகள் முறைமைப்படியூட்ட அதையுண்டு களிக்கின்ற மானிடர்களும் மோக்ஷம் அடையும்படி காட்டுகின்ற நல்ல சிவதருமமாகியும் நாடுவதற்கெளி தாகியும், எ - று. (உந)

வருத்தமில்லதாயிருவினையகற்றுநன்மருந்தா
யருத்தியோடிறைப்போதினிலறிவுறுமதுவாய்க்
கருத்தில்வேட்டவையிம்மையிலுதவுகற்பகமாய்
விரித்தவேதநூற்றருமமொன்றுரையெனவிளம்பி.

(இ - புரை.) வருத்தமில்லாததாகியும் இருவினையை நீக்குகின்ற நல்ல மருந்தாகியும் ஒருக்ஷணப்பொழுதில் அன்புடன் ஞானங்கொடுப்பதாகியும் மனதில் விரும்பியபொருளை இம்மையிலே கொடுக்கும் கற்பகவிருக்ஷம்போன்றதாகியும் விதிக்கப்பட்ட வேதத்திற் சொல்லுவதாகியுமிருக்கிற தர்மமொன்று கட்டளையிடவேண்டுமென்றுசொல்லி, எ - று. (உச)

அஞ்சலித்தடியிணைமிசையலர்மழைதூவி
வஞ்சமொன்றிலாமறைமுனிகேட்டற்குமகிழ்ந்து
நஞ்சமுண்டகாலாக்கினிருத்திரநாதன்
செஞ்செவேயவனுளங்கொண்டுதெருளுறச்செப்பும்.

(இ - புரை.) கைகுவித்து வணங்கித் திருவடிகளில் மலர்களால் அருச்சித்து, உண்மைநெறியுள்ள அந்தச் சனற்குமாரமுனிவர் விண்ணப்பம் பண்ணிக் கொண்டதற்கு விஷபானஞ்செய்த காலாக்கினி ருத்திரமூர்த்தியானவர் களிகூர்ந்து, அம்முனிவர் தமதுள்ளத்திற் செவ்வையாக அறிந்துகொள்ளும்படி உபதேசிப்பாராயினர். எ - று. (உரு)

அங்கமாறுடைவேதமுமாகமமுகமு
மெங்குமோதிடுமுபநிடதத்தினதியலுஞ்
சங்குபோலும்வெண்ணீற்றினுற்றயங்குபுண்டரத்தைத்
துங்கநெற்றியிலணிவதேதருமமாச்சொல்லும்.

(இ-புரை.) ஆறங்கங்களையுடைய வேதங்களும் ஆகமத்தின்முதலும்எங்குமோதுகின்ற உபநிடதத்தின் உண்மையும் சங்குபோல்விளங்கும் வெண்ணீற்றினுல் பிரகாசிக்கும் திரிபுண்டரத்தைப் பரிசுத்தமான நெற்றியிற்றரிப்பதே தர்மமாகச்சொல்லும். எ - று. திரிபுண்டரம்- இருபுருவக்கடைவரையும் தரிக்கும் மூன்று விபூதிரேகை. இது, மும்மலத்தையும்போக்குமென்றகுறிப்பு. ()

வேறு.

என்னப்பரமன்கூறுதல்கேட்டெழுந்தவுவகைச்சனற்குமரன்
முன்னைப்பொருளேயடியோடுமுடியுமில்லாமுழுமுதலே
யுன்னிப்புகன்றதிருநீறேதுரைத்ததிரிபுண்டரமேது
பின்னர்த்தரிக்குமிடனேதுபேசுநதிருமந்திரமேதோ.

(இ - புரை.) இவ்வாறு பரமசிவன் அருளிச்செய்ததைக் கேட்டுச் சந்தோஷமுண்டாகிய சனற்குமாரமுனிவர் ஆதியானபொருளே! ஆதியந்தமில்லாதமுதலே! தேவரீர் கருதிச்சொல்லியருளிய விபூதியென்பது யாது? சொல்லிய திரிபுண்டரமென்பது யாது? மற்றும் அதை எந்தவிடத்திற்றரிப்பது? அதனைத் தரிக்குங்காலத்திற்சொல்லும் திருமந்திரம் யாது? என்றனர், எ-று. (உஎ)

காலமேதோவளவேதோகருதப்படுந்தெய்வதமேதோ
சீலமேதோதிரவியமற்றேதோதரிக்கிற்பலனேதோ
மூலமுளையாய்நெடிந்தருவாய்வித்தினடங்குமுறைபோல
ஞாலமெல்லாமாயையின்பாலுதிப்பித்தொடுக்குநம்பரனே.

(இ-புரை.) வேரும் முளையுமாய் நெடியவிருக்ஷமாய் விதையில் அடங்குமுறைமையையும்போல உலகமெல்லாம் மாயையினிடத்து உதித்து ஒடுங்கச் செய்யும் எங்கள் பரமனே! தரிக்குங்காலமெதுவோ? அளவுயாது? தியானிக்கப் படுந் தேவதையாது? ஒழுக்கம்யாது? அதற்குரிய திரவியம்யாது? தரித்தால் வரும் பலன் யாது என்றனர். எ - று. (உஅ)

என்றுவினவுமுனிக்கீசனியம்புமுரைத்ததிருநீறு
துன்றுதீம்பாற்கோமயத்தைச்சுட்டவடலையாகுங்கா
ணின்றதிரிபுண்டரமதுதான்சென்னிநெற்றிகளநிமிர்தோ
ளொன்றுமார்புநாபிபுறமுருவமுதலுத்தூளணமாய்.

(இ - புரை.) என்று வினவிய முனிவருக்குப் பரமசிவன் அருளிச்செய்கின்றார். வேதாகமத்திற் சொல்லப்பட்ட திருநீறானது மதுரமுள்ள பாலைத்தரும் பசுவின் சாணத்தை ஓமாக்கினியில் பாகமாகும்படி வைத்த திருநீறாகும்; திரிபுண்டரமாவது சிரசு நெற்றி கழுத்து தோள் மார்பு கொப்பூழ் பின்புறம் இவ்விடங்களில் முதலிலே உத்தூளனமாகவும், எ - று. (உகூ)

குழைத்துத்தைவந்ததற்பின்னர்க்குழைத்தநீற்றைவெண்ணிலவி
னிழைத்ததென்னச்சொன்னவிடத்தியற்றும்போழ்தினெற்றியின்கண்
டழைத்தவிரலினடுநீக்கியத்தற்சனியாலனாமிகையாற்
பிழைத்தலறவேதரித்தெதிராப்பெரியவிரலானடுவணிந்தால்.

(இ - புரை.) குழைத்துத்தடவி அதன்பின்பு முன்குழைத்த அந்தவிபூதியை வெண்மையான நிலவினால் செய்ததுபோல மேற்சொன்ன இடங்களில் தரிக்கும்போது, நெற்றியினிடத்தில் செழுமையுள்ள விரல்களில் நடுவிரலை விட்டு சுட்டுவிரலாலும் மோதிரமணியத்தக்க விரலாலும் குற்றமறத்தரித்துப் பின்பு பெரியவிரலால் நடுவே எதிராக அணிந்தால், எ - று. தற்சனி-சுட்டுவிரல், அநாமிகை - ஆழிவிரல். (ங0)

அதுவேதிரிபுண்டரமுரைத்தவங்கமவையேயிடனாகும்
பதியாலுரைத்தமந்திரங்கள்பஞ்சப்பிரமமுபநிடதம்
விதியால்வேதத்தெடுத்துரைத்தவியன்மந்திரங்களென்றறிவாய்
புதிதாய்நின்றகாலங்கண்முப்போதுகளெப்போதினுமாம்.

(இ - புரை.) அதுவே திரிபுண்டரமாகும், முன்சொன்ன அங்கங்களே திரிபுண்டரந்தரிக்குமிடமாகும்; நம்மால் அதற்கெனச் சொல்லப்பட்டமந்தி

ரங்கள் பஞ்சப்பிரமவுபநிடதம், இம்மந்திரம் வேதத்தில் முறையாக எடுத்துரைத்த மேன்மைபொருந்திய மந்திரங்களென்று அறிவாயாக; அதற்காக நவமாக நின்ற காலங்கள் மூன்றுபோதுகளேயாம்; அன்றியும் எப்போதுமாம். எ - று.

நீளம்புருவத்தளவாகுமிடையினீக்கமொருவிரலா
மாளுந்தெய்வமுருத்திரனோடரியமகேசன்சதாசிவனு
நாளுஞ்சிலங்கடைப்பிடியாய்நன்காயீட்டுந்திரவியங்க
ளோந்தருபால்வெண்ணீறுமுலகுக்குயிராந்தோயமுமே.

(இ - புரை.) நெற்றியில் தரிக்கின்ற நீளம் புருவத்தின் அளவேயாகும்; திரிபுண்டரமாகிய மூன்று கீற்றுக்குள் மத்தியில் ஒருவிரல் அளவு இடம்வேண்டும்; அதற்குரிய தேவதைகள் உருத்திரன் மகேசன் சதாசிவன் என்னும் கடவுளர்களாம், இந்த ஒழுக்கத்தை யொருநாளுமறவாம லிருப்பாயாக; ஆன்மாக்கள் நன்மையுடன் சேர்க்குந் திரவியங்கள் பஸ்மவடிவான திருநீறும் உலகுக்குயிராகிய நீருமேயாம். எ - று. (௩௨)

பலத்தின்பெருமைமாமுனியேபகரிலேவர்தாமறிவார்
நிலத்தின்மீதுமானிடர்க்குமுத்திக்கிதுபோனெறியுண்டோ
சொலற்குத்தகுநால்வருணத்தோர்வருணச்சிரமத்தொழில்புரிவோர்
கலத்திற்கியையாவிழிகுலத்தோர்கலன்பூண்மகளிர் கைமையுற்றோர்.

(இ - புரை.) பெருமையுள்ள முனிவரே! விபூதியைத்திரிபுண்டரமாகத் தரிப்பதினால் வரும் பலனைச்சொல்லுமிடத்தில் எவர்களறியத்தக்கவர்கள், இவ்வுலகத்திற் பிறந்தமனிதர்களுக்கு மோக்ஷந்தர இதைப்போல் சொல்லலாமென்றால் வேறுபொருளில்லை, பிராமணர்முதலிய நான்குவருணத்தார் பிரமசரிய முதலிய நான்கு ஆச்சிரமமுள்ளவர்கள் அபாத்திரர்களாகிய இழிகுலத்தோர் மாங்கலியஸ்திரிகள் கைம்பெண்கள், எ - று. (௩௩)

இயாவரேனுமித்தருமமியன்றகாலத்தியற்றுவரேற்
பாவமாயத்தளையறுத்துப்பாரிற்பிறவிக்கடனீந்தித்
தேவர்போகம்பொன்னுலகிற்சென்றுதுய்த்துச்சிவனருள
நாவினாலும்வழுத்தரியமுத்தியின்பநண்ணுவரால்.

(இ - புரை.) இப்போது சொல்லிய இவர்களில் எவர்களேயாயினுந் திரிபுண்டரந்தரிப்பதாகிய தருமஞ்செய்வார்களேயானால், பாபமாகிய பந்தத்தை யறுத்துப் பூமியில்பிறக்கும் பிறவிக்கடலை நீந்திச் சுவர்க்கலோகத்திற் றேவபோகத்தை அனுபவித்துப் பின்பு பரமசிவனுடைய திருவருளினால் நாவைக்கொண்டு சொல்வதற்கரிய முத்தியின்பம் அடைவார்கள். எ - று (௩௪)

கோறல்களவுகள்ளுண்டல்குருவைப்பிழைத்தல்கூட்டென்னத்
தேறும்பஞ்சபாதகத்தையொழியாதியற்றுஞ்சிறியோரு
மாறிலொன்றுதாங்கொள்ளாதநீதியியற்றியறமிகந்த
பாறுபடிவேன்மன்னவரும்பயந்தோர்க்கொன்றபாதகரும்.

(இ - புரை.) கொலைசெய்தல் திருடுதல் மதுபானஞ்செய்தல் ஆசாரியா பசாரம் காமம் என்று சொல்லப்படுகிற பஞ்சமாபாதகத்தை எப்போதுஞ் செய் கின்ற சிறியோர்களும், ஆறிலொருபாகம் வாங்கிக்கொள்ளாமல் அநீதிபுரிந்து தர்ம்மத்தையொழித்த பருந்து சூழும்படியான வேலேந்திய மன்னவர்களும், மாதாபிதாக்களைக் கொன்ற பாதகரும், எ - று. (௩௫)

செய்நன்றிமறந்தோருநதீவைத்தில்லஞ்சிதைத்தோருங்
கொய்துபசுவைத்தின்றோருங் கொண்டோர்ப்பிழைத்துத்திரிந்தோரு
செய்திறகரிபொய்த்துரைத்தோருநோன்பையிகழ்ந்துகொடித்தோரும்
வைதுபழித்துப்பொய்யென்றுமுன்னூலிகழ்ந்தவஞ்சகரும்.

(இ - புரை.) செய்தநன்றி மறந்தவர்களும் தீமூட்டி இல்லங்களை எரித்த வர்களும் பசுவைச் சிதைத்துத் தின்றவர்களும் கொண்டவருக்குத் துரோகஞ் செய்த சோரஸ்திரிகளும் எளிதெனமதித்துப் பொய்சாக்ஷிசொன்னவர்களும் விரதங்களை யிகழ்ந்துசொன்னவர்களும் சாஸ்திரங்களைப் பழித்துப் பொய் யென்று இகழ்ச்சிசெய்த பாதகரும், எ - று. கொடித்தல்-பேசல். (௩௬)

கருப்பம்வீழ்த்தித்திரிந்தோருங்கலவாதவரைக்கலந்தோரும்
பரித்தவொருதேவினைவழுத்திப்பலதேவரையும்பழித்தோரு
மருந்திவிடத்தாற்கொன்றோருமற்றோர்க்குறாதுவதிந்தோரும் ௫
விருத்தர்பாலர்மடவார்கணடுங்கவினைகள்செய்தோரும்.

(இ - புரை.) கருவை யழித்துத்திரிந்தவர்களும் சேரத்தகாதவர்களு டன்சேர்ந்தவர்களும் தமது உள்ளத்திற்கொண்ட ஒருதெய்வத்தைத் துதித்து மற்றக்கடவுளரைப்பழித்தவர்களும், விஷங்கொடுத்துக் கொன்றவர்களும் தரி த்திரர்களுக்கு உதவாமலிருந்தவர்களும் விருத்தர் பாலர் மாதர்கள் என்னுமிவர் கள் பயப்படும்படிக் கொடிய செய்கைகளைச் செய்தவர்களும், எ - று. (௩௭)

அடைந்தோர்க்கருளாதிருந்தோருமமரிலரசன்படைவெருவி
மிடைந்துவெரிநிட்டோடினரும்வெறியகுறளைபகர்ந்தோரு
மிடைந்தவறியோர்க்கீயாமனிதியமீட்டியிருந்தோருங்
குடைந்துநீருண்கூவல்குளங்குட்டஞ்சிதைத்தகொடியோரும்.

(இ - புரை.) தங்களை அடைக்கலமடைந்தவர்களுக்கு உபகாரஞ்செய் யாதவர்களும் அரசன்படையிற்போய்ச்சண்டை நேரிட்டவிடத்திற் பயந்து

முதுகுகாட்டியோடினவர்களும், பலனில்லாதகோள்சொன்னவர்களும் வருந்தியிருக்கும் வறுமையுள்ளவர்களுக்குக் கொடாமல் பொருளைச்சம்பாதித்துக் கரந்துவைத்திருப்பவர்களும், முழுகிநீருண்ணும்படியான கிணறு குளம் குட்டை இவைகளை யழித்த பாவிகளும், எ - று. வெரிந்-முதுகு. (௩௮)

ஆராமங்களழித்தோருமதிதிவருந்தவயின்றோருந்
தீராவிடும்பைபகைவருக்குந்தவசிலருக்குஞ்செய்தோருஞ்
சேராநிலையைச்சேர்ந்தொழுகித்தீவேட்டுண்ணுந்திறந்திறம்பிப்
பாராவாரங்கலத்தேறிநிதிவேட்டுழன்றபார்ப்பாரும்.

(இ - புரை.) பூஞ்சோலையை அழித்தவர்களும் அதிதிகள் பசியால்வருந்திருக்க உண்பவர்களும் பகைவராயிருப்பவர்களுக்கும் தவசீலர்களாகிய முனிவர்களுக்கும் ஒழியாத துன்பந்தைச்செய்கின்றவர்களும், சேரத்தகாததன்மையைப்பொருந்தி, யந்தவழியில்நடந்து நித்தியாகுதிசெய்து பின்பு போசனங்கொள்ளுந் தன்மைமாறி பொருளையிச்சித்துக் கப்பலேறிச் சமுத்திரத்திற்சென்று உழலுகிற பிராமணர்களும், எ - று. ஆராமம்-பூஞ்சோலை. பாராவாரம்-கடல். (௩௯)

இன்னுங்கொடும்பாதகம்புரிந்தோரியாவரேனுமவரெல்லாம்
பின்னுஞ்சடிலமாமுனியேதிருநீறணியப்பெறிலிவர்பான்
மன்னும்பிறவிமுதலவினைமுழுதுமாயும்வயங்கொளியோன்
மின்னுங்கனகவுதயவரைமேவவிருள்வீந்திடுவதுபோல்.

(இ - புரை.) பின்னலாகிய சடையையுடைய முனிவனே! இப்போது சொல்லிவந்த பாதகங்களுமல்லாமல் மற்றுமுள்ள பாவங்கள் செய்தவர்களேயானாலும், அவர்களெல்லாரும் திருநீறணியப்பெறுவார்களானால், அவர்களிடத்தில் நிலைபெற்ற பிறவிமுதலான வினைகளெல்லாம் சூரியன் சொர்னமயமான உதயகிரியிற் றோன்றினவளவில் இருளொழிவதுபோல நீங்கிவிடும்.எ-று.(௪0)

எள்ளப்படுகீழ்மக்களெனுமிழிந்தகுலத்தோரென்றாலும்
வள்ளற்பரமன்றிருநீறுமணியுமணிந்தமாண்பினரை
யுள்ளத்துள்ளேயிருபொழுதுமுணர்ந்துதெருண்டுசிவனெனவே
கொள்ளத்தகையவறிவினரேபிறவிக்கடலிற்குளியாதார்.

(இ - புரை.) இகழப்படுங் கீழ்மக்களாகிற இழிகுலத்தோர்களே யானாலும், வேண்டுவோர்வேண்டியதை ஈயவல்ல பரமசிவத்தின் விபூதியும் ருத்திராக்ஷமுந் தரித்தபெருமையாளரை இரவும் பகலும் இருதயத்திற்றியானித்துச் சிவமெனக்கொள்ளத்தக்க அறிவாளர்களே பிறவிக்கடலிற் குளியாதவராவர். எ - று. (௪௧)

நாடிமூன்றுகாலமெண்ணுஞ்சம்பன்றிருப்பேரிசைநவிலர்
ஞடிவிளங்கும்பாவையெனவறிவொன்றில்லாஞனுலு
கேடிவெண்ணீறினிதள்ளிநெற்றிவிளங்கத்தரிப்பானேற்
கோடிபிதிர்கள்கும்பியிடைகுளியாதரன்பாற்கூட்டுவனுல்.

(இ - புரை.) உணர்ச்சியுடன் சிவபெருமானை நினைத்துத் திரிகாலங்களி லுந் தியானிக்காதவனும் அவர் திருநாமத்தின் பெருமையை நாவினுற்றுதி யாதவனும் கண்ணுடியிலெழுதப்பட்ட சித்திரப்பிரதமைபோல அறிவில்லாத வனேயானுலும், விபூதியைத்தேடி இனிதாக அள்ளிநெற்றியில் விளங்கும்படித் தரிப்பானுயின் அவனுடைய பிதிர்க்கள் அனந்தம்பேர்கள் கும்பிபாகமென்னு நரகில் முழுகாமல் சிவபெருமானிடத்திற் சேரும்படிச் சேர்ப்பிப்பான். எ-று. கேடல் - தேடல். (சஉ)

ஏழுகோடிமந்திரமுமெண்ணிறவுமிருநிலத்தி
லாழமுடையகங்கைமுதலனந்தநதியுமமரேசன்
வீழுந்துரகமீரும்வேள்வியனைத்தும்விளம்புங்காற்
றூழுஞ்சடையான்றிருநீறுதரும்பேறென்றுந்தாராவே.

(இ - புரை.) சத்தகோடி மகாமந்திரங்களும் அளவில்லாத ஸ்தலங்களும் இந்தப்பெரிய உலகத்திலிருக்கும் ஆழமுள்ள கங்கைமுதலான அனந்த நதிக ளுந் தேவேந்திரன் விரும்புகின்ற அசுவமேதயாகம் ஈருகிய யாகங்களும் ஆகிய இவைகள் தாழ்ந்த சடையையுடைய பரமசிவன் விபூதிதரும் பேறுகளின் ஒரு பேற்றினையுந் தரமாட்டா. எ - று. வீழல் - விரும்பல். (சங)

பத்தியால்வெண்ணீறணிந்தோர்பாரைப்பொதுநீங்கிடப்புரந்து
துய்த்தபோகத்திறுதியினிற்சோதிவிமானத்தினிலேறி
மைத்தகுழலாரொடுமருவிமகவான்பதத்தில்வாழ்ந்துபின்னர்ச்
சத்தாயசத்தையொருவுசிவசாயுச்சியமேசார்வாரால்.

(இ - புரை.) பத்தியுடன் விபூதிதரித்துக் கொள்ளுகின்றவர்கள் பொது வில்லாமல் இவ்வுலகத்தை ஆண்டுபோகங்களை யனுபவித்து, இறுதியிற் சோதி யுள்ள தேவவிமானத்திலேறிச்சென்று, கரிய அளகத்தையுடைய ரம்பாஸ்திரிக ளுடன் தேவேந்திரனுலகத்தில் வாழ்ந்திருந்து, பின்பு சீவத்தன்மை நீங்கிச் சிவத்தன்மைபெற்றுச் சிவசாயுச்சியம் அடைவார்கள். எ - று. சாயுச்சியம் - கலத்தல். (சச)

இந்தவிபூதிமான்மியத்தைவேதம்பலவுமியம்புமனந்தச்
சிந்தைக்கெளிதாய்மிகச்சுருக்கிச்செப்பினேமென்றருள்புரியா

வந்தத்துடனேமுதலுமில்லாவாதிபரமனகன்றிடலுஞ்
சந்தக்குலநான்மறைவிரிஞ்சனுலகத்தடைந்தான்சனற்குமரன்.

(இ - புரை.) இவ்விபூதியின் மகத்துவத்தை வேதங்களெல்லாம் விஸ்தாரமாகச்சொல்லுகின்றன ; உன்மனதுக்கெளிதாகத்தெரியும்படி மிகவுஞ்சுருக்கிநாம் சொன்னோமென்று அருள்செய்து, ஆதியந்தமில்லாத முதற்கடவுளாகிய கயிலாசபதியானவர் எழுந்தருளவும், சனற்குமாரமுனிவர் சந்தமுள்ள கூட்டமாகிய சத்தவடிவான சிரேட்டமுள்ள நான்குவேதமு முணர்ந்த பிரமலோகம்போய்ச்சேர்ந்தார். எ - று. (சரு)

இன்னதாயவெண்ணீற்றின்றகைமையெம்மாற்புகலவற்றோ
வுன்னைநலியும்பசிதீர்த்தற்கொருப்பட்டெமைநீயுறப்பற்றி
மன்னுதிருநீறுனதுடலமலியப்பரிசித்ததனனீ
யன்னகாலைநிருதவடிவகற்றித்தேவாயினையென்று.

(இ - புரை.) இத்தன்மையுள்ள விபூதியின் மகத்துவம் எம்மாற் புகழத் தக்கதோ? உன்னைவருத்திய பசிதீர எம்மை உண்ணவேண்டுமென்று பிடித்து, நிலைபெற்றவிபூதி யுன்சரீரத்திற் பொருந்தப்பரிசித்ததினால், முன்னுள்ள ராக்ஷதவுருவம் நீங்கித் தேவரூபம்பெற்றாயென்று கூறி, எ - று. (சசா)

அன்பினுணர்த்திவெண்ணீற்றையள்ளியரக்கன்றனக்களியா
வின்பமருளுமந்திரமுமிபம்பிமுறைநீறிடுவித்துத்
துன்பமொழிந்தாய்பொன்னுலகிற்போகந்துய்த்துத்தொலைந்தபின்னர்
வன்பரறியாச்சிவபதத்தைமருவிவாழ்தியெனவிடுப்ப.

(இ - புரை.) இங்ஙனம் அன்புடன்சொல்லி விபூதியையள்ளி அரக்கனுக்குக் கொடுத்து, பேரின்பமருளும் மந்திரோபதேசமுஞ்செய்து முறையாக விபூதியைத் தரித்துக்கொள்ளும்படித்தெரிவித்து, துன்பம்நீங்கினவனே! சுவர்க்கபோகவின்பம் அனுபவித்து நீங்கினபின்பு, அன்பில்லாதவர்களால் அறியப்படாத சிவபதத்தைப்பொருந்தி வாழ்ந்துகொண்டிருவென்று விடைகொடுத்தனுபப ; எ - று. (சஎ)

பழையமுனிவனடியிணைமேற்பணிந்தாங்கெழுந்துவிடைபெற்றுக்
குழையமனத்தினுவகையொடும்பொன்னுட்டெல்லைகுறுகுதலும்
பிழையில்பொருளின்பதந்தெரியும்வாமதேவப்பெருந்தகையுந்
தழையுமிதழிச்சடாதரன்போற்சார்ந்தானென்றுசாற்றினன்.

(இ - புரை.) அரக்கன் பழமையாகிய வாமதேவமுனிவர் திருவடியிற் பணிந்தெழுந்து விடைபெற்றுக்கொண்டு குழையுமனத்தினனாய்ச் சந்தோஷத்

துடன் தேவலோகத்திற்செல்லுதலும் பிழையில்லாதபொருளின் தன்மையுண ர்ந்த அம்முனிவர் தழைத்த கொன்றைமாலையணிந்த சடாமகுடமுள்ள பரம சிவன்போல் தாம்போகவேண்டிய ஸ்தானத்திற்குப்போனார் என்று சூதமுனிவர் சொல்லினார். எ - று. (௪அ)

பதினாறாவது திரிபுண்டரமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம். ௬௩௩

உ
சிவமயம்.

## பதினேழாவது
# வேடன்சிவபூசைகடைப்பிடித்த
## அத்தியாயம்.

இவ்வண்ணம்வியந்துசூதனிறுத்தலுமதனைக்கேளா
மைவ்வண்ணக்காளகண்டன்வால்வண்ணப்பூதிநல்கு
மெய்வ்வண்ணப்பலத்தின்பெற்றிவிழைந்தனமென்னவேத்திப்
பொய்வ்வண்ணம்புகுதாவுள்ளத்தருந்தவர்புகல்வதானார்.

(இ - ள்.) சூதமுனிவர் மகிழ்ந்து சொல்லுதலும் இதனைக்கேட்டு மைந் நிறமுள்ள காளகண்டமூர்த்தியின் வெண்மைநிறமுள்ள விபூதிதரிக்கின்ற மா ருபலத்தின் தன்மையைக்கேட்டு ஆனந்தமடைந்தோமென்று துதிசெய்து, உண்மைநெறி பொருந்திய உள்ளத்தையுடைய நைமிசாரணியமுனிவர்கள் சொல்லுகின்றார்கள். எ - று. இறுத்தல்- கூறல். வால் - வெண்மை. (க)

முற்றுநான்மறைகள்கூறுமுடிபொருட்டுணிபையோர்ந்து
கற்றவர்குரவராயிற்பேறுமக்கணத்தினெய்துஞ்
சிற்றியற்குரவர்தம்பான்மானிடர்சிவமெய்ஞ்ஞானம்
பெற்றிடிலவரெவ்வாறுபிஞ்ஞகன்பதத்தைச்சேர்வார்.

(இ - ள்.) நான்குவேதமுழுவதுஞ் சொல்லத்தக்க முடிவான பொரு ளின் நிச்சயம் அறிந்து கற்றவர்கள் ஆசாரியரானால் சிவபதம் அப்பொழுதே கிடைக்கும். அவ்வாறு கற்றுணராத ஆசாரியரிடத்தில் மானிடர்சேர்ந்து மெய் ஞ்ஞானம் பெறுவார்களானால், சிவபதத்தை அவர்கள் எவ்வண்ணஞ்சேர்வார் கள். எ - று. (உ)

அருந்தவமுனிவேயிந்தவினவுக்குவிடையாதன்பு
புரிந்தெமக்குரைத்தியென்றுபுராதனமுனிவர்கூற

விரிந்தநற்கலைகள்வல்லவியாதனைமனத்தினேத்தித்
திருந்தியதவத்துச்சூதமுனிவரன்செப்பினனே.

(இ - புரை.) அரியதவமுள்ள சூதமுனிவரே! இந்தவினவுக்கு விடை ஆராய்ந்து அன்புகூர்ந்து எமக்கு அருள்செய்யுமென்று புராதனர்களாகிய நைமி சாரணியமுனிவர்கள் சொல்ல; விரிவாகிய பலகலைகளிலும் வல்லவராகிய வியாசரை இருதயத்திற் சிந்தித்துத்துதித்து நல்லதவத்தையுடையசூதமுனிவர் சொல்லுகின்றார். எ - று. (௩)

பரவைசூழுலகில்வாழுமானிடப்பசுக்கட்கெல்லா
மரனது தருமத்தோங்குங்கிரியையிலவாவொன்றுண்டேற்
குரவனதறிவின்கீழ்மைமேன்மைதான்குறிப்பதென்னோ
௰ திரமுறுமன்பினனேசிவகதிசேரலாமே.

(இ - புரை.) சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகில் மானுடரான சீவர்களுக்கெல்லாம் சிவதருமமாக மேன்மைதங்கிய கிரியாபாதத்தில் விருப்பமென்பதொன்றுண்டாயிருக்குமானால், ஆசாரியருடைய அறிவின்கீழ்மையையும் பெருமையையும் நாங்குறிக்கவேண்டியதில்லை; உறுதியாகிய அன்பினலேயே சிவகதியடையலாம். எ - று. (௪)

உடைத்தெறிந்திட்டகல்லிற்பசுமண்ணின்மரத்தினேட்டிற்
கிடைத்தவற்றொன்றுதன்னையரனெனக்கிரியைபேணிக்
கடைப்பிடித்துறுதிகூருமவாவொடுகனிவனயின் ௫
விடைக்கொடியுயர்த்ததோன்றல்கருமத்தான்முத்திமேவும்.

(இ - புரை.) உடைந்து எறிந்துவிட்ட கல்லிலும் ஈரமுள்ள மண்ணிலும் ஓட்டிலும் இவைகளுமல்லாமல் வேறெதுகிடைத்தாலும் அவைகளிலொன்றைப் பரமசிவனக பாவித்துக் கிரியைவிரும்பி மறவாமற்பற்றி உறுதிமிகுந்த அன்புடன் ஒருவன்மனங்கனிவானனல், அவனுக்கு ருஷபக்கொடியுள்ள பரமசிவனது கிரியையால் முத்திகிடைக்கும். எ - று. (௫)

காட்டிடுங்குரவன்றனுங்கயவனுந்தகைபனேனு
மீட்டுமந்திரமும்வாளாவசனமாமியல்பிற்றேனுங்
கேட்டமாணக்கன்றனுமறிவிற்கீழ்மகனுமேனு
நாட்டியவவாவொன்றுண்டேற்சிவபதநண்ணுவானே.

(இ - புரை.) உபதேசிக்கும் ஆசாரியன் சாஸ்திரவிசாரணை யில்லாதவனேயானலும் உச்சரிக்கிற மந்திரமும் பயனில்லாத வசனமேயானலும் உபதேசம்பெற்ற சீடன் விவேகமில்லாத கீழ்மகனேயானலும் சொல்லிய அன்பென்பது உண்டாயிருக்குமானல், சிவபதத்தை யடைவான். எ - று. (௬)

ஆரணநான்குமோதியறிந்தபேரறிஞனேனுங்
காரணவேள்விநூறுங்கருத்தினின்முடித்தானேனும்
வாரணமுரித்தவள்ளன்மலரடிதன்னின்வைத்த
பூரணவேட்கையில்லான்பொருந்திடான்முத்தியன்றே.

(இ - புரை.) நான்குவேதங்களும் ஓதியுணர்ந்த ஞானவானானாலும் சுவர்க்கபதப் பிரவேசத்திற்குக் காரணமாகிய நூறுயாகம் விரைவாகச்செய்து நிறைவேற்றினவனே யானாலும், யானையையுரித்த நம்மிறைவன் திருவடிமலரில்வைத்த பூரணமாகிய அன்பில்லாதவன் முத்தியடையான். எ - று. (எ)

ஆதலாற்கருமம்யாவுமையத்தோடியற்றுகின்ற
பேதைமையுளத்தார்பெற்றபேறில்லைபண்டோர்வேடன்
போதமிலரசன்சொன்னவினைதநற்பொருளென்றெண்ணி
வேதநாயகனைப்பூசித்துய்ந்தமைவிளம்புவாமே.

(இ - புரை.) ஆகையினால், கிரியைகளெல்லாம் சந்தேகத்துடன்செய்திருக்கும் அறிவில்லாதவர்கள் அடைந்தபேறு ஒன்றுமில்லை; பூர்வத்தில் ஒருவேடன் ஞானமில்லாத ஒரு அரசன்சொல்லிய வினோதவார்த்தையை நல்லபொருளென்று நம்பிப் பரமசிவனைப்பூசித்து உய்ந்த சரித்திரத்தைச் சொல்லுகிறோம். எ - று. (அ)

பண்டுபாஞ்சாலதேசப்பார்த்திபக்குமரன்மிக்க
திண்டிறற்சிங்ககேதுவெனும்பெயர்ச்செங்கோல்வேந்தன்
கொண்டலொத்துதவுகையான்கோதிலான்குணத்தின்மிக்கான்
றண்டுதலின்றிவேட்டமாடுவான்சமைந்துபோனான்.

(இ - புரை.) பூர்வத்தில் பாஞ்சாலதேசத்தில் பராக்கிரமமுள்ள சிங்ககேதுவென்னும் பெயர்பெற்றுச் செங்கோல்செலுத்துபவனும் மேகம்போற்கொடுக்குங்கையனும் குற்றமில்லாதவனும் நற்குணத்திற்சிறந்தவனுமான அரசன் ஒருநாள் நீங்குதலில்லாமல் வேட்டையாட உத்தேசித்துப்போனான். எ-று.

தடியிசைவலைவார்காவித்தடந்தொறும்வருவார்கோடி
துடியொடுமிரலைபொங்கத்தொண்டகந்துவைப்பார்கோடி
மடிசெவிஞமலிபற்றிவருபவர்கோடிகோடி
கடிதருதொகையோர்சூழக்காட்டகம்வேட்டஞ்செய்தான்.

(இ - புரை.) தடிகளின்மேல் வலைகளும் வார்களும்பூட்டிச் சுமந்துகொண்டு மார்க்கந்தோறுஞ் செல்லுகின்ற கோடி வேடர்களும் துடியுடன் சிங்காதமுழங்கக் குறிஞ்சிப்பறைகள் முழக்குகிற வேடர்கள் கோடிபேர்

களும், வளைந்த காதுகளையுடைய நாய்களைப்பற்றிக்கொண்டு வருகின்றவர்கள் கோடிகோடிபேர்களும் இவ்வாறு கணக்கில்லாத வேடர்கூட்டஞ் சூழ்ந்துவரச் சென்று, காட்டினிடத்தில் வேட்டையாடினான். எ - று. காவுதல் - சுமத்தல்.

அப்பெருவனத்திற்சண்டனெனும்பெயர்வேடனெஞ்சி
யெப்பெருநெறியுநேடிவிலங்கினையெறியவெண்ணி
யொப்பருஞ்சிலையினோடுங்கணைபிடித்துருத்துச்செல்வான்
றிப்பியமொழிந்துநந்திபிடிந்தவாலயத்தைச்சேர்ந்தான்.

(இ - புரை.) அந்தப்பெரிய ஆரணியத்திற் சண்டனென்கிற ஒருவேடன் தனித்து எல்லாவழிகளையுந்தேடி மிருகங்களைக்கொல்ல நினைத்து, ஒப்பில்லாத வில்லையும் பாணத்தையும் பிடித்துக் கோபத்துடன் செல்லுகின்றவன், பொலிவுமாறி இடிந்து பாழாயிருக்கும் ஒரு ஆலயத்திற் சேர்ந்தான். எ - று. திப்பியம் - திவ்வியம். நந்தி - பொலிவுகெட்டு. (கக)

சிதைந்துருவழிந்துவீழ்ந்துகிடந்ததோர்சிவலிங்கத்தைக்
குதைந்தவார்பகழிவேடன்கண்டனன்குறித்தநெஞ்சிற்
புதைந்தபேரன்பினாலேபோற்றினனெடுத்துப்போந்து
ததைந்தபூந்தெரியல்வேய்ந்ததராபதிதிருமுன்காட்டி.

(இ - புரை.) சிதைவுபட்டு உருவமழிந்து விழுந்திருந்த சிவலிங்கத்தைக் கண்டு, குதையுள்ள நீண்ட கணைகளையுடைய அந்தவேடன் அதை நிதானித்த மனதில் நிறைந்த பேரன்புடன் துதித்தெடுத்துக்கொண்டுவந்து, நெருங்கிய பூமாலையணிந்த அரசன்முன்னர்க்காட்டி, எ - று. (கஉ)

அரும்புவிமுழுதுமாளுமரசனேயரசரேறே
விரும்பியவடியேன்கையின்மேவியசிவலிங்கத்தைப்
பெரும்பயன்றெரிந்துபோற்றிப்பூசிக்கும்பெற்றியெல்லாந்
தரம்பெறவுரைத்தியென்னச்சாற்றினன்சாற்றலோடும்.

(இ - புரை.) அருமையான பூமிமுழுதுங் காக்குமரசனே! மன்னவர்சிங்கமே! விருப்பங்கொண்ட அடியேன் கரத்திற் பொருந்திய இச்சிவலிங்கத்தை மிகுந்தபயனறிந்து துதித்துப்பூசிக்கிற முறைமையெல்லாம் கிரமமாகச்சொல்ல வேண்டுமென்றான். அப்படிக்கேட்டவளவில், எ - று. (கங)

மடமையினன்றேவிந்தவனசரனுரைத்தமாற்றம்
புடையமர்ந்தீர்கள்கேண்மினென்றுகைபுடைத்துநக்குப்
படையுலாந்தடக்கைவேடநினக்கதுபணிப்பனென்னுக்
கடலுலகாளும்வேந்தனசதியாற்கட்டுரைத்தான்,

(இ - புரை.) என்னருகிலிருப்பவர்களே! இந்த வேடன் சொன்னவார்த்தை அறியாமையினாலல்லவா? கேளுங்களென்று கைதட்டி நகைத்து, ஆயுதமேந்தும் பெரியகையுள்ள வேடனே! பூசைசெய்கிற முறைமையைச் சொல்லுகிறேன்கேளென்று, கடல்சூழ்ந்த உலகாளும் அரசன் ஏளனமாகச் சொல்லுகிறான். எ - று. அசதி-ஏளனம். (௧௪)

ஏந்தியசிவலிங்கத்தையியல்பின்மஞ்சனநீராட்டிப்
பூந்துணர்கந்தஞ்சாற்றிப்புகையொடுதீபநல்கி
மாந்தரைச்சுட்டசாம்பர்கொணர்ந்துமுன்வைத்துப்போற்றி
யாய்ந்துநீதுய்க்குந்திம்பாலடிசிலோடவையுநல்கி.

(இ - புரை.) ஏந்திய சிவலிங்கத்துக்கு விதிப்படி திருமஞ்சனநீரால் அபிஷேகஞ்செய்து, சந்தனபுஷ்பந்தரித்துத் தூப தீபங்கள்கொடுத்து, இறந்தமனிதரைச்சுட்ட சுடலைச்சாம்பரைக் கொணர்ந்து எதிரில்வைத்துப்போற்றிசெய்து, பதமறிந்து நீ உண்ணுகின்ற மதுரமுள்ளபாலன்னமும் இன்னுமுள்ளவைகளையும் நிவேதித்து, எ - று. (௧௫)

நேயமோடிறைஞ்சிபேத்திநிருத்தங்கள்புரிந்துநின்று
வாயினாலமுதகானம்பாடியும்வணக்கஞ்செய்துந்
தூயநற்பூசைசெய்வாயென்றிறைசொன்னான்முற்றுங்
காயும்வெஞ்சிலைக்கைவேடன்மெய்ம்மையாற்கருத்திற்கொண்டான்

(இ - புரை,) அன்புடன் பணிந்து துதித்து, நடனங்கள்செய்து வாயினால் மதுரமுள்ள கீதங்கள் பாடியும் பவித்திரமான நல்லபூசைசெய்யென்று அரசன் சொன்னான்; பகைவரைக்கொல்லத்தக்க வேடன் அவற்றையெல்லாம் உண்மையாக மனதிலெண்ணிக்கொண்டான். எ - று. (௧௬)

நெஞ்சினில்வேட்கைக்கூரக்கடைப்பிடிநிகழ்தலாலே
வஞ்சமுற்றரசன்சொன்னவிதிமுறைவழுவாதெண்ணி
யஞ்சலித்தமலன்பூசையனுதினமொருநாள்போல
விஞ்சவேபுரியுங்காலத்தொருபகல்விரதவேடன்.

(இ - புரை.) விரதங்கொண்டிருக்கும் அவ்வேடன் மனதில் அன்புமிகுதியாகஅரசன்சொன்னவையெல்லாம் உறுதியாய்க்கொண்டதினால், அவ்வரசன் கபடங்கொண்டுசொல்லியமுறைமையில் ஒன்றுந்தவறாமல் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு வணங்கிச் சிவபூசை முதல்நாள்போலவே செய்யுங்காலத்தில், ஒருநாள், எ - று. கடைப்பிடி—உறுதிப்பாடு. (௧௭)

மற்றையவெல்லாங்கொண்டுவரதனைப்பூசைசெய்வா
னுற்றனனடலைநீறுகண்டிலனெல்லையேகிச்

சுற்றியவனங்களெங்குந் துருவினனேடிக்காணான்
கற்றையங்குழலாளோடுகருத்தழிந்திவைசொன்னான்.

(இ - புரை.) சிவபூசைக்கு வேண்டிய திரவியஙகளெல்லாஞ் சேகரித்துக்கொண்டு பூசைசெய்யவாரம்பித்துச் சேகரித்த திரவியங்கள் சரியாகஇருக்கின்றனவாவென்றுபார்க்கையில், சுடலைச்சாம்பலொன்றில்லாமையினால் விரைவுடன் சுடலைகளெல்லாந் தேடிப்பார்த்து அகப்படாமல் மனம்வருந்தித் தன் மனைவியுடன் சொலலுகிறான். எ - று. துருவல்-தேடல். (கஅ)

குன்றியந்தாமதான் றகுவிமுலைக்கொடிச்சிகேட்டி
யன்றுநங்குரவனுனவரசர்கோன்பணித்தவாறே
யின்றளவீசன்பூசையியற்றினேன்குறைபாடின்றி
யொன்றவற்றிலதேலண்ணல்பூசையின்றொழியுங்கண்டாய்.

(இ - புரை.) குன்றிமணிமாலை அசையும்படியான குவிந்ததனமுள்ள குறமாதாகிய என்மனைவியே! கேட்பாயாக; நம்முடைய குருவாகிய அரசன் அன்றுசொன்ன முறைமைப்படி யின்றுவரையில் சிவபூசை குறைபாடில்லாமற் செய்தேன்; அந்தப்பூசைத்திரவியங்களிலே இப்போது ஒருதிரவியமில்லாவிடில் சிவபூசைக்கிரமந்தப்பிப்போம். எ - று. கொடிச்சி-வேடமகள். (கக)

பூசனைவழுவுமாயிற்புலாலுடறன்னைப்போற்றிச்
சீசியானிருக்கலாற்றேனிறப்பதேதிண்ணமென்றான்
மாசிலாவுள்ளத்தாளுங்குறையேதுவந்ததென்றாள்
தூசுலாமல்குலாய்கேள்சுடலையினடலையென்றான்.

(இ - புரை.) சிவபூசை தவறுமானால் சீச்சீ இந்த நாற்றவுடலை வைத்துக்கொண்டிருக்கமாட்டேன், இறந்துபோவதே நிச்சயமென்றான், குற்றமற்ற மனமுடைய அந்தக்குறமாதும் இப்போதுநேரிட்ட குறைபாடெனனவென்று கேட்க; ஆடையணிந்த அல்குலையுடைய பெண்ணே! சுடலைச்சாம்பலே ஒன்று குறைபாடு என்றனன். எ - று. (உ0)

உரைத்தவற்றுள்ளேயொன்றின்றாயினுமுவகைகூர்ந்து
பரித்திடார்தொண்டர்பூசையென்றுநீபகர்ந்தயாவுங்
கருத்தினிலுணர்ந்தேனின்றுகண்ணுதற்பரமன்றன்னை
யருத்தியால்வழிபட்டேத்தவறைகுவனடியனென்றாள்.

(இ - புரை.) சொல்லிய திரவியங்களில் ஒன்றில்லாவிட்டாலும் அடியார்கள் சந்தோஷத்துடன் பூசையைத்தொடங்காகளென்று நீசொன்னவையெல்லாம் மனதிலறிந்தேன்; இப்போது சிவபூசை யன்புடன்செய்து துதிக்க அடியேன் ஒன்றுசொல்லுகிறேனென்றனள். எ - று. (உக)

ஈமத்தினடலையொன்றுகுறைந்ததென்றிரங்கவேண்டா
சேமித்தநந்தமில்லிற்செந்தழல்கொளுவிமுத்தி
காமித்துநான்வீழ்ந்தந்தக்கனல்புகுந்தவிவேனின்னே
பூமொய்த்தமார்பவெந்தசாம்பராற்பூசைசெய்வாய்.

(இ-புரை.) சுடலைச்சாம்பரொன்று குறைந்ததென்று விசனப்படவேண்டியதில்லை, காவலாகக்கட்டிய நம்முடைய குறிச்சியில் தீவைத்துக்கொளுத்திவிட்டு, நான் மோக்ஷத்தைவிரும்பி அந்தத்தீயில்விழுந்து இறந்துபோகிறேன்; பூமாலையணிந்திருக்கும் மார்பையுடையநாயகனே! அந்தச்சாம்பரைக்கொண்டு இப்பொழுதே சிவபூசைசெய்வீராக என்று கூறினள் எ - று. ஈமம்-சுடலை.

என்றவள்சொல்லக்கேட்டவெயினனுமினைந்துசொல்வான்
மன்றலங்குழலாய்கேட்டியில்லறம்வளரநின்றான்
றன்றனிமனைவியாலேதருமமேமுதலநான்கு
மொன்றிடவேண்டுமென்னுமுலகமென்றுரைத்துப்பின்னும்.

(இ-புரை.) அங்ஙனம் சொல்லியதைக்கேட்ட அவ்வேடன் மனமிரங்கிச் சொல்லுகிறான்; வாசனையுள்ள அளகத்தையுடைய மாதே! நான் சொல்வதைகேள், இல்லறம்வளரும்படி விரும்பியிருக்குமொருவன் தன்மனைவியினால் தருமமுதலாகியநான்கும் பொருந்தவேண்டுமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்; என்றுசொல்லி மேலுஞ்சொல்லுகிறான். எ - று. எயினன்-வேடன்.( )

பொங்கிளமுலையாய்கேண்மோபுதல்வரைப்பெற்றாயல்லை
மங்கையின்பருவத்தின்பமாதுநீமன்னுங்காமந்
தங்கியகாதன்மேன்மேற்றழைத்திடுமிளமைதன்னி
லங்கியில்வீழ்ந்துசாதற்கடுக்குமோவடாதுகண்டாய்.

(இ-புரை.) இளமைமிகுந்த தனத்தையுடையவளே! கேள்; நீஇதுவரையில் புத்திரசம்பத்து அடையவில்லை, நீயோ மங்கைப்பருவமுள்ளவள், காமமேயாருந்திய ஆசைமேன்மேற்றழைக்கு மிளமையில் தீயில்விழுந்துசாதல்அடுப்பதோ அடுப்பதல்லவே. எ - று. மங்கைப்பருவம் - பதின்மூன்றுவயதுள்ளகாலம்.

மின்குலமனையவாளிவேட்டுவர்க்கரசாய்த்தோன்று
நின்குலமைந்தனில்லாநிரயம்புக்காழ்ந்துபோன
வென்குலத்தவரையெல்லாநரகினின்றேற்றிமேலேன்
புன்குலந்தன்னையோம்பிப்புரப்பவர்யாவரென்றான்.

(இ-புரை.) மின்னற் கூட்டமொத்த பாணமேந்திய வேடர்குலத்துக்கு அரசனாகப்பிறந்த உனது தந்தையின் வமிசம் புத்திரனில்லாமல் நரகத்தில்மூழ்கிப்போயிற்று. என்குலத்தவரையெல்லாம் நரகத்தினின்றுங் கரையேற்றி இனி என்புல்லியகுலத்தை ஆதரித்து ரக்ஷிப்பவர்கள் யாரென்று சொன்னான். எ-று.

கருங்கயல்விழியாள்கேட்டுக்கூறினாள்கருப்பமென்னு
மருங்கயற்கடலுளாழ்ந்தங்கழிவுறுமறிவிலாரிற்
பெருங்கயமுரித்தோன்றொண்டுபேணியேமாயப்பெற்றாற்
பொருங்கயமனையாய்பின்னும்விழைவதோர்பொருளுமுண்டோ

(இ - ள்.) கரியசேலையொத்த கண்களையுடையவள் தன்கணவன் சொன்னதைக்கேட்டு யானையையொத்தபுஜபலனே! அறிவில்லாதவர்கள் பிறவியாகிய சமுத்திரத்தில் மூழ்கி இறந்துபோகிறதுபோலப் பெரியயானையையுரித்த பரமசிவனுடைய அடிமைத்திறத்தை ஆதரித்து இறந்துபோகப்பெற்றால், அதற்குமேலும் விரும்பத்தக்க பொருளொன்றிருக்கின்றதோ? இல்லையே: எ - று. (உசு)

புரவலமறுதியீசன்பூசனைமுடிக்கவேண்டி
விரவனல்குளித்திப்போதுவீவன்யானென்னலோடு
மரவெனத்திகழுமல்குலாயிழைதுணிவையோர்ந்து
பரவருங்கற்பினாளையெரிபுகப்பணித்தலோடும்.

(இ - ள்.) இறையவனே! தடுக்காதே, சிவபூசை நிறைவேற்றவேண்டி இப்போதே இப்பெரியதீயில்விழுந்து நானிறந்து போகிறேன் என்று சொன்ன அளவில், பாம்பின்படம்போல் விளங்குகின்ற அல்குலையுடைய தன்மனைவியின் துணிவையறிந்து யாவருந் துதிக்கத்தக்க கற்புள்ளவளைத் தீயில் விழும்படி உத்தரவுசெய்தமாத்திரத்தில், எ - று. (உஎ)

வானயாறிழிந்ததென்னவரையினின்றிழிந்துபாயுங்
கானயாறருவியாடிக்கலன்பலவணிந்துசுண்ண
நானஞ்செய்வாசம்பூசிநறுமலர்மாலைசூடிப்
பானுரைவெண்பாட்டார்த்துக்கணவனைப்பணிந்துவாழ்த்தி.

(இ - ள்.) ஆகாயகங்கை யிழிவதுபோல மலையினின்றிழிந்துபாயும் கானயாற்றருவியில் ஸநானஞ்செய்து, பலவித ஆபரணங்களை யணிந்து, சுண்ணப்பொடியும் கஸ்தூரியும் கலந்த சந்தனக்குழம்பு பூசி, நறுமணப் பூமாலை தரித்து பாலி னுரையையொத்த வெண்பட்டணிந்து தன்கணவனைவணங்கித் துதிசெய்து, எ - று. (உஅ)

மனையின்மீதங்கிசேர்த்திவலங்கொண்டுவணங்கியேத்திப்
புனைமதிக்கண்ணியான்றன்பொலன்கழறொழுது போற்றித்
தினையெனுந்துணையுநீங்காதன்பொடுசிந்திப்போர்கள்
வினைவிலங்கறுக்குமையாவிண்ணப்பங்கேளாயன்றே.

(இ - ள்.) தனது வீட்டில் நெருப்பையிட்டுப் பிரதக்ஷிணஞ்செய்து வணங்கிப்பின்பு சந்திரசூடரான பரமசிவனது பொன்னிறமுள்ளதிருவடிகளை வணங்கித் துதிசெய்து, தினையளவும் நீங்காமற்றியானிப்பவர்கள் வினையாகிய

விலங்கைத் தறித்துவிடும் ஐயனே! அடியேனுடைய விண்ணப்பத்தைக்கே ளென்று கூறி, எ - று. (உகூ)

இந்திரியங்களைந்துமலராகவெனதுகாயங்
கந்தமார்புகைபிற்காட்டுமகிலாகக்கருத்துநீடுஞ்
சுந்தரத்தீபமாகப்பிராணன்றுய்ப்பனவேயாக
வந்தாற்கரணமுற்றுமருக்கியமாகக்கொண்டே.

(இ - புரை.) பஞ்சேந்திரியங்களை மலராகவும் என்னுடையசரீரமானது வாசனைதங்கிய அகிற்புகையாகவும் என்னிருதயமானது மிகுந்தசுந்தரமுள்ள தீபமாகவும் பிராணனானது நிவேதனமாகவும் அந்தக்கரணமுழுவதும் அருக்கியமாகவும் ஏற்றருளி, எ - று. (கூ0)

அடியனேன்சிவன்பூசாபலத்தினையடையல்வேண்டுங்
கொடியன்யானமரர்வாழ்வுங்குறிக்கிலேன்பிறவிதோறுந்
தடையறத்தோன்றினுலுமாயையைத்தணந்துவெள்ளை
விடையகின்கழற்கீழன்புவேண்டுவனென்றுவேண்டி.

(இ - புரை.) அடியேனது சிவன் பூசைப்பலனை யடையவேண்டுமெண்டு பிரார்த்தித்துப் பின்பும் நான் தேவர்கள்வாழ்வையுங் குறிக்கின்றிலேன், தடையில்லாமல் எண்பத்துநான்குலக்ஷம் யோனிகடோறும் பிறந்தாலும் மாயையினைநீங்கி, வெள்ளைரூஷபவாகனத்தில் ஆரோகணித்துக்கொண்டெழுந்தருளுகின்ற நின்திருவடியின்கீழ் அன்புபொருந்தவிரும்புகிறேனென்று வேண்டி, எ - று. (கூக)

செங்கமலனையகண்ணாள்செழுந்தழற்பிழம்புதன்னுட்
பங்கயமலரிற்செல்லுந்திருவெனப்பாய்ந்துமாயப்
பொங்கியசாம்பராகக்கண்டனன்புளகமோங்கி
யங்கையினடலையேந்தியீசனையருச்சித்தானே.

(இ - புரை.) செவ்விய சேற்கண்டைபோலும் கண்ணாள் செழுமையான தீப்பிழம்பில் தாமரைமலரிற்செல்லுந் திருமகள்போலவிழுந்து பரிசுத்தமான சாம்பராகக்கண்ட அவ்வேடன் புளகங்கொண்டு, அந்தச்சாம்பரைத் தன்னுள்ளங்கையில் எடுத்துக்கொண்டு பரமசிவனை அருச்சித்தான், எ - று. (கூ௨)

இறையவன்பூசைமுற்றியிறுதியிற்கழித்தவெல்லாம்
பிறைநுதலென்றுமேற்கும்பெற்றிபோலற்றைப்போது
மறைமுதல்பூசைச்சேடம்வாங்குவான்வந்துதோன்றி
நிறையுடனின்ருள்கண்டுநெடுந்தகைநினைவிற்றேர்வான்.

(இ - புரை.) இவ்வாறு சிவபூசை நிறைவேற்றி அந்தப்பூசையின் முடிவில் கழித்துவிட்டதையெல்லாம் அவன் மனைவி நாடோறுமேற்றுக்கொள்வது

போல, அன்றையதினமும் வேதமுதல்வரான பரமசிவனுடைய பூசை நிருமாலியத்தை வாங்கிக்கொள்ளவந்து வணக்கமுடனின்றாள்; அதை வேடன்கண்டு தன்மனதில் ஆலோசிக்கின்றான். எ - று. (௩௩)

மனைபடுதீயில்வீழ்ந்துமாண்டதுமாய்ந்தாள்வெந்த
புனிதவெண்சாம்பராலும்பூசனைமுடித்தவாறுங்
கனவுகொனனவுதான்கொல்கழிந்தவள்வந்துநின்றாள்
வினையினால்வெந்தவில்லும்பண்டுபோல்விளங்கிற்றென்னே.

(இ - புரை.) வீட்டிற் பற்றியதீயில் நமது மனைவியிறந்தது இறந்தவள் வெந்த புனிதமான வெண்சாம்பரால் நாம் பூசைசெய்து நிறைவேற்றிய முறையுஞ் சொப்பனமோ? அல்லது நினைவுதானோ? ஈதென்னவியப்பு; முன்னிறந்தவள் இதோ நிற்கின்றாள், வெந்தொழிந்த வீடும் முன்போலப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. இது என்னகாரணமோ! எ - று. (௩௪)

உளத்தினினினையுந்தோறுமதிசயித்துவகைதோன்றத்
துளக்கறநின்றவந்தத்துணைவிதன்முகத்தைநோக்கி
வளர்த்தசெந்தழலில்வீழ்ந்தாய்மாய்ந்திலைவந்தவாறுங்
கிளத்துதிவெந்துநீறாய்க்கிளர்மனைதழைந்ததோடும்.

(இ - புரை.) மனதில் இவ்வாறு நினைக்குந்தோறும் ஆச்சரியமடைந்து சந்தோஷம் உண்டாக, நடுக்கமில்லாமலிருக்கிற தன்மனையவள்முகத்தைப்பார்த்துப் பெண்ணே! வளர்த்த அக்கினியில் விழுந்த நீ இறவாமல்வந்தவாறும் வெந்துநீறானவீடு முன்னிலும் செழுமையாயிருக்கு முறைமையுஞ் சொல்லவேண்டுமென்றனன். எ - று. (௩௫)

வேறு.

என்றுமொழிந்தானதுகேட்டலுமீதுசொன்னாண்
மின்றார்தழலில்வைத்தாங்கதில்வீழ்ந்ததன்றிப்
ல் பின்றான்விளைந்தபடியீதெனப்பேசவற்றோ
பொன்றாரமார்பதுயினீங்கினர்போலவந்தேன்.

(இ - புரை.) என்று சொல்லலும் அதைக்கேட்ட வேடன்மனைவி பொன்மாலையணிந்த மார்பையுடைய என்பிராணநாயகனே! வீட்டில் ஒளிநிறைந்த நெருப்பைவைத்து அதில்விழுந்தது எனக்குத்தெரியுமேயல்லாமல், பின்பு விளைந்தது இவ்வாறென்று நான்சொல்லமுடியுமோ? நித்திரைநீங்கினவர்கள்போல் வந்தேன். எ - று. (௩௬)

கனையாரழலுங்கவெரிந்துகரிந்துவீழ்ந்த
மனையானழியாவளனோடுவயங்கல்கண்டே

னெனையாளுடையாயெனமங்கையிறுத்தலொடு
நினையாமகிழ்வெய்தினனீ துநிகழ்ந்தகாலை.

(இ - புரை.) நிறைந்த தீப்பற்ற கரிந்துபோன நம்முடைய வீடு அழியாதவளப்பத்துடன் பிரகாசித்துக்கொண் டிருப்பதைக்கண்டேன், என்னுடைய நாயகனே! என்று தன்மனைவி சொன்னவளவில், நடந்த இந்த அதிசயத்தை மனதிலெண்ணி மகிழ்ச்சியடைந்தான். இது நடந்தகாலத்தில், எ - று.

வேறு.

கோடிவெங்கதிர்குழுமியதெனவொளிகொழிப்ப
வாடகத்தினுமணியினுமமைத்ததோர்விமான
மூடறுத்துவான்முகட்டிழிதரவதிலுறையுங்
கேடில்சீர்க்கணநாதர்வந்தினையனகிளந்தார்.

(இ - புரை.) ஒருகோடி சூரியர்கள் ஒன்றாய்க்கூடினாற்போல ஒளிதழைக்க பொன்னினாலும் இரத்தினங்களினாலும் அமைக்கப்பட்டதாகிய ஒருதேவ விமானம் ஆகாயமுகட்டைப் பிளந்துகொண்டு இழிந்துவர, அதில்வீற்றிருக்கும் அழிவில்லாத சிறப்புள்ள கணநாதர்கள்வந்து இந்த வார்த்தை சொல்லுகிறார்கள். எ - று. (௩அ)

செங்கைவார்சிலைக்கிராதநின்றேவியினோடும்
பொங்குபேரொளிவிமானத்திற்பொருக்கெனவேற்றி
யெங்குநாயகனேழிரேணடேழுலகீன்றாள்
பங்கனுங்குனைக்கொடுவருகென்னவேபணித்தான்.

(இ - புரை.) சிவந்தகையில் வில்லேந்தும் வேடனே! உன்னையும் உன் மனையாளையும் அதிகரிக்கும் பெரிய ஒளியுள்ள இவ்விமானத்தி லேற்றிக்கொண்டு, எங்களிறைவரும் பதினான்கு உலகங்களையும் ஈன்றருளிய பார்வதிதேவியார்பாகருமாகிய பரமசிவம் தம்முடைய உலகத்துக்கு விரைவுடன்கொண்டு வரும்படி எங்களுக்குக் கட்டளையிட்டனர். எ - று. (௩௯)

அண்ணலேவலினடைந்தனமிக்கணத்தயிலார்
கண்ணினாளொடும்வருகநீயென்றனர்கழறி
விண்ணினோர்புகழ்விளங்கொளிவிமானத்தினேற்றி
மண்ணினோர்தொழச்சென்றனர்மங்குல்வானெறியே.

(இ - புரை.) பரமசிவனுடைய கட்டளையினால் நாங்கள்வந்தோம்; ஆதலால் வேலொத்தகண்களையுடைய உன்மனைவியுடன் வருவாயென்றுசொல்

வித் தேவர்கள்புகழும் விளங்கும் ஒளியையுடைய விமானத்திலேற்றிக்கொண்டு பூலோகத்தாரெல்லாந்தொழ, ஆகாயமார்க்கம் சென்றார்கள். எ - று. (௬௦)

பாயும்வெம்பரிவேள்விகளனைத்தையும்பரித்த
தூயராயினுமணுகொணாச்சிவதுறக்கத்தி
லாயவேடனோடரிவையைப்புகுத்தினரன்னோர்
மாயநீங்கியபேரின்பவாழ்வினின்மகிழ்ந்தார்.

(இ - புரை.) அசுவமேதயாக முதலிய உத்தமயாகம்பல செய்தவர்களே யானாலும் சேரக்கூடாத சிவசுவர்க்கத்தில் அந்தவேடனையும் அவன் மனைவி யையும் சேர்த்தார்கள், அவ்விருவரும் மாயைநீங்கிய பேரின்பவாழ்வில் மகி ழ்ந்திருந்தார்கள். எ - று. (௬௧)

ஆதலாலரன்பூசனைக்குரியதையறியிற்
காதலாலுறுங்கடைப்பிடியன்றிவேறில்லை
மாதுபாகனைவழிபடற்கிதுமறைப்பொருளென்
றோதினன்றொல்லைநூலுணர்சூதனமுரவோன்.

(இ - புரை.) ஆகையால், சிவபூசைக்குரியதை ஆராயுமிடத்தில் அன் பினாலுண்டாகும் உறுதிப்பாடேயன்றி, வேறொன்றுமில்லை; பார்வதிபாகனை ஆராதிப்பதற்கு இதுதான் வேதத்திற்சொல்லும் உண்மைப் பொருளுமென்று வேதசாஸ்திரபுராணங்கள் அறிந்த சூதமுனிவர் சொல்லினார். எ - று. (௬௨)

பதினேழாவது வேடன்சிவபூசைகடைப்பிடித்த அத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம். ௬௭௫



உ

சிவமயம்.

பதினெட்டாவது

# உமாமகேசுவரபூசைமகிமையுரைத்த அத்தியாயம்.

காதலாலொருவர்கருதுவயாவுங்கருதியவண்ணமேதருவ
தோதுமாகமங்கடெரிந்தெடுத்துரைத்ததுமாமகேச்சுரமெனப்பகருந்
தீதிலாவிரதமெவற்றினுமேலாந்திறத்ததொன்றுளதெனவியந்து
சூதன்மாதவத்திர்யாவருங்கேண்மினென்றதன்வரன்முறைசொன்னான்

(இ - புரை.) ஆசையுடன் ஒருவர் நினைக்கும் பொருளையெல்லாம் அவர்கள் நினைத்தபடிதருவதும் சொல்லும் ஆகமங்களில் ஆராய்ந்தெடுத்துச் சொல்வதுமாகிய உமாமகேசுரவிரதமென்று சொல்லத்தக்க பழுதில்லாத விரதங்களுக்கெல்லாம் மேலான தன்மையுள்ளதாக ஒன்றிருக்கின்றது; முனிவர்களே! அந்தவிரதத்தைச் சந்தோஷத்துடன் கேளுங்களென்று, அதின் முறைமைகளைச் சூதமுனிவர் சொல்லத்தொடங்கினர். எ - று. (௧)

கனைகடலுடுத்தபுவிக்கெலாமணியாய்க்கவின்பெறுமானந்தநாட்டின்
மனைவியும்பொறைகூர்மைந்தரும்வாழவாழ்பவன்மனையறங்காக்கும்
வினைவலான்வேதவிரதனென்றுளனோர்வேதியனவனருள்கூருந்
தனையையுண்டொருத்தியின்கனித்துவர்வாய்த்தார்க்குழற்சாரதையென்பாள்.

(இ - புரை.) ஒலிக்கும் சமுத்திரம்வளைந்த இவ்வுலகத்துக்கெல்லாம் ஆபரணம்போல்வதாய் அழகுபொருந்திய ஆனந்தமென்னும் தேசத்தில், மனையாளும் சாந்தகுணமுள்ள புத்திரர்களும்வாழும்படி வாழ்கின்றவனும் இல்லறம் வழுவாமல் காக்குஞ்செய்கையில் வல்லவனுமாய் வேதவிரதனென்கிற பெயருள்ள ஒருபிராமணனிருந்தான்; அவன் மிகுந்த அன்புவைத்திருக்கும் புத்திரியாகிய இனியகோவைக்கனியொத்த செவ்வாயும் தாழ்ந்த அளகபாரமுமுடையவளாய் சாரதையென்னும் பெயர்பெற்ற ஒருத்தி இருந்தனள். எ - று. (௨)

மின்னிகர்மருங்குஞ் சற்பிறைநுதற்கனிவாய்வெண்ணகைக்கருங்கு
ழலவடான், பன்னிருபருவமடைந்துபைங்கோங்கின்பனிமுகையென
முலைமுகிழ்த்தா, ளன்னகாலையிலந்நகராளுமரசர்கோனின்னுயி
ர்த்தோழ, னன்னெறியொழுகுகருணையால்பதுமநாபனெனறுரைக்குமா
மறையோன.

(இ - புரை.) மின்னலையொத்த இடையும் பிறையையொத்த நெற்றியும் கோவைக்கனிபோன்றசெவ்வாயும் வெண்ணகையும் கருநிறமுள்ள அளகமுமுடையஅந்தப்பெண்ணானவள் பன்னிரண்டுவயதுள்ளவளாய்ப் பசுமையுள்ளகோங்கினரும்புபோலத் தனங்களுண்டாக மங்கைப்பருவம்பெற்றாள் அப்போது அந்தநகரத்தையாளுகின்ற அரசனுடைய இனிய உயிர்போன்ற தோழனாகிய நல்லொழுக்கந்தவறாத கிருபைமிகுந்த திருமாலையொத்த பதுமநாபனென்னும் பெயருள்ள ஒருபிராமணன். எ - று. (௩)

உளமகிழாதற்கிழத்திபல்காலமுறுநலனுகர்ந்துபின்னிறப்ப
விளமைபோயடைந்தமூப்புடனிருந்துமிருநிதிமல்கியகளிப்பாற்
றவளவாண்முறுவற்றாழ்குழற்கனிவாய்ச்சாரதையிளநலம்வேட்டு
வளநிதித்தொகுதிமுலைவிலைகொடுத்துமணவினைநொடிகெனவிடுத்தான்.

(இ - புரை.) உள்ளத்துக்கியைந்த அன்புடைய மனைவி நெடுநாள் இன்பமனுபவித்துக்கொண்டிருந்துஇறந்துபோனாள்; அவனும் இளமையொழிந்துமூப்படைந்திருந்தும் மிகுந்த திரவியமிருக்கிறகளிப்பினால், முல்லையரும்புபோன்ற வெண்ணகையும் தாழ்ந்தகுழலும் கனிவாயுமுள்ளவளாகிய சாரதையென்பவளைவிரும்பி வளப்பம்பொருந்திய மிகுந்ததிரவியங்களைப் பரிசமாகக்கொடுத்து மணத்தொழில் பேசும்படிச் சிலமுதியோரை யனுப்பினான். எ-று. முலைவிலை-பரிசம், பெண்கொள்வோர்பெண்ணுக்கெனத்தரும்பொருள். நொடித்தல்-பேசல்.

ஆங்கவர்குறுகிமொழிதலுங்கேட்டவவிரிழைப்பொலங்கொடிதாதை
யீங்கியாமெளியமகட்கொடைநேராதின்னுரைமறுத்தனமாயிற்
றேங்குநீருலகமொருகுடைநிழற்றுஞ்செய்யகோலிறைவலியானக்[ன்.
கோங்கிளமுலையாண்மணவினைமுடிப்பன்கொடியனென்றுணர்ந்தனனேர்ந்தா

(இ - புரை.) அந்த முதியோர்கள்போய்த் தாங்கள்வந்த சேதியைச்சொல்லலும் அச்சாரதையின் தகப்பன்கேட்டு, நாமிப்போது ஏழையாயிருக்கின்றோம்; ஆதலால், வந்தவர்களுக்கு இனியவார்த்தை சொல்லாமல் கன்னிகையை கொடுக்கிறதில்லையென்று மறுத்துச்சொல்வோமே யானால், சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகத்தை ஒருகுடைநிழலிற் செங்கோலோச்சுமிராஜனுடையபலத்தினாற் கோங்கரும்பையொத்த இளமுலையையுடையநம்முடையகன்னிகையைப் பலாத்காரமாகவிவாகஞ்செய்து கொள்வானென்று யோசித்துப் பெண்கொடுக்கச் சம்மதன். எ - று. (௫)

கொய்யுளைமான்றேர்ப்பரிதிவான்முகட்டிற்குறுகியநண்பகற்காலைச்
செய்தவக்கிழமையந்தணர்க்கெல்லாஞ்செழுநிதிப்புனலொடும்வழங்கி
நெய்சொரிவேள்விக்கனலிசான்றாகநிரைவளைச்செங்கரம்பற்றி
மொய்குழறகனிவாய்முகிழ்முலையணங்கைமுறையினின்மறையவன்வேட்டான்.

(இ-புரை.) கத்தரித்த கழுத்துமயிரையுடைய சப்தமா என்னும் குதிரைகட்டிய தேரில்வருஞ்சூரியன் ஆகாயத்தினுச்சியிற்சேர்ந்த நல் பகற்காலத்தில் செய்தற்குரிய நவத்தியையுடைய பிராமணருக்கெல்லாம் மிகுந்த திரவியங்கள் நீருடன் தானமாகக்கொடுத்து, நெய்சொரியப்படும் ஓமாக்கினி சாக்ஷியாக நிரைவளையலணிந்த செங்கரப்பற்றி நெருங்கிய அளகமும் கனிவாயும் அரும்பையொத்த தனமுள்ள சாரதையென்பவளைப் பதுமநாபனென்னும் பிராமணன் விவாகஞ்செய்து கொண்டான். எ - று. (௬)

வாம்பரித்தடந்தேர்ப்பரிதிவானவன்போய்மறிதிரைக்குடகடல்
குளிப்ப, வாழ்பல்வாயவிழுமாலையங்காலத்தந்திவந்தனைத்தொழின்
முடித்துத், தீம்புனற்றுறைநின்றகன்றுவல்லிருளிற்றிரும்பலுந்தீவிட

பொழுதுங், தூம்புடையெயிற்றுவாளராத்தீண்டச்சோர்ந்துயிர் துறந் தனன் மறையோன்.

(இ - புரை.) தாவிச்செல்லும் குதிரைபூட்டிய தேரினையுடைய சூரியன் போய் மறித்துவரும் அலைகளையுடைய மேற்றிசைச்சமுத்திரத்தில் மறையவே, ஆம்பல்மலர்கள் மலரும் அந்திப்பொழுதில் மணக்கோலமுள்ள அப்பிராமணன் சந்தியாவந்தனத்தொழில் முடித்துக்கொண்டு, மதுரமுள்ள நீர்த்துறையினின் றும்நீங்கி, இருட்பொழுதில் தன்வீட்டுக்குவரத் திரும்பினவளவில், நீவிஷம் ஒழுகும்படியான துவாரத்தோடுகூடிய பற்களையுடைய சர்ப்பந்தீண்டுதலினால், அந்தப்பிராமணன் சோர்வுடனிறந்தான். எ - று. (எ)

தொடிமலர்ச்செங்கைபற்றுபுமணந்தோன்சூழ்வினையுருத்தொ ருஞான்றும், வடிமலர்க்கோதைநன்னலம்பருகான்மாய்ந்தனனென் பதுகேளாக், கொடியவெந்துயருற்றனவன்கிளைஞர்குழுமியாங்கவ லமுற்றரற்றிக், கடன்முறைகழிப்பான்பழமறைவிதியாற்கதழெரிபடு த்தினர்மீண்டார்.

(இ - புரை.) மனைவியின் வளையலணிந்த செந்தாமரை மலர்போன்ற கையைப்பற்றி மணந்த அவ்வந்தணன் சூழ்ந்தவினையினாற் சிறப்பட்டு நன்மலர ணிந்த அளகத்தையுடைய அம்மனைவியினின்பத்தை ஒருநாளும் அனுபவியாமல் இறந்துபோனானென்பதைக் கேட்டுக் கொடியதுயரமடைந்து அவன்சுற்றத் தார் அவலங்கொண்டழுது உத்தரகிரியைசெய்துமுடிக்க; வேதவிதிப்படிஓமஞ் செய்து பற்றியெரியும் தீயில் சபத்தைவைத்து வந்துவிட்டார்கள். எ - று. (அ)

மலர்தலையுலகுபரவுசாரதையைமணம்புணர்காதலன்கலவி
நலனறக்கனிந்தமூப்பினனாகினானலந்திறத்தினாலே
யலர்கருங்குவளைமதர்விழிபனிப்பவருந்துயர்நனியுழந்திலளாய்க்
கலனணியொருவிக்கைமையாய்த்தந்தைகடிமனையிருந்தனளன்றே.

(இ - புரை.) பரந்த இடத்தையுடைய பூலோகத்தார் துதிசெய்யத்தக்க கற்புள்ள சாரதையென்பவள் தன்கணவனானவன் கலவியின்பம் அனுபவிக்குந் தன்மை நீங்கும்படி மூப்பையுடையவனாய் வாழும்நாள்முடிந்து இறந்தமை யால், மலர்ந்த நீலோற்பல மலர்போன்ற கண்களில் நீர்பெருக மிகுந்த துயர மடையாதவளாய் மாங்கலியத்தை நீக்கிவிட்டுத் தன்பிதாவின் கிருகத்திலிருந் தாள். எ - று. (௯)

இன்னணந்திங்கள்சிலகழிந்திடலுமெல்லையில்பருவங்கள்கடந்தோன்
முன்னைநான்மறையுமாகமமறாவுமுழுதுணர்சாந்தனுமுரவோ

ன்னெறிவழாதவருந்தவக்கிழமைநயித்துவனென்னுமா்முனிவன்
றன்னடிதொழுமோர்வேதியன் விடுப்பச்சாரதைமனையின்வந்திறுத்தான்

(இ - புரை.) இவ்வாறு சிலமாதஞ் செல்லுமளவில், அளவற்ற ஆயுளையு டையவரும் பழமையாகிய நான்குவேதங்களிலும் ஆகமங்களிலும் முழுவதுந் தேர்ந்துசாந்தகுணமுமுள்ளவருமாகிய நல்லொழுக்கத்தில் மாறுபடாத தவத்திற் குரிய நயித்துருவென்னும் முனிவர், தமதுபாதத்தைத் தொழும்படியான ஒரு ருஷியை யனுப்ப அவர் சாரதைவீட்டிற்குவந்தார். எ - று. (௧௦)

வருதலுமவடன்றந்தைதாய்கிளைஞர்மற்றொருவினையம்வேட்ட
வணின்,றொருசிறையகலத்தமியளாய்மனையினுறைபவணங்குலத்தே
வ, னரிதின்வந்தடைந்தானெனமகிழ்ந்தெதிர்கொண் டடிமலரிறை
ஞ்சிநின்றேத்திக், கரதலங்கூப்பியான்செயும்பணியென்கடவுளேயரு

(இ - புரை.) அந்த முனிவர் வந்தபோது அவள் தகப்பனுந் தாயுஞ் சுற் றத்தாரும் ஏதோ ஒருகாரியத்தைக் குறித்துத் தங்கள்வீட்டினின்றும் புறப் பட்டு ஓரிடத்துக்குப்போயிருப்பதினால், தனியாயிருக்கும் அந்தச்சாரதையான வள்கண்டு நம்முடைய குலதெய்வமே முனிவர் வடிவங்கொண்டு எழுந்தருளிய தென்று மகிழ்ச்சியடைந்து, எதிர்கொண்டு அவர்பாதமலரை வணங்கித்துதி செய்து, கைகளைக் குவித்துக்கொண்டுநின்று, சுவாமிகளே! அடியேன்செய்யும் பணியாதோ கட்டளையிட வேண்டுமென்றுசொல்லிப் பின்னும், எ - று. (௧௧)

வெறிகமழ்கமலச்சேவடிவிளக்கிவியரெலாம்புலர்ந்திடவீசி
நறுமலர்வாசப்புழுகுநெய்த்தேய்த்துநனிபனிநீர்சொரிந்தாற்றிச்
சிறுமதிக்கண்ணியண்ணல்பூசனையின்செவ்வியிற்றவிசினிலிருத்தி
முறியிடைபடலைச்செழுமலர்சூட்டிமுருகுலாஞ்சந்தமும்புனைந்தே.

(இ - புரை.) வாசனைகமழுஞ் செந்தாமரை மலர்போன்ற பாதங்களை நீரினலபிஷேகித்து மேனியிலுண்டாயிருக்கும் வியர்வையெல்லாம் நீங்கவிசிறி, நல்லமலரும் வாசனையுள்ளபுழுகும்சேர்ந்த எண்ணெய்தேய்த்து, மிகுதியாகப் பனிநீர்சொரிந்து ஸ்நாநஞ்செய்வித்து, இளந்திங்களென்னும்அரும்பினை அணிந் திருக்கும் பரமசிவனை ஆராதிக்குமுறைபோல ஆசனத்தில்வீற்றிருக்கச்செய்து, தளிர்களும் மலர்களுஞ்சேர்ந்த மாலைசூட்டி வாசனைமிகுந்த சந்தனமும்பூசி, எ - று. புழுகு - புனுகு. முறி - தளிர். (௧௨)

காரகில்கமழுந்தூபத்தட்டேந்திக்காதலிற்பூசனைபுரியா
வார்வமோடினியவறுசுவையடிசிலருத்தினளருந்தினளாகி

வார்சடைமுனிவன்பெருகியவுவகைமலிதொறுமனங்களிசிறப்பத்
தார்மணங்கமழாப்புரிகுழற்கின்பந்தழைத்திடவாசிகள்சொன்னான்.

(இ - புரை.) கமழும் கரிய அகிற்கட்டையின் தூபங்காட்டி அன்புடன் இனிய அறுசுவையுள்ள அன்னமும் உண்பித்துப் பிரார்த்தித்தாள், நீண்ட சடையையுடைய அந்தமுனிவர், அவள்செய்யும் பத்தியினால் பெருகாநின்ற சந்தோஷம் நிறையுந்தோறும் மனதிற் களிப்புமேலிடப் பூமாலையின் வாசனை கமழாத அளகத்தையுடைய சாரதையென்பவளுக்கு இன்பம்பெருகத்தக்கதாக ஆசீர்வசனஞ் சொன்னார். எ - று. (௧௩)

பண்கனிதீஞ்சொற்றெரிவையேயமராவதியினர்செல்வமேபோலக்
கொண்கனுநீயுமளப்பருங்காலங்கோதிலாநன்னலநுகர்ந்து
திண்கடலுலகிற்பலகலைதெருஞ்சிறுவனைப்பயந்துதிக்கெல்லாம்
வண்புகழ்நிறைந்தோர்தெய்வதங்காப்பவாழ்திரென்றகமகிழ்ந்துரைத்தான்.

(இ - புரை.) பண்கனிந்த மதுரமுள்ள வசனமாடும் மாதே! தேவர்கள் செல்வம்போல உன்கணவனுநீயும் அனேகங்காலவளவில் குறைவில்லாத இன்பம் அனுபவித்துத் தெளிந்த கடல்சூழ்ந்த இவ்வுலகில் பலசாஸ்திரங்களும் ஆராயத்தக்க புத்திரனையின்று, அஷ்டதிக்குகளிலும் புகழ்நிறைந்து ஒப்பற்ற கடவுள் ரக்ஷிக்கும்படி வாழக்கடவீர்களென்று மனமகிழ்ந்துசொல்லினார். எ-று.

மடவரலதுகேட்டதிசயித்தந்தோமறைவலாய்நினதுமெய்வரங்கள்
கடிமனைக்கலனீத்தெவ்வமோடிருக்குங்கைமையேற்கன்னவைதாரா
தடுதொழின்ஞமலிக்கும்பராமுதமருந்துதல்போலவுமொழிந்து
படுபசுங்கூழிற்பொழிமழைபோன்றும்பயனிலவாயிறந்தனவே.

(இ - புரை.) சாரதையென்பவள் அந்தமுனிவர் சொன்னதைக்கேட்டு ஆச்சரியப்பட்டு, அந்தோ என்றிரங்கி, முனிவரே! உம்முடையமெய்மையான வரங்கள் மாங்கலியமிழந்து துன்பத்துடனிருக்கும் கைம்பெண்ணாகிய எனக்கு இன்பங்களைத்தராமல், கொலைத்தொழிலையுடைய நாய்க்குக் கிடைப்பதற்கரிய தேவாமிர்த உண்ணக்கிடைத்ததுபோலவும் உலர்ந்தொழியும் பயிருக்கு நன்மழைபொழிந்தும் பிரயோசனமில்லாமற் பயனற்றதுபோலவும் வீணாகிவிட்டனவே, என்றனள். எ - று. (௧௫)

கோட்டமில்குணத்தாய்தமியனேன்கயினிகோதிலாவிளமைவீணிறப்ப,வீட்டுதீவினையின்பயனுழக்கின்றேனினியுனதாசியின்பயனை,
வேட்டவைபெறுதற்கெந்தவாறுரியேன்வினையினின்னடிச்சியென்றுரைப்பக், கேட்டமாதவத்தோன்வருந்தலையிதுநீகேட்டியென்றின்னனபுகன்றான்.

(இ - புரை.) மாறுபடுதலில்லாத நற்குணமுள்ள முனிவரே! தேவரீருடைய அடிச்சியான தமியேனாகைம்பெண், பழுதற்றஇளமைப்பருவம்வீணிற் கழிந்துவிடப் பூர்வசென்மத்திற் றேடிக்கொண்ட வினைப்பயனை அனுபவிக்கிறேன், இனி உம்முடைய ஆசியின் பயனான இன்பங்களை விரும்பிப் பெறுவதற்கு எவ்வாறுரியேன் என்று சொன்னாள்; அதைக்கேட்ட முனிவர் சாரதையைப்பார்த்து நீ வருந்தாதே, நான்சொல்லுகிற வார்த்தையைக் கேளென்று இந்தவார்த்தைகளைச் சொல்லுகின்றார். எ - று. (௧௬)

கருவிழிமறைந்தேனளித்தநல்வார்த்தைகயற்கணாய்மெய்ம்மையாக்குவனென், னுரைமனக்கோடியுமாமகேச்சுரமென்றொருதவவிரதமொன்றதனைப், புரிவையேலுள்ளங்கருதியவெல்லாப்பொருளும்வந்துறுமெனப்புகலச், சுரிகுழலணங்குகேட்டதுபுரியுந்தொன்முறைபகரெனச்சொன்னாள்.

(இ - புரை.) கயற்கெண்டையையொத்த கண்களையுடையவளே! நேத்திரந்தெரியாதயான்சொன்ன இந்தவார்த்தை உண்மையாகும்படிச்செய்கிறேன், என்வார்த்தையை உன்மனதில் உறுதியாகக்கொள்ளக்கடவை, ஏனென்றால் உமாமகேச்சுரமென்பதாக ஒருதவவிரதமுண்டு, நீ அந்தவிரதத்தை அனுஷ்டித்தால் மனதினினைத்த பொருளெல்லாம்வந்து சித்திக்குமென்று சொல்ல; அதைக்கேட்ட அச்சாரதை அந்தவிரதம் அனுஷ்டிக்கும் பழமையான முறைமையைச்சொல்லுமென்று வினவ, அவர் சொல்லுவாராகின்றார். (௧௭)

வளமலிவேனிற்சித்திரைபனிகூர்மார்கழியிவற்றிலோர்மதியி
னிளமதிக்கலையால்வளர்முதற்பக்கத்தியைந்தநற்றினத்தினிவ்விரத
முளமுலியன்பாற்றொடங்கியெட்டீரேழுறுதிதிபூரணையுவாவென் [றே
ளவுசேர்திதியோர் நான்கினுந்தெண்ணீ ராடியோர்மண்டப மமைத்

(இ - புரை.) வளப்பநிறைந்த வசந்தகாலமாகிய சித்திரைமாதம் பனிமிகுந்தமார்கழிமாதம் என்னுமிந்த இரண்டுமாதங்களுக்குள் ஓர்மாதத்தில்இளந்திங்கள் கலையினால் வளருகின்ற பூர்வபக்ஷத்திற் பொருந்தியசுதினத்தில் இவ்விரதத்தைஅன்புடன் ஆரம்பித்து, அஷ்டமி சதுர்த்தசி பௌர்ணமி அமாவாசை என்றுசொல்லப்படுகிற நான்குதிதியிலும் தீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்தொருமண்டபம் அமைத்து, எ - று. (௧௮)

மஞ்சரிநறுந்தண்கோதைகணாற்றிவயங்குபட்டாடைகம்பலமாய்
விஞ்சுபேரொளியநவமணிக்கோவைவிதானஞ்செய்கனகமண்டபத்திற்
செஞ்சுடர்ப்பசும்பொனேட்டறுத்தநற்றிருவுருவமைந்தநாதனையு
மஞ்சனைறக்களிவண்டிமிர்பொழிலிமயத்தணங்கையுந்தாபிதஞ்செய்தே.

(இ - புரை.) பூங்கொத்துக்களும் வாசனையுங் குளிர்ச்சியுமுள்ள மலர் மாலைகளும் தொங்கக்கட்டி, விளங்குகின்ற பட்டாடையை கம்பலமாய் மிகுந்த ஒளியுள்ள நவரத்தினமாலைகளுடன் மேல்விதானங்கட்டியபொன்மயமானமண்டபத்தில், ஒளியுள்ளதாய் ஓட்டறுத்த மாற்றுயர்ந்த பசும்பொன்னினாலமைத்த பரமசிவத்தின் திருவுருவத்தையும், அழகியசிறகுள்ளதாய்க் களிப்பினையுடைய வண்டுகள் இசைபாடிக்கொண்டிருக்கும்படியான சோலைசூழ்ந்த இமயமலையின் புத்திரியான பார்வதியாரையும் அங்ஙனமமைத்துத் தாபிதஞ்செய்து, எ-று.

சதுமறைபுகழும்பஞ்சகவ்வியத்தாற்றகவொடுபுனிதமாக்கியபின்
புதுமலர்த்தேனுங்கன்னலுமிரதம்பொழியுமுக்கனியொடுங்கலந்து
விதிமுறைசாத்தியஞ்செழுத்தாகிவிளங்கும்மந்திரத்தினோடீசன்
கதிதருமேகாதசவுருத்திரத்தாற்கடிகமழ்பூம்புனலாட்டி.

(இ - புரை.) நான்குவேதங்களாலும் புகழத்தக்க பஞ்சகவ்வியத்தால் தகுதியுடன்பரிசுத்திசெய்தபின்பு புதுமலர்த்தேனும்கருப்பஞ்சாறும் முப்பழச்சாறுங்கலந்து விதிப்படிச்சாத்திப், பஞ்சாக்ஷரஞ்சொல்லி, அம்மந்திரத்துடன் சிவசாயுச்சியத்தையருளும் ஏகாதச வுருத்திர மந்திரத்தினால் வாசனைகமழும் திருமஞ்சனநீர் அபிஷேகஞ்செய்து, எ - று. (௨0)

விரிகதிர்ப்பசும்பொற்பீடமேல்வைத்துவேறொருதவிசினைப் பொருந்தி
யருமறையாதிமந்திரமோதியங்குவிராசியிலமையா
வொருவழியுள்ளநிறுவியஞ்சலிசெய்துறுபவத்தீவினைதொலைய
விருமைநற்பயனுஞ்செல்வமும்வீடுமெமக்கருள்புரிகவென்றுணர்வால்

(இ - புரை.) பரந்த ஒளியுள்ள பொன்னினாற் செய்யப்பட்ட ஆசனத்தில் எழுந்தருளப்பண்ணித் தான் வேறொரு ஆசனத்திலிருந்துகொண்டு, நல்லறிவினோடு அரியவேதத்துக்கு முதலாகிய பிரணவமந்திரஞ்சொல்லி விராலநாசியினிடத்துவைத்து, மனதை ஒருவழி நிறுத்தி வந்தனைசெய்து, மிகுந்த பிறவித்துயரந்தீரும்படி இம்மைமறுமையென்னும் இகபரசவுக்கியமு மோக்ஷமும் எமக்குக் கிருபைசெய்யவேண்டுமென்று துதித்து, எ - று. (௨௧)

குளிர்கலைகெழுமியளவில்வெண்டிங்கள்குழுமிவீற்றிருந்தனவெண்ணீ
றொளிர்திருமேனியிளநிலவெறிப்பவுவர்படுதடங்கடற்றோன்றி.
வளரிளம்பரிதிகோடியோர்வடிவாய்வாளொளிபரப்புவதேய்ப்ப
வளிமுரல்கடுக்கைபுனைசடாமகுடத்தஞ்சுடர்முதுவெயில்கொழிப்ப.

(இ - புரை.) குளிர்ந்தகலைகளைப்பெற்று அளவில்லாத சந்திரர்கள் கூட்டமாய்வீற்றிருப்பதுபோல வெண்ணிறமுள்ள விபூதியானது பிரகாசியாநின்ற திருமேனியினிடத்து இளநிலா வொளியைவீசவும்,உவர்க்கடலில் உதயமாகி வளருகின்ற கோடி இளஞ்சூரியர்கள் ஒருவடிவமாகி மிகுந்தபிரகாசத்தைப்

பரப்புவதை யொப்பாக வண்டுகளிசைபாடிக்கொண்டிருக்கும்படியானகொன்றைமாலையணிந்த சடாமகுடத்து அழகிய பிரகாசமானது முதிர்ந்தவெயிலைப் பரப்பவும், எ - று. (௨௨)

செங்கதிர்விரிக்குமுடிமிசையொருபாற்சிறுமதிக்கலைநிலாத்தவழக், கங்கையம்பெயராறெறிதிரையொருபாற்கடுக்கையஞ்செழுந்துணர்கொழிப்பக், குங்குமக்குவடுபொருவுதிண்புயத்துக்கூரெயிற்றரவணிமிளிர, வங்கைகளபயவரதமோடிளமானணிதிகழ்மழுப்படைதழைய.

(இ - புரை.) செம்மைநிறத்தை விரிக்காநின்ற திருமுடியின் ஒருபுறத்தில் இளம்பிறையின் பிரகாசமானது விரியவும், ஒருபுறத்திற்கங்கையென்னும் பெயருள்ள நதி வீசுகின்ற அலைகள் செழுமையான கொன்றைப்பூங்கொத்துக்களைக் கொழிக்கவும், குங்குமமலையையொத்த திண்ணியபுயங்களில் கூர்மையான பற்களையுடைய சர்ப்பாபரணங்கள் பிரகாசிக்கவும், அழகிய திருக்கரங்கள் நான்கில் ஒன்று அபயமும் ஒன்று வரதமும் மற்றையவிரண்டில் மானும் அழகுடன்பிரகாசிக்கிற மழுப்படையும் விளங்கவும், எ - று. (௨௩)

அடுகொலைமதனனெரிபடச்சிவந்தவனல்விழிதிருநுதன்முகிழ்ப்பத்
தொடுகடற்பிறவாய்ப்படுவிடமிடற்றிற்சுடரெறித்திருணிறங்கொழிப்பக்
கொடுவரியதளினுடைபிணிவிசிந்தகோளராமருங்கினிற்றுழ
வுடல்சினவுருமிறபிளிறுமாலியானையுரிவைபொன்மேனியைப்போர்ப்ப.

(இ - புரை.) காமுகரை வருத்துகின்ற மன்மதனை எரிந்துபோம்படிச்சிவந்த அக்கினிநேத்திரமானது திருநெற்றியில் முகிழ்த்தவண்ணமாகவிருக்கவும், வளைந்த அலைகடலிலுண்டான விஷமானது திருக்கண்டத்தில் ஒளிவிட்டுக்கொண்டு கருநிறம்பொழியவும், புலித்தோலாடை பிணிப்புறக் கச்சாகக்கட்டிய *வலியுள்ளசர்ப்பமானது திருவரையிற் பொருந்தவும், கோபமே யுருவங்கொண்டதுபோன்று இடிபோல ஆரவாரிக்கும் பெரிய யானைத்தோற் போர்வையானது பொன்னிறமுள்ள திருமேனியிற் போர்க்கப்பட்டிருக்கவும், எ-று. கொடுவரி - புலி. (௨௪)

தினகரனொளியில்விஞ்சொளிபரப்புஞ்செஞ்சுடர்ப்பருமணியிமைக்குங், *கனகமாமடங்கற்றவிசின்வீற்றிருக்குங்கருணையங்கடலைமெய்யடியார், நினைதொறுமின்பந்தருஞ்செழுந்தேனைநிரைமலர்க்கற்பகக்கனியை, யனகனையாதித்தனிப்பெருஞ்சுடரையமலனைநினைந்துபினன்பால்.

(இ - புரை.) சூரியவொளியினும் அதிகமான ஒளியைப்பரப்புகின்ற செஞ்சுடரையுடைய பெரியரத்தினங்கள் பிரகாசிக்கும் பொன்மயமான சிங்காசனத்தில் வீற்றிருக்கும் அழகியகிருபாசமுத்திரரும் உண்மையடியார்கள் சிந்திக்

குந்தோறும் இன்பம் அருளும் செழுந்தேனையொத்தவரும் மலர்நிறைந்தகற்பக விருக்ஷக்கனிபோல்பவரும், விமலரும் ஒப்பற்ற ஆதியாகிய சோதியானவரும் நிருமலருமான கடவுளை மனதிற்றியானித்துப் பின்பு அன்பினுல், எ-று. (உ௫)

வளைகடற்றிரைவாயிருளறத்துரக்நுவருபதினுயிரம்பரிதிக்
கிளையொருவடிவுகொண்டெனச்சோதிகிளர்திருமேனிநின்ருெளிர
விளையளாயபயவரதமோடன்பரேத்துபாசாங்குசமேந்தித்
தளையவிழ்முளரிச்செங்கைநான்கிலங்கத்தாழ்குழல்புயலைவீறழிப்ப.

(இ - புரை.) பூமியைச்சூழ்ந்த அலைகளையுடைய சமுத்திரத்தில் இருள் நீங்கும்படித்துரத்தி உதயமாகிறபதினுயிரஞ்சூரியக்கூட்டம் ஒருவடிவங்கொண்டதுபோலச் சோதிவிளங்குந் திருமேனி பிரகாசிக்கவும், பாலையாய் அபய வரதமுடன் அன்பர்கள் துதிசெய்கின்ற பாசாங்குசமேந்திய முறுக்குகள்விரியுந் தாமரைமலர்போன்ற நான்குதிருக்கரங்களும் பிரகாசிக்கவும், தாழ்ந்தஅளகபாரம் மேகத்தின் பெருமையை அழிக்கவும், எ - று. (உ௬)

துண்டவெண்பிறையுமதியமும்போலச்சோதிவாணுதலொடுவதன
மண்டலங்கவினமல்லிகைமாலைவார்குழற்சூழியந்தழைப்பத்
தண்டளிர்பிண்டிபுன்னைசண்பகப்பூந்தாரிருசெவிப்புறந்தாழக்
குண்டலமலம்பிப்பசுங்கழைத்தோளிற்குருமணியிளவெயில்கொழிப்ப

(இ - புரை.) துண்டப்பிறைபோன்ற திருநெற்றியும் பூரணசந்திரன் போலத் திருமுகமண்டலமும் அழகைச்செய்யவும்,மல்லிகைப்பூமாலையணிந்த அளகத்திற் சூழியக்கொண்டை விளங்கவும், குளிர்ச்சிபொருந்திய தளிர்களையுடைய அசோகு புன்னை சண்பகம் இவற்றின்மலர்களால் தொடுக்கப்பட்ட மாலைகள் இரண்டுகாதுகளின் புறத்தில் தொங்கவும், ரத்தினகுண்டலங்கள் அசையவும், பச்சைமூங்கிலையொத்த தோள்களில் நிறந்தங்கிய மாணிக்கத்தின் இளவெயிலைப் பரப்பவும், எ . று. (உ௭)

அஞ்சுடரெறிக்குமணிசெய்பொன்னூரமலர்முலையாகத்துமிளிரச், செஞ்சுடர்விரிக்கும்பொலந்தொடிபசியசெழுங்கழைத்தோளினிணிலவ, வஞ்சிநுண்மருங்குல்கவினியகோவைவாமமேகலையொளிதழைப்ப, பஞ்சின்மெல்லடியிற்பருமணியிமைக்கும்பரிபுரஞ்சேயொளிபரப்ப,

(இ - புரை.) அழகிய பிரகாசத்தை வீசுகின்ற மணிகள்பதித்த பொன் மாலைகள் அடிபரந்த தனமுள்ளமார்பில் விளங்கவும், ஒளியைவிரிக்கும் பொன்னுலாகிய செழுமையுள்ள ரத்தினங்கள்பதித்த தோளணிகள் பசியமூங்கிலையொத்த தோள்களில் விளங்கவும், பூங்கொடிபோன்ற நுண்ணிய இடையில் அழகியமணிவடமாகிய மேகலாபரணத்தின் ஒளி தழையவும், செம்பஞ்சினும்

மெல்லியவாகிய திருவடிகளில் பெரியரத்தினங்கள்பதித்த நூபுரங்கள்செவ்விய ஒளியைப்பரப்பவும், எ - று. (உ௯)

எரிமணிக்கலாபமிலங்குபட்டாடையெழில்பெறப்புனைந்துசெஞ்சாந்தும், விரைமலர்ச்செய்யதொடையலுமணிந்துமின்னெனப்பொலிந்தபூங்கொம்பை, யரிமதர்மழைக்கட்கருணைநோக்கடியார்க்கருள்செயுமணங்கையாமளையை, வரையரசளித்தபச்சைமாமணியைவனமுலையமலையைநினைந்தே.

(இ-புரை.) செந்நிறமாணிக்கங்கள் சேர்ந்த அரைப்பட்டிகையை மேலே சேர்த்த பட்டாடையை அழகு பொருந்தத்தரித்துச் செஞ்சந்தனவாசனைதங்கிய பூமாலையுமணிந்து மின்னலைப்போல விளங்கும் பூங்கொம்பை, செவ்வரிபரந்து களிப்புற்ற மேகம்போற் கருமையுள்ள திருநேத்திரங்களினால் கிருபாநோக்கத்தை அடியார்க்கருளும் தேவமாதை, யாமளையை, மலையரையன்பெற்றமரகதமணியை, அழகிய தனங்களையுடைய அமலையைநினைந்து, எ - று. (௨௯)

உளக்கமலத்தினிவ்வணந்தியானித்துவகைகூர்ந்தகமகிழ்சிறந்து
களித்தபின்பசும்பொன்விம்பமேலன்புகனியவாவாகனம்புரியா
வளித்திடுமுறையாலருக்கியமுதலவளித்துநன்மணங்கொள்சாந்தணிந்து
துளித்திளந்தேறல்வழிதொடைசூட்டித்துணரினலருச்சனைபுரிந்தே.

(இ-புரை.) இருதயதாமரையில் இவ்வாறு தியானித்துச்சந்தோஷமிகுந்து மனமகிழ்ச்சிகொண்டு களிப்புற்றபின் பசும்பொன்னாலாகிய விம்பத்தினிடத்தில் அன்புமுதிர ஆவாகனஞ்செய்து, முறைமைப்படி அருக்கிய முதலானவைகளைக்கொடுத்து நல்லவாசனையுள்ள சந்தனமணிந்து தேன்துளித்துப் பெருகுகின்ற பூமாலைசாத்தி மலர்களாலருச்சனைசெய்து, எ - று. (௩0)

மூகைக்கிளமுல்லையனையபாலடிசின்முதலவாமுணவினிதளியா
வகமகிழ்வெய்தக்கனலிவாய்நூற்றெட்டாகுதிநறுநெய்யாற்புரிந்து
புகைகமழ்தூபதீபத்தட்டீந்திப்பொருவினீராஞ்சனமுதவி
நகைமதிக்கண்ணியண்ணலோடுமையைநண்பினுத்தியாபனஞ்செய்தே.

(இ - புரை.) முல்லையரும்பினையொத்த பாலடிசில் முதலியவைகளை இனிதாக நிவேதனஞ்செய்து, மனமகிழ்ச்சியடைய ஓமாக்கினியினிடத்தில் நல்லநெய்யினால் நூற்றெட்டாகுதிசெய்து, வாசனைப்புகைபரிமளிக்கும் தூபத்தட்டும் தீபத்தட்டுமேந்தி, ஒப்பில்லாத நீராஞ்சனஞ்செய்து, பிரகாசிக்குஞ் சந்திரனை மாலைபோல அணிந்திருக்கும் பரமசிவனையும் பார்வதிதேவியாரையும் அன்புடன் உத்தியாபனஞ்செய்து, எ - று. (௩௧)

மறையவனொருவன்மனைவியோடிங்குவருகவென்றழைத்தவர்தம்மை
பிறையணிவேணியண்ணலோடுமையப்பெண்ணமுதாகவுட்கருதி

நறைமலர்தூவியறுசுவையடிசினல்கிவெங்கதிர்படுகாலை
குறையறுபூசைமுடித்தனல்வேள்விக்கோதிலாச்சேடமாங்கயின்றே.

(இ - பூா) ஒருபிராமணனை அவன்மனைவியுடன் வருவித்து அவர்களைச் சந்திரசூடரான பரமசிவனும் பார்வதியுமாகப் பாவனைசெய்து வாசனையுள்ள மலர்களாலருச்சித்தும், அறுசுவையுள்ள அன்னமளித்தும், சூரியாஸ்தமன மாகும்போது குறைவில்லாத பூசையை நிறைவேற்றிக் குற்றமற்ற யாக சேஷத்தைப் புசித்து, எ - று. (௩௨)

வருமதிதோறும்பக்கமோரிரண்டில்வான்றருநற்றிதிநான்கி
லருமறையேத்துமாகமவிதியாலன்பொடுபூசனையியற்றிப்
பருவமொன்றிறந்தபின்னர்நாண்மதியும்பைந்துணர்க்கொன்றையமிலைந்த
வொருதனிமுதலோடுமையமீன்றெடுத்தவுமையையுட்களிகொளவினைநதே.

(இ - புரை.) மாதந்தோறும்வருகிற இரண்டுபக்ஷத்திலும் சிறந்ததாகிய நல்ல திதிகள் நான்கிலும் அரியவேதாகமவிதிப்படி அன்புடன் பூசைசெய்து ஒருவருஷஞ்சென்றபின்பு, இளம்பிறையுங் கொன்றைமாலையுமணிந்த ஒப் பற்றமுதலாகிய பரமசிவனையும் மலையரையன் தவத்தினாற்பெற்ற பார்வதிதேவி யாரையும் இருதயத்திற்றியானித்து, எ - று. பக்ஷமும் திதிகளும் (௧அ) - வது செய்யுளிற் கூறியுள்ளவைகளே. (௩௩)

றூனெறிநாடியுருத்திரசமகநுவன்றெடுத்தோதிவண்டிமிர்பூந்
தேனொடுதீம்பாறெங்கின்முப்புடைக்காய்த்தெண்புனறியொடுவாச
நானநீராட்டிநறியசாந்தணிந்துநாண்மலர்ச்செழுந்தொடைசாத்திப்
போனகம்பாலித்தேத்தெடுத்திறைஞ்சிப்பூசனைவரன்முறைமுடித்தே.

(இ - ள்.) வேதாகமவிதிப்படி உருத்திரசமகமந்திரஞ்சொல்லி வண்டுக ளிசைப்பாடிக்கொண்டிருக்கும் நல்லதேன் மதுரமுள்ளபால் இளநீர் தயிர் வாசனையுள்ள கஸ்தூரிகலந்தநீர் இவைகளால் அபிஷேகஞ்செய்து, நல்லசந்த னமணிந்து பூமாலைசாத்தி அன்னம்நிவேதித்து அதன்பின் துதிசெய்து, சாஷ் டாங்கமாகப் பணிந்து இவ்வாறுபூசையை முடித்து,எ-று. போனகம்-அன்னம்.

தூசொடுபைம்பொன்விம்பமுமிலகுஞ்சுடர்மணிக்கும்பமுமகிழ்ந்து
தேசிகற்கருளியந்தணர்க்கெல்லாந்தீஞ்சுவைப்போனகம்வழங்கிக்
காசொடுகனகம்வேண்டுவநல்கிக்காதலாற்றமருடனயின்று
மாசறுவிரதமுடிப்பதாகமத்தின்வரன்முறைமதிநுதலணங்கே.

(இ - புரை.) பிறைபோன்ற நெற்றியையுடைய மாதே! சாற்றியவுடை யாபரணங்களும் பிம்பமும் சோதியையுடையரத்தினகுப்பமும் மகிழ்ச்சியுடன் ஆசாரியருக்குக்கொடுத்து, பிராமணசந்தர்ப்பணையஞ்செய்து, ரத்தினங்கள் சுவர்ணங்கள் இன்னமும் வேண்டியபொருள்களுங்கொடுத்து, ஆசையுடன்

ர்துக்களைவைத்துக்கொண்டு போசனஞ்செய்து இவ்வாறு குற்றமற்ற விரதமு டிப்பது ஆகமவிதியாகும். எ - று. காசு-மணி. (௩௫)

இயாவரேயெனினுமிவ்விரதத்தையிந்தவாறியற்றினரவர்த
மூவெழுமுறைமைத்தமரெலாந்தெய்வமுருகுலாங்கற்பகநாட்டின்
மேவரச்சேர்த்தியெல்லையில்காலம்விழைந்தநற்போகங்களுகர்ந்து
பூவலயத்தினினிதுவாழ்ந்ததன்பின்பொருவறுசிவபதமடைவார்.

(இ - புரை.) எவர்களேயாயினும் இந்த உமாமகேசுவரவிரதத்தை மேற் சொல்லிய முறைமைப்படி செய்கின்றவர்கள் தங்களுடைய இருபத்தொருதலை முறையையும் வாசனைவீசுகின்ற கற்பகச்சோலையுள்ள தேவலோகத்திற்போகும் படிசேர்த்து, அளவில்லாத இன்பம் அனுபவித்துக்கொண்டிருந்து. அதற்கு மேல் ஒப்பற்ற சிவபதம் பெறுவார்கள். எ - று. ஏழுதலைமுறைவரையில் ஞாதி கள், அதற்குமேற்பட்ட ஏழுதலைமுறைவரையில் சாபிண்டர்கள், அதற்குமேற் பட்டஏழுதலைமுறைவரையில் சமானோதகர்கள், என்று முக்கூறுபட்டு (உக) தலைமுறையாகும். (௩௬)

ஆதலாலணங்கேநீயுமிவ்விரதமகந்தெளிந்தியற்றுதியென்றுங்
காதலால்விழைந்தபொருளெலாநினக்குக்கடிதினிலடையுமென்றமல
னோதுவாசகங்கேட்டன்னதுதேறியுளமகிழ்காலையிலவடன்
றாதையுந்தாயுந்தமருமவந்தீண்டித்தவமுனிதாளிணைதொழுதார்.

(இ - புரை) ஆகையினாலே பெண்ணே! நீயும் இந்தவிரதத்தைமனதிற் சந்தேகமில்லாமல் நாடோறும் அனுஷ்டித்தால், ஆசையுடன் விரும்பியபொரு ள்களெல்லாம் உனக்கு விரைவில் கைகூடுமென்று அம்முனிவர்சொல்லிய சொல்லைக்கேட்டு, அத்தன்மையுள்ள விரதத்தை அனுஷ்டிக்கவேண்டுமென்று தன்மனதில் நிச்சயித்துக்கொண்டாள். அப்போது அவள்தகப்பனும் தாயும்சுற் றத்தாரும்வந்து அவர்பாதத்தில் வணங்கினார்கள். எ - று. (௩௭)

தொழுதனர்நின்றுநனைபிணிபவிழ்ந்ததுணர்நறும்போதுகடூவி
வழிபடுமுறையாலருச்சனைபுரிந்துமாதவனடைந்தஞான்றெதிர்கொண்
டெழில்பெறுமணங்குபுரிபணிவிடையுமிருந்தவனீந்தமெய்வரமு
முழுதுமாங்குரைப்பக்கேட்டகமகிழ்ந்துமுனிவனைநோக்கியீதுரைத்தார்.

(இ - புரை.) அவ்வாறு வணங்கிநின்று, அரும்புகளின் முறுக்குகள்விரி ந்த கொத்தாகியமலரால் ஆராதனைசெய்யுமுறைமைப்படி அருச்சித்து, சௌந் தரியமுள்ள தங்கள் பெண்ணானவள் அம்முனிவர்வந்தநாளில் எதிர்கொண்டு செய்தபணிவிடையும் அவர்கொடுத்தருளிய உண்மையானவரமும் வழுவாமற் சொல்லக்கேட்டு மனமகிழ்ந்து முனிவரைப்பார்த்து, இவ்வார்த்தைசொல்லுகி றார்கள். எ - று. நனை-அரும்பு. (௩௮)

எத்தவஞ்செய்தேமித்தலையடிகளெய்துதற்கெங்கணாயகனே
யத்தனேநின்னாலடியமின்றுய்ந்தேமணங்கனுள்ளகைமைநோய்தீரப்
பத்திரண்டிரண்டுதிங்களுமிந்தப்பதியிடையிருந்துநீபணித்த
மெய்த்தவவிரதமியற்றுவித்தேகல்வேண்டுமென்றடிதொழுதிரந்தார்.

(இ - புரை.) எங்கள் இறையவனே! ஐயனே! சுவாமிகள் இவவிடத்துக்கு எழுந்தருளும்படி என்னதவஞ்செய்தோமோ? தேவரீரால் அடியேங்களெல்லாம் ஈடேறினோம்; எங்கள்பெண்ணுக்குநேரிட்ட கைமைத்தன்மையாகிய பிணிதீர்க்கும்படிப் பன்னிரண்டுமாதமும் இந்தப்பதியிலிருந்துதேவரீர்கட்டளையிட்ட உண்மையான தவவிரதத்தை அனுஷ்டிப்பித்து, அதன்பின்பு போகவேண்டுமென்று அவர்பாதத்தில்வணங்கி இரந்துகேட்டுக்கொண்டார்கள். எ - று. தலை-இடம். (௩௯)

அன்னதேபுரிவன்றுயரொழிவீரென்றவனொருசாலைசென்றடைந்து
பொன்னவிர்கடுக்கைவேணியானவன்றன்பூசனைபுரிந்தனனிருப்பத்
தன்னிகரில்லாச்சாரதைதானுந்தவமுனியாகமவிதியாற்
சொன்னவாறிந்தவீறுயர்விரதந்தொடங்கியாங்கியற்றினளன்றே.

(இ - புரை.) அங்ஙனமே செய்வம், நீங்கள் துயரம்நீங்கி யிருங்களென்றுசொல்லி, அவரொரு பன்னசாலையிற்போய்ப் பொன்போலும் கொன்றைமாலையணிந்த சடையையுடைய பரமசிவனைப்பூசித்துக்கொண்டிருந்தார், தனக்கு ஒப்பில்லாத சாரதையானவள் தவமுனிவர் ஆகமவிதியாற்சொன்னபடிமகத்துவமுள்ள அந்தவிரதத்தைத்தொடங்கி அனுஷடித்தாள். எ - று. (௪௦)

என்றுமாமுனிவர்க்கின்னணஞ்சூதனியம்பிடுங்காதையைக்கேட்டு
நன்றுநன்றென்னவுவகைகூர்மனத்தர்நாளுமச்சாரதைமடவா
ளொன்றிமேவிழைத்துப்பெற்றவாறெல்லாமுரைத்தருளெனவவருரைப்பத்
துன்றியதவத்துமடவால்பெற்றதிற்றெனத்தொகுத்தனன்சொன்னான்

(இ-புகா.) இவ்வாறு சூதமுனிவர்சொல்லிய உமாமகேசுவர விரத சரித்திரத்தைக்கேட்ட நைமிசாரணியமுனிவர் இதுமிகவும் நன்மையுள்ளதென்று சந்தோஷங்கொண்ட மனமுள்ளவர்களாய்ச் சூதமுனிவரைப் பார்த்து, சாரதையானவள் மனமொருமித்து, இவ்விரதத்தை அனுஷ்டித்துப்பெற்ற முறைமையெல்லாம் எங்களுக்குச் சொல்லியருளவேண்டுமென்று அவர்கள் சொல்ல அந்தவிரதத்தை அனுஷ்டித்தவள் பெற்றுக்கொண்டவரம் இன்னதென்று தொகுத்துச்சொன்னார். எ - று. (௪௧)

பதினெட்டாவது உமாமகேசுவரபூசையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம். ௧௦௧௬

உ

சிவமயம்.

# பத்தொன்பதாவது
# உமாமகேசுவரபூசாபலமுரைத்த
# அத்தியாயம்.

இந்துவாண்முகத்தாள்பன்னிருமதியுமியற்றியவிரதத்தைமுடியா
வந்தணர்க்கயினியருத்தியஞ்சுடர்ப்பொன்னருளியன்றருந்திலளாகித்
தந்தைதாய்பாதத்துணைமலரிறைஞ்சிச்சதுர்மறைமுனிவரன்புகன்ற
மந்திரமுணர்ந்தாங்கிருந்தனளந்திமாலைவந்திறுத்ததுமன்றே.

(இ - புரை.) சந்திரனைப்போலும் முகத்தையுடைய சாரதையானவள் பன்னிரண்டுமாதமும் அனுஷ்டித்து அவ்விரதத்தை நிறைவேற்றிப் பிராமணர்களுக்குச் சந்தர்ப்பணையும் அழகிய ஒளியுள்ள சுவர்ணதானமுஞ்செய்து, தான் அன்றுபோசனஞ்செய்யாமல் தாய்தந்தையருடைய இரண்டு திருவடிமலரையும் தொழுது நான்குவேதங்களுமுணர்ந்த முனிவர் உபதேசித்த திருமந்திரத்தைச் செபித்துக்கொண்டிருந்தாள். (அப்படியிருக்கும்போது) அந்திப்பொழுதுவந்தது. எ - று. (க)

கள்ளவிழ்கடுக்கைவேணிவானவனைக்காதலாற்பூசனைபுரிந்து
நள்ளிருட்கங்குல்விழித்தனளிருந்துநாவினாலவன்புகழ்நவிற்றத்
தெள்ளிதிற்பரமசிவாகமமுழுதுந்தெளிந்தநான்மறைமுனிவரனும்
வெள்ளிலைநெடுவேற்கருங்கண்மாதுமைதன்விளங்கிசைபாடினனுணர்ந்தே.

(இ - புரை.) தேனவிழ மலர்ந்தகொன்றைமாலையணிந்த சடாமகுடமுடைய பரமசிவனை அன்புடன்பூசைசெய்து, இருள்மிகுந்த அன்றிராத்திரிமுழுவதும் நித்திரையின்றிப் பரமசிவனுடைய தோத்திரங்களைச் சொல்லிக்கொண்டிருந்தாள்; சிவாகமமுழுவதையும் தெளிவுடனாராய்ந்துணர்ந்த அம்முனிவரும் ஒளியுள்ளதாகிய நீண்டவேல்போன்ற நேத்திரங்களையுடைய பார்வதியாரின் விளங்காநின்ற புகழைத் துதிசெய்துகொண்டிருந்தார். எ - று. (உ)

வேறு.

இன்னகைத்துவர்வாய்க்கிள்ளையியற்றியவிரதத்தாலுந்
தன்னிகரில்லாத்தூயோன்றகைமைசாறவத்தினாலும்
பொன்னவிர்சுணங்குவாய்ந்தபுணர்முலைபொறுக்கலாற்றா
மின்னிடையிமயம்பூத்தவிளங்கிழைவெளிப்பட்டாளே.

(இ - புரை.) இனிய நகையும் பவளமென்னும்அதரமும் கிளிபோலும்வசனமுமுள்ள சாரதையானவள் அனுஷ்டித்த விரதத்தினாலும்,ஒப்பில்லாதமுனிவருடைய மேன்மைதங்கிய தவத்தினாலும், பொற்சுணங்குவாய்ந்த தனங்களும் மின்னல்போலு மிடையினையுமுடைய பார்வதிதேவியார் தரிசனமானார், எ-று.

வெளிவரமறைந்தசெங்கண்விளங்கியமுனியுமுள்ளக்
களியுடையணங்குமன்னைக்கமலத்தாளிறைஞ்சிவீழ
வொளிவிரிபசும்பொற்கொங்கையுமையிருவரையுமாங்க
ணளியினாலெடுத்துநோக்கியமுதனமுகமன்சொன்னாள்.

(இ - புரை.) அப்படித் தரிசனமாகியவளவில் பார்வைதெரியப்பெற்ற முனிவரும் மனக்களிப்பினையுடைய சாரதையும் நம்முடைய தாயாகிய பார்வதிதேவியாருடைய திருவடித்தாமரைமலரில் விழுந்துபணிந்தார்கள். அவ்வாறு பணிந்தபோது ,ஒளிமிகுந்த பசும்பொன்னிறம்பொருந்திய தனங்களையுடைய உமாதேவியார் கிருபையுடன் அவ்விருவரையும் அன்பினோடெடுத்து அமிர்தமூட்டுவதுபோல உபசாரவார்த்தைசொல்லி, எ - று. (ச)

கற்றுணர்முனியேகன்னிக்கற்புடையணங்கேநும்பாற்
பெற்றனமகிழ்ச்சியாரும்பெறலரும்வரங்களென்ன
சொற்றதுந்தருவநீவிர்சொல்லுமினென்றுகூற
நற்றவக்கிழவன்கேளாநயந்திதுபுகல்வதானான்.

(இ - புரை.) வேதமுதலான சாஸ்திரங்கள் ஓதியுணர்ந்தமுனிவனே! அழிவில்லாத பதிவிரதா தருமமுடையமாதே! உங்களிடத்தில் நாம்மகிழ்ச்சியடைந்தோம், எவ்விதவரங்கள் வேண்டுமென்றாலுக் தருகிறோம், நீங்கள்சொல்லுங்களென்று பார்வதிதேவியார் மொழிந்தருள; முனிவர், அந்தத்திருவாக்கினைக்கேட்டுவிருப்பத்துடன் இந்தவார்த்தைசொல்கிறார். எ - று. (ரு)

கண்மணியிழந்தேன்மங்கைகயினியாயிருத்தல்காணே
னுண்மலியுவகையாலேயுறுதுணையிழந்தாடன்னை
வெண்மதிநுதலாய்காமம்வெறுக்குநாள்காறுநின்கேள்
வண்மலராகந்தோய்ந்துவாழ்தியென்றுசிசொற்றேன். ௫

(இ - புரை.) அடியேன் அந்தகனாயிருந்ததினால் இந்தமாது கைம்பெண்ணாயிருப்பது தெரியாமல் அடியேனுக்குச்செய்த உபசாரத்தினால் மகிழ்ந்து கணவனையிழந்திருக்கும் இவளைநோக்கி,வெண்மைநிறந்தங்கிய இளம்பிறைபோலிருக்கும் நெற்றியையுடையவளே! நீ காமத்தைவெறுக்கும் நாளளவும்உன்கணவனுடைய அழகுபொருந்திய மாலையணிந்தமார்பில் தோய்ந்துவாழ்ந்துகொண்டிருக்கக்கடவையென்று ஆசீர்வாதஞ்சொன்னேன். எ - று. (சு)

பூசுரர்குலத்திற்றோன்றும்பொலன்கொடிக்கடியன்சொன்ன
வாசியின்பயன்குன்றாமலருள்கவென்றிறைஞ்சியேத்தி
வாசநாண்மலரோனன்னமறைமுனிபகரலோடும்
பாசிழைப்பணைமென்கொங்கைப்பனிவரைமாதுசொன்னாள்.

(இ - புரை.) பிராமணகுலத்திற்றோன்றிய பொற்கொடிபோன்ற இம்மாதுக்கு அடியேன்சொல்லிய ஆசீர்வாதத்தின்பலன்கெடாதவண்ணம்அருள்செய்யவேண்டுமென்று பணிந்து துதித்து, வாசனைபொருந்திய தாமரைப்பூவிலிருக்கும் பிரமனையொத்தமுனிவர் விண்ணப்பம்பண்ணினவளவில்,பொன்னாலாகிய ஆபரணமணிந்த பருத்ததனங்களையுடைய இமையபுத்திரியாகிய பார்வதிதேவியார் சொல்லுகின்றார். எ - று. (எ)

சிந்தைசால்புடையநோன்மைச்செய்தவக்கிழமையோனே
முந்தைநற்பிறப்பிலிந்தமொய்குழறமிழ்நன்னாட்டோ
ரந்தணன்முன்னர்வேட்டவணங்கின்பின்மணஞ்செய்காதற்
பைந்தொடிபண்டைநாமம்பத்மினியென்பதாமே.

(இ - புரை.) மனதில் தூய்மையுள்ளவிரதத்தையுடைய முனிவனே! முற்பிறப்பில் இந்தச்சாரதையென்பவளை தமிழ்நாட்டில் ஒருபிராமணன் விவாகஞ்செய்துகொண்ட மூத்தமனைவியிருக்கவும் இரண்டாவதாக விவாகஞ்செய்துகொண்டான்; அப்பிறப்பி லிவளுக்குப் பத்மினியென்றுபெயர். எ-று.

வேறு.

மாந்தளிர்மேனிவனப்பினாற்பிணியுமருந்துமாமதர்விழிநோக்காற்
சாந்திளமுலையுமகலமுமொன்றாய்த்தழுவுறக்கனியுநன்னலத்தாற்
காந்தளஞ்செங்கைபற்றியகாலைமுதலவாய்க்காதலன்றன்னைத்
தேந்துளிபிலிற்றுமலர்க்குழலிவடன்செயல்வழிநடப்பதேபணித்தாள்

(இ - புரை.) மாந்தளிர்போன்ற மேனியின் அழகினாலும்,நோயும் அதற்கு அவுஷதமும்போலிருக்கும் களிப்புள்ள கண்பார்வையினாலும், சந்தனமணிந்த இளமுலையு மார்பமுமொன்றாய்த் தழுவிக்கொள்ள முதிர்ந்த இன்பத்தினாலும், காந்தள்மலர்போன்றதன்செங்கைபற்றியநாள்முதலாகக்கணவனைமயக்கித்தன் சொற்படி நடந்துவரச்செய்தனள். எ - று. மதர்விழி மருந்தும் பிணியுமாதல்-ஊடலிற்பிணங்கியபோது அக்கட்பார்வை நாயகனுக்கு நோய்தருதலானும், கூடியபோது அப்பார்வை இன்பம்விளைத்தலானும் என்க. இக்கருத்தன்றோ மணிவாசவள்ளலாரும் திருக்கோவையில்"பிணியுமதற்குமருந்தும்பிறழப் பிறழுமின்னும்-பணியும் புரைமருங்கிற் பெருந்தோளி படைக்கண்களே," என்றார். (௮)

தவளமுந்நூலுந்தாமமுந்தாழுந்தடம்புயக்கொழுநனுங்காத,லிவ ளிளமூலையின்போகமேறுகர்ந்தாங்கின்பமாங்கடலிடையாழத்,துவளு றுண்மருங்குற்குமுதவாயமுதத் துணைவிதன்கொண்கனைப்பெருது, குவளைவாய்கருங்கண்மைத்துளிபிலிற்றக் கொடுந்துயர்க்கடலிடையா ழ்ந்தாள்.

(இ - புரை.) வெண்ணிறமுள்ள முந்நூலும் பூமாலையும் பொருந்திய பெரிய புசத்தையுடைய கணவனும் ஆசையினுலிவளிடத்திலேயே போகம் அனுபவித்துக்கொண்டு இன்பக்கடலிற் படிந்திருப்பதினுல், துவளுகின்ற மெல் லிய இடையும் செவ்வல்லி மலர்போன்றவாயுமுள்ள மூத்தமனைவியானவள் தன்கணவனுடன் சேருதற்கில்லாமல் நீலோர்பலமலர்போன்ற தன்கண்கள் நீர்சிந்தும்படித்துக்கசாகரத்தில் மூழ்கியிருந்தாள். எ - று. (௧௦)

தனித்துணையலதுதன்றுணைபுணராத்தண்ணறுந்தூய்மலர்க்கு ழலா, ணனிதுயருழந்துபுதல்வரைப்பெருளாய்நன்னலந்தொலைதொ றுமிரங்கி, யினியுயிர்ப்பொறைகொண்டாற்றலேன்வினையேனிம்மையு மறுமையுமிழந்தேன், புனிதனேயென்னுப்புலம்புகொண்டிறந்துபொ ன்னுலகடைந்தனளன்றே.

(இ-புரை.) தனிமையென்னும் துணையேயல்லது தன்துணையாகிய கண வனையறியாத குளிர்ச்சியும் வாசனையுமுள்ள நல்லமலரணிந்த அளகத்தை யுடைய மூத்தாள் மிகவுந் துக்கங்கொண்டு புத்திரர்களையும் பெருமல் இள மைப்பருவம் நாளுக்குநாள் நீங்குந்தோறும் இரங்கி, இனி யிவ்வுடலை வைத் துக்கொண்டிரேன்,வினையேனுகிய நான் இவ்வுலகத்தின்பத்தையும் புத்திரனில் லாமையால் சுவர்க்கலோக இன்பத்தையும் இழந்தேன், பரமசிவனே என்று புலம்பிக்கொண்டிருந்து இறந்து பொன்னுலகமடைந்தாள். எ - று. (௧௧)

வேறு.

இவ்வண்ணநிகழ்காலத்தயலிடத்தோரில்லுறையுமந்தணனொன்
செவ்வண்ணத்துவர்வாயும்வனமுலையும்வருத்தநிறைதேய்ந்துதேய்ந்து
மைவ்வண்ணக்கொடுங்காமங்கைமிகலுமிவண்மலர்க்கைவலிதிற்பற்றக்
கைவ்வண்ணக்காவிகந்தாள்கற்பிகவாதன்னேன்கைகடந்துபோனுள்.

(இ - புரை.) இவ்வாறு நிகழுங்காலத்தில் அயல்வீட்டிலிருக்குமொருபிரா மணன் இவளுடையசெம்மைநிறந்தங்கிய பவளம்போன்றவாயும்அழகியமுலையும் தன்னைவருத்த நிறையழிந்து மெலிந்துமெலிந்து, இருண்மயமாகியகாமமதிகரி த்து இவள்கையை வலிதிற்பற்றினுன். அவ்வாறுபற்றவே, தன்னைக்காப்பவர் களை யிழந்திருப்பவள் தன்கற்பினிலையை யிழவாமல் அந்தப்பிராமணன்கையை நீக்கிக்கொண்டு போய்விட்டாள். எ - று. (௧௨)

அங்நிலையேகளவொழுக்கமனங்கொள்ளாள்வெறுத்தகன்றவயலா
ன்கற்பிற், பன்னியிளமுலைகிடந்தவெஃகரவாலறிவழிந்துயையுளுற்
[illegible]ன், கன்னலடுசிலைகுழைத்துவே[illegible]று,
ந் சேர்ந்

(இ - புரை.) அவ்வாறு சோரப்புணர்ச்சிக்குச் சம்மதியாமல் வெறுத்துப் போய்விட்ட அன்னியனுடைய மனைவியினிடத்திருந்த அவாவினால் அறிவிழந்து துன்பமடைந்து, மன்மதன் கரும்புவில்லைவளைத்துப் போர்செய்யுங்கணைகள் தன்னுடைய சரீரத்தைச் சின்னபின்னஞ்செய்வதினால் காமமாகிய விஷந் தலையேற இறந்துபோனான். எ - று. வெஃகரவு-விருப்பம். (௧௩)

கற்பினிலைகடவாதநிறையிருந்தும்பொறையிருந்துங்கமழ்தார்சூ
ட்டி, முற்படத்தன்கேண்மணந்தமுற்றிழையையொருஞான்றுமுய
ங்கவொட்டாள், பொற்புடைத்தன்புணர்முலையின்புதுநலமேறுகரும்
வண்ணம்புரிதலாலே, பிற்பழியில்லாவிவளுமிளமையிலேகைமையுற்
றுங்கிருந்தாளன்றே.

(இ-புரை.) கற்புத்தன்மைகடவாத நிலைமையிவளிடத்திருந்தும் பொறுமையிருந்தும் தனக்குமுன் தன்கணவனுக்கு மாலைசூட்டியவள் ஒருநாளாவதுகணவனுடன் இன்பமனுபவிக்க வொட்டாதவளாய் அழகுள்ளதன்கொங்கையின்பத்தையே அனுபவிக்கும்படிச்செய்தலினாலே, பதிவிரதாதர்மத்துக்குப் பழிநேரிடாமற் காத்துக்கொண்ட இவளும் கைம்பெண்ணாகியிருந்தாள். எ-று. (௧௪)

வளமலிசீர்மகளிரொடுமகிணரிளநலநுகராவண்ணமாற்றி
யுளமல்குமனக்களியாற்றமதுவழியேயொழுகவூடல்கூருந்
தளவநகைக்கயல்விழியார்தமைக்காமவிடாய்கனற்றத்தளர்ந்துமாழ்கி
யிளமையிலேநான்குபவங்கயினியாயளவிறுன்பமெய்துவாரே.

(இ - புரை.) வளமையுஞ் சீருமுள்ள மனைவியருடன் கணவன் இன்பம் அனுபவியாதவண்ணமாற்றி உள்ளத்திற்பொருந்திய களிப்புடன் தங்கள்சொற்படிநடக்கும்படி ஊடல்கொள்ளுகின்ற முல்லையரும்பினையொத்தநகையினையும் சேல்மீனையொத்த கண்களையுமுடையமாதர்கள், மறுபிறப்பில் தங்களைக்காமவிடாயானது வருத்தச்சோர்ந்து துயரமுற்று இளமையிலேதானே நான்கு பிறப்புவரைக்கும் கைம்பெண்ணாகி அளவில்லாத துன்பத்தைப் பொருந்துவார்கள். எ - று. (௧௫)

அறந்தழையுந்தூயமனத்தருந்தவனையருந்ததிகற்பனையகற்பாற்
சிறந்தமலர்க்குழலிவடன்சிந்தைகளிகூர்ந்தூறுங்தேங்கொள்போதா,

சிறந்தபவத்தெனையருச்சித்தேத்துதலா லெழுபிறப்புமீட்டும்பாவம்
பிறந்தவிந்தப்பவத்திலொளிர் சுடர்தூக்குமிருள்போலப் பெயர்ந்தத
ன்றே.

(இ - புரை.) தருமமே குடிகொண்டிருக்கும் நல்ல மனதையுடைய முனிவனே! அருந்ததியின் கற்பினையொத்த கற்பினால் மேன்மைபெற்ற இவள் மனக்களிப்படைந்து, நல்ல மலர்களால் முற்பிறப்பில் என்னை அருச்சித்துத் துதித்தமையினால் எழுபிறப்பிலுஞ் செய்தபாவமெல்லாம் பிறந்துள்ள இந்தப் பிறப்பிலேதானே சூரியனால் நீக்கப்பட்ட இருள்போல நீங்கிவிட்டது. எ-று.

ஈரமலர்ப்பூங்குழலேயென்றிரந்துகரம்பற்றியிரங்குகென்று
வார்வமுற்றுநலனுகராத்துயரான்முற்பவத்திறந்தவந்தணாளன்
நீர்விலொருதலைக்காமங்கூட்டவிந்தப்பவத்துமிவள்செங்கைபற்றி
வார்முலைதனுகமுறப்புணராமலாவொறுக்கமாய்ந்தானங்கோ.

(இ - புரை.) குளிர்ச்சிபொருந்திய பூமாலையணிந்த அளகத்தையுடையவளே! இந்த வேளை உன்மனமிரங்கவேண்டுமென்று இவள் கையைப்பற்றிக்கொண்டு இரந்து யாசித்தும் இன்பம் அனுபவியாத துயரத்தினால் முற்பிறப்பிலிறந்துபோன பிராமணன் நீங்காத ஒருதலைக்காமமானது கூட்டுவிக்க இந்தப்பிறப்பில் விவாகஞ்செய்துகொண்டு இவள்கையைப்பற்றியும் கச்சணிந்த இவள் தனங்கள் தன்மார்பிற் பொருந்தும்படிப் புணர்வதற்கில்லாமற் பாம்புகடிக்க இறந்துபோனான். எ - று. ஒருதலைக்காமம் - தலைவன் தலைவி என்பாரில் ஓரிடத்துமாத்திரம் உண்டான காமவிச்சை. (௧௭)

இறந்தவனோவிவள்கொழுநனல்லனும்மைப்பிறப்பிவளிலங்கு
கேள்வன், சிறந்தசங்கத்தமிழ்கொழிக்குந்தென்கூடற்றென்னர்பிரான்
கன்னிநாட்டிற், பிறந்துதொழுகுலத்தவர்க்கோர்திலகமாயளவில்செல்
வம்பெற்றுமற்றோ, றறந்தழைசீரணங்கைமணம்புணர்ந்துபுதுநலமாந்
தியமர்கின்றானே.

(இ - புரை.) இப்போது இறந்தவன் இவள் கணவனல்லன், முற்பிறப்பில் இவளைக் கூடியகணவன் சிறப்புதங்கிய சங்கத்தமிழ் விளங்கும் மதுரைத் தலத்தில் அரசுசெய்துகொண்டிருக்கும் பாண்டியனுடைய நாட்டிற்பிறந்து, பிராமணகுலத்துக்கு ஒருதிலகம்போல அளவில்லாத செல்வம்பெற்று இல்லறம் வழுவாமல் நடத்தும் ஒருகன்னிகையை விவாகஞ்செய்து, இன்பம் அனுபவித்துக்கொண்டிருக்கிறான். எ - று. (௧௮)

அனையவன்பொற்றடமார்புமலர்முலையாகமும்பொருந்தியழுந்தக்கூடிப்
புனைமலரின்பசுந்தாதுபொதுளுநறும்பூவணையின்புறத்துமேவிக்

கனவுதொறுமிவள்காமக்கனிநுகர்வாளாகவந்தக்கனவிற்கூட்ட
னனவிலுறுபுணர்ச்சியிலுமளவிறந்தநன்னலமேநல்குமன்றே.

(இ - புரை.) அவனுடைய பெரியமார்பும் இவளுடைய பரந்ததனங்களும் பொருந்தி யழுந்தத்தக்கதாகக்கூடிப் பூந்தாதுகள் நிறைந்தவாசனையுள்ள மலரணையினிடத்திற் பொருந்திச் சொப்பனவத்தைதோறும் இவள் காமஇன்பமாகிய பழத்தை உண்ணக்கடவள். அந்தக்கனவிற் கூடுதல் சாக்கிராவஸ்தையில் புணரும் புணர்ச்சியினும் அதிகமான நல்ல இன்பத்தைக் கொடுக்கும். எ - று.

அளவுறுகாவதமூன்றூற்றறுபதிற்கப்பாலதாமகழ்சூழிஞ்சி
வளநகரினினிதிருக்குமகிணனுநதன்முன்னைவினைவயத்தினாலே
தளவநகைப்புளகமுலைத்தாழ்குழலிப்பொலங்கொடியைக்கங்குறோறு
முளமலியுங்காதலொடுகனவிறறேய்ந்தும்பர்செலவமுறுவன்மன்னோ.

(இ - புரை.) அளவுபட்ட மூன்றூற்றறுபது காதத்துக்கு அப்பாலிருக்கும் அகழிசூழ்ந்த மதிலையுடைய வளநகரில் இன்பமுடன் வாழ்ந்துகொண்டிருக்கும் இவள்கணவனும் முன்னை ஊழ்வினைவசத்தினாலே முல்லையரும்பையொத்த நகையினையும் புளகம்பொருந்திய தனங்களையும் தாழ்ந்தஅளகத்தையுமுடைய பொற்கொம்பு போல்வாளாகிய இவளை இரவுதோறும் சொப்பனவஸ்தையில் ஆசையுடன்புணர்ந்து சுவர்க்கபோகத்தைப்போன்ற இன்பத்தை அடைவான். எ - று. (௨0)

இன்னணமுட்களிபெருகவிளநலந்துய்த்தினிதிருக்குநாளிலிந்தப்,
பொன்னுரையிற்பொலிசுணங்கின்வளமுலையா ளொருபுதல்வற்பெறு
வாளாகக், கன்னவிறேட்கணவனுந்தன்சிறுவனைநன்கனவுதொறுங்
காண்கவென்னாத், தன்னிகரில்லாமுனிவற்குரைத்துமையாள்மாதி
னொடுசாற்றுகின்றாள்.

(இ - புரை.) இவ்வாறு உள்ளத்திற் களிப்புண்டாகி அதிகரிக்கத்தக்கதாக இன்பம் அனுபவித்துக் கொண்டிருக்குநாளில் பொன்னுறைபோல விளங்குந் தேமல்பரந்த அழகிய தனங்களுள்ள இவள் ஒருபுத்திரனைப் பெறுவாள், மலைக்கொப்பாகச் சொல்லத்தக்க புசங்களையுடைய இவள் கணவனும் தன் புத்திரனைச் சொப்பனந்தோறுங் காண்பானென்று தனக்கு ஒப்பில்லாத முனிவனுக்குச் சொல்லிச் சாரதையைப்பார்த்துப் பார்வதிதேவியார் சொல்லுகின்றார். எ - று. (௨௧)

குனிமதிவாணுதற்பசியகுவளைவிழிச்சாரதையேகோதைசூட்டிப்
புனைகலனின்பொறையணிந்துமுற்பவத்தன்புணர் முலைமேற்புணர்ந்

தோன்றன்னைப், பனிமதியின்கிளையெனத்தண்பணிலங்கடவழுமொரு பழனநாட்டிற், கனவினிற்கண்டறிகுறியானனவினுங்கண்கண்டுமன ங் களிப்பைமாதோ

(இ - புரை.) வளைந்த பிறையையொத்த ஒளிதங்கிய நெற்றியினையும் பசுமைதங்கிய நீலோற்பலம்போன்ற கண்களையுமுடைய சாரதையே! முற்பிறப்பில் மணமாலை சூட்டித் திருமங்கிலியந்தரித்து உன்னைச் சேர்ந்திருந்தவனைக் குளிர்ச்சியுள்ள சந்திரக்கூட்டம் போலச் சங்குகள் தவழும் வயல்கள் சூழ்ந்த ஒப்பற்ற வளநாட்டிற் சொப்பனத்திற் கண்டறிந்த குறிப்பின்படிச் சாக்கிரத்திலும் கண்ணிற்கண்டு மனஞ்சந்தோஷிப்பை. எ - று. (உஉ)

கணவனுநின்னொடுகனவிற்புணர்குறியானனவிலெதிர்காணுமுன்னங், துணைவியெனத்தெளிவனவ்வாறறிந்தொருவர்க்கொருவர்பண்டைத்தொடர்புபெற்றுற், புணைதனதுமதியாகக்கலைக்கடலைக்கரைகண்டபுதல்வனோடே, யிணையில்விரதப்பயனிற்சமபாகங்கணவனிடத்தீகமன்னோ.

(இ - புரை.) கணவனும் உன்னுடன்சொப்பனத்திற் புணர்ந்திருக்கும், குறிப்பினால் எதிர்காண்பதற்குமுன் மனைவியென்று உன்னையறிந்து கொள்வன், அவ்வாறு அறிந்து ஒருவர்க்கொருவர் முற்பிறப்பின் சம்பந்தத்தைப்பெற்றால், தன்புந்தியே தெப்பமாகச் சாஸ்திரமென்னுஞ் சமுத்திரத்தைக்கடக்கும் புத்திரனுடன் ஒப்பில்லாத உன்விரதபலத்தில் கணவனுக்குச் சமபாகங்கொடுப்பாயாக. எ - று. (உ௩)

நின்விரதப்பயனேற்றகொழுநன்வசமாகியிருநிலத்தினீடும்
பொன்மனைவாய்நனவுதொறும்புணராதுகனவிலின்பம்புணர்ந்துகாமத்
தின்மதுவுண்டுளந்தெவிட்டுநாளிலுயிர்க்கேளிறப்பனிறந்தானென்ற
பின்முறையாலெரிமூழ்கியிருவீருமெமதுபதம்பெறுவீரன்றே.

(இ - புரை.) உன் விரதப்பயனைப் பெற்றுக்கொண்ட கணவன் வசமாகி இவ்வுலகத்தில் மிகுந்தபொன்மயமான வீட்டிற் சாக்கிராவஸ்தைகள் தோறும் புணராமல் கனவுதோறும் புணர்ந்து இன்பம் அனுபவித்து, மனவெறுப்புண்டாகுங் காலத்தில் உன்னுயிர்போன்ற அந்தக்கணவ னிறந்துவிடுவன்; அவ்வாறு அவனிறந்தபின்பு நீ கிரமப்படி அக்கினிப்பிரவேசமாய் கணவனுடன் நம்முடைய பதவியைச்சேரக்கடவை. எ - று. (உச)

வேறு.

எனவுரைத்தெழுதாமறைபுராதனநூலியாவையுமுணர்ந்துளந்தெளிந்த
தனையனையின்னேபெறுதிநீள்செல்வந்தழைந்தினிவாழ்திமற்றென்று
வனமுலைமடந்தைமனங்களிசிறப்பவரங்கொடுத்தாயிழையவளு
முனிவனுங்காணவிமயமீன்றெடுத்தமுகிணைகைகயிலையையடைந்தாள்.

(இ - புரை.) இவ்வாறு அம்பிகையார் அனுக்கிரகஞ்செய்து எழுதப்படாத வேதமுதலிய பழமையான சாஸ்திரங்களையெல்லாம் உணர்ந்திருக்கும் புத்திரனை இப்பொழுதே பெறுவை, மத்தியிலழியாத செல்வந்தழைய நீ வாழக்கடவை, என்று அழகிய தனங்களையுடைய சாரதையின் மனமானது சந்தோஷத்தினால் சிறப்படையத்தக்கதாக வரங்களைப்பாலித்து, அப்பொழுதே அப்பெண்ணும் முனிவனுங்காணக் கயிலைக்கு எழுந்தருளினார். எ - று. (௨௫)

வளர்மதிக்கண்ணியண்ணல்பாகத்துமாதுமைவரந்தரப்பெற்ற
தளிரியன்மகிழ்ச்சிகூர்ந்தருந்தவன்பொற்றாளருச்சனைபுரிகாலை
முளரிநாண்மலரினனைதளையவிழ்ந்துமுருகுகொப்பளித்திடச்செங்கே
ழொளிர்கதிர்விரிக்கும்பரிதியஞ்செல்வனுதயமால்வரைமிசையுதித்தான்

(இ - புரை.) வளைந்தபிறைக்கண்ணியணிந்த பரமேசுவரனிடப்பாகத்தில் வீற்றிருக்கும் பரமேசுவரி வரங்கொடுத்தருளப்பெற்றுக்கொண்ட சாரதை மகிழ்ச்சியடைந்து, அம்முனிவனுடைய பாதங்களில் அருச்சனைசெய்யும்போது, தாமரைகளினரும்பு இதழ்விரிந்து தேன்சொரியும்படிச் செம்மைநிறந்தங்கிய ஒளிபொருந்திய கிரணங்களைப்பரப்பும் சூரியதேவன் உதயகிரியில் தோன்றினான். எ - று. (௨௬)

நாறுபூங்கோதைமாதுமையோடுகளிர்மதிவேணியன்மகிழ
வீறுயர்விரதமியற்றியதிறத்தால்விளைபயனேதிலரறியா
தாறறிமுனிவனன்னவட்பயந்தவத்தனுமன்னையுமறியக்
கூறினன்கூறியாயிடையகன்றோர்குளிர்புனனாட்டகமடைந்தான்.

(இ - புரை.) வாசனை கமழும் பூமாலையணிந்த அளகபாரத்தையுடைய உமையம்மையும் குளிர்ச்சியுள்ள பிறைசூடிய சடையையுடைய சாம்பமூர்த்தியும் மகிழ்ந்தருளும்படிப் பெருமைதங்கிய உமாமகேசுவரவிரதம் அனுஷ்டித்த தன்மையினால், மேலுண்டாகும்பலனை அன்னியரறியாதவண்ணம் சாரதையின் தாயுந் தந்தையும் அறியும்படி முனிவர்சொல்லினர். அவ்வாறு சொல்லி அவ்விடம் விட்டுக் குளிர்ச்சியுள்ள நீர்வளந்தங்கிய வேறொருநாட்டிற்போய்விட்டார். எ - று. (௨௭)

முனிவரனகலவிதிமுறைநோற்றமொய்குழல்கங்குல்வாய்தோறு
நனையவிழ்செழுந்தார்க்கேள்வனுந்தானுநலனுகர்ந்தின்புறுநாளிற்
பனிவரையீன்றகொவ்வையஞ்செவ்வாய்ப்பசுங்கிளியளித்தல்வரத்தாற்
கனவுறுகலவிநலத்தினுமவளுட்களித்திடக்கருப்பநேர்ந்ததுவே.

(இ-புரை.) அந்தமுனிவர் எழுந்தருளிய பின்பு விதிப்படி விரதம் அனுஷ்டித்தசாரதையானவள் இராத்திரிதோறும் சொப்பனாவஸ்தையில் தேனுடன்மல

ர்ந்திருக்கும் செழுமையுள்ள பூமாலையணிந்த கணவனுந்தானும் இன்பம் அனுபவித்துக் கொண்டிருக்கும் நாளில், மலையரையன்பெற்ற கோவைக்கனிபோன்ற சிவந்த திருவாயையுடைய பசுங்கிளிமொழியொத்த மொழியையுடையவராகிய பார்வதிதேவியார் அருளிச்செய்த வரப்பிரசாதத்தினால் சொப்பனத்திற் கூடுங் கலவியின்பத்திலும் அவள் மனங்களிப்படையும்படிக் கருப்பமுண்டாகியது. எ - று. (உஅ)

கருவளர்ந்திடலான்மாந்தளிர்மேனிகலைமதியுருவெணவிளர்ப்பச்
சுரிகுழலணங்குரூனிறம்பெறலுந்துணிவிலாராங்கதுகண்டார்
திருநலனிகழ்ந்தாள்கற்புமிற்பிறப்புந்திறம்பினளெனப்பழிகூறி
யரவுமுன்கதுவவிறந்தகேடமர்கேட்டதிசயித்தகம்புழுங்கினரே.

(இ - புரை.) அந்தக்கருவளர்தலினால் மாந்தளிர்போன்ற மேனியானது சோடசகலைகளுள்ள சந்திரவடிவம்போல வெண்மை நிறம் அடையும்படிச் சாரதை கருப்பக் குறிபொருந்தவும், இதனுண்மை தெரியாதவர்கள் அதைக்கண்டு கைம்பெண்ணாகிய சாரதையானவள் பதிவிரதத்தன்மையையும் குடிப்பிறப்பையும் இழந்து விட்டாளென்று பழிசொல்ல; அதனைப் பாம்புகடித்திறந்துபோன இவள் புருடனுடைய பந்துகள் கேள்விப்பட்டு அதிசயித்து மனம்புழுங்கினார்கள். எ - று. (உகூ)

வேறு.

அலர்மொழிபொறாதுநாணியடுசினந்துரப்பக்கற்பின்
குலமகடாதையில்லிற்குழுமினர்குறுகியாங்கே
புலமைசால்குணத்தின்மிக்கபூசுரரவைமுன்மாய்ந்தோன்
றலைவியைவருகவென்றாரன்னவடானுஞ்சார்ந்தாள்.

(இ - புரை.) தங்களுக்கு நேரிட்டிருக்கிற பழிமொழியைச் சகிக்கமாட்டாமல் வெட்கமடைந்து கொடியதாகிய கோபம் அதிகரித்ததனால் சாரதையின் தந்தைவீட்டிற்குவந்து அவ்விடத்திலிருக்கும் வேதசாஸ்திரமுணர்ந்த பிராமணச்சபையில்சாரதையை அழைப்பித்தார்கள், அவளும்அங்குவந்தாள். எ-று. அலர்மொழி - பழிமொழி. அம்பல் என்பதும் இது. (௩௦)

நிலங்கிளைத்தயர்ந்துநாணிநீள்குழற்றலைகிழிட்டே
ரிலங்கொளிமின்னினின்றுளெழினலன்யாவுநோக்கிக்
குலங்கெடவழுவுண்டாக்குங்கொடியவளிவளாமென்றே
யலங்கலந்தண்டார்மார்பத்தந்தணரம்பல்சொன்னார்.

(இ - புரை.) பூமியைக் காற்பெருவிரலாற் கிளைத்து மனச்சோர்வுடன் நாணமுங்கொண்டு நீண்டகுழலையுடைய சிரசினைவளைத்துப் பூமியைப்பார்த்த

படி ஒப்பற்ற ஒளியுள்ள மின்னலைப்போல நிற்பவளுடைய சரீரத்தின் அழகினை யெல்லாம்பார்த்து, இவள் குலங்கெடும்படிக் குற்றத்தை யுண்டாக்குங்கொடிய ளென்று பூமாலையணிந்திருக்கு மார்பினையுடைய பிராமணர்கள் பழிமொழி சொன்னார்கள். எ - று. (௩௧)

வாழ்கலைதவறுசெய்தமதியிலியென்றுசொல்வார்
தாழிருங்குழலேயீதுதகாதுங்கண்மரபுக்கென்பார்
கீழலையாயுமீதுகீழ்மையேபுரிந்தாயென்பா
ரேழைநீநிறையினீங்கியென்செய்தாயிதனையென்பார்.

(இ - புரை.) குலத்துக்குப் பழுதுண்டாக்கிய புத்திகெட்டவளே! இனி நீ உயிருடன் வாழ்வதில்லையென்று சிலர்சொல்வார்கள், தாழ்ந்தகூந்தலையுடையாளே! இந்தக்காரியம் உங்கள்குலத்துக்குத்தகாதென்று சிலர்சொல்லுவார்கள், நீ உயர்ந்தசாதியிற் பிறந்தவளாயிருந்தும் இழிவானகாரியத்தைச் செய்தனை யென்று சிலர்சொல்லுவார்கள், மதிகெட்டவளே! பதிவிரதாதன்மம் விட்டு என்னடி இப்படிச்செய்தாயென்று சிலர் சொல்லுவார்கள். எ - று. (௩௨)

என்றவரொறுக்குங்காலையிருமைதேர்சான்றோரெண்ணித்
தொன்றுசால்புடையகற்பின்றொழுகுலங்கெடச்செய்தாளை
மன்றலங்குழலுமூக்கும்வள்ளைவாராகாதுமின்னே
யொன்றறக்கொய்துபோக்கியூர்க்கயல்கடிகவென்றார்.

(இ - புரை.) இவ்வாறு அந்தச்சபையிலிருந்தவர்கள் தூஷித்துப்பேசும்போது, இம்மை மறுமைகளையுணர்ந்த பெரியோர்களா யிருப்பவர்கள் ஆலோசித்துப் பழமையாகவருகின்ற கற்புநிலையையுடைய பிராமணக்குலத்துக்குக் கெடுதியுண்டாச்செய்தவளைத் தலைமயிரையும் மூக்கையும் காதுகளையும் விடாமல் இப்போதே அறுத்தெறிந்து ஊருக்கயலில் துரத்திவிடுங்களென்று சொன்னார்கள். எ - று. (௩௩)

கேட்டவைபுரிதுமென்னாக்கிளர்ந்தெழுசினத்தராகி
யூட்டரக்கனையகண்ணர்களுமெனவுருத்துச்சீறிச்
சேட்டிளம்பிடியைமுற்றுஞ்சிங்கவேறென்னச்சூழ்ந்து
மோட்டிளமுலையினாளைமுருக்குவான்குறுகுங்காலை.

(இ - புரை.) அவர்கள் சொன்னதைக்கேட்டு அப்படியே செய்கிறோமென்று மூளுகின்ற கோபத்தையுடையவர்களாய் அரக்கினைப்போலக் கண்கள் சிவந்து உக்கிரத்துடன் சீறி, ஒரு பெட்டையானையைக் கொல்லத்தொடரும் ஆண்சிங்கம்போலச் சூழ்ந்து, சாரதையென்பவளை வருத்தும்படிச் சென்றபோது, எ - று. (௩௪)

மன்னியநிறைவழாதுவயங்கியகற்பிளுளைப்
பொன்னளவின்பால்கும்பொதுநலக்கணிகையென்றே
சொன்னவர்நாவற்றாழ்ந்ததுயர்க்கடல்குளிப்பரென்று
மின்னெனவிசும்பினின்றோர்தெய்வதம்விளம்பிற்றன்றே.

(இ - புரை.) நிலைபெற்ற முறைமைதவறாமல் விளங்குகின்ற கற்புள்ள இந்தச்சாரதையை வந்தபுருஷன்கொடுத்த பொன்னளவுக்குத்தக்க இன்பங் கொடுக்கும் பொதுமகளாகிய வேசையென்று சொல்லுகின்றவர்களுடைய நாக்கு அறுந்து ஆழ்ந்த துக்கசாகரத்தில் முழுகுவார்களென்று மின்னல்மின் னியதுபோல ஆகாயத்தினின்று ஒருதெய்வவாக்கு எழுந்தது. எ - று. (௩௫)

விளம்புசொற்கேட்டலோடும்வியனகர்மாந்தரெல்லா
முளங்களித்துவகைபூத்தாங்குவர்க்கடலென்னவார்த்தா
ரிளங்கொடிகிளைஞரோடுதந்தையுமீன்றதாயுந்
துளங்கியதுன்பநீங்கித்தொலைவிலாவின்பமுற்றார்.

(இ - புரை.) அவ்வாறு சொல்லிய தெய்வீகவாக்கைக் கேட்டமாத்திரத் தில் விசாலமுள்ள அந்த நகரத்திலிருக்கு மனிதர்களெல்லாரும் மனங்களித் துச் சந்தோஷங்கொண்டு பர்வகாலத்தில் ஒலிக்குஞ் சமுத்திரம்போல ஆரவா ரித்தார்கள். சாரதையின் தாய்தந்தையரும் சுற்றத்தாரும் நடுங்கிய துன்பம்நீங்கி ஒழியாத இன்பமடைந்தார்கள். எ - று. (௩௬)

அவ்வழியறிஞர்தாமுமலர்மொழிகூறினோரு
நவ்வியங்கண்ணிகற்பினலனோரற்புதமென்றஞ்சிச்
செவ்விதின்முகங்கீழிட்டுத்திருந்துரையாடாராகி
யிவ்வணமிரண்டுகன்னமிருந்துளங்கலங்கினாரே.

(இ-புரை.) அப்போது அறிஞர்களும் பழிகூறியவர்களும் மான்பார்வை போன்ற பார்வையுள்ள சாரதையின் கற்பின் நன்மையானது அற்புதமுள்ள தென்றுபயந்து, செவ்விதாக முகத்தைக் கீழிட்டுக்கொண்டு யாதொருபேச்சு மில்லாதவர்களாய் இவ்வாறு இரண்டுநாழிகைமட்டிலிருந்து மனங்கலங்கினார் கள். எ - று. (௩௭)

வேறு.

அற்புதமிஃதுசாரதமென்றுணராதகல்விசும்பிடையொலித்தெழுந்த
சொற்படிறென்றுதொழுகுலத்தோரிற்சொற்றனர்சிலரவரெல்லாம்
பொற்புறுநாவற்றுதிர்ந்திடவாயாற்புழுச்சொரிந்தனரவைகாணாக்
கற்பினுடைமைபுகழ்ந்தனர்கிளைஞர்கன்னியைத்தழுவினர்மகிழ்ந்தே

(இ - புரை.) இது அற்புதம் சத்தியம் என்று உணராமல் விசாலமுள்ள ஆகாசத்தில் ஒளித்தெழுந்த அசரீரியின் வாக்குப்பொய்யென்று பிராமணர் களிற் சிலர்சொல்ல; அவர்களெல்லாரும் அழகுபொருந்திய நாக்கறுந்துவிழும் படி வாயின்வழியாகப்புழுக்கள் சொரியப்பெற்றூர்கள்; அவைகளைக்கண்டு கற் புள்ளசாரதையைப் பந்துகள்வந்து தழுவிக்கொண்டு அவள்கற்பின் பெருமை யையப் புகழ்ந்துபேசி மகிழ்ந்தார்கள். எ - று. (௧அ)

செய்வதக்கிழமைவேள்விநான்மறையோர்சிலரவணிருந்துதெய்வதமுங்
கைதவமுரையாதணங்களுள்வயிற்றிற்கருப்பமும்வளர்வதாலிந்த
மைதவழ்குழலிக்கெந்தவாறந்தோவசையறுமெனநவையுறலு
மெய்தெரிந்தகிலகலையுணர்ந்தறிந்தவேதியனொருவனீதுரைத்தான்.

(இ - புரை.) தவஞ்செய்தற்குத்தக்க வுரிமையுமுள்ள பிராமணர்களில் சிலர், அங்கிருந்தபடி யோசித்து யார் பொய்சொன்னாலும் தெய்வமும் பொய் கூறாது; இவள் வயிற்றிற் கருப்பமும் நாளுக்குநாள் வளர்வதினால் இவளுக்கு வசைமொழி எவ்வாறு நீங்கும், என்று சந்தேகத்துடன் வருத்தமுங்கொண்டு வருந்துங்காலத்தில் உண்மைதெரிந்து சாஸ்திரங்களையெல்லாங்கற்ற ஒருபிராம ணன் இந்தவார்த்தை சொல்லுகிறான். எ - று. (௧௯)

கண்டுகேட்டறியப்படுவனவானகாட்சியாலாகமவளவா
லுண்டெனவுணருந்திறத்தவாறெல்லாமுலகமுமாயையின்வடிவே
தண்டலின்மாயைமயக்கினால்வாராத்தகையனயாவையாதலினாற்
பண்டைநாளிலதாய்நினைவதற்கரிதாம்பான்மையதொன்றெனத்தருமே

(இ - புரை.) கண்டும் கேட்டும் அறியப்படுவனவாகிய பிரத்தியக்ஷபிரமா ணத்தாலும் ஆகமப்பிரமாணத்தினாலும் உண்டென்று அறியத்தக்கமுறைமை யின்படி எவ்லாவுலகமும் மாயாரூபமே, ஒழியாத அந்தமாயைமயக்கினால்வராத வையெவையுமில்லை; ஆகையால், அந்தமாயையானது முன்னாளிலில்லாததாய் நினைப்பதற்கரிதாகிய பகுதியுள்ள ஒரு காரியத்தை நூதனமாக உண்டாக்கும். எ - று. (௨0)

இந்தமாமாயைதிங்களங்கண்ணியிறைவிளையாட்டெனத்துணிந்து
சந்தநான்மறையுமாகமமனைத்துந்தனித்தனியிரைத்திடுமென்று
லுந்திநாண்மலரிலுலகெலாங்காட்டுமொருவனுமயனுமொன்றறியா
வந்தவானவன்றன்றிருவிளையாட்டையார்கொலோவின்னதென்றறிவார்

(இ - புரை.) இந்தமகா மாயையானது திங்கட்கண்ணியரான பரமசிவ னுடைய திருவிளையாடலே யென்று நிச்சயித்துச் சந்தமுள்ள நான்குவேதங்

களும் இருபத்தெட்டு ஆகமங்களும் தனித்தனி முறையிடுமென்றால், நாபிகமலத்தில் உலகத்தைத் தோற்றுவிக்கும் மாயவனும் பிரமனும் சிறிதும் அறிந்துகொள்ளமாட்டாத அந்தக்கடவுளுடைய திருவிளையாடலை இத்தன்மையவென்று எவர்கள் அறியத்தக்கவர்கள். எ - று. (௬௧)

ஓதுநான்மறையீர்கேட்டிர்மீன்வயிற்றின்யோசனகந்திவந் துதித்தாள்
மேதியினகட்டின்மகிடனென்றுரைக்கும்வெந்திறற்றுனவன்பிறந்தான்
றாதுதாழ்பொழில்சூழ்சத்தியபுரத்திற்றாழ்குழலியரனைவருமோ
ரேதுவாற்காலமொன்றிலவ்வயிறுர்ந்தெழில்பெறக்கருப்பமுற்றனரே.

(இ - புரை.) வேதங்கள் ஓதும் பிராமணர்களே! கேளுங்கள்; மீன்வயிற்றினிடமாக யோசனைகந்திவந்துபிறந்தாள்; எருமைவயிற்றினிடமாகக் கொடியசெய்கையையுடைய மகிடாசுரன் வந்துபிறந்தான்; மகரந்தங்களுடன் பூக்கள் மலர்ந்திருக்குஞ் சோலைசூழ்ந்தசத்தியபுரத்திலிருந்த தாழ்ந்தஅளகத்தையுடைய மாதர்களெல்லாரும் ஒருகாரணத்தால் ஓரேகாலத்தில் வயிறுதோன்றக் கருப்பமடைந்திருந்தார்கள். எ - று. (௬௨)

எரிதவழ்வடிவேலடல்வசுதேவனிகலினரிடுதளைப்படுநாட்
கரியமெல்லோதியுரோணிகேளின்றிக்கருப்பமுற்றனளிவையன்றி
பிருமையுமுதவுந்தெய்வதவரத்தாலிருடிகண்முனிந்தசாபத்தால்
வரன்முறையாகித்தொன்றுதொட்டுலகில்வருவனவல்லவும்வருமே.

(இ - புரை.) தீயுமிழும் வடித்தவேலையுடைய வசுதேவன் பகைவனுற்ற ளைப்பட்டிருந்தநாளில் கறுத்த அளகத்தையுடைய உரோகணி யென்னும்அவன் மனைவி தன்கணவனில்லாமலிருந்தும் கருப்பமடைந்தாள்; இவைகளும் அல்லாமல், இம்மைப்பயனையும் மறுமைப்பயனையும் கிருபைசெய்யுந் தேவவரத்தினுலும் முனிவர்கள் சபித்த சாபத்தாலும் வரன்முறையாகப் பூர்வகாலந் தொடங்கிவருகின்றவைகளும் மாறி வேறேநூதனமாகவருவதுமுண்டாகும். எ - று.

ஐந்தவித்துயர்ந்தவாற்றன்மாதவத்தோரகங்கறுத்துரைத்தசாபத்தால்
மூந்தைநாட்சாம்பனகட்டிடைவலியமுசலமொன்றுதித்தது செழுந்தார்ப்
பைந்துணரிதழிச்செஞ்சடாமகுடப்பரமனைப்பரவுமோர்முனிவன்
மந்திரபலத்தாலன்றுவநாச்சுவயிற்றினுங்கருப்பமுற்றதுவே.

(இ - புரை.) பஞ்சேந்திரியங்களையும் நிக்கிரகஞ்செய்துமேன்மைபெற்ற தவவல்லமையுடைய மகருஷிகள்மனதிற்கோபங்கொண்டுசொல்லியசாபத்தில் முன்னாளில் சாம்பனென்பவன் வயிற்றினிடத்தில் வன்மையுள்ள முசலமென்னும் இருப்புலக்கையுண்டாயிற்று. பசுமையுள்ள கொன்றைப் பூங்கொத்தாலாகிய மாலையணிந்த செஞ்சடா மகுடத்தையுடைய பரமசிவனைத் துதிசெய்யும்

ஒருமுனிவனுடைய மந்திரபலத்தினுல் உன்ஞச்சுவன் என்பவன் வயிற்றிலும் பூர்வகாலத்திற் கருப்பமுண்டாயது. எ - று. (சுச)

தாதுதாழ்பொகுட்டுத்தாமரைக்கோயிற்ற ற்குழலனையசாரதையும்
வேதமாமுனிவனொருவனைப்பணிந்து விரதமொன்றியற்றுதல்புரிந்தா
ளாதலால்வயிற்றிற்கருப்பமுற்றிருந்துமருளவையகற்றினளிதனைத்
தீதிலாவேறுமாதரால்வினவித்தேர்ந்துளந்தெளிமினென்றுரைத்தான்

(இ - புரை.) மகரந்தம் நிறைந்துள்ள பொகுட்டினையுடைய தாமரைப் பூங்கோயிலிலிருக்கும் திருமகளையொத்த இந்தச்சாரதையும் ஒரு முனிவனைப் பணிந்து உமாமகேசுவரவிரதம் அனுஷ்டித்தாள், அந்த விரதபலத்தினுல் கருப் பமடைந்து குற்றமற்றவளாயிருக்கிறுள்; இந்தக்காரியத்தை உத்தமகுணமுள்ள சிலமாதரைக்கொண்டறிந்து உங்கள் மனதிலிருக்குஞ் சந்தேகத்தை நிவிர்த்தி பண்ணிக்கொள்ளுங்கள் எ - று. (சரு)

அன்னதுதேர்வான்ற்முழுகுலத்தமைந்தவணங்கனுர்செல்கெனச்
சென்ற, மின்னிகரிடையார்வினவலுமவண்முன்விளைந்தனபடிப்படிவி
ளம்ப, வின்னணங்கேட்டோர்மீண்டுவந்துரைத்தார் யாவருமுணர்ந்
தொருமறையோன், சொன்னவைமுழுதுஞ்சரதமென்றேத்திச்சுரிகு
ழலணங்கையுந்துதித்தார்.

(இ - புரை.) அந்தப்பிராமணன் சொன்னவற்றையெல்லாம் நிசமென அறிந்த அந்தணர்கள் சாரதை கருப்பங்கொண்டிருக்கு முறைமையைத்தெரியு ம்படிப் பிராமணஸ்திரிகளை அறிந்துவாருங்களென்று அனுப்ப; அவர்கள்போய்ச் சாரதையைக்கேட்டார்கள். அவள்முனிவர்வந்தது முதல் நடந்தவையெல்லாங் கிரமமாகச்சொல்ல; அவற்றையெல்லாம் அவ்விப்பிரமகளிர்சபையாருக்குச் சொன்னூர்கள். அதைக்கேட்டவர்களெல்லாரும் இந்தப்பிராமணன் சொல்லிய வெல்லாம் உண்மையாயிற்றென்று அவனைப்புகழ்ந்து சுரிந்திருக்கும் அளகத் தையுடைய சாரதையைத் துதிசெய்தார்கள். எ - று. (சசு)

செழுமறையவருங்கவிஞருங்கற்பின்றிறம்புகழ்ந்தகன்றனராங்கே
பழியறுசிறப்பினருந்ததியனையபனிமொழிச்சாரதையென்பாள்
குழவியம்பரிதிச்செல்வனைப்போலக்குரைகடலுலகெலாம்விளங்கு
மழவையீன்றெடுத்துக்களிசிறந்துவகைமாகடன்மூழ்கினண்மகிழ்ந்தே

(இ-புரை.)* பிராமணர்களும் பண்டிதர்களும் சபை கலைந்துபோனபின்பு அதற்குமேல் பழிநீங்கிச் சிறப்படைந்த அருந்ததியையொத்த கற்புள்ள சாரதை யானவள் ஒலிக்காநின்ற கடல்வளைந்த இவ்வுலகமெங்கும் விளங்கும் உதயகால

இளங்கதிர்போல ஒருகுழந்தையைப்பெற்றுக் களிப்படைந்துசந்தோஷக்கடலி லாழ்ந்தாள். எ - று. (௬௭)

ஈன்றவளுவப்பநன்குசான்மதியோடிலக்கணக்கிடக்கையனாகத்
தோன்றியெக்கலையுமுணர்ந்துமுந்நூலுந்தொன்மறைவிதிவழிசூடி
யான்றசீர்ச்சாரதேயனென்றொருபேரமைவரப்புனைந்தபின்யாண்டோர்
மூன்றகவயிற்றன்னுணர்விலிருக்குமுதலவாமறைமுழுதுணர்ந்தான்

(இ - புரை.) பெற்றவள் சந்தோஷிக்க நன்மைமிகுந்த விவேகத்துடன் முப்பத்திரண்டு லக்ஷணமு மிவனிடத்திலிருக்கின்றதென்று சொல்லும்படித் தோன்றி, எல்லாச்சாஸ்திரங்களையு முணர்ந்து பழமையானவிதிப்படி உபநயன முஞ்செய்துகொண்டு சிறப்புப்பொருந்திய சாரதேயனென்னும்பெயரும்பெற்று மூன்றுவருடத்துக்குள் இருக்கு முதலியவேதங்களையெல்லாம் உணர்ந்தான். எ - று. (௬௮)

மறைபயில்பாலன்கலையினல்வளருமதியெனக்கலைகளான்வளர்நா
ணறைகமழிதழித்தொடையல்சூழ்சடிலநாயகன்சிவநிசிவரலு
முறுதிறநெறிந்துபாரதகண்டத்துறைபவரனைவருமாங்கே
குறுகுதற்கரியசிவபதநிகர்க்குங்குறைவில்சீர்க்கோகன்னமடைந்தார்.

(இ - புரை.) இவ்வாறு வேதங்கள் உணர்ந்த அந்தப்புத்திரன் கலைகளு டன் வளருஞ் சந்திரனைப்போல கலைகளாகிய சாஸ்திர உணர்ச்சியுடன் வள ரும்நாளில் வாசனைகமழுங் கொன்றைமாலைசூழ்ந்த சடாமகுடத்தையுடைய பரமசிவன் பூசைக்குரிய சிவராத்திரிவந்தது; அந்தநாளில் வேதமுணர்ந்து பரதகண்டத்தில் வாசஞ்செய்கிறவர்களெல்லாரும் யாவருஞ்செல்லுதற்கரிய சிவலோகத்தை யொப்பாகும குறைவற்ற சீரினையுடைய கோகர்னத்துக்குச்செ ன்றார்கள். எ- று. (௬௯)

பொன்புரைகடுக்கைவேணிவானவனைப்பூசனைபுரிசிவநிசியின்
மன்பதையெல்லாம்பொருவில்கோகன்னமன்னியவாசகங்கேளாத்
தென்புலவாணர்க்கருங்கடனிறுக்குஞ்சிறுவனுந்தானுமாயெழுந்து
தன்புறங்காக்குங்கிளைஞர்சூழ்போதத்தளிசியற்சாரதைபோனாள்.

(இ - புரை.) பொன்னிறத்த கொன்றைமாலிகையணிந்த சடையையு டைய பரமசிவனைப் பூசைசெய்யும்படியான சிவராத்திரிதினத்தில் ஜனங்க ளெல்லாருங் கோகர்னத்துக்குப் போகின்றார்களென்னுஞ் சொல்லைச் சாரதை கேள்விபட்டுப் பிதிர்த்தேவர்களுக்குச் செய்யுங்கடன் செய்யத்தக்க சாரதேய னென்னும் பெயருள்ள புத்திரனுடன் புறப்பட்டுத் தன்னைப் பாதுகாக்கும் பந்துகளுஞ் சூழ்ந்துவரும்படிப் போனாள். எ - று. (௭0)

பூத்துணர்வீழ்ந்துதவழ்நறும்பசுங்கால்புகுந்துலாஞ்சண்பகவேலிக்
காந்தளஞ்சிலம்பில்விளைந்தசெஞ்சாந்துங்கதிர்நிலாமுத்தமுங்கொழித்துத்
தீந்தமிழ்மணக்கும்வைகைமாநதிசூழ்தென்புலநாடகன்றுங்க
ணேந்திளமுலையாள்சாரதைதவத்தாலெய்தியகொழுநனுமடைந்தான்.

(இ-பொ.) அப்படி அச்சாரதை போம்பொழுது பூங்கொத்துக்களில் பொ ருந்திவருகின்றவாசனையுள்ள தென்றற்காற்றுச்சென்று உலாவுகின்ற சண்பகச் சோலை மலர்ந்திருக்கும் பொதியமலையிலுண்டான செஞ்சந்தனத்தையும் ஒளியுள்ள நிலவையொத்த முத்துக்களையுங்கொழித்து, மதுரமுள்ள தமிழ்மண ந்துகொண்டிருக்கும்படியான வைகைநதிசூழ்ந்த பாண்டியநாட்டையகன்று இளமைதங்கிய தனமுள்ள சாரதையின் தவத்தினாற்பொருந்திய கணவனும் வந்தான். எ - று. (௫௧)

கள்ளவிழ்குழலாளாயிடைக்கனவிற்கலவிசெய்கொழுநனைக்கா ணு
வுள்ளுறத்தெளிந்துவனமுலைபுளகமுறவவன்வடிவெலாநோக்கித்
தெள்ளுதெண்டிரைசூழ்பொலங்கிரிமுகட்டிற்சேட்டிளம்பரிதிகண்டாங்கே
முள்ளரைமுளரிமுறுக்கவிழ்ந்தென்னமுகமலர்ந்தகமலர்ந்தனளே.

(இ - பொ.) தேனுடன்மலர்ந்த மலரணிந்த அளகத்தையுடைய சார தையானவள் சொப்பனத்திற் றன்னைப்புணருங் கணவனை அவ்விடத்திற்கண்ட வுடன் மனதிற்றன்னுடைய கணவனேயென்று தெளிந்து, அழகிய தனங்களி னிடத்திற் புளகமுண்டாக அவன் வடிவையெல்லாம் பார்த்துத் தெளிவுள்ள சமுத்திரஞ்சூழ்ந்த உதயகிரியினிடத்தில் உதயமாகுஞ் சூரியனைக்கண்டு அப் பொழுதே முள்ளரைக்கொடியான தாமரையரும்பு முறுக்குவிட்டு மலர்வது போல முகமலர்ந்து மனமகிழ்ச்சியடைந்தாள். எ - று. (௫௨)

பண்டைநாண்முதலாக்கனவெலாமின்பம்பருகியகேளுமன்றன்று
கண்டறிகுறியாற்றெளிந்துதன்படிவங்காட்டியமதலையுங்காணு
வண்டிமிர்குழலாய்நின்னொடுபகருமாற்றமொன்றுளதெனவேறு
கொண்டுளமுவகைக்கடலிடைமூழ்கிக்குறித்தனவினவுவான்புகுந்தான்

(இ - பொ.) அநேக நாளாகச் சொப்பனங்கடோறும் சாரதையுடன் இன்பமனுபவித்த கணவன் அந்தந்தநாளில் பார்த்தறிந்த குறிப்பினாற்றெ ளிந்து தன்னுருவச் சாயலைக்காட்டிய புத்திரனையுங்கண்டு வண்டுகளிசைபா டிக்கொண்டிருக்கும் அளகத்தையுடையவளே! உன்னுடன் ஒருவார்த்தை பேச வேண்டியிருக்கின்றதென்று தனித்திருந்துகொண்டு மனமானது சந்தோஷக் கடலில்முழுகத்தக்கதாகத் தான் குறித்தவைகளை வினவத்தொடங்கினான்.எ-று.

மணமலிகுழலையாரைநின்னை மணமபுணர்கேள்வன்யாரமற்று,
ன், னுணர்வுடைத்தந்தையாவனோவெதுநின்னூரெதுபேரெதென்று
வந்து, துணைவன்முன்வினவக்கனுழ்ந்துதன்மரபுதொடுத்திளமையின்

மணஞ்செய்த, கணவனையிழத்தல்காறுநின்றுரைத்தாள்காதலன்மறு த்திஃதுரைத்தான்.

(இ - புரை.) வாசனைநிறைந்த மலர்மாலையணியத்தக்க அளகத்தையுடையவளே! நீ யார்? உன்னை விவாகஞ்செய்துகொண்ட கணவன்யார்? உணர்வையுடைய உன்பிதா யார்? ஊர் எது? பெயரென்ன? என்று கணவன் வினவச் சாரதையானவள் கண்களில் நீர்பெருகும்படித் துயரமடைந்தவளாய்த் தன்மரபுமுதல் இளமைப்பருவத்தில் விவாகஞ்செய்துகொண்ட கணவனையிழந்ததீருகச்சொன்னுள். அவன்மறுபடியும்இந்தவார்த்தைசொல்லுகிறான். எ-று.

மன்றலங்கோதாய்நின்னயனின்றமறையிளஞ்சிறுவனின்மகன்கொ
லன்றிமற்றயலார்மகன்கொல்யார்மகனென்றறிகலான்போலவன்வினவ
நின்றசீர்ச்சாரதேயனென்றொருபேர்நிலமெலாநிறுவியபுகழோ
னென்றனிப்புதல்வன்பலகலைவேதம்யாவையுமுணர்ந்தவனென்ருள்.

(இ - புரை.) வாசனைதங்கும் அளகத்தையுடையவளே! நின்னருகிலிருக்கும் இந்தப்பிராமணச்சிறுவன் உன்புத்திரனே? அல்லது மற்றொருவர் புத்திரனே? என்று அறியாதவன்போலவினவ, இந்தப்புத்திரன் பெருமைதங்கிய சாரதேய னென்னும் ஒப்பற்ற பெயரை உலகமெங்கும் விளங்கும்படிப் புகழ்பெற்ற என்புத்திரன்; பலசாஸ்திரங்கள் வேதங்கள்யாவும் உணர்ந்தவனென்று சொன்னுள். எ - று. (௫௫)

சொற்றனள்கேட்டுவெடிபடநகைத்துத்தொழுகுலத்துதித்தநின்செய்கை, முற்றவுநன்றுநன்றுகாணென்றுமொழிந்துபைங்காந்தளஞ்செங்கை, பற்றியஞான்றேயிறந்தனன்கேள்வன்பாலனைநீபின்னர்ப் பயந்த, தெற்றெனப்பகர்வேன்முகிழ்முலைபணங்கேயேதுகாரணமிதற்கென்றான்.

(இ-புரை.) அவள் சொன்னதைக்கேட்டு வெடிபடும்படிநகைத்துத்தொழுகுலமானபிராமணகுலத்திற்பிறந்த உன் செய்கை மிகவும் நன்றாயிருக்கின்றதென்று சொல்லிச் செங்காந்தண் மலரையொத்த உன்கரத்தைப்பற்றி விவாகஞ்செய்துகொண்டகணவன் அன்றையதினமே யிறந்துபோனுனெனில், பின்பு நீ புத்திரனைப்பெற்றது என்ன அதிசயமென்று சொல்வேன், தாமரையரும்பையொத்தனமுள்ளவளே ! கணவனிறந்தபின்பு நீ புத்திரனைப்பெறுவதற்குக் காரணம் என்னென்ருன். எ - று. (௫௬)

அங்கிலைமடந்தைநாணமீதூரவலர்கதிர்மதிமுகமிறைஞ்சி
யின்னகைபுரிந்துதமியனையிகழ்தலேற்பதோமுழுதுணரிறைவ
நின்னையாரென்றுமறிந்தனனென்னைநீயுமிவ்வாறறிகுவையா
லுன்னருந்தகையவிங்கிலக்கிருவேழுமுள்ளமேசான்றெனப்பின்னும்.

(இ - புரை.) அந்தப்பிராமணன் சொன்ன வார்த்தையைக்கேட்டவுடன் சாரதையானவள் பரந்தகிரணங்களையுடைய சந்திரனையொத்த முகத்தை வணங்கிக்கொண்டு இனியநகைசெய்து தமியளாகிய என்னை இவ்வாறு இகழ்வது உமக்குத்தகுதியோ! முழுவதும் அறிந்த கணவனே! உன்னை நான் என்றும் அறிந்தேயிருக்கின்றேன். என்னை நீயும் அவ்வாறே யறிந்திருக்கின்றனை, நினைத்தற்கரிய இந்த நிலைமைக்கு நம்மிருவர் மனமே சாக்ஷியென்று சொல்லிப் பின்னுஞ் சொல்லுகின்றாள். எ - று. (௫௭)

முனிவரன்மேனுண்மொழிந்தது மன்னோன்மொழிப்படிநோன்பி யற்றியதும், பனிவரையுமையாளெதிர்ந்ததுமெதிர்ந்துபவங்களோரிர ண்டினுமுன்னே, வினைவழிநிகழ்ந்ததொடர்பெலாமுணர்த்திமெய்வர மளித்ததுமுறையாத், தநயனைவிரதப்பயனிலோர்பாதிதன்னொடும்வ

(இ - புரை.) முன்னாளில் முனிவர் சொன்னதும் அவர்சொற்படித்தான் விரதம் அனுஷ்டித்ததும் உமையவள் பிரத்தியக்ஷமானதும் அவ்வாறு பிரத்தியக்ஷமாய்ச் சென்ற இரண்டு சென்மத்தில் உன்னை விதிவசத்தாற் றொடர்ந்து வந்த முறைமை தெரிவித்ததுமன்றி உண்மையாகிய வரங்கொடுத்ததுஞ் சொல்லிப் புத்திரனையும்அனுஷ்டித்தவிரதபலத்திற்பாதியினையுங்கொடுத்தாள். எ-று.

அறைகடலுலகிற்பெறற்கரிதாயவரும்பொருள்பெற்றெனப்பெ ற்றான், பொறையுடையணங்கின்றந்தைதாய்கிளைஞர்பொருந்திடவ ன்னவளுடனே, மறையிளஞ்சிறுவ[illegible]கொண்டுபேருவகைமகிழ்ச்சிய ளுகியாங்ககன்று, சிறையளிபாண்செய்பொதும்பர்சூழ்வைகைச்செந் தமிழ்ப்பாண்டிநாடடைந்தான்,

(இ - புரை.) ஒலிக்கானின்ற சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுலகிற் பெறுதற்கரியதாகிய பெரும்பொருளை பெற்றதுபோல புத்திர விரதபலனையும் பெற்ற பிராமணன், கற்புநிலையுள்ள சாரதையின் தாய் தந்தையரும் பந்துகளும் சம்மதிக்கத்தக்கதாகத் தன்புத்திரனையும் அவளையுங் கூட்டிக்கொண்டு பெரியமகிழ்ச்சியுடன் அவ்விடம்விட்டுநீங்கிச் சிறகினையுடைய வண்டுகள் இசைபாடும் பொழில் சூழ்ந்த வைகைநதிசேர்ந்த பாண்டிநாட்டிற்சேர்ந்தான். எ - று. ()

வாள்விரிபசும்பொற்புதவுயர்மாடமறுகுசூழ்வளநகர்சார்ந்து
நீள்கருங்குழலாள் புணர்முலைப்போகநீங்கருங்கனவெலாநுகர்ந்து
நாள்பலகழியவிற்றந்தனன்கேள்வனலனுகர்ந்திவனேயெழ்பிறப்புந்
தோள்பிரியேனென்றணங்களுடானுஞ்சுடர்விரிகதழெரிகுளித்தாள்.

(இ - புரை.) ஒளிபரந்த பொன்னாற் செய்யப்பட்ட கதவுகளையுடைய உயர்ந்தவீடுகள்நிறைந்த வீதிகளுள்ள வளப்பமுடையமதுரைப்பதியிற்சேர்ந்து, நீண்ட கரியகுழலையுடைய சாரதையின்போகத்தை அனேகநாள் கனவிலனுபவித்து சின்னாளில் இறந்துபோனான். சாரதையும்இந்தக்கணவனை ஏழெழுபிறப்புவரையில் பிரியாமல் இன்பமனுபவிப்பேனென்று சுடர்விடுகின்றதீயிற் சககமனஞ்செய்தாள். எ - று. புதவு-கதவு. (௬௦)

தொடுகடலுலகினலனுகர்ந்துடலந்துறந்தவரிருவரும்பின்னும்
வடிமலர்க்கண்ணிக்கற்பகமிலைந்துமகிணனுந்துணைவியுமாகிக்
கடிநலந்துய்ப்பான்கோடியாதவர்செங்கதிரெலாமொருவழிகுழீஇ
நெடுவிசும்படைந்ததெனவொளிகெழுமிநிலவுசீர்விமானமேவினரே.

(இ - புரை.) சகரர்களாற் றோண்டப்பட்ட கடல்சூழ்ந்த பூலோகத்தினிடத்தில் இன்பமனுபவித்து உடலையொழித்தஅவ்விருவரும், ஆய்ந்த கற்பகப்பூமாலையணிந்து கணவனு மனைவியுமாகச் சுவர்க்கபோகம் அனுபவிக்கக்கோடி சூரிய பிரகாசமெல்லாம் ஒரேயிடத்திற்சேர்ந்து நெடியதாகிய ஆகாயத்தினிடத்தில் வந்ததுபோல ஒளிபொருந்தி விளங்காநின்ற சிறப்பினையுடைய விமானத்திற்பொருந்தினார்கள். எ - று. (௬௧)

ஆங்கினிதமர்ந்துகுங்குமக்குவட்டினணியெனத்திரண்டதிண்புயமுங்
கோங்கிளமுகிழினழகுவீற்றிருந்தகுவிமுலைத்தடங்களுநெருங்கத்
தீங்கனியனையமெய்யுறுபுணர்ச்சித்திருநலனுகர்ந்தமிதெவிட்டிப்
பூங்குழலுமையோடிளமதிக்கண்ணிப்புனிதன்வாழ்சிவபதமடைந்தார்.

(இ - புரை.) இவ்வாறு விமானத்திலேறிச் சென்றவர்கள் சுவர்க்கலோகத்தில் இன்பமுடன் அமர்ந்து, குங்குமமலையின் அழகுபோலத் திரண்ட திண்ணியபுயங்களும் இளமையாகிய கோங்கரும்புபோலக் குவிவாகியதனங்களும் நெருங்கத்தக்கதாக மதுரமுள்ள பழவர்க்கத்தையொத்த இரண்டுடலும் ஒன்றுபடப் புணர்வதாகிய சிறந்த இன்பம் அனுபவித்துக்கொண்டிருந்து, பின்பு அதனைவெறுத்துப் பூமாலையணிந்த அளகபாரமுள்ள பார்வதியுடன் பரமசிவன் வீற்றிருக்கும் சிவபதம் அடைந்தார்கள். எ - று. (௬௨)

இன்னதன்மையதிக்கதையெனவிதனையாவரேயாயினுங்கற்றோர்
பன்னினோர்கேட்டோரிருநிலத்திம்மைப்படுபயன்விழைந்தனர்நுகர்ந்து
பின்னருமறுமைப்பலன்சிவபதமேபெறுகுவர்திண்ணமீதெனச் [றான்.
சொன்னநான்மறையின்பொருண்முழுதுணர்ந்தசூதன்மாதவர்க்கெலாஞ்சொன்

(இ-புரை.) நைமிசாரணிய முனிவர்களே! இந்த உமாமகேசுவரபூசாபல சரித்திரம் இத்தன்மையுவான சிறப்பினதென்று கருதி இந்தச்சரித்திரத்தைக்

கற்றுணர்ந்தவர்களும் பிறருக்குச்சொன்னவர்களும் கேட்டவர்களும் யாவர்களேயாயினும் பெரியதாகிய இவ்வுலகத்தில் தாங்கள்விரும்பியபடி இம்மைப் பயனை அனுபவித்துப் பின்பு சுவர்க்கானுபவமுஞ்செய்து சிவபதம் அடைவார்களென்பது நிச்சயமென்று நான்குவேதங்களின் பொருள்முழுவதையும் உணர்ந்த சூதமுனிவர் சொல்லியருளினார். எ - று. (௬௩)

பத்தொன்பதாவது உமாமகேசுவரபூசாபலமுரைத்த அத்தியாய முற்றிற்று.
ஆ திருவிருத்தம். ௧௦௭௬.

---

உ

சிவமயம்.

# இருபதாவது

# உருத்திராக்ஷமகிமையுரைத்த அத்தியாயம்

கேட்டமறைவித்தகர்கிளர்ந்துவகைபொங்கி
நாட்டமொருமூன்றுடையநம்பனருளடியார்
வேட்டணியுமக்கமணிமேன்மையைவிரித்தே
கோட்டமில்குணத்துமுனிகூறுகெனவோடும்.

(இ-புரை.) உமாமகேசுவர பூசாபலத்தைக்கேட்ட நைமிசாரணியமுனிவர்கள் சந்தோஷம் நிறைந்து திரிநேத்திரமுள்ள பரமசிவன் அருள்பெற்ற அடியார்கள் விரும்பி அணிந்துகொள்ளும் ருத்திராக்ஷமகிமையை விவரித்து மாறுபடுதலில்லாத குணத்தையுடைய சூதமுனிவரே சொல்லுமென்று வேண்டிக்கொள்ள, எ - று. (௧)

மக்களுணர்வைக்கொடுமதித்துணரவற்றோ
முக்கணிறைவற்கடிமைமுற்றினர்தரிக்கு
மக்கமணியின்பெருமையற்புதமிதென்றுத்
தொக்கமுனிவர்க்குமுனிசூதனுரைசெய்தான்.

(இ - புரை.) மனிதர்கள் உணர்ச்சியினால் மதித்து அறியத்தக்கதோ? திரிநேத்திரங்களையுடைய பரமசிவனுக்கு அடிமைத்தன்மை நிறைந்தவர்கள்தரிக்கும் ருத்திராக்ஷத்தின்பெருமை அற்புதமானதென்று சூதமுனிவர் கூட்டமாக இருக்கும் நைமிசாரணிய முனிவர்களுக்குச் சொல்லுவாராயினார். எ-று.

எத்தகையரேனுமிழிவெய்துதொழில்செய்யு
மத்தகையரேனுமுமையன்பனைவழுத்துஞ்

சித்தமிலரேனுமிறைசீர்மணிதரித்தான்
முத்தரவரென்றுமறைமுற்றுமுரைசெய்யும்.

(இ - புரை.) எத்தன்மை யுடையவர்களானாலும் இழிவான தொழில் செய்யுந்தன்மையுடையவர்களேயானாலும் பார்வதி நேசனைத்துதிசெய்யும் சித்த மில்லாதவர்களேயானாலும் பரமசிவனுடைய சிறப்புள்ள ருத்திராக்ஷம் தரிப்பார்களானால், அவர்கள் சீவன்முத்தர்களென்று வேதங்களெல்லாஞ் சொல்லுகின்றன. எ - று. (௩)

நம்பரமனின்பநயனந்தனிலுதித்தே
யும்பர்புகழக்கமணிபூணுமறிவுள்ளோ
ரம்புவியிடத்தில்வருபாவமுமறுத்தே
செம்பொனுலகத்தரனையொத்தினிதுசேர்வார்.

(இ - புரை.) நமது கடவுளுடைய திருநேத்திரங்களினின்றும் உண்டாகித் தேவர்களாற் புகழப்பட்ட ருத்திராக்ஷத்தைத் தரித்துக்கொள்ளும் விவேகமுள்ளவர்கள் இவ்வுலகில் நேரிடும் பாவங்களையெல்லாம் நீங்கித் தேவருலகத்திற் சிவனையொத்துச் சேர்வார்கள். எ - று. (௪)

என்கொனதிபற்பலவெதிர்ந்தடைவின்மூழ்க
லென்கொல்பரிவேள்விமுதலியாவையுமியற்ற
லென்கொலெழுகோடிவிதமந்திரமுமெண்ண
லென்கொறவமென்றுகனலந்திடையிருத்தல்.

(இ - புரை.) பலபல நதிகளிற் சென்று முழுகுவதினு லென்னபலன், அசுவமேத முதலாகிய யாகங்கள் செய்வதினாலென்னபலன், சத்தகோடி மகாமந்திரங்களைச் செபித்தலினு லென்னபலன், தவமென்று பஞ்சாக்கினி மத்தியிலிருப்பதினு லென்னபலன். எ - று. (௫)

இத்துணையுநல்குபலம்யாததனிலெண்கூ
றொத்தபலநல்குவதுருத்திரவிழிப்பேர்
சுத்தமணியென்றுரியதொல்லைமுனிவோராம்
வித்தகர்தரிப்பரிதில்வேறுபொருளுண்டோ.

(இ - புரை.) உருத்திராக்கமென்னும் அரியமணியானது நதிகளில் முழுகுதல் முதலாகச்சொல்லப்பட்ட இவைகளெல்லாம் கொடுக்கும் பலன்யாதோ? அதனினும் எண்மடங்கு அதிகமாகக்கொடுக்கத்தக்கது; என்று புராதனமுனிவர்களாகிய ஞானவான்கள் தரித்துக்கொள்வார்கள். ஆதலால் அந்த மணியினுஞ் சிறந்த பொருள் வேறொன்றுண்டோ? இல்லை. எ - று. (௬)

## வேறு.

ஆயமாமணியாயிரம்புனைந்திடிலவரை
மாயனுன்முகன்புரந்தரன்வானவர்முதலோர்
பாயுமால்விடைப்பரனெனப்பணிகுவரென்றாற்
றாயமாமணியிலைந்தவர்மனிதரோசொல்வீர்.

(இ - புரை.) அத்தன்மையுள்ள உருத்திராக்ஷமணிகளை ஆயிரம்அணிந்துகொள்வார்களானால், அவர்களை விஷ்ணு பிரமன் தேவேந்திரன் தேவர்கள்முதலானவர்கள் தாவிச்செல்லும் ருஷபவாகனரூடராகிய பரமசிவனென்று கருதி வணங்குவார்களென்றால், அந்த மணியைத்தரித்துக்கொள்ளுகின்றவர்கள் மனிதர்களோ சொல்லுங்கள். எ - று. (எ)

கடவுணன்மணிசிரத்தினுங்கரத்தினுங்களத்து
படருமார்பினுந்தோளினுங்காதினும்பகுத்து
மிடையுநல்விரலங்குட்டமதனிலும்விளங்க
வடைவினுலறிந்தணிபவர்சிவபதமடைவார்.

(இ-புரை.) அந்த உருத்திராக்ஷமணியைச் சிரசிலும் காதுகளிலும்கழுத்திலும் பரந்தமார்பிலும் தோள்களிலும் கைகளிலும் தரிக்கவேண்டிய தொகைப்படி வகுத்து, நன்மைதங்கிய அங்குஷ்டவிரலிலும்மணியவேண்டிய கிரமத்தையறிந்து தரித்துக்கொள்ளுகின்றவர்கள் சிவபதம் அடைவார்கள். எ - று.

பொங்குமாணிக்கமாதியமணியொடுபுணர்த்தித்
தங்கமாயறுதகட்டினிற்குயின்றனகலத்தி
னங்கண்மாநிலத்தரனக்கமணியினையணிவார்
பங்கயப்பதந்தொழுபவர்பவக்கடல்படியார்.

(இ - புரை.) விளங்குகின்ற மாணிக்கமுதலாகிய ரத்தினங்களுடன் சேராததுத் தங்கத்தகட்டினுற் செய்யப்பட்ட ஆபரணம்போல உருத்திராக்ஷமணியை இவ்வுலகத்திற் றரித்துக்கொள்ளுகின்றவர்களுடைய திருவடித்தாமரைகளைத் தொழுகின்றவர்கள் செனனசாகரத்தில் அழுந்தார்கள். எ - று. (அ)

அரனிடத்திலன்பற்றவரவனக்கமணியுந்
திருவெண்ணீறுமெய்தரிக்கிலாப்பாதகச்சிதட
ருரியவஞ்செழுத்துணர்கிலாநீசர்பேருலகிற்
கரமெனக்குறைனுமலிதானெனப்பவங்கழிப்பார்.

(இ - புரை.) பரமசிவனிடத்தில் அன்பில்லாதவர்களும் உருத்திராக்ஷமும் விபூதியுந் தங்கள்சரீரத்திற் தரித்துக்கொள்ளாதவர்களாகிய மூடப்பாவி

களும் மோக்ஷமடைவதற்குரிய பஞ்சாக்ஷரத்தை அறியாத தன்மையுள்ளவர்களும் இந்தப்பெரிய உலகத்திற் கழுதையாகவும் குரைக்கும் நாயாகவும் பிறந்து திறந்து செனனசேஷத்தைக் கழிப்பார்கள். எ - று. (௧0)

இந்துசேகரன்மணியக்கவலயத்திலேற்று
மந்திரந்தருபலத்தையித்துணையெனமதித்துப்
புந்தியாற்றெரிந்துணர்வதார்புனலிடைப்படிவோர்க்
கந்தநன்மணிப்படுபுனல்சிவகங்கையாமால்.

(இ - புரை.) சந்திரனைத் திருமுடியிலணிந்தருளிய பரமசிவனுடைய மணியாகிய உருத்திராக்ஷவடத்திலுற் செபிக்கத்தக்க மந்திரந்தருகின்ற பலனை இவ்வளவென மதித்துப் புத்தியினாற்றெளிந்து அறிகின்றவர்கள் யாவர்? நீரில் முழுகுமவர்களுக்கு உருத்திராக்ஷபரிசத்தோடு தம்மேல்விழுகின்ற நீர் சிவகங்கைத் தீர்த்தமாம். எ - று. (௧௧)

எண்ணுமோர்முகமாதியாயீரெழுமுகமு
நண்ணுநன்மணியவற்றிலோர்மணியினைநாடிப்
புண்ணியோர்கடாம்பூசனைமுறையினிற்புரியிற்
றெண்ணிலாமதிவேணியான்பூசையிற்சிறக்கும்.

(இ - புரை.) எண்ணுகின்ற ஒருமுகமுதலாகப் பதினான்கு முகமீறாக வுள்ள அம்மணிகளில் ஒருமணியினைக் கருதிப் புண்ணியர்கள் முறைமையுடன் பூசைசெய்தால், தெளிவாகிய நிலவினையுடைய பிறைமதியணிந்த பரமசிவன் பூசையாகவே சிறக்கும், எ - று. (௧௨)

இன்னதன்மையமணியினதியல்பெலாமெடுத்துப்
பன்னியோதிடிற்பங்கயன்முதலினோர்க்கமையா
தென்னில்யாவரேயதனிலைவிளம்புவாரெனினு
முன்னமந்தமாமணியினானிகழ்ந்தமைமொழிவாம்.

(இ - புரை.) இத்தன்மையுள்ள உருத்திராக்ஷத்தின் பெருமைகளையெல்லாம் எடுத்து விவரமாகச்சொல்லின் பிரமன் முதலானவர்களுக்கும் அமையாதென்றால் மற்றை யாவர் அதன்பெருமையைச் சொல்லத்தக்கவர்கள், ஆயினும் இந்த ருத்திராக்ஷத்தினால்ஆதியில்நடந்தசரித்திரத்தைச்சொல்லுகிறோம்.எ-று.

ஒல்குமாங்குயிலொளித்திடமயிலினமுவப்ப
வல்குறீர்ந்திடமழைமுகிலனுதினம்பொழிந்து
மல்குசீர்கெழுகாச்சியீரத்துக்குமன்னன்
பல்குசேனையான்பத்திரசேனனென்பவனே.

(இ - புரை.) மாமரத்திலிருக்கும் குயில்கள் சோர்வடைந்து ஒளிக்கவும் மயிலின் கூட்டங்கள் சந்தோஷிக்கவும் உஷ்ணக்குறைகள் நீங்கவும் மேகங்கள் அனுதினமும்பொழிந்து நீர்நிறைந்த சீர்தங்கிய காஸ்மீரதேசத்துக்கு அரசனும் மிகுந்த சேனையையுடையவனுமாகிய பத்திரசேனனென்பவன். எ-று, (கச)

கொற்றமன்னவனளித்திடுமரசிளங்குமரன்
செற்றநீங்குநற்றருமனென்றுரைத்திடுஞ்சேயுங்
கற்றபேரமைச்சன்றருகாளைதாருகனு
முற்றவேதநூன்முதலியகலையெலாமுணர்ந்தார்.

(இ - புரை.) வெற்றியுள்ள இவ்வரசன் பெற்றருளிய இளவரசாகிய குற்றம்நீங்கிய தருமனென்று சொல்லடபட்ட புத்திரனும் கற்றுணர்ந்து பெருமை வாய்ந்த மந்திரிபெற்ற புத்திரனாகியதாருகனென்னும் பெயரையுடைய வீரனும் வேதசாஸ்திரமுதலாகிய கல்விகள் முழுவதும் ஓதியுணர்ந்தார்கள். எ-று. (கரு)

அரசநீதியும்படைக்கலவிஞ்சையினமையும்
பொருவிலாவுருச்செவ்வியுமிளமையும்பொற்புந்
தருமஞானமுங்கருணையுந்தயாவொடுமாண்பு
மிருவராகிவேறிருநிலத்திலையெனவளர்ந்தார்.

(இ - புரை.) இந்தப்புத்திரர்கள் உருவத்தி லிரண்டு பேராகக் காணப்பட்டாலும் ராசநீதியும்-தனுர்வேதவிநோதப்பயிற்சியும் ஒப்பில்லாத உருவமும் ஆயுளும் இளமையும் அழகும் தருமமும் ஞானமும் கிருபையுந்தயவும் மாட்சியும் ஆகிய இவைகளில் வேற்றுமை யில்லையென்னும்படி வளர்ந்தார்கள். எ - று.

அன்னமைந்தர்களிருவரும்விலைவரம்பறியா
மின்னுநன்மணிக்கலன்களும்விரைநறுஞ்சாந்தும்
பொன்னின்மேனியிற்புனையலராகிவெண்பொடியு
மன்னுமக்கமாமணிகளுமேமுற்றும்வனைந்தார்.

(இ - புரை.) அத்தன்மையுள்ள புத்திரர்களிருவரும் விலையளவு அறியப்படாததும் பிரகாசிப்பதுமாகிய நல்ல ரத்னாபரணங்களும் வாசனைதங்கிய சந்தனமும் சௌந்தரியமுள்ள தங்கள் சரீரத்திற்றரித்துக்கொள்ளாதவர்களாய் விபூதியும் நிலைபெற்ற ருத்திராக்ஷமுமே சரீரமுழுவதும் அணிந்துகொண்டார்கள். எ - று. (கள)

அந்தமன்னனுமமைச்சனுமரிதினிலீன்ற
தந்தமைந்தரைத்தனித்தனியழைத்தினிதுரைத்துக்
கந்தநல்விரைத்தேய்வைகள்கலன்பலவளிக்கப்
புந்திவைத்திலர்மறுத்தனர்பொருவருநிலையார்.

(இ - புரை.) அவ்வரசனும் மந்திரியும் அருமையாகப்பெற்ற தங்கள் தங்கள் புத்திரர்களைத் தனித்தனியாக அழைத்து இனிதானவசனங்கள் சொல்லி வாசனையுள்ள நல்ல கூட்டுவர்க்கஞ் சேர்ந்த சந்தனமும் ஆபரணங்களுங்கொடுக்கவும், ஒப்புசொல்லுதற்கரியவர்களாகிய அந்தப்புத்திரர்கள் அவைகளில் விருப்பம்வையாமல் மறந்து விட்டார்கள். (௧௮)

பாலரின்னணமொழுகிடும்பருவத்திலாங்கண்
ஞாலமெங்கணும்பராசரனெனப்பெயர்நவிலுஞ்
சீலமாதவனெய்தலுஞ்சென்றெதிரிறைஞ்சி
யேலவேதகும்பூசைகளியற்றினனிறைவன்.

(இ - புரை.) அந்தப் புத்திரர்கள் இவ்வாறு நடந்துவருநாளில் ஒருநாள் உலகமெங்கும் பராசரரென்று சொல்லும்பெயருள்ள தவசீலராகிய முனிவர்வரவும் அந்தவரசன் எதிர்கொண்டு சென்று பணிந்து, அவர்மனதுக்குச் சந்தோஷமுண்டாகும்படித் தகுதியுள்ளபூசைசெய்து, எ - று. (௧௯)

அனையமாமுனிமனமகிழ்ந்தாசிகளியம்பக்
கனகவாசனத்திருத்துபுகாவலனிறைஞ்சி
யெனதுமைந்தனும்மைச்சர்கோன்மதலையுமிணங்கிப்
பனகமாமணிகுயிற்றியபணியெலாமிகழ்ந்தே.

(இ - புரை.) அந்தப்பராசரமுனிவர் மனமகிழ்ந்து ஆசீர்வசனஞ்சொல்ல, அரசன் அந்தமுனிவரைப் பொன்மயமான ஆசனத்தில் வீற்றிருக்கச்செய்து பணிந்து, என் புத்திரனும் மந்திரிகுமாரனும் ஒருவரைவிட்டொருவர் பிரியாத சினேகமுள்ளவர்களாய் நாகரத்தினம்பதித்த ஆபரணமுதலான பல ஆபரணங்களை யிகழ்ந்து, எ - று. எ - அசை. (௨0)

கைகொடுந்தொடார்கண்கொடுபார்த்திடார்கடிந்து
துய்யபூதியுஞ்சிவனக்கமணியுமே துலங்கு
மெய்யெலாமணிந்திருந்தனர்வினையமேதறியேன்
ஐயனேயெனக்குரையெனவருந்தவன்கேளா.

(இ - புரை) அந்த ஆபரணங்களைக் கையினுற் றொடாதவர்களாயும், கண்களாற் பாராதவர்களாயும், நீக்கிவிட்டுப்புனிதமாகிய விபூதியும் உருத்திராக்ஷங்களுமே சரீரத்தில் பிரகாசிக்கும்படித் தரித்துக்கொண்டிருக்கிறார்கள். அதன்காரணமின்னதென்று அடியேன் அறிந்திலேன்; ஐயனே! எனக்குச் சொல்லுமென, அந்த வார்த்தையைப் பராசரமுனிவர்கேட்டு, எ - று. (௨௧)

மண்டுதெவ்வமர்கடந்தவேன்மன்னவரேறே
பண்டிவர்க்குறுபிறவியிற்பழகியதொடர்பே

கொண்டடைந்தவிப்பிறப்பினுமங்நிலைகொண்டா
ருண்டுமேற்றதன்வரன்முறைகேளெனவுரைத்தான்.

(இ - புரை.) எதிரேற்றுவரும் பகைவருடைய போரைக்கடந்த வேலா யுதத்தையுடைய ராசசிங்கமே! பூர்வ மிவர்களுக்குப்பொருந்திய பிறப்பில் பழகிய தொடர்ச்சியைக்கொண்டு இப்போதுவந்த பிறப்பிலும் அந்தப்பழக்கத்தை விடாமலிருக்கின்றார்கள்; அதற்கொரு காரணமுண்டு; அந்தக்கிரமத்தைக்கேளென்று சொல்லுவாராயினார். எ - று. (௨௨)

மாடமாளிகைக்குடுமியின்முகிறவழ்மனையி
லாடரங்கினிலார்ந்தபொற்கொடிக்குழாமாட
லோடுமாமதிக்கறைதுடைத்திடுவபோலொளிருங்
கேடில்சீர்த்திகொள்பெரும்பதிவளநந்திக்கிராமம்.

(இ - புரை.) மாளிகையினுச்சியிலும், மேகந்தவழ்கின்ற வீடுகளிலும், நாடகசாலைகளிலும் கட்டியிராநின்ற பொற்கொடிக்கூட்டம் மேலே அசைகின்ற தோற்றமானது ஆகாயத்திற் செல்லுகின்ற சந்திரனுடைய களங்கத்தைத் துடைப்பதுபோல் பிரகாசிக்கவும் வளமைபெற்ற கெடுதலில்லாத சிறப்பினை யுடைய பெரும்பதியான வளப்பம் பொருந்திய நந்திக்கிராமமென்றொரு நகர முண்டு. எ - று. (௨௩)

அப்பெரும்பதிதன்னின்மானங்கையென்றறையுந்
துப்பெனச்சிவந்தொளிர்கனிவாயிளந்தோகை
யொப்பருந்தவப்பொதுமகளோவியர்தீட்டுந்
திப்பியத்துருவாருயிர்பெற்றெனச்சிறந்தாள்.

(இ - புரை) அந்தப்பெரிய நகரத்தில் மானங்கையென்னும் பெயரினை யும்பவளம்போலும் அதரத்தினையுமுடைய ஒருகணிகையானவள் சித்திரக்காரர் தீட்டியதிவ்வியமான பதுமை உயிர்பெற்றிருப்பதுபோலும் அழகிற்சிறந்திருந்த னள். எ - று. (௨௪)

மேவுபொன்மனைமுன்றில்வாய்வெள்ளிடையின்றாய்
வாவுமாப்படைவேந்தர்தமைந்தருமதிநூற்
காவன்மந்திரக்கிழவர்தங்கான்முளையவருந்
தூவுநீணிதியெட்டியர்குமரருந்தொகுவார்.

(இ - புரை.) யாவரும் விரும்பத்தக்க பொன்மயமான அவள் வீட்டின் முன்றிலினிடத்து வெள்ளிடையில்லாமல் தாவிச்செல்லுங் குதிரைப்படைமுதலாகியபடைகளையுடையராசகுமாரர்களும் மந்திராலோசனைக்குரிய சாஸ்திரங்கள் கற்றுணர்ந்த மந்திரிகளுடைய புத்திரர்களும் மிகுந்த திரவியங்கள்

கொடுக்கத்தக்க வைசியபுத்திரர்களும் கூட்டமாகச் சேர்ந்திருப்பார்கள். எ-று. எட்டியர் - வைசியர். (உரு)

நீணிதிப்பெருவண்மையிற்பெண்மையினிலமேற்
காணலாவதோர்திருமகளிவளெனக்கவினு
மாணிழைக்கொருகங்குலின்மருவுவாரளித்தா
லாணிதீர்ந்தபொன்னுயிரக்கழஞ்செனவறைவார்.

(இ - பொ.) மிகுதியாகிய திரவியமுள்ள வளப்பத்தினாலும் பெண்தன்மையினாலும் பூலோகத்திலெல்லாரும் பார்க்கும்படி வந்திருக்குந்திருமகளே யிவளென்று சொல்லத்தக்க சௌந்தரியமுள்ள அந்தக்கணிகைமாதுக்கு ஒரு ராத்திரி வருகின்றவர்கள் கொடுக்கும் உரையாணிவைத்துமாற்றுப்பார்க்க வேண்டுவதல்லாத உயர்ந்தபொன்தொகை ஆயிரங் கழஞ்சென்றுசொல்லுவார்கள். எ - று. ஒருகழஞ்சு - பத்துப்பணவிடை. (உசு)

நாளுமன்னவணறுமலர்விதிமுறைதூவி
வேளைவென்றகண்விமலனைவழிபடும்வேட
மாளுமன்பரையரனெனவருளொடுபணியுங்
கோளறிந்தெதிர்வறியவரிரவலர்கொடுக்கும்.

(இ - பொ.) அத்தன்மையுடையவள் நாள்தோறும் வாசனைதங்கிய மலர்களால் ஆகமவிதிப்படி அருச்சித்து மன்மதனைவென்ற நெற்றிக்கண்ணையுடைய பரமசிவனை ஆராதனைசெய்யும் திருவேடமுடைய அன்பர்களைக்கண்டு சிவனென உள்ளமுருகி வந்தனைசெய்வாள். இதுவுமன்றிக் குற்றம் நீங்கிய தரித்திரர்கள் யாசகர்வந்தால் அவர்களுக்குத் திரவியங்கொடுப்பாள். எ - று. (உஎ)

அறிவுகொண்டுயர்பொதுமகணடநவிலரங்கிற்
பொறிகொள்சேவலும்வானரக்குழவியும்பொருந்தத்
தறியினிற்பிணித்தரனக்கமணிபுனைதாமஞ்
செறிவுறுத்தவையிரண்டுக்குமெழில்பெறச்சேர்த்தி.

(இ - பொ.) மெய்யறிவு உடையவளாயுயர்ந்த அந்தக் கணிகையானவள் நடனஞ்செய்யும் நாடகசாலையில் புள்ளிகள் பொருந்திய சேவலும் வானரக்குட்டியும் பொருந்தத் தூணிற்கட்டி உருத்திராக்ஷமணிகள்கோர்த்தமாலையை அவ்விரண்டுக்கும் அழகுபெறத்தரித்து, எ - று. (உஅ)

வேறு.

வானரமுடன்பழகிவர்ரணநடித்தல்
கானமர்கருங்குழலிதோழியரொடுங்கண்

டானனம்வியர்ப்பநகைசெய்துவிளையாடித்
தானினிதமர்ந்துபலநாளுமளிசார்வாள்.

(இ - புரை.) வாளரக்குட்டியுடன் பழகிக் கோழி நடிப்பதை வாசனை தங்கிய கரிய அளகத்தையுடையவள் தோழிகளுடன்பார்த்து முகம்வேர்க்கும்படி நகைசெய்து விளையாடி, இனிதாக அமர்ந்து நாள்தோறும் அவைகளிடத்தில் தயையுடனிருப்பாள். எ - று. உக)

இன்னணநிகழ்ந்திடவிருந்தவண்மனைக்கண்
மின்னுசடிலப்பகவர்வேடநனிமேவிப்
பொன்னினுயர்பூதியொடுமக்கமணிபூணு
மன்னினன்மணிக்கடகமுன்கைவணிகேசன்.

(இ - புரை.) இவ்வாறு அன்புடனிருக்க அவள் வீட்டினில் பிரகாசியா நின்ற சடாமகுடத்தையுடைய முனிவர்வேடத்தைகுறைவறப் பொருந்திப் பொன்னிலுஞ்சிறந்த விபூதியும் ருத்திராக்ஷமுந் தரித்துக்கொண்டு ரத்தினகடகம்பொருந்திய கரத்தையுடைய வைசியதலைவனாகியஒருவன்வந்தான். எ-று.

கண்டனளெழுந்தனள்கலாமதிமுடித்தோன்
றொண்டனிவனென்றுமுறையோடுதொழுதெந்தாய்
மண்டலமதிக்கவடரிட்டுமணிதுற்றிக்
கொண்டகடகத்தின்விலைகூறுணாவென்றாள்.

(இ - புரை.) மானந்தையென்பவள் அவ்வணிகனைக்கண்டெழுந்துஇளந்திங்கள் அணிந்த சாம்பசிவமூர்த்தியினுடைய அடியாரிவரென்று முறைமையுடன் பணிந்து, என்னிறைவனே! இவ்வுலகத்தையெல்லாம் விலையாகமதிக்கும்படி பொன்தகடிட்டு மணிபதித்து அணிந்து கொண்டிருக்கும் ரத்தினகடகத்தின் விலை யாதோ எனக்குத் தெரியச்சொல்லென்றாள். எ - று. (௩௪)

சந்திரனெனத்திகழ்தனிக்குடைநிழற்கீழ்
வந்தமனர்முன்கையின்மணிக்கடகமியாவு
மிந்தவயிரக்கடகமொப்பதலவென்னக்
குந்தநகைவல்விகவர்வேட்கையொடுகூற.

(இ - புரை.) சந்திரனைப்போல விளங்குகின்ற ஒப்பற்ற குடையின்கீழ் வருகின்றமன்னவர் முன்கையில் அணிந்திருக்கும் ரத்தினகடகங்களெல்லாம் இந்தவயிரமணிக்கடகத்தை ஒப்பாகாதென்று இறகின் குருத்துப்போன்றநகையையுடையாள் வாங்கிக்கொள்ளும் விருப்பமுண்டாகும்படிச்சொல்ல; எ - று.

வல்லியுரைசெய்ததுமனத்துணர்குறிப்பு
நல்லவனுணர்ந்துநகையாடிமடநல்லா

யெல்லொளிமணிக்கடகமின்னவிலையென்னச்
சொல்லுவனதற்குநிதியீதறுணிவாயோ.

(இ-புரை.) அப்பெண்பதில்கூறியதும், அவள்மனதில் எண்ணியகுறிப்பும் வந்தவைசியன் அறிந்துகொண்டு நகைசெய்து, பெண்ணே! சூரியனைப்போலப் பிரகாசிக்கும் இந்தரத்தினகடகம் இன்னவிலையென்று சொல்லுகிறேன், நீ அதற்குப் பொருள்கொடுக்கத் துணியமாட்டுவையோ? எ - று. (௩௩)

என்றவனுரைத்தலுமிலங்கிழையியம்புங்
குன்றனையதோள்வணிககொங்கைவிலைகூறும்
புன்றொழிலினார்கள்பொருள்கொண்டுபொருணல்கி
னன்றவர்கள்பெண்மையவர்நன்னலமுநன்றே.

(இ - புரை.) இவ்வாறு வைசியன் சொல்ல மானங்கை சொல்லுகிறாள் மலைபோன்ற புசங்களையுடைய வணிகேசனே! தனங்களை விலைக்குவிற்கும் புன்றொழிலையுடையவர்கள் ஒருபொருளை வாங்கிக்கொண்டு அதற்கு விலையாகத்திரவியங் கொடுத்தால், அந்தப்பெண்களுடைய பெண்தன்மையும் இன்பமும் நன்றேயாகும்! எ - று. (௩௪)

வாழ்பொதுநலக்கணிகைமாதர்நெடுமாயன்
வீழ்தருகவுத்துவமும்விற்குநரெதிர்ந்தாற்
றாழ்கலவியிற்றழுவியேகவர்வதல்லாற்
சூழ்நிதிவிலைக்குதவறொல்லுலகிலுண்டோ.

(இ - புரை.) வாழ்கின்ற யாவர்க்கும் பொதுவாகிய இன்பத்தை யுடைய கணிகைமாதர்கள் மாயன்விரும்புகின்ற கவுத்துவமணியே யாளுலும் விற்பவர்கள் கொண்டுவந்தால, தங்கிய புணர்ச்சியினால் தழுவி வாங்கிக்கொள்ளுவதல்லது மிகுந்ததிரவியம் விலையாகக்கொடுப்பது பழமையாகிய இவ்வுலகத்திலுண்டோ? இல்லையல்லவா? எ - று. (௩௫)

அன்பினொடுகங்கணமெனங்கைதனிவிட்டான்
மூன்புதினமூன்றுனதுமுல்லைமடவாளி
னின்பமுறமெல்லணையில்யானணைவனென்று
மின்பொருவுநுண்ணிடைவிளங்கிழையியம்ப.

(இ - புரை.) இறைவனே! அன்புடன் இந்தக்கடகத்தையென்கையில்விட்டால், மூன்றுநாள்வரைக்கும் உனக்குரிய முல்லைமாலையணிந்தமனைவிபோல இன்பம் உண்டாகச் சயனத்தில் உன்னைநான் அணைவேனென்று மின்போலும் நுண்ணிய இடையையுடைய கணிகைசொல்ல; எ - று. (௩௬)

நன்குரைசெய்தாய்மணிசெய்நற்கடகமீவே
னென்குலமடந்தையினிசைந்ததினமூன்றும்
புன்கணிலையிற்பிறர்கள்போகநுகரோனென்
றின்கனிமொழிக்கணிகைசூளிடுதியென்றான்.

(இ - புரை.) கணிகைமாதே! நன்றாகச்சொல்லினை; இந்தக் கடகத்தை உன்கையிற் கொடுக்கிறேன், கொடுத்தால் எனக்குரியமனைவிபோலிருப்பதாக நீசொன்ன மூன்றுநாளும் சொன்னமொழிதவறி மற்றொருவர் போகத்தை அனுபவிக்கிறதில்லை யென்று ஒரு உறுதிவார்த்தையைச் சொல்லென்றான். எ - று. சூள் - சத்தியம். (௩௭)

வேறு.

புனிதவாணிகன்கூறியமொழிக்கவள்பொருந்தி
மனிதரேயன்றிவாசவன்றனிவண்வரினு
முனிவதன்றியேயணைகலேன்மூன்றுநாள்காறும்
பனிகொள்வேணியெம்பரன்றிருவாணையென்றிசைத்தாள்.

(இ - புரை.) நின்மலனாகிய அந்தவர்த்தகன் சொல்லிய வார்த்தைக்கு அவள் சம்மதித்து, மனிதர்களேயல்லாமல் தேவேந்திரன் இவிடத்தில் வந்தா லும் இந்த மூன்றுநாள் வரையில் நீக்கிவிடுவேனே யல்லாமல் நான் புணரேன்; குளிர்ச்சிதங்கிய சடைமுடியையுடைய சிவனது ஆணையின்படி யென்று சொன்னாள். எ - று. (௩௮)

என்னுமானந்தைதனக்கவனிருள்கெடவிமைத்து
மின்னுமாமணிக்கடகத்தைவிருப்பொடுநல்கிப்
பின்னுமீதொருமாணிக்கவிலிங்கநீபேணி
யன்னமேபுரந்தெனைக்குமீட்டளித்தியோவென்றான்.

(இ - புரை) என்று சொல்லிய மானந்தையென்பவளுக்கு வணிகன் இருள்கெட இமைக்கும் ரத்தினக்கடகத்தை விருப்பமுடன்கொடுத்து மறுபடி ஒருமாணிக்கலிங்கத்தைக்காட்டி அன்னம்போல்பவளே! இதைப்பத்திரமாக வைத்திருந்து மறுபடி யெனக்குக்கொடுப்பையோவென்றான், எ - று. (௩௯)

அணங்குசீர்மையளன்னதேசெய்வனென்றதனை
வணங்கிவாங்கித்தன்னுடகவரங்கினில்வைத்தே
யிணங்குமாலைவந்திறுத்தலுங்கணவன்மார்பிறுகச்
சுணங்குவாய்ந்தெழுவனமுலைச்சுவடுறத்தோய்ந்தாள்.

(இ - புரை.) தெய்வப்பெண்ணையொத்த தன்மையையுடைய மானந்தை யென்பவள் அப்படியே செய்கிறேனென்று சொல்லி, வணக்கஞ்செய்து அந்த

லிங்கத்தை வாங்கிக்கொண்டு தன்னுடைய நாடகசாலையினிடத்தில் வைத்து மாலைப்பொழுதுவந்தவளவில் தன்கணவனாகிய வணிகன்மார்பில் தேமலைப்பொருந்தி வளர்ந்திருக்கும் அழகிய தன் தனங்களின் தழும்புபொருந்தி யழுந்தப்புணர்ந்திருந்தாள். எ - று. (௪௦)

காமவேளுநல்லிரதியுமென்னவேகலந்து
தூமமல்கியசேக்கையிற்றுயில்கொளாநடுநா
ளியாமமெய்தியவேலையிலெரியழல்கதுவித்
தாமநான்றபொன்னரங்கினைமுருக்குவான்சமைந்தே.

(இ - புரை.) மன்மதனும் ரதியும்போலக் கலந்து வாசனைப்புகைகலந்த சயனத்தில் நித்திரைசெய்யும் அர்த்தராத்திரியான வேளையில், ரத்தினமாலைகள் கட்டிய பொன்னுலாகிய நாடகசாலை வேகும்படி தீயானது பற்றிக்கொண்டு,

மஞ்சுபோற்றவழ்புகையொடுபுலிங்கங்கண்மலியச்
செஞ்சிகைக்கணக்கதழெரிபறறுபுசெல்லத்
துஞ்சுமேல்வையிலிருவருந்துணணெனவிழியா
வஞ்சியோடினாரன்னமுஞ்சேவலுமென்ன.

(இ - புரை) அவர்கள்நித்திரைசெய்யும்போது மேகம்போலத்தவழ்கின்ற புகையுடன் தீப்பொறிகள் நெருங்கத் தக்கதாகச் சிவந்த சிகைகளைவிட்டெழுகின்ற அக்கினியானது அதிவேகமாகப்பற்றிக்கொண்டு வீடுமுழுவதும் எரிக்க, அவ்விருவருந் திடுக்கிட்டு நித்திரை நீங்கிப்பெட்டையன்னமும் ஆணன்னமும் ஓடுவதுபோலப்பயந்து ஓடினார்கள். எ - று. புலிங்கம் - தீப்பொறி. (௪௨)

ஓடும்வேலையினொண்டொடிபொருக்கெனத்திரும்பி
யாடுநாடகவரங்கினிலரங்மணியணிந்த
கோடுவாழ்சிறுகுரங்கொடுசெஞ்சிறைக்கோழி
நேடுவாளவைகண்டுறுபிணியினைநெகிழ்த்தாள்.

(இ - புரை.) அவ்வாறு ஓடும்போது மானந்தையென்பவள் விரைவில் திரும்பி கீர்த்தனஞ்செய்யும் நாடகசாலையில் இளைகளில்வாசஞ்செய்யும் (ருத்திராக்ஷந்தரிக்கப்பட்ட)குரங்குக்குட்டியினையும் சிவந்த உச்சிக்கொண்டையையுடைய கோழியினையுந் தேடிக்கண்டு கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்துவிட்டாள். எ - று. (௪௩)

பிணிநெகிழ்த்தலுங்குரங்குமச்சேவலும்பெயர்ந்து
கணவெரிக்குழாங்கதுவுறுமெல்லையைக்கடந்த
வணிகனல்கியவவிரொளிமாணிக்கலிங்க
முணருமுன்னமேநீறெழவெந்தொழிந்ததுவே.

(இ - புரை.) கட்டவிழ்த்து விட்டமாத்திரத்தில் குரங்கும் கோழியும் பற்றிக்கொண்டெறியுங் கூட்டமாகிய தீயிருக்கு மிடத்தைவிட்டு அப்புறம் போய் விட்டன. அந்தவர்த்தகன கொடுத்தமாணிக்க லிங்கமானது மானந் தைக்கு ஞாபகம் வருவதற்குமுன் வெந்துநீறாய்விட்டது. எ - று. (சச)

தூரமேவகின்றன்னது கண்டதொல்வணிக
ஞரிகாண்டியோநான்றருசிவலிங்கநாதன்
மூரிவெங்கனன்முருக்கிடச்சாம்பராய்முடியத்
தீருமின்றுறடென்வாழ்வெனத்துயரொடுசெப்ப.

(இ - புரை.) தூரமாகப்போய்நின்ற வர்த்தகன் மாணிக்க லிங்கம் வெந்துபோனதைப்பார்த்துப் பெண்ணே! நான் உன்கையிற்கொடுத்த சிவலிங்கப் பெருமான் பலமுற்றத்தீப்பற்றுதலால் வெந்து சாம்பலாய் விட்டதைக்கண்ட னையோ? ஆதலால், என்வாழ்நாளின்றே முடிந்து விடுமென்று துயரத்துடன் சொன்னான். எ - று. (சரு)

இறைவளைக்கையாலிணைமுலைக்குவட்டிடையெற்றி
மறுகிநம்பனேசங்கராவென்றுவாய்விட்டுக்
கறைதரித்தவேற்கண்ணினீர்கலுழியாயொழுக
வறிவழிந்தவளரற்றலும்வணிகனுமறைவான்.

(இ - புரை.) அதைக்கேட்ட மானந்தையானவள் வளையலணிந்தகைக ளால் இரண்டு தனத்தின்மேலும் மோதிக்கொண்டு, துயரமுற்றுநம்பனே! சங் கரனே! என்று வாய்திறந்து உதிரம்படியத்தக்கவேல்போன்ற கண்களில் ஆறுபோல நீர்பெருகும்படி அழுது அறிவழிந்து சோர்ந்துவிட்டாள்; அதைக் கண்டவணிகன் சொல்லுகிறான். எ - று. (சசா)

நரந்தவார்குழற்புணர்முலைநறுமலர்க்கொம்பே
யிரங்கலெம்மனோரித்துயர்வரினுயிர்க்கிரங்கா
ரரங்கிலென்சிவலிங்கம்வெந்தடலையாய்விடுமேற்
புரந்தராதியர்விலக்கினுமழலிடைப்புகுவேன்.

(இ - புரை.) மயிர்ச்சாந்தணிந்த நீண்ட அளகத்தையும் நெருங்கியதனங் களையுமுடைய நறிய பூங்கொம்புபோல்பவளே! நீ துயரப்படவேண்டாம்; எம் போலியருக்கு இவ்விதத்துன்பம் நேரிட்டால் உயிரைப்போக்கிக் கொள்வார்க ளேயன்றி, அதையெப்படிவிடுகிறதென்று இரங்கார்கள்; நாடகசாலையில்வைத் தஎன்சிவலிங்கம்வெந்து சாம்பராய் விடுமானால், தேவேந்திரன் முதலானவர் கள் வந்து விலக்கினாலுந் தீயில்விழுந்துவிடுவேன். எ - று. (சஎ)

மற்றுநீயொன்றுநினைகலையனலிடைமடியப்
பற்றுமிந்தனமடுக்கியேபடுகனல்வளர்க்கக்

கற்றையங்குழன்மடந்தைநீபணியெனக்கழறச்
சிற்றிடைக்கொடியுருமுவீழரவெனத்திகையா.

(இ - புரை) நீ வேறொன்றும் நினைக்காதே, தீயில்விழுந்து நானிறப்ப தற்கு உலர்ந்தவிறகுகளை யடுக்கி எரியுந்தீயை மூட்டும்படி நெருங்கிய அளகத்தையுடையவளே! நீ உத்தரவுசெய்யென்று வணிகன்சொல்லச் சிறிய இடையையுடையவளாய்க் கொடிபோன்ற மானங்கையானவள், யிடியுண்டநாகம் போற்றிகைத்து, எ - று. (௪௮)

வேண்டுநீணிதியளிக்குவேதியர்க்காற்றிப்
பூண்டமாவிரதத்தையும்வழுவறப்போற்றி
யாண்டகைப்பெருவணிகநீயழல்புகும்வண்ண
மீண்டுதீதறக்குரவராலியற்றுதியென்றாள்.

(இ - புரை.) யாதொன்றுக்கும் அஞ்சாத நிலைமையையுடைய வணிகேசனே! வேண்டிய திரவியங்கள் கொடுக்கிறேன், பிராமணர்களுக்குக் கொடுத்துச் செய்யத்தக்கவிரதங்களையும் பழுதறச்செய்து, இப்போது நீ தீயில்விழும்படி நேரிட்டகுற்றம் நீங்கத்தக்கதாகப் பெரியோர்களைக்கொண்டு பிராய்ச்சித்தஞ் செய்துக்கொள் என்றாள், எ - று. (௪௯)

நிலம்பொறுக்கலாச்செம்பொனுனிறைகுடிப்பிறந்தேன்
கலம்பொறுக்கலாநுசுப்பினுய்வறியர்போற்கருதிக்
குலம்பொறுக்கலாவிழிந்தசொற்கூறுதறவிர்ந்து
கலம்பொறுக்கலாக்கதழெரிவளர்த்திடச்சமைவாய்.

(இ - புரை.) பூமியுந் தாங்கமாட்டாத மிகுந்த பொன்னையுடைய குடியிற் பிறந்தேன், ஆபரணங்களைத் தாங்கமாட்டாத நுண்ணிய இடையையுடையவளே! நீ என்னை வறுமையாளர்போல நினைத்து எங்கள் குலம்பொறுக்காத இழிவான வார்த்தைசொல்லுவதை விட்டு இவ்வுலகத்தார் பார்த்துச்சகிக்கக் கூடாததானவேகமாய் மூளும் தீ மூட்டுவாயாக என்று வணிகன்சொன்னான், எ - று. (௫௦)

என்றுசீறியசுடுசொலால்வணிகர்கோனிசைப்பக்
குன்றுபோலுயர்கொங்கையாண்மறுப்பதுகொளாது
பொன்றுவானென்றுபொருக்கெனச்சிலதரைக்கூவித்
துன்றுமாரழலுவர்படுத்தியற்றுமினென்றாள்.

(இ - புரை.) இவ்வாறுகோபித்துச் சுடுசொல்லினால் வணிகேசன் சொல்லவே பொன்மலைபோல்வளர்ந்த தனத்தையுடைய மானங்கையானவள் தான்

தடுப்பதை யொத்துக்கொள்ளாமல் இறந்துபோவானென்று நிச்சயித்துக் கொண்டு ஏவலாளிகளை அழைத்து விறகுகளிட்டு விரைவாகத் தீமூட்டுங்க ளென்றாள். எ - று. (௫௧)

சிலதர்மானந்தைபணியினைத்தலைக்கொடுசென்றுங்
கலகிலாத்துவரடுக்கினராரழல்கொளுவி
யிலகுபோழற்சிகையெழவிழுதுபெய்குழிசி
பலவும்வீசினரெழுந்ததுகொழுங்கனற்படலம்.

(இ - புரை.) அந்த ஏவலாளிகள் மானந்தை கட்டளை யிட்டவார்த்தை யைச் சிரசிலேற்றுக்கொண்டுபோய், அளவில்லாத விறகுகள் அடுக்கித் தீமூட் டித் தீச்சிகைமேலோங்கும்படிக் குடங்குடமாக நெய்யை ஊற்றினார்கள். அப் படி ஊற்றின அளவில் கொடியதீயானது (கற்றைகற்றையாகச் சிகைவிட்டுக் கொண்டு) மேலோங்கிவளர்ந்தது. எ - று. (௫௨)

கண்டதாபதவணிகர்கோன்கடிபுனன்மூழ்கி
மண்டுதீயினைமும்முறைவலஞ்செய்துவணங்கித்
துண்டவான்பிறைமௌலியான்றிருவடிதொழுதே
யண்டகூடமட்டாவொலியெழவனற்குளித்தான்.

(இ - புரை.) அதைக்கண்ட வணிகமுனிவன் வாசனைதங்கிய நீரில் ஸ்நா நஞ்செய்து கொழுந்துவிட் டெரியுந்தீயை மூன்று பிரதக்ஷிணஞ் செய்து வணங்கி, இளம்பிறை யணிந்தருளிய சடாமகுடத்தையுடைய சிவபெருமான் திருவடிகளைத்தொழுது அண்டகூடவரையில் ஓசையெழும்படி அந்தத்தீயில் மூழ்கினான். எ - று. (௫௩)

வேறு.

இந்தவாறுகண்டுதுன்பமெய்திநின்றவேழையும்
பந்தமாயகேளிர்தம்முகம்பரிந்துபார்த்திவண்
முந்துமங்கியிற்படமுடிந்தநாய்கன்முன்னமே
தந்தகங்கணமிதற்கியைந்தவாறுசாற்றுகேன்.

(இ - புரை.) அந்தவணிகேசன் தீயில் முழுகினதைக்கண்டு துயரங்கொ ண்டுநின்ற மானந்தையானவள், தனக்குப்பந்தமாயிருக்கிற சுற்றத்தார்முகங் களைப்பார்த்து,கேளுங்கள் பந்துக்களே! இப்போது இத்தீயில் விழுந்து இறந்து போனவணிகேசன்கொடுத்தது இந்தக்கங்கணம்,இதைக்குறித்து நடந்தசெய்தி சொல்லுகிறேன். (௫௪)

இக்கடகநல்விலைக்குமூன்றுநாளியைந்துநின்
புக்கின்மேவுகற்பின்மாதுபோலவாழ்வனென்றியான்

றெக்காளிலாருயிர் துறந்துநாயகன்மாய்ந்ததா
லொக்கயானுமாரழற்குளிப்பதன்றியுய்கலேன்.

(இ - புரை.) இக்கடகம் பெறுமான விலைக்காக மூன்றுநாள்உனதுவாழ்க்கைக்குரிய மனைவிபோல உன்னுடன் நான் வாழ்கிறேனென்று சம்மதித்துக்கொண்டேன்; அந்தமூன்றுநாளுக்குள் வணிகேசன் உயிர்துறந்து இறந்ததினாலே, நானும் அவனுடன் இந்தத்தீயில்விழுந்து இறப்பதல்லது இனியுயிருடன்வாழேன். எ - று. (௫௫)

அன்னலிங்கமென்கையிலளித்தபோதுமற்றவன்
சொன்னதுண்டெனுவியாய்த்துணிந்துபோற்றிவையென
வென்னைபாவியேன்பிழைத்தவாறிலிங்கம்வெந்ததாற்
றன்னைநேரிலாதசைவநாய்கன்சாதன்மேயினான்.

(இ - புரை) அந்தச்சிவலிங்கத்தை வணிகேசன் என்போது இது என் உயிர்போலிருப்பது ஆகையால், பத்திரமாகக்காத்துத்தருவாயென்று சொன்னதுண்டு, அப்படியிருக்கப் பாவியாகிய நான் மதிமோசம் போனேனே, இது என்னகாரணம், சிவலிங்கம்வெந்துபோய்விட்டபடியால், தனக்கொப்பில்லாத சைவசமயப்பத்திமையுள்ள அவ்வணிகேசன் இறந்துபோனான்.

என்னிமித்தமாகவந்தநித்துணையுமாதலால்
வன்னியிற்குளிப்பதன்றிவாய்மைபொய்த்துவாழ்வனோ
முன்னுரைத்தவாகமம்புராணம்வேதமுதலவாய்ச்
சொன்னசொன்னயாவையுந்தொகுத்தவுண்மையல்லவோ.

(இ-புரை.) இத்தனைகாரியமும் என்னிமித்தம் நேரிட்டதாகையால், தீயில் விழுவதல்லது சொன்னசொல்தவறி உயிர்வாழ்கிலேன்; சொன்னசொல் தவறலாகாதென்று நம்முடைய ஆண்டவனால் சொல்லப்பட்ட ஆகமங்கள்புராணங்கள் வேதங்கள்முதலாகிய எல்லாவற்றிலும் விதித்திருக்கிறஉண்மையல்லவோ?

வேலைவேலையுள்ளடங்கிமீதுயர்ந்துநிற்பதுங்
காலைமாலைபானுவெண்கலாமதியுதிப்பது
ஞாலமாதிபூதமைந்துநண்ணியென்றுநிற்பது
மாலகாலமுண்டவீசனுண்மையன்றியாகுமோ.

(இ - புரை.) சமுத்திரமானது கரைக்குள் அடங்கி மேலுயர்ந்து நிற்பதும், காலைமாலைகளில் முறையாகச் சூரியசந்திரர்கள் உதிப்பதும் பிருதிவிமுதலாகிய பஞ்சபூதங்கள் பொருந்தி எப்போதுமிருப்பதும் ஆலகாலம் உண்ட பரமசிவனுடைய ஆக்கினையன்றி உண்டாகாதாதலால், எ - று. வேலை-கரை.

வாய்மைதப்பினோர்களிந்தமாநிலத்திலீனராய்த்
தீய்மையுற்றுமேலுளோர்பழிக்கவேதிரிந்துபின்
றூய்மையற்றகும்பியுட்டுளாந்தழுங்குவாரெனு
வாய்மனுபபகர்ந்தவேதசாகைமுற்றுமறையுமே.

(இ - புரை.) உண்மை தவறியவர்கள் இவ்வுலகத்தில் ஈனர்களாய்ப்பாவத்தை அடைந்து பெரியோர்கள் பழிக்கும்படித்திரிந்து, பின்பு தூய்மையற்ற கும்பிபாகமென்னும் நரகத்தில்விழுந்து, வருந்துவார்களென்று வாய்மையுற்ற மந்திரங்களை பகர்கின்ற வேதமுழுதுஞ் சொல்லுகின்றன. எ - று. (௫௯)

ஆதலாலெனைக்குறித்தழுங்குமாறடாதென
மாதராடெருட்டியீட்டுமாநிதிக்குவையெலாம்
வேதவேதியர்களுமாவிரதியாக்கும்வறிஞராய்ப்
போதுநர்க்குமகமகிழ்ந்துபோதுமென்னநல்கியே.

(இ - புரை.) ஆகையால், என்னைக்குறித்து நீங்கள் வருத்தப்படவேண்டாதென்று மானர்தை தன்சுற்றத்தார் தெளியும்படி சொல்லித் தான்சம்பாதித்த திரவியங்களையெல்லாம் வேதமோதியபிராமணர்களுக்கும், பெரிதாகியவிரதங்களை அனுஷ்டிக்கும் தபசிகளுக்கும், ஏழைகளாய் வருபவர்கட்கும் போதுமென்னுமட்டும் வெறுக்கக்கொடுத்து, எ - று. (௬௦)

மோனமாகிநீரின்மூழ்கிமுப்புரத்தைவென்றசிர்
ஞானநாதனடிவணங்கிநல்லழற்பிழம்புறுந்
தானமேவலங்கொடெய்திவீழுமெல்லைதன்னிலே
வானிலாமுடித்தவேணிவள்ளலவந்துதோன்றினன்.

(இ - புரை) மௌனவிரதங்கொண்டு ஒருவருடனும் பேசாமல் நீரில் ஸ்நாநஞ்செய்து திரிபுரதகனஞ்செய்த மெய்ஞ்ஞான சொரூபியாகிய பரமசிவனுடைய திருவடிகளை வணங்கி நல்ல தீப்பிழம்பைப்பிரதக்ஷிணஞ்செய்து அக்கினிக்குண்டத்தில் விழப்போகும் சமயத்திலே இளந்திங்கள் அணிந்த சடைமுடியையுடையகயிலாசபதியானவர் தரிசனமானார். எ - று. (௬௧)

கொன்றைதுன்றுவேணியுங்குளிர்ந்தவைந்துவதனமுங்
கன்றனீலகண்டமுங்கரசரோருகங்களு
மின்றிரிந்தமேருவாய்விளங்குதோளுமுந்தியுந்
துன்றுதாளுமுன்புகண்டுதோகைவீழ்ந்திறைஞ்சினள்.

(இ - புரை.) கொன்றைமாலை யணிந்த சடாமகுடமும், குளிர்ச்சியுள்ள ஐந்துதிருமுகங்களும், கறுத்தகாளகண்டமும், செந்தாமரைமலர்போன்ற திரு

அத்தங்களும், ஒளிகொண்ட பொன்மலைபோல விளங்குந் திருப்புசங்களும், திருவுந்தியும் பொருந்திய திருவடிகளுந் தரிசனமாகக்கண்டு மானந்தையென் பவள் பூமியில்விழுந்து பணிந்தாள். எ - று. (௬௨)

மங்கைநீகனற்குள்வீழ்தலொழிதிநின்மனத்தினிற்
றங்குமுண்மையுணருவான்சமைந்துபொன்செய்கடகமோ
டிங்குவந்துமளவளாயெரிக்கண்வீழ்ந்தவணிகன்யான்
கங்குல்வாய்த்துணிந்துநின்றகருமநன்றுநன்றரோ.

(இ - புரை) அவ்வாறு சேவித்து நிற்பவளைப்பார்த்து, அடியாளே! நீ தீக்குள்விழுவதை நீங்கு, உன்மனதிற் பொருந்திய மெய்யன்பினை யிவ்வுலகத் தாருக்குத்தெரிவிக்கும்பொருட்டுப் பொன்னாற்செய்யப்பட்ட கடகத்தினுடன் இவ்விடத்துக்குவந்து உன்னுடன் அளவளாவித் தீயில்விழுந்தவணிகன்நாமே. இந்த ராத்திரியில் நீ தீயில்விழும்படி நிச்சயித்தகாரியம் மிகவும் நன்று நன்று.

பொதுமடந்தைமார்கடேடுபொருளினசைநீங்கியே
மதியிலங்குநுதலிநின்னில்வாய்மைபேணவல்லரோ
வதிசயம்புவிக்கணீதுபுதிதுகண்டறிந்தனங்
கதிதெரிந்துபெறுபதத்தில்விழைதலேதுகழறுவாய்.

(இ - புரை.) பிறைபோல் விளங்கிய நெற்றியையுடையவளே! பொது மகளாயிருப்பவர்கள் பொருளாசையைவிட்டு உன்னைப்போலச் சத்தியத்தைக் காப்பாற்றுவார்களோ? இவ்வுலகத்தில் இது அதிசயமானகாரியம்; நவமாகக் கண்டறிந்தோம்; நீ அடையவேண்டியபதவியெதுவோ அதைவிரும்பியவண் ணஞ்சொல்லுவாயாக. எ - று. (௬௩)

வேறு.

என்றுபரமனியம்புமதுகேட்டுக்
குன்றுமரனுங்குழைந்துருகக்கோற்றொடியா
ணின்றுதொழுதுநிமலாநினதடியே
னொன்றுமறியேனுரைப்பதுளங்கொள்ளேன்.

(இ - புரை.) இவ்வண்ணம் பரமசிவன் அருளிச்செய்த திருவாக்கினைக் கேட்டு மலைகளும் மரங்களும் நின்றுருகும்படி மானந்தையென்பவள்எழுந்து தொழுது, நிருமலனே! உன்னடியவளாகிய நான் ஒன்றுமறியாதவள்; இன்ன வாறு உன்னைத்துதிப்பதென்பதும் அறியேன். எ - று. (௬௫)

தேவரேயாதித்திரிபுவனத்துள்ளோர்க
ளேவரேவாழும்பதமுமினிவேண்டேன்
மூவரேயாகிக்குணமூன்றாய்முத்தொழிற்குங்
காவலேயாகிக்கடந்துநின்றகாரணனே.

(இ - புரை.) தேவர்கள்முதல் திரிலோகத்தி லிருப்பவர்களில் எவர்கள் வாழும் பதவியும் யான் இனிவேண்டேன்; திரிமூர்த்திகளாகியும் முக்குணங்களாகியும் முத்தொழிற்கும் காவலாகியும் இவைகளையெல்லாங்கடந்த, காரணனுமிருக்கும் ஆண்டவனே! எ - று. (சுசு)

அன்புற்றெனதுகிளைஞரனைவோருந்
துன்பக்கடலுட்டுளையாதெனைப்போல
வின்பச்சிவபதத்தையெய்தியினிதாக
வன்புற்றுனதடிக்கீழ்வாழவருளென்றாள்.

(இ - புரை.) சுவாமீ! அடியாள் தேவர்கருணைக்குப் பாத்திரமாகிறதோடு, அள்புள்ள என் சுற்றத்தார் எல்லாரும் துக்கசாகரத்தில் முழுகாமல் அடியேனைப்போலப் பேரின்பமுள்ள சிவலோகத்திற்சேர்ந்து இன்பமுடன் எக்காலமும் ஒரேதன்மையாக வாழும்படிக் கிருபைசெய்யவேண்டுமென்றாள். எ - று.

கோட்டுவிடையமர்ந்தகோமான்குயின்மொழியாள்
கேட்டவரமனைத்துமீந்தோமெனக்கிளத்தி
யீட்டுபெருங்கிளைஞரெல்லோரொடிவள்போய்
வீட்டுநெறிப்பேரின்பமேவப்பணித்தகன்றான்.

(இ - புரை.) கொம்பினையுடைய ருஷபவாகன ஆரோஹணரான பரமசிவன் மானங்தைகேட்ட வரமெல்லாங் கொடுத்தோமென்று திருவாய்மலர்ந்தருளி, சுற்றத்தாருடன்பேரின்பவீட்டிற்போய்ச்சேரும்படி அருளிச்செய்து, கயிலையங்கிரிக்கு எழுந்தருளினர். எ - று. (சுஅ)

ஆடரங்கைத்தீமுருக்கும்வேலையணங்கனையாள்
கூடுபிணிநெகிழ்த்தவானரமுங்கோழியும்போய்
நீடுபலகாலகிலவலயத்தேயிருந்து
வீடுகுரங்குகண்டாய்வேந்தேநின்கான்முளையே.

(இ - புரை.) நாடகசாலையைத் தீபற்றி யெரிக்குங்காலத்தில், தெய்வப்பெண்ணையொத்த மானங்தையானவள் கட்டவிழ்த்துவிடவே குரங்குங்கோழியும் போய் நெடுங்காலம் இவ்வுலகத்தி லிருந்து இறந்துபோன குரங்குதான் உன்புத்திரன். எ - று. (சுகூ)

சோரிபொடித்தனையகுட்டெழில்கொள்வாரணங்காண்
சீரியசொற்றேருமமைச்சன்சிறுவனிவர்
பாரிலவிதரித்தும்பண்டுடையவாதனைகாண்
பேரியலிணக்கமணிபூதிபெற்றணிந்தார்.

(இ - புரை.) உதிரம்பொடித்ததையொத்தஉச்சிக்கொண்டையையுடைய கோழிதான்சிறப்புள்ள சாத்திரங்கள் உணர்ந்த மந்திரிகுமாரன், இவர்களிருவரும் பூலோகத்திற்பிறந்தும், பூர்வவாசனையினால் பெரிதானமுறைமையுடன் ருத்திராக்ஷமும் விபூதியும் விரும்பி யணிந்தார்கள். எ - று. (எ0)

முன்னையிறந்தபிறப்பின்முதல்வன்மணி
தன்னையணிந்ததபோபலத்தின்றன்மையான்
மன்னர்தொழுமன்னவுனக்குமதலையுமாய்க்
கன்னிமதியமைச்சன்கான்முளையுமாயினரே.

(இ - புரை.) மன்னர்தொழும் மன்னனே! முன்னீங்கிய பிறவியில் பரமசிவனுடைய மணியாகிய ருத்திராக்ஷத்தைத்தரித்த தபோபலத்தினால், உனக்கும் நன்மதியையுடைய அமைச்சனுக்கும் குமாரர்களானார்கள். எ - று. (எக)

காலையிளைஞரிருவோருநீண்ணுதலோன்
றாளைநெடுநாட்டணவாதருச்சித்து
வாளையுகளும்வளநாடினிதாண்டு
வேளையெரித்தோனருளால்வீட்டின்பமெய்துவரால்.

(இ - புரை.) இந்த இரண்டுபுத்திரர்களும் பரமசிவனுடைய திருவடிகளை இடைவிடாமல் நெடுநாள் பூசித்து வாளைகள் குதிக்கும் நீர்வளமுள்ள இந்தத்தேசத்தை யின்பமுடன் ஆண்டு,காமதகனராகிய பரமசிவனுடைய திருவருளினால் மோக்ஷம் அடைவார்கள். எ - று. (எஉ)

ஈங்கிவர்கள்முன்னையியல்புமியன்றதுவு
மாங்கதனின்எய்யபயனடைந்ததுவுந்
தீங்கறநாங்கூறினேந்தேர்வேந்தேநின்மனத்தி
லோங்குவிழைவால்வினவலுண்டேலுரையென்றான்.

(இ - புரை.) இவ்விருவருடைய முற்பிறப்பின் றன்மையையும் அப்போது நடந்ததையும் அதனால் அடையவேண்டிய பயனை யிப்போது அடைந்ததையும் குற்றமற நாம் உனக்குச்சொன்னோம். தேரையுடைய அரசனே! உன் மனதில் மிகுந்தவிருப்பத்தினால் இன்னம் ஏதாவது கேட்கவேண்டியதிருந்தால் சொல்லென்று பராசரமுனிவர்சொன்னார். எ - று. (எங)

இருபதாவது

உருத்திராக்ஷமகிமையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௲௱௫௨.

உ

சிவமயம்.

## இருபத்தொன்றுவது

# சீருருத்திரமகிமை உரைத்த அத்தியாயம்.

என்னமுனிசூதனினிதியம்பிமாதவத்தீர்
மன்னர்மன்னன் மீட்டுமெந்தமாதவனைத்தாள்போற்றிப்
பன்னிவினவுவதுகேட்டுப்பராசரனுர்

(இ - புரை.) இவ்வாறு சூதமுனிவர்சொல்லி நைமிசாரணிய முனிவர்களே! அவ்வரசனானவன் பராசரருடைய பாதங்களிற்பணிந்துதுதித்து வினவுதலைக்கேட்டு மேலும் அவர்சொல்லிய சிவசரித்திரத்தைக் கேளுங்களென்று சொன்னார். எ - று. (க)

வேறு.

ஓங்கியபேருவகையினாலுடனெழுந்துமன்னவர்கோன்
றேங்கமழுநறுந்தெரியன்முடிதாழச்சென்றிறைஞ்சிப்
பூங்கமலத்தயனனையபுகழ்முனியேநின்னருளாற்
றுங்கரியமனமாயைதணந்தறிவின்றலைநின்றேன்.

(இ - புரை.) மிகுந்த சந்தோஷத்தையுடைய அவ்வரசன் பராசர முனிவருடைய பாதங்களில் தன்வாசனைகமழும் பூமாலையணிந்த மகுடம் படும்படி பணிந்து, பிர்ம்மதேவனையொத்தபுகழுள்ள முனிவரே! தேவரீருடைய கிருபையினால் தாங்குதற்கரியமனமாயைநீங்கி அறிவினிடத்தில் நின்றேன். எ-று. (உ)

மைந்தன்வரலாறனைத்துங்கேட்டுமனமகிழ்ந்தேன்
கந்தனனையவிளங்காளையினிக்காசினியை
யெந்தவகைபுரப்பான்வாழ்நாண்மற்றெத்துணையுண்
டந்தமுறைதானுமடியேற்கருள்கென்றான்.

(இ - புரை.) சுவாமிகளே! என்புத்திரனுடைய வரலாறெல்லாங்கேட்டு மனமகிழ்ந்தேன்; சிவசுப்பிரமணியக்கடவுளையொத்த இவ்வாலிபன் இனி எவ்விதமாக உலகத்தை யாளுவான்? ஆயிசு எவ்வளவிருக்கின்றது? அதை விபரமாக அருளவேண்டுமென்றான். எ - று. (ங)

செம்பொன்முடிக்குரிசில்கேட்டியதுசெப்பினாற்
கம்பமுறநெஞ்சங்கலங்கித்துயருழப்ப

ரும்பர்முதலோருமென்று லுனக்கெய்தும்
வெம்புகொடுந்துயரம்யாரேவிலக்கிற்பார்.

(இ - புரை.) பொன்னாற்செய்யப்பட்டமகுடந்தரித்த அரசனே! சொல்லுகிறேன்கேள், என்னவெனில், அதைச்சொன்னால் தேவர்முதலானவர்களும் நடுக்கமுண்டாக மனங்கலங்கித்துயரம் அடைவார்களென்றால், உனக்கு நேரிடும் கொடியதுயரத்தை யார்விலக்குவார்கள்? எ - று. (௪)

எவ்விடருஞ்சாராவிறைவனருள்பெற்றமையாற்
செவ்வடிவேல்வேந்தேயான்செப்புகேனின்புதல்வ
னவ்வியமொன்றில்லாதானீரிரண்டாண்டின்றடைந்தான்
கவ்வையுறலின்றுமுதலோரேழ்தினங்கடந்தால்.

(இ - புரை.) பரமசிவனுடைய திருவருள் கிடைத்திருப்பதினால்யாதொரு துன்பமும்நேரிடாது; வேலேந்திய அரசனே! யான்சொல்லுகிறேன், உன்புத்திரன்பாபமென்பது சிறிதுமில்லாதவன்; இப்போது பன்னிரண்டுவயதுள்ளவனாயினன்; துன்பம் அடையாதே இன்றுமுதல் ஏழுநாள்கடந்தால், எ - று. (௫)

சாவதுவேதிண்ணமெனமுனிவன்சாற்றுதலு
மேவுபடச்சாயுமிகலரிமானேறுபோற்
காவலன்மேதினிமேல்வீழ்ந்துகடைக்கண்முத்தந்
தூவநிலையில்லாத்துயர்க்கடலுண் மூழ்கினான்.

(இ - புரை.) இறப்பது நிச்சயமென்று முனிவன் சொல்லவும், அம்புபட்டமாத்திரத்தில் விழுந்து விடுஞ் சிங்கம்போல அரசன் பூமியில்விழுந்துகடைக்கண் நீர்த்துளியைச் சிந்தும்படி நிலைபடாத் துயரக்கடலில் ஆழ்ந்தான். எ-று.

தாங்கிமுனிவனெடுத்துத்தராபதியை
வீங்குதுயர்மாற்றிவிழிநீரறநீவி
௬ யோங்குபொலன்கரத்துற்றநறுந்தெண்ணீரை
வாங்கிமுகங்கழீஇவந்ததுயர்நீக்கினான்.

(இ - புரை.) துக்கசாகரத்தில் முழுகிய அரசனைப் பிராசரமுனிவர் தாங்கியெடுத்துத் துயரம்நீக்கிக் கண்ணீரைத்துடைத்து மாற்றுயர்ந்த பொன் கரகத்திலிருந்த தெளிவுள்ளநீரைக் கையில் வார்த்துக்கொண்டு, அவ்வரசன் முகத்தைக் கழுவி, நேரிட்ட துயரச்சோபத்தை நீக்கினர். எ - று.

ஊழ்வினையுருத்தகாலத்துறுதவத்தீன்றநற்றாய்
வீழ்முலைசுரந்தபாலுமுண்டபின்வெய்யநஞ்சா

மாழ்கடற்பிறந்தநஞ்சுமுண்டபினமிர்தமென்றால்
வாழியமாந்தரெல்லாமிருவினைவயத்தர்மன்ஞே.

(இ - புரை.) அரசனே! ஊழ்வினை சம்பவித்தகாலத்தில் மிகுந்த தவத்தினால் பெற்ற தாயின் மூலையினின்று சுரந்தபாலும் உண்டபின் கொடிய நஞ்சு போலாகும்; நல்வினையுற்றகாலத்தில் ஆழ்ந்தகடலில் உண்டாகிய விஷமும் உண்டபின் தேவாமிர்தம்போலாகும் என்றால், மனிதர்களெல்லாம் இருவினை வசப்பட்டவர்களே. எ - று. வீழ்பால் - விரும்பப்பட்டபால். (அ)

இன்பம்வந்துற்றகாலையிருங்களியெய்தருனுந்
துன்பம்வந்துற்றகாலத்துயருழந்தழுதருனு
மன்பதைபுரக்கும்வேந்தேயறிவிலார்மாட்சிநல்லோர்
துன்பமுமின்பந்தானுந்தொல்வினைத்தொடர்ச்சியென்பார்.

(இ - புரை.) மனிதரைக்காக்கும் அரசனே! இன்பம்வந்து பொருந்தின காலத்தில் மிகுந்த சந்தோஷத்தை அடைவதும், துன்பம்வந்து பொருந்தின போது துயரப்பட்டு அழுவதும், அறிவில்லார்செய்கை; அறிவுள்ளவர்கள் சுகதுக்கங்கள் பழவினைத் தொடர்ச்சியென்பார்கள். எ - று. (௯)

ஆதலால்வருந்தல்கேட்டியருபியாயமலனுகிச்
சோதியாய்நின்றவீசன்சுவேச்சையாங்குணங்கண்மூன்று
ளோதுராசதத்திலாதிவிரிஞ்சனையுதிப்பித்தன்றே
வேதநூலனைத்துமந்தவிரிஞ்சனுக்கமைத்துப்பின்னும்.

(இ - புரை.) ஆகையினால் அரசனே! நீ வருந்தாதே. நான் சொல்வதைக்கேள். அருபியும், நிர்மலனும், சோதியுமாய் நின்ற பரமசிவன் தன்னுடைய சுவேச்சையாகும் முக்குணங்களுக்குளொன்றாகிய ராதசகுணத்தில் பிரமதேவனைச் சிருஷ்டித்து வேதசாத்திரங்களையெல்லாம் அந்தப் பிரமதேவனுக்கு அப்பொழுதே அருளிச்செய்து பின்னும், எ - று. (௧0)

வேறு.

மாசிலாஞானமாயணுக்கள்வாழ்வதாய்க்
கூசிலாவுபநிடதத்தின்கண்ணதாய்ப்
பாசமாய்த்திடுபசுபதியைப்பற்றிடு
மாசில்சீருருத்திரவத்தியாயமும்.

(இ-புரை.) அழுக்கில்லாத ஞானமாகியும், உயிர்கள் வாழ்வுபெறத்தக்கதாகியும், குற்றமில்லாத உபநிடதத்தினிடத்ததாகியும், ஆணவமலத்தைக் கெடுத்தருளாநின்ற பசுபதியைப்பற்றிய பழுதில்லாத சீருருத்திர அத்தியாயமும் எ-று. உபநிடதங்கள் - ௱௨. (௧௧)

அருளினனகத்திடையறிந்தநான்முகன்
றெருளுறவுலகமீரேழுஞ்செய்தபி
னிருளறுத்துலகங்களுய்யவெண்ணியே
பொருடருவேதங்கள்புகலுங்காலையில்.

(இ - புரை.) அருளிச்செய்தார். அவைகளை மனதுக்கு ளறிந்த பிர்ம்ம தேவன்தெளிவுபொருந்தப் பதினாலுலோகமும் சிருஷ்டித்தபின்பு, இவ்வுலகத்திலிருப்பவர்கள் அஞ்ஞானத்தைநீங்கிக் கடைத்தேரவெண்ணிப் பொருள்தங்கிய வேதங்களைச் சொல்லும்போது, எ - று. (கஉ)

நாற்றிசைமுகத்தினுநான்குவேதமுந
தோற்றுநாட்டென்றிசைமுகத்திற்றோற்றிய
வாற்றல்சாறயித்தியமதனிறைப்பனை
யேற்றசீருருத்திரமெழுந்துதோன்றிற்றால்.

(இ - புரை.) நான்குதிசை முகங்களிலும் நான்கு வேதங்களும் உண்டான நாளில் தென்றிசைநோக்கிய முகத்தில் தோன்றியமகிமை மிகுந்த தைத்திரிய வேதத்தின்மத்தியில் மேன்மையுள்ள சீருருத்திரமந்திரம் உண்டாயிற்று. எ - று. தத்திரியென்னும்பக்ஷியுண்டுமகிழ்ந்தமையால் தைத்திரியமென்றாயது. எ - று. (கங)

அத்தகைமந்திரமரீசியாதியாம்
வித்தகமுனிவரர்விரும்பிக்கற்றுட
னுத்தமவுலகிடைமுனிவர்க்கோதிடத
தத்துவமறையவர்தாமுங்கற்றனர்.

(இ - புரை.) பெருமைபொருந்திய அந்தமந்திரத்தை மரீசிமுனிவர்முதலாகிய ஞானமுள்ளமுனிவர்கள்விரும்பி, உணர்ந்து,உடனே இவ்வுலகத்திலிருக்கும் உத்தமமுனிவர்களுக்கு உபதேசஞ்செய்யத் தத்துவமுணர்ந்த அம்முனிவர்களும் தெரிந்துகொண்டார்கள். எ - று. (க௪)

ஆர்வுறுபாவமாமழனற்கோடையாற்
பார்மிசைமானிடப்பசும்புல்வாடுத
றீர்தருபிரணவமின்னுச்சேர்ந்துபெய்
கார்மழையொத்ததிக்கடவுண்மந்திரம்.

(இ - புரை.) நிறைந்த பாவமாகிய வெதுப்புகின்ற கோடையால் இவ்வுலகத்திலிருக்கும் மனிதர்களாகிய பசியபுற்கள்வாடுதல் நீங்கும்படி,பிரணவமாகிய மின்னலைச்சேர்ந்து பொழிகின்றமேகத்தையொத்தது தெய்வீகம்பொருந்திய இம்மந்திரம். எ - று. (கரு)

மற்றொருதவங்களேன்மந்திரங்களேன்
சிற்றியல்விரதமேன்வேள்விச்செய்கையேன்
சுற்றியமலங்களைத்துடைத்துமுத்தியைப்
பெற்றிடவளிப்பதோர்பிரமமீதரோ.

(இ - புரை.) இம்மந்திரமிருக்க வேறொருதவங்களேன்? மந்திரங்களேன்? சொற்பப்பயனைத்தருகின்ற விரதங்களேன்? யாகத்தொழிலேன்? பிறவிதோறுந் தொடர்ந்துவருகிற மும்மலங்களைநீக்கி மோக்ஷத்தைப் பெறும்படி கொடுக்கும் பரமசிவம் இதுவேயாம். எ - று. (௧௬)

பின்னருநான்முகப்பிதாமகன்பொறை
மன்னியதேவாகண்மக்கள்வல்விலங்
கன்னியவடிவுளவனந்தயோனியும்
பன்னருஞ்சிறப்பினாற்படைத்துமுற்றியே.

(இ - புரை) பிரம்மதேவன் முன் சிருஷ்டித்ததுமல்லாமல் பின்பும் சாந்தகுணமுள்ளதேவர்கள், மனிதர்கள், வலியமிருகங்கள் இவைகளேயன்றியின்னமும் பலபலவிதமாகிய அனந்தம்யோனிபேதங்களும் சொல்லுதற்கரிய சிறப்புடன் சிருஷ்டித்துமுடித்து. எ - று. (௧௭)

புண்ணியபாவமும்பொருவினன்மையு
மண்ணியதீமையுமகிழ்வுந்துன்பமு
மெண்ணியநினைப்பொடுமறப்பும்யாவையு
நண்ணியவுணர்வொடுவகுத்துநல்கியே.

(இ - புரை.) புண்ணியபாவங்களும் ஒப்பிலாத நன்மையும், இவ்வுலகத்தில் நேரிடுந்தீமையும், சுகதுக்கங்களும், எண்ணுகின்ற நினைப்புமறைப்புகளும், பொருந்திய உணர்ச்சியுடன் வகுத்துச் சிருஷ்டித்து. எ - று. (௧௮)

துறக்கமுநரகமுந்துவன்றிக்காக்கெனப்
பிறைக்குலநான்கெனப்பிறழ்வெண்கோட்டிடைக்
கறைக்குடறிணிந்தமாற்களிற்றுவேந்தையு
மறத்தொழிற்கூற்றையும்பணித்துமன்னனே.

(இ - புரை.) அரசனே! நான்கு பிறைகள்போலப் பிரகாசிக்கும் வெண்மைநிறமுள்ள தந்தங்களினிடத்தில் பகைவருடலிரத்தமும் குடலும் நிறையத்தக்கபெரிய ஐராவதமென்னும் யானையையுடைய இந்திரனைநோக்கி நீ சுவர்க்கலோகத்தைக் காத்துக்கொண்டிருவென்றும், கோபமுண்டாகும் தொழிலையுடைய யமனைநோக்கி நீ நரகத்தைக் காத்துக்கொண்டிருவென்றுங் கட்டளையிட்டுப் பின்பு, எ - று. (௧௯)

துடிமுதல்காலங்கடோற்றுந்தன்மையுங்
கடிதினில்வருஞ்சுடர்க்கதிருந்திங்களு
மிடையுளகோண்முதற்கிரகம்யாவையு
மடையுறுபூதங்களைந்துமாக்கினான்.

(இ - புரை.) க்ஷணமுதல் காலங்கள் உண்டாகுந் தன்மையையும் மகமேருவைவிரைவாகச்சுற்றிவரும் சூரியனையும், சந்திரனையும், அவ்விடத்திலிருக்குங் கோள்முதலாகிய கிரகங்கள் எல்லாவற்றையும், ஆகாயமுதலாகப் பொருந்திய பஞ்சபூதங்களையும் சிருஷ்டித்தான். எ - று. (௨௦)

ஆக்கியசராசரமனைத்துமவ்விதி
நீக்கியபகுதியினெருங்கியெங்கணும்
போக்கறநிமிர்ந்துசெல்பொழுதிற்கூற்றுவன்
காக்குமங்நரகங்கடழையுகற்பிட்டான்.

(இ - புரை.) இவ்வாறு அந்தப்பிரமன் உண்டாக்கிய சரா சரங்களெல்லாம் பேதமில்லாமல் நெருங்கி யெவ்விடத்தும் இறத்தலின்றி அதிகரித்து வரும்போது யமன்காக்கா நின்ற அந்நரகங்கள் தழையும்படி கற்பிக்கின்றான்.

கூறியபாவத்தின்கூற்றவாகிய
சீறியகாமமேமுதலதீமையை
வீறுயர்கதையினான்விளித்துநீவிர்போய்
மாறுசெய்துலகிடைமருவியெங்குமே.

(இ - புரை.) சொல்லுகின்ற பாவத்தின் பிரிவாகிய சீறுகின்ற காமமுதலான பாவங்களைப் பெருமைமிகுந்தகதையையுடைய யமன் அழைத்து நீங்கள் போய்மாறுபாடுசெய்து உலகமெங்கும் பொருந்தி, எ - று. (௨௨)

தருமமுநீதியுந்தயாவும்வாய்மையு
மருவியதவங்களும்பிறவுமாற்றிநுங்
கருமமாந்தீத்தொழில்கணக்கிலாதன
புரிதிர்நீரகினைப்புரத்திர்போயென்றான்.

(இ - புரை.) தருமத்தையும், நீதியையும், தயையையுஞ், சத்தியத்தையும் பொருந்திய தவங்களையு மற்றதுகளையுமாற்றி, உங்கள் தொழில்களாகிய பாவத் தொழில்களை அனந்தமாகச்செய்து, கொடியநரகத்தைக் காக்கக்கடவீர்களென்றான். எ - று. (௨௩)

கேட்டலுமழகிற்றென்றுபோய்த்
தங்கியவுலகிடைவந்துசார்தலும்

பொங்குசீருருத்திரமெவருமேபுகன்
றெங்கணுநிறைதலாற்றுண்ணென்றேங்கியே.

(இ - புரை.) அந்தவார்த்தையைக்கேட்ட மாத்திரத்தில் எங்களுக்கு இது நன்மையானதென்று, காமமுதலிய பாவங்கள் சென்று பொருந்திய உலகத்தில்வந்து சேர்ந்தவளவில், மகத்துவமுள்ள சீருருத்திர மந்திரத்தை யெல்லாருஞ் சொல்லி எவ்விடத்தும் நிறைந்திருப்பதினால் நடுக்கங்கொண்டு ஏங்கி,

மீண்டனமேவோடினமெவருவிக்காலன்முன்
னீண்டினவாய்புலர்ந்திளைத்துநின்றன
வாண்டகைகேட்டிநின்னுணையாற்றிரு
வேண்டியவிருநிலவளாகமேவினோம்.

(இ-புரை.) (பயந்து) திரும்பி யமனிடத்திற்குஓடிச்சேர்ந்து,வாயுலர்ந்து இளைத்து நின்று ஐயனே! கேட்பாயாக உன்னுடைய ஆக்கினையால் செல்வம் வேண்டிய பெரிய உலகத்தினிடத்திற் பொருந்தினோம். எ - று. (௨௫)

கவ்வைமாநதிக்கரைகடவுளாலயஞ்
செவ்வியமொழிமறையாளர்சேர்விட
மெவ்விடமெவ்விடமென்றுகூறுவேம்
பவ்வநின்றிரைப்பதுபோலப்பாரெலாம்.

(இ - புரை.) ஓசையுடைய பெருமைபொருந்தியநதிக்கரை,தேவாலயம், நல்லசோலை பிரம்மாலயம்,எந்தெந்த இடமென்றுபிரித்துச்சொல்வோம் பூலோகமெங்குஞ் சமுத்திரங் கோஷிப்பதுபோல. எ - று. (௨௬)

வல்லசீருருத்திரமந்திரந்தனை
யெல்லையில்யாவருமினிதினோதிட
நல்லழற்பிழம்பெனநமரைக்காய்தலா
லொல்லையில்வெருவிநின்னுழையொதுங்கினேம்.

(இ - புரை.) முத்திதரவல்ல சீருருத்திர மந்திரத்தை அளவில்லாமலெல்லாரும் ஓதுகின்றார்கள்;அதுமிகுந்த தீக்கூட்டம்போல நம்மவர்களைக்காய்கின்றதினால்,பயந்து விரைவாக உன்னிடத்தில் வந்துசேர்ந்தோம். எ - று.' ()

வேறு.

ஏழுகோடிமந்திரமெடுத்தவரியம்பினுந்
தாழ்விலாதமந்திரங்கடம்மையொல்லைநீக்குவேஞ்
சூழ்சடைப்பரமனோந்துதொல்லெழுத்தையொன்றியே
வாழுமந்திரத்திலோரெழுத்தினுக்குமாழ்குவேம்.

(இ - பொ.) சத்தகோடி மகாமந்திரங்களை யெவர்களெடுத்துச் சொன்னாலும் தாழ்ச்சியில்லாத அந்த மந்திரங்களை விரைவினில் நீக்கிவிடுவோம்; சூழ்ந்தசடையை யுடைய பரமசிவனது பஞ்சாக்ஷரத்தைப் பொருந்திவாழுஞ் சீருருத்திர மந்திரத்திலிருக்கும் ஒரு அக்ஷரத்துக்கும் யாங்கள் வருந்துவோம்.

பெருமநீபணித்தவாறுநரகராசிபேணலே
மருமையெந்திறத்தடாதுகும்பிபாழுறிந்திடென்
றொருமையிற்கிளத்தலோடுமுத்தியென்னவொலியெழத்
தருமராசன்விதிபிருந்தசபைபுகுந்துபணியவே.

(இ - பொ.) இறைவனே! நீ கட்டளையிட்டபடி யினிநரகத்தினைக்காக்கமாட்டோம், காப்பதருமை; யெங்களாலாகாது நரகம் பாழாயிருக்கின்றது; அதனை நீ யறிதியென்று சொல்லிய வளவில் அதைக்கேட்ட தருமராசன் சமுத்திரம்போல ஓசையுண்டாகத்தக்கதாக ஆர்ப்பரித்துக்கொண்டு பிர்மதேவனிருந்த சபையிற்போய்ப் பணிந்து, எ - று. (௩௯)

செம்பொன்வெற்பதொன்றுநாலுசிகரமோடிருந்தென
வம்புயாசனத்திருந்தவண்ணல்வாய்மலர்திறந்
தெம்பதத்தடைந்தவாறென்மறலியென்றியம்பவே
வெம்புநெஞ்சனெடிதுயிர்த்துவெகுளியோடுரைசெய்தான்.

(இ - பொ.) ஒருபொன்மலையானது நாலுசிகரத்துடனிருந்ததுபோலக் கமலாசனத்திலிருந்த பிர்மதேவன் திருவாய்மலர்ந்து தருமராசனே! நீ நம்மிடத்திற்குவந்தகாரணமென்னவென்றுசொல்லலும், யமன் வெதும்பு மனத்தனாய்ப் பெருமூச்சுவிட்டுக் கோபத்துடன் சொல்லுகிறான். எ - று. (௩௦)

ஐயநீபணித்தவண்ணமரியவேழுநான்கெனும்
வெய்யகோடிகும்பியும்விளங்கியேதழைக்கயான்
செய்யலாவதேதினிச்சிறந்தசீருருத்திரம்
வையம்யாவுமோதலாலம்மாநிலத்துளோரெலாம்.

(இ - பொ.) சிறப்புப்பொருந்திய சீருருத்திரத்தைப் பூலோகத்திலிருப்பவர்களெல்லாரும் செபித்தலால், ஐயனே! தேவர் கட்டளையிட்ட பிரகாரம் இருபத்தெட்டுநரகங்களும் விளங்கித் தழைக்கத்தக்கதாகஅடியேன்செய்யலாவதென்னிருக்கின்றது? எ - று. (௩௧)

நாகநாடுநண்ணிலார்களூரணன்றனித்துவாழ்
போகநாடுநண்ணிலார்கள்புண்டரீகனின்றிரு
யோகநாடுநண்ணிலாருலோகபாலர்நாடுறு
ரேகமாயசிவபதத்தினெல்லையாருநண்ணினார்.

(இ - புரை.) சுவர்க்கலோகத்தில் பொருந்துகின்றார்களல்லர்; விஷ்ணுதனித்துவாழ்கின்றபோகநாடுபொருந்துகின்றார்களல்லர். தாமரைப்பொகுட்டிலுறையுந் தேவருடைய திருநாட்டிலும் பொருந்துகின்றார்களல்லர். தேவருடையநாட்டிலும்பொருந்துகின்றார்களல்லர். ஏகனாகிய பரமசிவனாட்டிலெல்லாரும் பொருந்துகின்றார்கள். எ - று. (௯௨)

புண்டரீகவண்ணலேபுராரிவாழ்பதத்தினி
லெண்டிசாமுகத்துளோருமெய்தலான்மற்றேவரோ
கொண்டதீமைநரகம்வந்துகுறுகுவார்கள்குறுகுமா
றண்டநாதபுரிதியல்லதாள்கலேனென்னாசரோ.

(இ - புரை.) தாமரையில் வீற்றிருக்கும் கடவுளே! பரமசிவனுடைய பதவியில் அஷ்டதிக்குகளுக்குள்ளிருப்பவர்களும் பொருந்துதலால், மற்றையார் வந்து நரகத்திற் பொருந்துவார்கள்; தேவநாதனே; அப்படியன்றி நரகத்தில் வந்து பொருந்தும்படிசெய்; இல்லாவிட்டால் என் அதிகாரத்தை விட்டுவிடுகிறேன். எ - று. (௯௩)

வேறு.

என்றுகூறிமறலியிறைஞ்சலுந்
துன்றுபங்கயரான்முகன்சூழ்ச்சியா
னன்றுசெய்பவர்தங்கட்குநன்னெறி
யன்றியேதவறுற்றுவதேதெனு.

(இ - புரை.) இயமனிவ்வாறு சொல்லிவணங்குதலும், தாமரையிற்பொருந்திய பிரமதேவன உணர்ச்சியினால் நன்மை செய்கின்றவர்களுக்கு நன்மார்க்கம் வருவதன்றிப் பொல்லாங்குவருவதேது? எ - று. (௯௪)

ஞாலநாயகன்பின்னருநாடியே
காலனெஞ்சங்கலங்கியுரைத்தது
மூலமோடுநரகமுடிந்தது
மேலநீக்குதற்கின்னவையாமென்றே.

(இ - புரை.) எமன் மனங்கலங்கிச் சொன்னதையும், அடியோடே நரகமுடிந்ததையும் பிர்ம்மதேவன் யோசித்து இதுகளை நீக்குதற்கு இவைகளாகுமென்று தீர்மானித்து, எ - று. (௯௫)

கோதுசெய்யுமஞ்ஞானத்தின்கூறதாய்
வாதஞ்செய்யவளர்விருப்பின்மையுஞ்
சூதுசெய்திடுந்துன்மதியும்புவிக்
கேதஞ்செய்திடவேகுமினேகியே.

(இ - புரை.) குற்றத்தைச் செய்கின்ற அஞ்ஞானத்தின் பிரிவாய் வாது செய்யவளர்கின்ற விருப்பமில்லாமையையும் சூதுசெய்கின்ற துர்ப்புத்தியையும் பார்த்து நீங்கள் பூலோகத்தில் துன்பஞ்செய்யும்படி செல்லுங்கள்; அவ்வாறு சென்று, எ - று. (௩௬)

ராசைபற்றியனைவருமோதுதல்
காசினிக்குண்மூழுதுங்கடிந்துநுங்
தேசுறுத்தசெயலைநடத்துவான்.

(இ - புரை.) பாவங்களை நீக்கத்தக்க சீருருத்திரத்தில் விருப்பங்கொண்டு பூலோகத்திலிருக்கும்மனிதர்கள் எல்லாரும்ஓதுதலைநீக்கிஉங்களுடையகொடிய செய்கையை நடத்த, எ - று. (௩௭)

எய்துமென்றுபிதாமகனேவலு
நொய்தினெய்திநுணங்கியகேள்வியாற்
செய்தவம்புரிசிந்தையினண்ணியே
கைதவங்கொடுநெஞ்சைக்கலக்கின.

(இ - புரை.) செல்லுங்களென்று பிர்ம்மதேவன் ஏவினவளவில், அவைகள் பூலோகத்தில் விரைவுடன்வந்து, மிகுதியான சாஸ்திர விசாரணையினால் நல்லதவஞ்செய்கின்ற மனதிற்பொருந்தி, வஞ்சகத்தைக்கொண்டுஅந்தமனதைக் கலக்கின. எ - று. (௩௮)

மடியினால்விருப்பின்மைமலியவே
படியுளோர்கள்சீருத்திரப்பற்றுவிட்
டடைவுநீத்தொழுக்கல்லவைசெய்தலிற்
கொடியதீநரகங்குடியேறிற்றே.

(இ-புரை.) சோம்பலினால்விருப்பமில்லாமை அதிகரிக்கவே, இவ்வுலகத்திலிருப்பவர்கள் சீருருத்திரம் ஓதுதலைவிட்டுக் கிரமந்தப்பிப் பாவங்களைச் செய்தலினால் கொடிய தீநரகத்தில் குடியேறியது. எ - று. (௩௯)

பிறையெயிற்றுமறலிபெயர்ந்துதா
னுறைபதித்தலையெய்தியுவப்புடன்

யிறைவநின்மகற்கெய்துவசொல்லுகேன்.

(இ-புரை.) பிறைபோல்வளைவும் வெண்மைநிறமுமுள்ள பற்களையுடைய எமதர்மராசனானவன் தானிருக்கும் வைவச்சுத பட்டணத்திற்போய்ச் சந்தோ

ஷத்துடன் குறைவற்ற களிப்புடனிருந்தான். அரசனே! இனியுன் புத்திர னுக்கு நடப்பதைச் சொல்லுகிறேன். எ - று. (௪0)

இடரொழிக்கவுமின்னுயிர்நல்கவு
மிடையுங்காலனைநீக்கவும்வேண்டுமேற்
படைமழுக்கைப்பரமன்சீருத்திரந்
தொடையின்மார்பவியற்றுதல்சூழ்ச்சியால்.

(இ - புரை.) துன்பத்தை நீக்கவும், இனிதாகிய வுயிரைக்கொடுக்கவும், வருகின்ற யமனை நீக்கவும் வேண்டுமானால், மழுவாயுத மேந்திய திருக்கரத்தை யுடையபரமசிவனது சீருருத்திரத்தை மாலையணிந்தமார்பனே! சொல்லவேண்டும். எ - று. (௪௧)

யாவரோனுமினியசீருத்திர
நாவினேதிநளிர்மதிசேகரத்
தேவையாட்டுதெண்ணீரைத்தஞ்சென்னியிற்
றூவினனமனைதுடைப்பரே.

(இ - புரை.) எவர்களேயானாலும் இனிதாகிய சீருருத்திரமந்திரம் நாவினாலோதிப்பரமசிவனுக்கு அபிஷேகஞ்செய்கின்ற தெளிவுள்ளதீர்த்தத்தைத்தங் கள் சிரசில் தெளித்துக்கொண்டால், விதிக்கும் யமதண்டனையை நீக்குவார் கள். எ - று. (௪௨)

தாங்குசீருத்திரசமகஞ்சொலித்
தேங்குமஞ்சனமாட்டியசீரியோ
ராங்கணேபதினாயிரமாண்டுபோர்
வாங்குவிற்கையாய்வாழ்வொடுவைகுவார்.

(இ - புரை.) போரில் வளைக்கும் வில்லேந்திய கையையுடையவனே! எல் லாரையும் ஆதரிக்கும்படியான சீருருத்திர சமகஞ்சொல்லிப் பரமசிவனுக்குத் திருமஞ்சனஞ்செய்யுஞ் சீரினையுடையவர்கள், அப்பொழுதே பதினாயிரம்வரு ஷம் சம்பத்துடன்வாழ்வார்கள். எ - று. (௪௩)

பத்தியோடுசீருத்திரம்பாருளோர்
சித்தம்வைத்துத்தினந்தோறுமோதினு
லத்தனின்புற்றவர்க்கருள்செய்திடு
முத்தியீதுமொழியவும்வேண்டுமோ.

(இ - புரை.) இவ்வுலகத்தி லிருப்பவர்கள் பத்தியுடனே சீருருத்திரம் நாள்தோறுமனமொருமித்து ஓதுவார்களேயானால், பரமசிவன் கிருபைகூர்ந்து மோக்ஷங்கொடுத்தருள்வார்; இதனைச்சொல்லவும் வேண்டுமோ? எ - று. (௪௪)

ஆதலானின்மதலைக்குமன்னதிப்
போதியற்றப்பொருவரும்புண்ணிய
மாதவத்தின்மறையவர்க்கூடுவென்றுன்
றூதுமன்னன்விட்டானவர்துன்னினர்.

(இ - புரை.) ஆகையாலிப்போது உன்புத்திரனுக்குச்சீருருத்திரமந்திரம் சொல்லிய தீர்த்தஸ்நாநஞ் செய்விக்கிறதற்கு, ஒப்பில்லாதபுண்ணியமுள்ளதபசிகளை அழைப்பியென்று பராசரமுனிவர்சொன்னார்; அதைக்கேட்ட அரசன் தூதர்களை யனுப்ப அவர்கள் போய்ச்சொன்ன அளவில், முனிவர்களெல்லாரும் வந்தார்கள். எ - று. (சரு)

அடைந்தவாயிரமந்தணருந்தொழிற்
சடங்குநீதிப்பராசரன்சாற்றிடக்
குடங்களாயிரங்கொண்டதெண்ணீர்தொடா
விடங்கொளெந்தைசீருத்திரமெண்ணினர்.

(இ - புரை.) பராசரமுனிவர் சடங்குவிதிசொல்ல வந்த ஆயிரமுனிவர்களும் ஆயிரங் கும்பங்களிற் பூரித்திருக்கும் நீரைத்தொட்டு விஷமுண்டபரமசிவனது சீருருத்திரம் சொன்னார்கள். எ - று. (சசு)

இந்தவண்ணமேழாந்தினமெய்தலு
மந்தணாளரோராயிரங்கும்பமுங்
கந்தனன்னவேற்காளையையாட்டினார்
மைந்தன்மண்ணிடைவீழ்ந்துமயங்கினன்.

(இ - புரை.) இவ்வாறு ஏழாநாள் வந்தபோது, ஆயிரமுனிவர்களுந்தங் கள்கையிலிருக்குங் கும்பத்தீர்த்தத்தினால் சுப்பிரமணியக்கடவுளையொத்த அந்த ராசபுத்திரனுக்கு ஸ்நாநஞ்செய்வித்தார்கள்; உடனே, அந்தப்புத்திரன்மயங்கிப் பூமியில் விழுந்தான். எ- று. (சஎ)

கண்டுமன்னவன்கையறவெய்தலுந்
தண்டுகுண்டிகைதாங்கியதாபதர்
விண்டவார்பிறைவேணியன்மந்திரங்
கொண்டுபூதிவெண்காப்புக்குறித்திட்டார்.

(இ - புரை.) தன்புத்திரன் மயங்கிவிழுந்ததை அவ்வரசன் பார்த்துத் துயரங்கொண்டான். அப்பொழுது தண்டுகமண்டல மேந்தியமுனிவர்கள்பிறையணிந்த சடையையுடைய பரமசிவனது மந்திரமாகிய சீருருத்திரஞ்சொல்லி விபூதியுந்தரித்தார்கள். எ - று. (சஅ)

அறங்கொள்வேதியராசிபகர்ந்திட
மறங்கொள்வேந்தன்மனமகிழ்வோங்கிட
வுறங்கினான்றுயிநீர்த்துணாருற்றெனத்
திறங்கொண்மைந்தனெழுந்திதுசெப்புவான்.

(இ - புரை.) தருமநெறியைக்கொண்டிருக்கிற முனிவர்கள் ஆசீர்வசனஞ் சொல்லவும், வீரம்பொருந்தியராசன் மனதில் மகிழ்ச்சி யதிகரிக்கத்தக்கதாக நித்திரைசெய்தவன் அது நீங்கியெழுந்ததுபோலப் புத்திரனெழுந்துஇந்தவார்த் தைசொல்லுகிறான். எ - று (சகூ)

வே று.

இத்தலையினிகழ்ந்தபொருளைக்கேளிளம்பிறைபோல்வெள் ளெயிற்றனெரியுங்கண்ணன், மைத்தொகுமாமலைபனையவுருவன்மிக் கமழைமுகிலினிடிமுழக்கமனையசொல்லன், கைத்தலத்திலொருக தையுங்கயிறுமேந்திக்கனன்றெனையேபிடித்தடர்க்குங்காலைத்தோன்றி, யத்தலையிலேவிடுவித்தவனைப்பற்றியடர்த்தகன்றாரவரெவரோவறிகி லேனே.

(இ-புரை.) என்னையனே? யிவ்விடத்திலே நடந்தசேதியைக்கேள். இளம் பிறையொத்த வெண்மையாகிய பற்களையுடையவனும்,கருமை நிறந்தங்கிய மலை யையொத்த வடிவமுடையவனும், மேகமுழக்கம்போன்ற சொல்லையுடையவ னுமாகிய ஒருவன், கையினிடத்திலொரு தண்டாயுதமும், பாசக்கயிறுமேந்திக் கொண்டு, அதிககோபமுள்ளவனாய், என்னைப்பிடித்து,அடிக்குங்காலத்தில்,அவி டத்தில் சிலர்வந்து அவனைப்பிடித்துக் கட்டிக்கொண்டுபோனார்கள்; அவர்களெ வர்களோ? நான் அறியேன். எ - று. (நிo)

என்றுதனிக்குமரனியம்பக்கேட்டவிகல்வேந்தனுவகையினு லெழுந்துபுல்லி, நினறுமறைவேதியர்க்குமுகமன்கூறிநிதிமாரியனைவ ருக்குமவெறுப்பநல்கிப, பொன்றுமகவுயிரளித்தநுங்கட்கின்னேபுரி வதொருகைம்மாறுகாணேனென்று, வன்றவரோடிருந்துசுவையடிசி ன்மாந்தியரியணைமேலதிசயத்தோடமர்ந்தகாலை.

(இ - புரை.) இவ்வாறு ஒப்பற்ற தன்புத்திரன்சொல்லைக்கேட்டுப் பல முள்ள அரசன்சந்தோஷத்தையுடையவனாகிப் புத்திரனையணைத்துக்கொண்டு, அவிடத்திலிருந்த முனிவர்களுக்கு உபசாரவார்த்தைசொல்லி, திரவியமாகிய மழையை வெறுக்கும்படி யாவருக்கும் கொடுத்து, இறந்த என்மகனுக்கு உயிர் கொடுத்த உங்களுக்கு இப்போது செய்யும் பிரதியுபகாரம் ஒன்றும்நான்காணே னென்றுசொல்லி, அவர்களுடனிருந்து போசனஞ்செய்து சிங்காசனத்தில்அதிச யத்துடனிருந்தபோது, எ - று. (நிக)

தேன்மாரிதுளிப்பனபோன்மகதிவீணைத்திவவுறுதந்திரியின்வழித்தாகத்தோன்றும், வான்வாயிற்றெனவிளியைச்செவியிலேற்றுமறைமுனிநாரதனவையின்வந்துதோன்றக், கான்மாலைபிலிற்றுநறையொழுகுமார்பன்கதுமெனச்சென்றிறைஞ்சியிருகழலும்போற்றித், தான்வாழுமரியணையின்மருங்குவேறோர்தமனியப்பீடிகைமுனிவன்றனக்குமீந்தான்.

(இ - புரை.) மகதியாழினைக்கையினால் மீட்டத்தக்கதான தந்திரியின் வழியாக ஆகாயவழி யிதுவென்னும்படி தோற்றுகின்ற நாதத்தை யாவர்காதுகளிலும் தேன்மழை துளிப்பதுபோலச் சொரியும் நாரதமுனிவர் அந்தசபையில் வந்தவுடன் அவ்வரசன், விரைவிலெழுந்துபோய் இருபாதங்களையும் வணங்கித் துதித்துத் தானிருக்கும் சிங்காசனத்தின் அருகில் அம்முனிவருக்கும் வேறொரு [illegible]ன். எ - று. (௫௨)

மணித்தவிசின்வைகியவனாசிகூறமன்னன்மகிழ்ந்தருந்தவத்தோய்மலரின்மேலான், கணித்தவுலகேழுநொடியினெய்திக் காணவல்லாயிறும்பூதுகண்டதுண்டேற், பணித்தியெனவினவுதலுமகிழ்ந்துகண்டபரிசனைத்துமப்படியேபகர்வானெஞ்சிற், குணித்துமிகவதிசயித்துவேந்தேயுன்றன்குமரனியல்கேட்டியெனக்கூறலுற்றான்.

(இ - புரை.) அந்த ரத்தினாசனத்திலிருந்த நாரதமுனிவர்ஆசீர்வசனஞ் சொல்ல மன்னவன்மகிழ்ந்து அரியதவத்தையுடையவரே! பிர்ம்மதேவன்சிருஷ்டித்த பதினாலுலோகமும் நொடிப்பொழுதிற்சென்று காணத்தக்கவராதலால் ஏதாவது அதிசயம் உண்டாயிருந்தால், சொல்லுமென்று வினாவினவளவில், அகமகிழ்ந்து தாம்கண்டதொன்றும வழுவாமல் சொல்லநினைத்து மிகவும் அதிசயத்தை யுடையவராய், அரசனே! உன்புத்திரனுடைய சங்கதியைக்கேளென்று சொல்லுகின்றார். எ - று. (௫௩)

விசும்புநெறியான்படரும்வேலைகண்டேன்விடுகயிறுமடுதண்டுங்காத்திலேந்திப், பசுப்புபல்போறகரியநிறமறலியுன்றன்பாலனிவன்றனைப்பற்றிக்கொடுபோங்காலை, யசும்பமுதுபொழிமதிச்செஞ்சடையோனேவவடல்வீரன்கணத்தினொடுமடைந்துகூற்றைத், தசும்பொழுகப்பாசத்தாற்பிணித்துவீக்கித்தருக்கினொடுமைந்தனையும்விலக்கிமீட்டான்.

(இ - புரை.) ஆகாயமார்க்கத்தில் நான்போம்போது வீசுகின்ற பாசக்கயிறும் அடிக்குந் தண்டாயுதமுங் கையிலேந்திக்கொண்டு நீருண்ட மேகம்போலக் கருமைநிறமுள்ள காலனானவன் இந்த உன்புத்திரனைப்பிடித்துக்கொண்டு போகுங்காலத்தில், அமுதத்துளி பொழிகின்ற பிறைமதியணிந்தசடாமகுடத்

தையுடையபரமசிவன் அனுப்ப வெற்றிபொருந்தியவீரபத்திரன்கணங்களுடன் வந்து, கூற்றுவனை உதிரம் ஒழுகும்படி பாசத்தினாற்கட்டியிறுக்கி இவனைமீட்டு விட்டான். எ - று. (ருச)

பிணியினொடுகூற்றுவனைக்கொண்டுவீரன்பெயருநெறியிடைத்த ருமராசனெய்தி, யணியுமணிமுடிகழலிற்றீண்டவீழ்ந்தெம்மையனே தக்கன்மகமழித்தகோவே, பணிசெயுநின்னடியருக்குமடியனுகட்பற் றுதசிறியனைநீபற்றற்குள்ளந், துணியுமதற்கிவனிழைத்தவாறேதென் னத்தோலாதபடைவீரன்சொல்வதானான்.

(இ - பொ.) அதன்பின்பு வீரபத்திரர் கட்டினகட்டுடன் காலனைக் கொண்டுபோமிடத்தில் யமதருமராசன் வந்து, தன்னுடைய ரத்தினக்கிரீடம் அவர்பாதத்தில் படும்படிபணிந்து, எங்களையனே! தக்கன் யாகத்தை அழித்த இறைவனே! தொண்டுசெய்கின்ற நின்னடியருக்கும் அடியனுகும்படி தகுதியில் லாத இவனை நீ பிடித்துக்கொண்டுபோகத் திருவுளங்கொள்வதற்கு இவன்செய் தகுற்றம் யாதோவென்றுகேழ்க்க, தோல்வி அடையாதவீரபத்திரர் சொல்லு கின்றார்.

வணங்குவரிசிலைத்தடக்கைப்பத்திரசேனன்மாமதலைசீருத்திரவ ண்மையாலே, யிணங்குபதினுயிரம்யாண்டிருப்பான்றன்னையீராறுண் டகவையிலேயிறுதிசூழ்ந்து, நிணங்கொணெடுந்தடிப்பிலவாய்க்கால தூதர்நெருங்குநரையறமுருக்கிச்சிறுவனை, குணங்குறையிலடிய வனைப் புரத்தியென்றகூற்றுதைத்தோன் பணிதலைமேற்கொண்டுவந் தேம்.

(இ - பொ.) வளைக்கும் நீண்டவில்லையுடைய பத்திரசேனராசன் புத்தி ரன் சீருருத்திரமந்திரமகிமையால், பதினுயிரம்வருஷம்உயிருட னிருப்பவனுயி ருக்கப் பன்னிரண்டுவயதில் அவனுக்கு முடிவுகருதி நிணம்பொருந்திய பெரிய தண்டமும் பிலம்போன்ற வாயுமுள்ள காலதூதர் கிட்டிப்பிடித்தார்களாதலால், நீ போயவர்களைத் தண்டித்து நற்குணங்களில் குறைவில்லாத ராசகுமாரனைக் காத்தியென்றருளிய காலசங்காரமூர்த்தி யேவலைப்பெற்றுக்கொண்டுவந்தோம்.

இம்மதலைசிவன்றொண்டனுகும்வாழ்நாளீரையாயிரமுடையோ னிவனுக்கித்த, வெம்மையிடர்விளைவித்தகூற்றைக்கட்டிவிமலன்மு னங்கொடுபோவோமென்னவோடு, மம்மவெனமதிமயங்கித்தருமராச னுறிரண்டாண்டேயிவனுக்காயுவென்னச், செம்மையுடனுரைத்திடலு ம்வீரன்கேட்டுச் சித்திரகுத்திரன்கணக்கிற்றெளியாயென்றான்,

(இ - பொ.) இப்புத்திரன் சிவனடிமையாவன். இவன் பதினுயிரம் வருடம் ஆயுசுடனிருப்பவன், இத்தகைமையுடையவனுக்குக் கொடுந்துயரம்

விளைத்தகாலனைக் கட்டிக்கொண்டு பரமசிவன்சந்நிதானத்துக்குக்கொண்டுபோவோமென்றுசொன்னவளவில்தருமராசன்மதிமயங்கி இவனுக்குப்பன்னிரண்டு வயதுதானென்று நிச்சயமாகச் சொல்லியவளவில்,வீரபத்திரர்கேட்டுச்சித்திரகுத்தன் கணக்கைப்பார்த்து நீ தெளிந்துகொள்ளென்றார். எ - று. (௫௭)

வரவழைத்துத்தருமனுண்மைக்கணக்கன்றன்னைவதனம்பார்த்திந்தவிளமதலைக்காயுத், திரவளவையுரையெனவுமவனுந்தேர்ந்துசெப்புவானீராறுண்டளவேதிண்ணம், பரவருசீருருத்திரத்தின்பலத்தினாலேபகர்பதினாயிரம்பருவம்பாரில்வாழப், புரவலனேபின்னெழுதிக்கிடத்தல்கண்டேனெனப்புகலவவனுமஞ்சிப்புகலலுற்றான்.

(இ - புரை.) அந்தவார்த்தையைக்கேட்ட தருமராசன் சித்திரகுத்தனை வரவழைத்து அவன் முகம்பார்த்து இந்த வாலிபனுக்குள்ள ஆயுசு முடிவைப் பார்த்துச்சொல்லென்றான். சித்திரகுத்தன் கணக்கைப்பார்த்துப் பன்னிரண்டு வயதென்பதுநிச்சயமே,ஆனால்சீருருத்திரமந்திரபலத்தினால் பதினாயிரம்வருஷம் பூமியில்வாழும்படி பின்னாலே யெழுதியிருப்பதையிப்போது பார்த்தேனென்று சொல்ல, யமன் பயந்து சொல்லுகின்றான். எ - று. (௫௮)

புன்மையினாலமடமையினாலடியார்செய்தபுன்றொழிலையேபொறுத்தல்புலவோர்செய்யுந், தன்மையெனப்புகழ்ந்துநமனிரந்துகூறத்தனிவீரன்பிணித்தகொடுங்கூற்றைவிட்டுத், தொன்மையதாஞ்சிவலோகமடைந்தான்வாசத்தொடைத்தருமன்றன்பதியிற்புகுந்தானிந்த, நன்மையதிசயத்தனைமை புகலவேண்டிநாமுனதுநகரடைந்தோ நாமவேலோய்.

(இ - புரை.) புல்லறிவினாலும், தெரியாமையினாலும், அடியார்கள்செய்த குற்றங்களைப்பொறுத்துக்காப்பது பெரியோர்கள் செய்கையென்று நமன் வீரபத்திரரைப்புகழ்ந்து,இரந்துசொல்ல, அவர்காலனைக்கட்டிய கட்டினையவிழ்த்துவிட்டுப் பழமையாகிய சிவலோகமடைந்தார். வாசனையுள்ள மாலையணிந்த தருமராசன்தன்னுலகம்போய்ச்சேர்ந்தான். இந்தநல்லஅதிசயத்தைச்சொல்லவேண்டிஅரசனே! நாம் உன் நரகத்திற்குவந்தோம். எ - று. (௫௯)

வேறு.

எனறுநாரதமுனிவரனியமபனும்மறுழவல்கருவவுத்தீதாள்
குன்றுபோல்வளர்ந்தோங்கிடவுவகையங்குரைகடலிடைமூழ்கி
நன்றுநன்றெனவருந்தவர்முதலியநான்மறையவர்ப்போக்கித்
துன்றுதாரவன்மைந்தனோடரனடிதொழுதுவீற்றிருந்தானே.

(இ - புரை.) இப்படி நாரதமுனிவர் சொன்னமாத்திரத்தில் பலமுள்ள தாய்க் குவிந்திருக்கும் புயங்கள் மலைபோல வளர்ந்தோங்கிப் பூரிக்கத்தக்கதாகச் சந்தோஷமாகிய சமுத்திரத்தில் மூழ்கி, இதுமிகவும் நல்லகாரியம் நல்லகாரிய

மென்று சொல்லி, முனிவர்கள் முதலாகிய பிராமணர்களை அனுப்பிவிட்டுப்பூமாலையணிந்த ராசன் தன் புத்திரனும் தானுமாகப் பரமசிவன் திருவடிகளைத்தொழுதுவாழ்ந்திருந்தான். எ - று. (௬௦)

இந்தமந்திரத்தகுதியுமோதினோர்க்கிறையவனருள்கூரு
மந்தவண்ணமுங்காலனைக்கடிந்ததுமரும்பெறற்றிருமைந்த
னந்தறீர்ந்ததுமாயுளைப்பெற்றதுகவின்றமாக்கதைதன்னைச்
சிந்தைசெய்குநர்படிக்குநர்சிவபதமடைவாரே.

(இ-புரை.) இந்தமந்திரப்பெருமையும், இதைச்சொல்கின்றவர்களுக்குப் பரமசிவன்கிருபைசெய்யுமுறையும், காலனைக்கடந்ததும்பெறுதற்கரியரா சகுமாரனிறத்தல் நீங்கினதும், பதினாயிரம்வருடம் இருக்கும் ஆயுள்பெற்றதும், சொல்லுகின்ற இந்தமகத்துவமுள்ள சரித்திரத்தைச் சிந்திப்பவர்களும், படிப்பவர்களும், கேட்பவர்களும் சிவபதம் அடைவார்கள். எ - று. (௬௧)

இன்னதன்மையதிக்கதையெனமுளையிளமதிச்செழுங்கண்ணி
மின்னுசெஞ்சடையமலனை நிமலனைவிமலனையடிபேணி
நன்னலந்தருமிருந்தவக்கிழமைசானவையிலார்களிகூரச்
சொன்னநான்மறைவியாதனதருள்பெறுசூதமாமுனிசொன்னான்.

(இ - புரை.) இந்தச்சரித்திர மித்தன்மையுடையதென்று இளம்பிறைமதியைமாலைபோலணிந்திருக்குஞ்செஞ்சடையையுடைய அமலர் நிர்மலர் விமலர் என்னும்பலதிருநாமமுள்ள பரமசிவனுடைய திருவடிகளைத்தொழுது நல்லமோக்ஷந்தருவதற்கேதுவாகிய தவநெறியுள்ள நைமிசாரணியமுனிவர்கள் ஆனந்தம் அடையும்படி வேதங்களைவகுத்துக்கூறிய வியாதமுனிவருடைய அநுக்கிரகம் பெற்ற சூதமுனிவர்சொன்னார். எ - று. (௬௧)

இருபத்தொன்றாவது சீருருத்திரமகிமையுரைத்த அத்தியாயம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் ௲௨௧௪.

---

உ
சிவமயம்.

இருபத்திரண்டாவது

# வஞ்சுவளா முத்திபெற்ற அத்தியாயம்.

மீட்டுமற்றோர்க்கதைசூதன்விளம்புந்
தீட்டலாதமறையோர்திறல்வேந்த
ரீட்டுசீர்வணிகரென்றிவர்மூவர்
நாட்டுவேதநெறிநன்னிலைநின்றோர்,

(இ - புரை.) சூதமுனிவர் வேறுமொரு சரித்திரஞ் சொல்லுகின்றார். பரிசுத்தர்களாகிய பிராமணர்கள், வெற்றியுள்ள க்ஷத்திரியர்கள், நிதிதேடும்வைசியர்களாகிய இம்மூவரும் விதிவிலக்குகள் சொல்லும் வேதத்தி னன்மார்க்கத்தில் விருப்பவர்கள். எ - று. (௧)

அந்தநூலினதிகாரமிலாராய்
வந்தபின்னவருமாநிலமீதிற்
சந்தமில்விழிகுலத்தினர்தாமுஞ்
சிந்தைநன்கொருவுதேமொழியாரும்.

(இ - புரை.) அவ்வேதங்களோதும் அதிகாரமில்லாதவர்களாய்வந்த சூத்திரரும், பெரிய இந்தவுலகத்திலிருக்கும் மாட்சியில்லாத இழிகுலத்தாரும், மனதில் கற்பினிலைமையில்லாத மாதர்களும், எ - று. (௨)

முற்றுநன்னதிகண்மூழ்கிலரேனு
நற்றவம்புரிதனுடிலரேனு
முற்றபேறுமுவந்திலரேனும்
பற்றிலானடிபணிந்திலரேனும்.

(இ - புரை.) நல்லநதிகளிலெல்லா மூழ்காதவர்களாயிருந்தாலும், நல்ல தவஞ்செய்யவேண்டுமென்று நினையாதவர்களாயிருந்தாலும், பொருந்தியதருமங்கள் செய்யாதவர்களாயிருந்தாலும், விருப்பு வெறுப்பு இயல்பாகவேயில்லாத பரமசிவனுடைய திருவடிகளைப் பணியாதவர்களாயிருந்தாலும், எ - று. (௩)

ஓதுதற்குமரிதாயுணர்கல்லாப்
பாதகத்தொழில்கள்பண்ணினரேனுஞ்
சோதிநற்பிறைமுடித்திடுதொல்லோன்
காதையிற்படுகருத்தினரானல்.

(இ - புரை.) சொல்வதற்கு மரியதாய், மனதில் நினைக்கவுங்கூடாதபாவங்களைச் செய்கின்றவர்களேயானாலும், சொலிக்கின்ற நல்லபிறையணிந்த ஆதிகாரணனாகிய பரமசிவனுடையசரித்திரத்தில் சிந்தைவைப்பவர்களானல், எ-று.

பாவமென்றமொழிபற்றறமாய்த்துத்
தேவரும்பரவிவந்தனைசெய்யக்
கோவையங்குமுதவாயுமைகொண்கன்
மேவரும்பதவிமேவியிருப்பார்.

(இ - புரை.) பாவமென்கிறசொல்லின் பற்றைக்கெடுத்துத்தேவர்களும் துதித்துத்தொழும்படி கோவைப்பழமொத்தசிவந்தவாயினையுடைய உமையவள் கணவனாகிய பரமசிவன்வீற்றிருக்கும் சிவபதவியில் பொருந்தியிருப்பார்கள்.

கரந்தைவார்சடையர்காதையைநாளு
மிருந்துகேட்கவியலாதவர்தாமு
மரந்தைநீங்கியரைநாழிகையேனுந்
தெரிந்துகேட்கினுறுதீவினைமாய்ப்பார்.

(இ-புரை.) சிவகரந்தைப் பத்திரமணிந்த நீண்டசடையையுடைய பரமசிவன் கதையை ஒருநாள்முழுவது மிருந்து கேட்கக்கூடாமையா யிருப்பவர்கள் தங்களுக்கிருக்கும் வருத்தத்தை விட்டு அரைநாழிகையாவது ஞாபகத்துடன்கேட்பார்களானால், ஜனனங்கள்தோறும் பொருந்தியதீவினையைக்கெடுப்பார்கள். எ - று. (௬)

வேறு.

கலியுகத்துநற்கன்மமியற்றுதன்
மலிபுராணநூல்கேட்டதுமாட்சியா
லலையுநெஞ்சமலைவற்றுமெய்ந்நெறி
நிலைபெறுஞ்சிவயோகத்துநிற்குமே.

(இ - புரை.) கலியுகத்தில் நற்கருமங்கள் செய்குதலும், நிறைந்துள்ள புராணங்களைக்கேட்பதுமாகிய பெருமையால் சஞ்சலப்படுகிறமனம் அலைவற்று நல்லநெறியில் நிலைத்திருக்கத்தக்க சிவயோகத்தில் நிற்கும். எ - று. (௭)

வஞ்சகக்கருநெஞ்சமுமாசிலா
வஞ்செழுத்தையடையவரந்தைபோம்
விஞ்சுதீவினைவேரறும்வேரறத்
துஞ்சிலாத்துரியத்திற்சுகிக்குமே.

(இ - புரை.) வஞ்சகமுள்ளதா யிருண்டிருக்கிற மனமும் குற்றமில்லாத பஞ்சாக்ஷரத்தைப் பொருந்துமாகில், துன்பம் நீங்கும்; அதிகரிக்குந்தீவினைக்குக் காரணமாகிய ஆணவமலம் நீங்கும்; அது நீங்கினால், மாயாததுரியாவத்தையில் சுகத்துடன்காணடிருக்கும். - று. (௮)

உம்பராரமுதுண்டவர்தங்கட்கு
நம்புகாயநரைதிரைமாற்றுமா
லெம்பிரான்கதையின்னமுதுண்டவர்
வெம்புகாயவினைமுற்றுமாற்றுமே.

(இ - புரை.) தேவர்களுக்குங் கிடைப்பதற்கரிய அமுர்தம் உண்டவர்களுக்குத் தங்களுடையதென்று நம்பிக்கொண் டிருக்கிற சரீரத்தின் நரையையுந்திரையையு மாற்றிவிடும்; ஆனால், நம்மிறைவன் சரித்திரமாகிய அமுர்தமுண்டவர்களுக்கு வருத்தத்துக்கேதுவாகிய சரீரத்தின் வினையையெல்லாம் நீக்கும், எ - று. (௯)

ஆன்றகாதையின்மேல்விருப்பற்றவா
தோன்றுமுற்கதைபொய்யென்றுசொல்பவர்
மூன்றுகோடிநரகத்தின்மூழ்கியே
நான்றநாவுடைநாய்ப்பிறப்பெய்துவார்.

(இ-புரை.) மகிமைதங்கியசிவகதையில் விருப்பமில்லாதவர்களும், முன்னடந்திருக்கும் சிவகதைபொய்யென்று சொல்பவர்களும், மூன்றுகோடிநரகத்தில் அழுந்திப்பின்பு தொங்கிய நாவுடைய நாயாகப் பிறப்டார்கள். எ-று.(௧௦)

எக்குலத்தவனுயினுமீர்ஞ்சடை
முக்கணன்கதையோதுமுதல்வனை
மக்களுள்ளிவனும்மகனென்பவர்
கக்குவாய்புழுக்கான்றிடுநோய்கொள்வார்.

(இ-புரை.) எந்தக்குலத்திற் பிறந்தவனே யானாலும், குளிர்ச்சிதங்கிய சடையையுடைய பரமசிவனது சரித்திரத்தைச் சொல்லுகின்ற முதல்வனை மனிதர்களுக்குள் இவனுமொரு மனிதனென்று எண்ணிச் சொல்லுகின்றவர்கள், கக்கும்வாய் புழுக்களைக்கக்கும்படியான வியாதியையடைவார்கள். எ-று.

ஓங்குசீர்த்திருக்காதையுரைக்குநர்
தாங்குபீடிகையின்றித்தரையிரா
ராங்கண்யாரையுமஞ்சலிசெய்திடார்
தீங்கினேருறைசிற்றவைசேர்ந்திடார்.

(இ-புரை) மேலான மகிமையுஞ் சிறப்புமுள்ள சிவசரித்திரஞ் சொல்லுகின்றவர்கள் தாங்குகிற ஆசனமில்லாமல் தரையிலிரார்கள். அவ்விடத்திலிருக்கும் யாரையும்வந்தியார்கள். தீயவர்களிருக்கிற புல்லியசபையிற்சேரார்கள். எ-று. .(௧௨)

சிறியர்தீக்களிசெய்யுமிடத்தினு
மறிவிலாளர்சூதாடுமரங்கினு
முறவில்வஞ்சியருண்டாட்டிடத்தினும்
பொறியிலாளர்பொருந்துமிடத்தினும்.

(இ-புரை.) அற்பமாகப் பாவத்துக் கேதுவாகிய சிறப்புகள் செய்யுமிடத்திலும், அறிவில்லாதவர்கள் சூதாடும் அரங்கத்திலும், தத்தங்கணவர்களுடன் மாதர்கள் விளையாடிக்கொண் டிருக்குமிடத்திலும், அங்கப்பழுதானவர்களிருக்குமிடத்திலும், ஏ-று, (௧௩)

கம்பமால்கரிநல்கினுங்கண்ணக
லிம்பர்நாடுமுழுவதுமீயினுஞ்

செம்பொன்மாரிபொழியினுஞ்செஞ்சடை
நம்பன்காதைநயந்துநவிற்றிடார்.

(இ-புரை,) அசைதலை யியல்பாகவுடைய பெரிய யானையைக்கொடுத்தாலும், இடமகன்ற இவ்வுலகத்தில் நாடுகொடுத்தாலும், பொன்மாரிவருஷித்தாலும், செஞ்சடையையுடைய பரமசிவனது சரித்திரத்தை விரும்பிச் சொல்லார்கள். எ - று. (௧௪)

மூவராதிமுழுதுலகத்துள
தேவர்வாழுஞ்சினகரமுன்னருந்
தூவுதண்ணறவுண்டுசுரும்பிமிர்
பூவர்சோலைப்புனிதவிடத்தினும்.

(இ-புரை.) திரிமூர்த்திகள் முதலிய எல்லாவுலகங்களிலுமிருக்கிற தேவர்களும் வீற்றிருக்கும்படியான ஆலயங்களின் முன்னும், பெருகாநின்ற குளிர்ச்சி தங்கிய தேனையுண்டு வண்டுக ளிசைபாடிக்கொண் டிருக்கத்தக்க மலர்களையுடைய சோலையாகிய புனிதமுள்ளவிடத்திலும், எ - று. (௧௫)

தீதிலாதசெழுநதிதீரத்துங்
கோதிலார்கள்குழீயவிடத்தினும்
வேதவேதியர்வேள்வித்தலையினு
மாதிமாதவரம்மனைமுற்றத்தும்.

(இ - புரை.) தீமையில்லாத செழுமையுள்ள நதிதீரத்திலும், குற்றமில்லாதவர்களாகிய நல்லவர்கள்கூடிய இடத்திலும், பிராமணர்கள்செய்யும் யாகசாலையினிடத்திலும், ஆதியாகிய முனிவர்களுடைய ஆசிரமத்தினிடத்திலும்,

மற்றும்வேறுளபுண்ணியமல்குசீ
ருற்றதெவ்விடமவ்விடத்தோதுவர்
பற்றிநாளும்பரமன்றிருக்கதை
முற்றுமோதிமுழுதுணர்கேள்வியார்.

(இ - புரை.) இவ்விடங்களிலு மல்லாமல் இன்னுமிருக்கிற புண்ணியம் பொருந்திய சீரினையுடையது எவ்விடமோ அவ்விடத்திலும், வேதாகம சாஸ்திரபுராணங்கள் முழுவதையு மோதியுணர்ந்த பெரியோர்கள் அன்புடன் சிவகதையை நாள்தோறுஞ் சொல்வார்கள். எ - று. (௧௭)

நாயகன்கதைநாடொறுங்கேட்குநர்
தூயநீரினிற்றோய்ந்துவெண்ணீறணிந்
தேய்ந்தித்தக்கருமமியற்றிப்பின்
காயவைம்புலனுங்கருத்தொன்றியே.

(இ - புரை.) பரமசிவனுடைய சரித்திரத்தையே தினந்தோறுங் கேட்பவர்கள், பரிசுத்தமுள்ள தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து விபூதியணிந்துகொண்டு தங்கள் வருணாச்சிரமத்துக்குரிய நித்ய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு சரீரத்தைப்பொருந்திய ஐம்புலன்களும், கருத்தும், ஒருவழிப்பட்டு,எ-று.

வல்லதேசிகனுக்குமணித்தவி
சொல்லைநல்கியுறுபொருளீந்துநன்
கல்லவாணிகளத்தலடங்கிவன்
புல்லரானவரைபபுறம்போக்கியே.

(இ - புரை.) சிவகதை சொல்லவல்ல ஆசாரியனுக்கு விரைவாக ரத்திநாசனங்கொடுத்து, மிகுந்தபொருளுங்கொடுத்து, நல்லதல்லாததாகியவார்த்தைகளைப் பேசுதலைவிட்டு,மிகவும் புன்மையானவர்களைப் புறத்திற்போக்கிவிட்டும்,

பத்தியோடொல்குபாவகத்தோடுரு
வொத்தநற்றவிசேறலொழித்துதல் ௩ா
வித்தகற்குக்கீழ்மென்றவிசொன்றியே
சித்தம்வேறறக்கேட்பதுசெவ்விதால்.

(இ - புரை.) பத்தியுடனும் ஒடுக்கமுள்ளபாவகத்துடனும் பொருந்திச் சிவகதை சொல்லுகின்றவ ராசனத்துக்குச் சரியான நல்ல ஆசனத்திலிருப்பதை யொழித்து அவராசனத்துக்குத்தாழ்ந்தஆசனத்திலிருந்துகொண்டு, மனம் வேறோரிடத்திற் செல்லாதவண்ணமாகக் கேட்குதல் நன்மையாம்.எ-று.(உ0)

அன்றிக்கேட்குமிடத்தழுக்காற்றினாற்
கன்றிவேறோர்பொருளினைக்கற்பிப்பா
ரொன்றலாததுரைத்தெதிர்வாதிப்பார்
பன்றியாயிந்தப்பாரிலுதிப்பரே.

(இ - புரை.) இவ்வாறன்றிக் கேட்குமிடத்தில் பொறாமையினால் மனம் வெதும்பித் தங்கள்கற்பனையால் வேறொரு பொருளைச் சொல்லுகின்றவர்களும், பலபலவாறாகச்சொல்லி யெதிரில் வாதுசெய்கின்றவர்களும், இவ்வுலகத்தில் பன்றியாய்ப் பிறப்பார்கள். எ - று. (உக)

அன்பினிற்கதைகேட்பதலாற்பிறர்
வன்பினெய்திமனம்வைத்துக்கேட்பவர்
துன்பமெய்துசுடலையிலோங்கிய
வின்பமில்கனியெட்டியதாகுவார்.

(இ - புரை) அன்புடன் சிவகதையைக் கேட்பதைவிட்டுப் பிறருடைய வன்மையினில் மனம்வைத்து அவர்கள் சொல்லும் வேறொன்றைக் கேட்பவர்கள், துன்பம்பொருந்திய சுடலையில் ஓங்கிய மதுரமில்லாதபழத்தையுடைய எட்டிமரமாவர். எ - று. (உஉ)

கூறுமாக்கதைகூட்டுமுனைப்பனை
வேறுதங்கருமத்துவிரைந்துபோஞ்
சீறுசிந்தையர்செல்வத்தைத்துய்க்குங்கா
லீறுசெல்லாதிடையிலிழப்பரே.

(இ - புரை.) சிவகதையை ஆரம்பித்து முடிப்பதற்குமுன் மத்தியில் வேறாகிய தங்கள்காரியத்தைக் குறித்து விரைந்துபோய்விடுகின்ற மூர்க்கமன முள்ளவர்கள், நல்வினையினுல் செல்வத்தை அனுபவிக்குங்காலத்தில், தங்கள் ஆயுள்வரையில் அனுபவியாமல் மத்தியிலிழந்துவிடுவார்கள். எ - று. (உ௩)

மஞ்சமேறியும்வெள்ளிலைமாந்தியு
நஞ்சமுண்டவர்நற்கதைகேட்குந
ரஞ்சியோவென்றரற்றிக்கழுநுனைத்
தஞ்சமாகக்கிடந்துதவிப்பரே.

(இ - புரை.) மஞ்சத்தின்மேலேறி யிருந்துகொண்டும், தாம்பூலம் போட்டுக்கொண்டும், விஷபானஞ் செய்தருளியபரமேசுவரனுடைய சரித்திரத்தைக்கேட்பவர்கள் பயந்து ஓவென்று அழுதுகொண்டு கழுமரத்தி னுனியே தஞ்சமாக அதிலிருந்து தவிப்பார்கள் எ - று. (உ௪)

கயிலையண்ணல்கதையைநிகழ்த்துழித்
துயில்புரிந்திடுந்தொல்வினைப்பாதகர்
வெயில்கரந்தடுவெங்கொடிக்கஞ்சியே
யயின்முட்காட்டுறைகூகையதாகுவார்.

(இ - புரை) கயிலாசபதியின் சரித்திரத்தைச் சொல்லுமிடத்தில், நித்திரை செய்கின்ற பழைய வினையையுடைய பாவிகள் தன்னைக்கொல்லுகின்ற கொடிய காக்கைகளுக்குப் பயந்து பகலிலொளித்துக்கொண்டு இருண்டிருக்குங்காட்டில் வாசஞ்செய்கிற கோட்டானுவார்கள். எ - று. (உ௫)

படர்ந்தவேணிப்பரமன்றிருக்கதை
கிடந்தசேக்கையிற்கேட்குமறிவிலோர்
மிடைந்தமால்வரையுச்சிவிடர்புகுந்
தடைந்தமாசுணமாகிப்பிறப்பரே.

(இ - புரை.) விரித்தசடையையுடைய பரமேசுவரனது சிறப்புள்ள சரித்திரத்தைப் படுத்திருந்த பாயலி லிருந்தபடியேகேட்கும் அறிவீனர்கள் நெருங்கிய பெரியமலையின் உச்சியிலிருக்குங் கல்வெடிப்புச்சந்துகளில் புகுந்துகொண்டிருக்கும் பாம்பாய்ப்பிறப்பார்கள். எ - று. (உ௬)

ஈசன்காதைசொல்வானன்றியின்னுமோர்
தேசிகன்பிறனுண்டென்றுசெப்புமோ

காசுதீர்க்குங்கதைவிளக்கங்கொடு
மாசின்மாக்கண்மனவிருணீக்கலால்.

(இ - புரை) சிவகதைசொல்லுகின்றவனையன்றி வேறேயொரு ஆசிரியனுமுண்டென்று வேதாகமங்கள் சொல்லுமோ? (எனெனில்) குற்றங்களைத்தீர்க்கத்தக்க சிவசரித்திரமாகிய தீபத்தைக் கொண்டு பழுதில்லாத மனிதர்கள் தங்களுடைய மனவிருளை நீக்குதலினால், எ - று. (உஎ)

ஆதலாற்கதைகேட்குமவையினைப்
போதமொன்றியபுண்ணியமாந்தர்கள்
பாதகந்தவிர்க்கும்பயபத்தியாய்
நாதனல்லவையென்றெண்ணிநண்ணுவார்.

(இ - புரை.) ஆகையால் சிவகதைகேட்குஞ் சபையை ஞானம்பொருந்திய புண்ணியவான்கள் பாவத்தை நீக்கும்படியான பயபத்தியுடன் பரமேஸ்வரனுடைய சந்நிதியென்றுகருதி மேற்சொல்லியகுற்றம் யாதொன்றுமில்லாமலிருந்து கேட்பார்கள். எ - று. (உஅ)

வேறு.

இத்தகையகதையான்முன்னியன்றகதையொன்றுரைப்பாந்
தத்துதிரைமணிகொழிக்குந்தடங்கடற்செந்தமிழ்நாட்டின்
மைத்தொகுபூம்பொழிலுடுத்தவாட்களமாமுதுநகரில்
வித்தகராயினிதுறையும்வேதியர்களனைவோரும்.

(இ - புரை.) சிவகதையானது இத்தன்மையுள்ளகதையாகும். இனிமுன்னடந்ததொரு சிவகதைசொல்லுகிறோம். தாவிமேலெழுகின்ற அலைகள் முத்துகளைக்கொழிக்கும் பெரியசமுத்திரத்தையுடைய தமிழ்நாடாகிய பாண்டிநாட்டில், மேகங்கள்சேரும்படி பூஞ்சோலைசூழ்ந்த வாட்களமென்னும் பழையநகரத்தில் ஞானவான்களா யினிதுடன்வாழும் பிராமணர்களெல்லாரும், எ-று. (உக)

தீப்பேணுந்தொழிறிறம்பிப்படைதரித்தசெங்கையராய்
நாப்பேணுமந்திரமுநற்றொழிலுநனிமறந்து
பூப்பேணியான்கழலிலருச்சிக்கும்புந்தியின்றி
மீப்பேணுங்கடவுளர்தமுப்போதைக்கடனும்விட்டார்

(இ - புரை.) நித்தியாகுதிசெய்யுந் தொழில்மாறி, ஆயுதமேந்திய கையையுடையவர்களாய், நாவினாலுச்சரிக்கும் மந்திரத்தையும் நற்கருமங்களையு மிகவு மறந்து, மலர்களெடுத்து அன்புடன் பரமேசுவரனுடைய திருவடிகளிலருச்சிக்கவேண்டுமென்கிறவிவேகமுமில்லாமல் வானுலகில்வாழுங்கடவுளர்களைவந்திக்கத்தக்கதான திரிகாலச் செய்தொழிலையுமறந்துவிட்டார்கள், எ - று. (௩௦)

ஆரணமுந்தனியோதாரந்தணருக்கடாக்கரும
காரணமாகீசர்தொழில்கடைப்பிடித்தமறையோருள்
வாரணிநற்கும்பமுலைவஞ்சுளைதன்மணக்கொழுநன்
ஞாணிக்குள்விதுரனெனப்பெயருடையோனொருவன்.

(இ - புரை) நான்குவேதங்களையுந் தங்களுடையதாகஓதாதவர்களாய்ப் பிராமணர்களுக்குரியதல்லாத செய்கைக்குக் காரணமாகிய அற்பதொழிலை அனுசரித்திருக்கும் பிராமணர்களில் கச்சணிந்த கும்பம்போன்ற தனங்களையுடைய வஞ்சுளையென்பவள் கணவனாகிய இவ்வுலகத்தில் விதுரனென்று சொல்லும்பெயரையுடையனொருவன், எ - று. (௩௧)

பண்பில்லாநெறிபூண்டோன்படிற்றொழுக்கின்றலைநின்றோ
னண்பினூற்பொதுமகளிரிளமுலையினலந்துய்த்து
வெண்பலாலரவுமிழ்ந்தவிடந்தலைக்கொண்டெனக்காமுற்
றொண்பொனூர்தடமார்பன்றன்மனையையொழிந்திட்டான்.

(இ - புரை.) நன்மையில்லாத ஒழுக்கத்தையுடையவனும் மேலுக்குமிகவும்ஆசாரமுடையவனாகவும் உள்ளே அவ்வளவுக்கும் அசுசையோடிருப்பவனும் ஒளிபொருந்திய பொன்மாலையணிந்த மார்பையுடையவனுமாகிய அந்த விதுரனென்பவன் நேசத்துடன் பொதுமகளிருடைய இளமைதங்கிய தனங்களின் போக இன்பத்தை மேற்கொண்டு பாம்பானது வெண்மைநிறந்தங்கிய பற்களினூற் கக்கிய விஷந்தலைக்கேறியதுபோலக் காமந்தலைக்கேறவும் தன்மனைவியினிடத்தி லனுபவிக்குங்கலவியின்பத்தை யொழித்து விட்டான். எ - று. ()

துணைபிரிந்தமடவன்றிற்பேடைபோற்றுயருழந்து
கணமலிந்தகங்குற்றோறுங்காமசரத்தாலலைந்து
பிணைநெடுங்கண்டுயின்மறப்பவிரகத்தாற்பெரிதுணங்கி
மணமலிந்தசுருளோதிவஞ்சுளையுமிதுசெய்தாள்.

(இ - புரை) வாசனைபொருந்தியதாய்ச் சுருண்ட அளகத்தையுடைய வஞ்சுளையானவள் தன்துணையாகிய ஆணன்றிலைப் பிரிந்த பெட்டை யன்றிலைப் போலத்துயரங்கொண்டு பேய்கள்கூடி சஞ்சரிக்கும் இராக்காலந்தோறுங்காமபாணத்தினால் அலைந்து மான்பார்வைபோன்ற கண்களிரண்டும் நித்திரைநீங்கவும் விரகத்தினால் மிகவும் வருந்தி இவ்வாறு செய்யத் தொடங்கினாள். எ - று. (எவ்வாறெனில்) (௩௩)

காதலானறனொருவிக்கற்புநிறைவரம்புமிகந்
தேதிலானிழிகுலத்தோனொருவனெழிற்றோணசையாற்
றூதுலாமலரணையிற்றனிக்காமலவிடாய்தவிர்வான்
மாதராடணவாதுமருவுநாடனிலொருநாள்.

(இ - புரை.) விரகதாபத்தினால் தர்மவழியை முற்றும் நீங்கிக் கற்புநிலையாகிய வரம்பினையுங்கடந்து வஞ்சுளையானவள் அன்னியனாகிய ஒரு இழிகுலத்தவனுடைய அழகுள்ளதோளைப் புணரும் விருப்பத்தினால்மகரந்தம்நிறைந்த மலரணையில் தனக்குள்ள காமவிடாய் தவிரும்பொருட்டு ஒருநாளாவது தவிராமல் போகித்துக்கொண்டிருக்கும்நாளி லொருநாள். எ - று. (௩௪)

பழியுரைதன்செவிவெதுப்பப்பைங்தொடிதன்கற்போர்வான்
பொழிமழையினரையாமந்தமியனாய்ப்புகுந்திடலுங்
கழையிளந்தோள்வஞ்சுளையுங்காளையொருவனுமனைவாய்
விழைவுடன்மென்பூவணைமேன்மெய்குழையநலனுகர்ந்தார்.

(இ - புரை) (இவள்நடக்குங் காரியம் ஊரறிந்து பேசிக்கொள்ளும் பழிமொழிதன்காதுகளைச்சுடுதலினால் விதுரனென்பவன் வஞ்சுளையின் கற்புநிலையையறிய மழைபொழிந்துகொண்டிருக்கும் அர்த்தராத்திரியில் தனியாக தன் மனைக்குச்சென்றபோது, இளமையான பசியமூங்கிலையொத்த தோள்களையுடைய அவளும் ஒருவாலிபனுமாக வீட்டுக்குள் விருப்பமுடன் மெல்லிய பூவணைமேல் மெய்குழையப் புணர்ந்துகொண்டிருந்தார்கள். எ - று. (௩௫)

கண்டனன்றுண்ணெனுநெஞ்சன்கதமெழரிபோனெடுஞ்சீற்றங்
கொண்டடையப்படிற்றொழுக்கன்வெருவிமனங்குலைந்தகன்றான்
வண்டுமுரல்குழல்பற்றிவஞ்சுளையைமனங்கலங்கத்
தண்டமிழைக்குவனென்னுத்தாட்டுணையாற்றுகைத்திட்டான்.

(இ - புரை.) அவர்கள் இவ்வாறிருப்பதைக்கண்டு திடுக்கிட்ட மனமுள்ளவனாய்ப் பற்றியெரியுந் தீப்போலமிகுந்த கோபங்கொண்டு வருவதை அந்தச் சோரன் பார்த்துப்பயந்து மனமழிந்து ஓடிப்போனான். வண்டுகளிசைபாடிக்கொண்டிருக்கும்படியான அளகத்தைப் பிடித்துக்கொண்டு வஞ்சுளை மனங்கலங்கும்படி தண்டிக்கிறேன்பார் என்று தன்கால்களால் மிதித்தான். எ - று. ()

கனங்குழையுமிகமறுகிக்கணவநீயென்னுரையுஞ்
சினங்குறைந்துகேட்டதற்பின்செகுத்திடுதியெனவிரப்ப
மனங்குழைந்துபுடையாளுய்மலர்க்குழல்விட்டுரையெனலுந்
தனங்களிற்கண்ணீரொழுகத்தளிரியலுமிழற்றுவாள்.

(இ - புரை.) (இரத்தினங்கள் பதித்திருப்பதினால்) பளுவான குழையணிந்த காதுகளையுடையவளாகிய வஞ்சுளையானவள் மிகுதியாக மனம்வருந்திக் கணவனே! கோபந்தணிந்து என்வார்த்தையையுங்கேட்டுப் பிற்பாடு கொன்றுபோடென்று பிரார்த்திக்கவே மனமிரங்கி அடிக்காமல் அளகத்தைவிட்டு நீ சொல்வதைச்சொல்லென்றவளவில் தன்னுடைய தனங்களின்மேல் கண்ணீ

ரானது ஆருயிப்பெருகும்படி அழுதுகொண்டு துளிர்போன்றதன்மையுள்ளவள் சொல்லுகிறுள் எ - று. (௩௭)

வன்கணுலறநெறிவிட்டுப்பொதுமாதர்வசமாகி
யென்கணூர்வமுமின்றியின்றளவுமிகந்தனைநா
னுன்கணுலருணோக்கம்பெறுதுருகியுடன்மெலிந்து
புன்கணுல்வேனிலான்கணைக்கிலக்காய்ப்புழுங்கினனே.

(இ - புரை.) கடினமனத்தினுய் நன்னெறியைவிட்டுப் பொதுமாதர் வசமாகி என்னிடத்தி லாசையுமில்லாம லின்றளவும் நீங்கிவிட்டாய் நான் உன் கிருபாநோக்கம் பெறுமல் நெடுநாளாக மனமுருகியுடல் மெலிந்து துயரங் கொண்டு மன்மதபாணங்களுக்கு இலக்காக வருந்தினேனே! எ - று. (௩அ)

நல்லிளமைசெவ்விநலநாளும்வறிதேகழியக்
கொல்லுலையினங்கியெனக்காமக்கனல்கொளுந்த
வல்லியம்போற்றென்றல்வரவாணிலவுந்தெண்கடலு
மல்லல்செயக்கங்குலெறுமாற்றுதேனுயினனே.

(இ - புரை.) நல்ல இளமைப்பருவமும் அழகும் பெண்ணலனும் நாள் தோறும் வீணுகிவிடும்படி கருமானுலைக்களத்திலுண்டாகுந் தீபோலக் காமாக் கினி சுடவும் புலிபோலத்தென்றல்வந்து வீசவும் ஒளிபொருந்திய சந்தி ரனுந் தெளிவுள்ள சமுத்திரமும் துன்பஞ்செய்யவும் இராத்திரி காலந்தோ றுஞ் சகிக்கமாட்டாதவளானேனே! எ - று. (௩௯)

காவலநீமேவுவையெனநினைந்துநாட்
ளுவல்பெருகத்தமியேனுற்றேனுய்த்தவறிழைத்தேன்
பூவர்குழன்மாதருக்குங்காளையர்க்கும்பொதுவன்றே
மேவரியபெருங்காமமெனவிம்மிவிளம்பினுள்.

(இ - புரை.) கற்பின் கடைநிற்குங் கணவனே! இத்தனை நாள்வரைக் கும் நீவருவையென்று கற்புநிலையைக் காத்துக்கொண்டிருந்தேன்; நீவராமை யினுல் காமம் அதிகரிக்கவே தனியாயிருக்கும் நான்சகிக்கமாட்டாமல் குற்றஞ் செய்தேன்; காமமானது மாதருக்கும் ஆடவர்களுக்கும் பொதுவல்லவாவென் று அழுதுகொண்டு சொன்னுள். எ - று. (௪0)

இரங்கினன்றன்பாற்றவறென்றெண்ணினன்கேட்டிளங்கொடிநீ
மரங்களொடுகெற்குழையமாழ்கியாற்றுதல்வேண்டா
தரங்கம்பொங்குகடலனையகாமநோயதப்பவரார்
சுருங்கவினியொருசூழ்ச்சிசொல்லுகிறேன்றுணிகென்று.

(இ - புரை.) (அவளிவ்வாறு சொல்லியதைக் கேட்டுத் தன்னிடத்திற் குற்ற மிருக்கின்றதென்றெண்ணி) யிரங்கி இளங்கொடிபோன்றவளே! மரங்களு மலைகளுங் குழையும்படி நீ அழுது சோரவேண்டுவதில்லை: அலைகளையுடைய சமுத்திரம்போலப் பெரிதாகிய காமநோயை நீக்கத்தக்கவர்களொருவருமில்லை; இப்போதுனக்கொரு உபாயஞ்சுருக்கமாகச் சொல்லுகிறேன் அந்தப்படிசெய்யென்று, எ - று. (சுக)

அந்தணரேயாகவிழிகுலத்தோர்தாமாக
வந்தவரையெல்லாம்வரையாதுமேவியவர்
தந்தபொருண்முற்றுமெனக்களித்துன்றூகமறச்
சிந்தைமயறீர்வளவுஞ்சேர்குவாயெனப்பணித்தான்.

(இ - புரை.) பிராமணர்களேயானாலும்சரி அவர்களுக்குத் தாழ்ந்தவருணத்தார்களேயானாலும்சரி வந்தவர்களையெல்லாம் நீக்கிவிடாமல் புணர்ந்து அவர்கள் கொடுத்தபொருள்களையெல்லாம் எனக்குக்கொடுத்து உன்காமவிடாய் தீரும்படி மனதிலுண்டாயிருக்கு மையல் தீருகிறவரைக்கும் சேர்ந்துகொண்டிருவென்று கட்டளையிட்டான். எ - று. (சுஉ)

நாறுமலர்க்கோதாய்நீநல்கும்பொருள்கொடுத்து
வீறுபெருங்கொங்கைவிலைமகளிர்தாள்விரும்பி
யூறியவெங்காமமொழியநலந்துய்ப்பனெனக்
கூறியதுகேட்டதற்குக்கொற்றொடியுந்தானிசைந்தே.

(இ - புரை.) வாசமிகுந்த பூமாலையணிந்த அளகத்தையுடையவளே! நீ கொடுக்கும்பொருளையெல்லாம் பூரித்திருக்கும் பெரியதனங்களையுடைய விலைமாதர்களுக்குக்கொடுத்து அவர்களைப்புணர்ந்து எனக்குண்டாகியகாமம் ஒழியும்படி யின்பம் அனுபவிக்கிறேனென்று சொல்லியதைக்கேட்டு அதற்கு அவளுஞ் சம்மதித்தாள். எ - று. (சுங)

அன்னதுவேசெய்வனடியனேனென்றிறைஞ்சி
மின்னிடையாள்சாலமகிழ்ந்துவெளிப்படையாத்
துன்னினார்தம்மையெல்லாந்தோடோய்ந்தவரளித்த
பொன்னையெல்லாங்கேள்வனுக்கேயீந்தாள்பொலங்கொடியே

(இ - புரை.) அடியேன் அப்படியே செய்கிறேனென்றுகணவனைவணங்கி மின்போன்ற இடையையுடைய வஞ்சனை மிகவும் வெளிப்படையாக வந்தவர்களையெல்லாம் புணர்ந்து அவர்கள் கொடுத்த பொருளையெல்லாந் தன்கணவனுக்குக் கொடுத்தாள், எ - று. (சுச)

ஆங்கவனுஞ்செம்பொனளப்பிலகொண்டன்றன்றே
பூங்கணிகைமாதர்புகழநனிவழங்கித்

தீங்கனிவாயின்னமுதமுண்டுசிலநாள்கழிய
வீங்கியமூப்பெய்திவினைதூரப்பத்துஞ்சினன்.

(இ - புரை.) அந்த விரதனென்பவன் தன்மனைவிகொடுக்கிற பொருளை யெல்லாம் அப்போதைக்கப்போதே அழகுள்ள வேசையர்கள் புகழும்படி அதிகமாகக்கொடுத்து மதுரமுள்ளபழம்போல இனிப்புள்ள அவர்களுடைய அதரபானமுண்டு சிலநாள் நீங்கினபின் மிகுந்த மூப்படைந்து இறந்தான். எ - று.

தன்கணவன்பொன்றத்தளிரியலுங்கைம்மையுற்று
மின்குலவுபொற்கலனுநீத்துமிகமூப்பெய்திப்
புன்கணுறுகாலைப்புராரிசிவராசிக்கு
நன்குணர்வோரெல்லோருங்கோகன்னநண்ணினர்.

(இ - புரை.) தன்கணவ னிறந்துபோகவே வஞ்சுளையானவள் கைம்பெண்ணாகிப் பிரகாசிக்கும் மங்கிலியத்துடன் பொன்னாபரணங்களும் நீக்கிவிட்டு மிகுந்தமூப்படைந்து துன்பப்பட்டுக்கொண் டிருக்குங்காலத்தில் பரமசிவனுக்குரிய தினமாகிய சிவராத்திரி தரிசனத்துக்குப் பத்திமான்களெல்லாம் கோகன்னத்துக்குப்போனார்கள். எ-று. (௬௬)

அற்றைப்பொழுதிலணியிழந்தவஞ்சுளையுஞ்
சுற்றத்தொடும்போயத்தொன்னகரின்பாலடைந்து
கொற்றக்கொலைமழுவோன்கோடிதீர்த்தம்படிந்து
கற்றைச்சடையான்றிருவடியைக்கைதொழுதாள்.

(இ - புரை.) கைம்பெண்ணாயிருக்கும் வஞ்சுளையும் சிவராத்திரிதினத்தில் அவிடத்துக்குப்போகின்ற சுற்றத்தாருடன் தானும்போய்ப்பழமையாகிய கோகன்னஞ்சேர்ந்து வெற்றிபொருந்திய கொலைமழுவேந்தியபரமசிவனுடைய கோடிதீர்த்தத்தில் முழுகிக் கற்றையாகிய சடையையுடைய பரமசிவன் திருவடியைத்தொழுதாள். எ - று. (௬௭)

மீட்டுந்திருக்கோயில்சூழ்வருங்கால்வேறொருசார்
தீட்டுஞ்சிவதருமம்யாவுமொருதேசிகன்றா
னேட்டின்புறத்தினிய லுணர்ந்துவாசிப்பக்
கேட்டஞ்சியின்னல்கிளரநடுங்கிநின்றாள்.

(இ - புரை.) மறுபடி ஆலயத்தைப் பிரதக்ஷிணஞ் செய்யும்போது அங்கொருபக்கத்தில் எழுதி வாசிக்கும்படியான சிவதருமமெல்லாம் ஒருதேசிகன் புத்தகம்வைத்துக்கொண்டு வாசித்துப் பொருள்சொல்லக்கேட்டுப்பயந்துமின்று துன்பமுண்டாக நடுக்கிநின்றாள். எ - று. (௬௮)

அக்காதைகூட்டுமிறுதிக்கணந்தன்றன்முன்
புக்காடொழுதாள்புராணபுராதனனே

யிக்காதைசொல்பொருளினெண்ணரியபாவங்கலை
தொக்கார்படுவதெல்லாஞ்சொன்னயவற்றுள்ளே.

(இ - புரை.) அந்தச் சரித்திரத்தைக் கூட்டுமுடிவில் தேசிகரிடத்தில் போய் அவர்பாதந்தொழுது அய்யா புராணிகரே! இந்தச் சரித்திரத்தில் சொல்லுகின்ற பொருளினுல் அளவிறந்த பாவஞ்செய்கின்றவர்கள்படும்பாடெல்லாஞ் சொன்னீர் அவைகளுக்குள். எ - று. (௬௯)

காமவசத்தாற்கணவற்பிழைத்தசெழுந்
தாமருலையார்தமையொறுக்குந்தண்டத்தான்
வாமநிதம்பமுருகவழன்மடுத்துச்
சேமமுசலஞ்செலுத்துவானென்றுரைத்தாய்.

(இ - புரை.) காமவசத்தினுல் கொண்டவனைவிட்டுச் சோரம்போன மாதரையெல்லாம் தண்டிக்கும் கூற்றுவன் செழுமையுள்ள மாலையணிந்தமுலையையுடைய அவர்களழகிய நிதம்பத்தில் தீயில் காய்ந்தமுசலமென்னும் இருப்புலக்கையைச் செலுத்துவா னென்றுசொன்னீர். எ - று. (௭௦)

கற்புநிலைகடந்தகாமக்கயத்தியரை
நற்பகத்திற்றாண்டிவிட்டுநான்றலையமேற்றூக்கிப்
பற்பலகூறுகமழுவாய்ப்படத்துணித்து
வற்புறுத்திக்காய்ந்தமணல்சொரிந்துதீய்ப்பரென்றாய்.

(இ - புரை.) கற்புநிலைதவறிய காமிகளாகிய கீழ்மைத்தனமுள்ள மாதர்களின் குறியினிடத்தில் தூண்டில்மாட்டித் தொங்கியலையும்படி மேலேதூக்கிப் பலபலதுண்டாகும்படி கோடாலியினுல் வெட்டித் துணித்து உறுதிப்படுத்திக் காய்ந்தமணலைச்சொரிந்து தீய்ப்பார்களென்றுசொன்னீர். எ - று. (௭௧)

காப்புக்கடைகழித்தகாமக்கிழத்தியரைச்
சேப்பவுலைகாய்ந்ததிரளிருப்புநீள்கழுவிற்
பூப்பொருவுமல்குலழலப்பொதுத்தேற்றிக்
கோப்பர்நெடுங்காலமெனவெடுத்துக்கூறினய்.

(இ - புரை.) காவலிடத்தைக்கடந்த காமிகளாகிய கீழ்மைத்தனமுள்ள மாதரைச் சிவக்கும்படி தீயில்காய்ந்த திரண்டதாகிய நீண்டகழுவில் பூவைப்போல மிருதுவாகிய அல்குல் வெதும்பத்தக்கதாகக் குத்தியேற்றி நெடுங்காலம் வைப்பார்களென்று சொன்னீர். எ - று. (௭௨)

நம்புகொழுநர்நீங்கியொருவுநங்கையர்தஞ்
செம்பொனகலல்குலின்வாய்ச்செம்புருக்கிவிட்டதனுற்

பம்புபுழுக்கலிப்பநாய்தசையைப்பற்றியுண
வெம்புபறவைவிருந்தயரவோய்வரென்றாய்.

(இ-புரை.) நம்பிய கணவரிடத்தி லிருக்கும் நிலைமாறிய மாதர்களுடைய செம்பொன்னிறமுள்ள அல்குலில் செம்பினை யுருக்கிவிடுவதினால் நிறைவாகப் புழுக்களுண்டாகவும் நாயானது தசையைப் பிடுங்கியுண்ணவும் கொடியபருந்து முதலியபக்ஷிகள் விருந்துண்ணவும் அம்மாதர்கள் சோர்வார்களென்றீர். எ-று.

கொண்டோற்பிழைத்தகொழுங்கயற்கண்மங்கையரைக்
கண்டோர்மனநடுங்கக்காரிருப்புத்தீயகலில்
விண்டேயுடலம்வெடிக்கவறுப்பரெனத்
தண்டேய்கரத்துத்தவமுனிவேயசாற்றினாய்.

(இ - புரை.) ஒருகையில் தண்டம் ஏந்தியதவமுனிவரே! கொண்டவனை விட்டு மற்றொருவனைப்புணர்ந்த செழுமையான சேற்கெண்டையொத்த கண்களையுடைய மாதர்களைப் பார்த்தவர்கள் மனமும் நடுங்கும்படி தீயிற்காய்ந்த கருமையுள்ள இரும்புத்தகழியிலிட்டு உடல் வெடிக்கும்படி வறுப்பார்களென்று சொன்னீர். எ - று. (௫௪)

நாயடியேனின்னவெலாங்கேட்டுநடுநடுங்கித்
தூயமுனிவானேதுன்பக்கடல்வீழ்ந்தேன்
காயும்விடமனையகாமந்தலைக்கொள்ளச்
சேயபருவத்தேகற்பின்றிறம்பிழைத்தேன்.

(இ-புரை.) பரிசுத்தராகிய முனிவரே! கொல்லும்விடத்தையொத்த காமந் தலைக்கொள்ள இளமைப்பருவத்தில் கற்புநிலை கெட்டிருந்தேன் ஆதலால் நாயனையேனிவைகளையெல்லாங் கேட்டு நடுநடுங்கித் துக்கசாகரத்தில் முழுகினேன்.

குலமகளிர்க்கேலாதகொள்கையைமேற்கொண்டே
நிலைமையில்லாத்தீப்பெண்டீர்நிற்குநிலைநின்றேன்
கலநிழந்துமூப்பெய்துகாறுமியான்செய்த
பலவினையின்பாதகத்தைப்பாரிலெவர்செய்தார்.

(இ - புரை) குலமாதர்களுக்குத்தகாத செய்கையை மேற்கொண்டு கற்புநிலையில்லாத கொடியமாதர்களிருக்கும் நிலைமையிலிருக்கிறேன் மங்கலகாணிழந்து மூப்புவருமட்டும் நான்செய்தபாவம் உலகத்தில் ஒருவருஞ்செய்திரார்கள்.

ஆதலாலீண்டெனக்குச்சாக்காடுமெண்ணியது
நீதிலாவேதியரீசெப்பியகாதைப்படியே
கோதிலாயபுழுக்கும்பியிடைவீழ்வதுமெய்
யீதினுள்ளமுடைந்தெண்ணாதெண்ணுகின்றேன்.

(இ - புரை.) ஆகையினு லெப்போது எனக்குச் சாக்காடுஞ் சமீபித்திருக்கின்றது தீமையில்லாத முனிவரே! நீர்சொல்லிய சிவகதையின்படி நான்செய்தபாவத்தினுல் புழுக்கள் நிறைந்தநரகத்தில்விழுவதுமெய்யே இதனுல் மனம் உடைந்து எண்ணுததும் எண்ணுகின்றேன். எ - று. (௫௭)

காய்ந்துநமன்றூதர்கனன்றுருத்துத்தண்டிக்கி
லாய்ந்ததவமில்லேனையஞ்சலேநீயென்றூற்றி
வாய்ந்தநிரயத்தழலில்வாடாமனுயடியே
னேய்ந்தழுதுமாழ்காமலார்வந்துதவுவார்.

(இ - புரை.) காலதூதர்கள் கோபித்துத் தண்டித்தால் அப்போது நல்ல புண்ணியஞ்செய்யாத என்னை நீ பயப்படாதே யென்று ஆற்றிப்பொருந்தியநரகாக்கினியில் வருந்தாமலும் நாயடியேன் அழுது தளர்ந்து சோராமலும் யார் வந்து உதவிசெய்வார்கள். எ - று. (௫௮)

என்றுபலபலவும்பன்னியிடருழந்து
நின்றுமறைமுதல்வநீயேபுரத்தியெனச்
சென்றுநடுநடுங்கிச்சேவடியில்வீழ்ந்திறைஞ்சிக்
கன்றுமனத்தாள்கலுழ்ந்துறைப்பவேதியனும்.

(இ - புரை.) இவ்வாறு பலபலமொழிகள் சொல்லித் துயர்கொண்டவளெதிரில் நின்று முனிவரே அடியேனைத்தேவரீரே காப்பாற்றுமென்று நடுநடுங்கிச் சமீபத்திற்போய் அவர்பாதத்தில் விழுந்து பணிந்துவெம்புகின்ற மனதையுடையவளாய் அழுதுசொல்ல அம்முனிவர். எ - று. (௫௯)

வீழ்ந்தவடன்கைபற்றிமெல்லவெடுத்தாயிழையே
யாழ்ந்தபெரும்பாதகத்தினச்சமகற்றிடுவாய்
சூழ்ந்துபுரிநினக்கேபின்னிரக்கந்தோன்றுதலா
லூழ்ந்தமலரெனவேநின்னைவிட்டோடுங்காண்.

(இ - புரை.) பணிந்தவள் கையைப்பற்றி மெல்ல எடுத்து மாதே நீ மிகுதியாகச் செய்த பாபத்துக்குப் பயப்படும் பயத்தை நீங்கிவிடு ஆதியில் பாவங்களைச்செய்த உனக்கே யிப்போது பயம் உண்டாயிருப்பதினுல் பதித்தப்பிய பூப்போல உன்பாவமெல்லாம் உன்னைவிட்டோடிப்போம். எ - று. (௬0)

காரிகைநின்மூப்பாற்றவம்புரியக்காலமிலை
மாரியெனத்தானம்வழங்கப்பொருளின்றூற்
சீரியதாய்ப்பாவமகற்றச்சிவகதையாம்
பேரியலொன்றுண்டதன்சீர்பேசக்கடைப்பிடியாய்.

(இ - புரை.) மாதே! நின்னுடைய மூப்பினுல் தவஞ்செய்வதற்குக் காலமில்லை மேலும் மழைபொழிவதுபோலத் தானங்கொடுப்பதற்குப் பொருளுமில்லை யாதலால் மகத்துவமுள்ளதாயுன் பாவத்தை நீக்கச் சிவகதையாகியபுரா

ணமுண்டு அதன்பெருமையைச் சொல்லக்கேட்டு (உன்மனதில்) உறுதியாக வைத்துக்கொள். எ - று. (௯௧)

யானெனதென்றெண்ணியிருவினையுமீட்டுவது
மானதமேயன்றிமடவரலேமற்றில்லை
யானமலமாயையிருளுக்குமஞ்ஞான
வீனமுறுபாவவிருளுக்கும்வெய்யவனும்.

(இ - புரை.) என்னுடைய பொருளென்றும் யான் செய்தேனென்று மெண்ணி நல்வினை தீவினைகளைத் தேடிக்கொள்வது மனதின்செயலேயன்றி வேறொன்றுமில்லை. அதற்கேதுவாகிய ஆணவமல மாயையென்கின்ற இருளுக்கும், அஞ்ஞானமாகிய கீழ்மையுற்ற பாவமென்னு மிருளுக்கும் அந்தச்சிவகதை சூரியன்போலாகும். எ - று. (௯௨)

கொய்யுளைமாவேள்வியொருகோடிசெய்திடினு
மையனதுகாதையருள்பெறும்பேறீந்திடுமோ
பையுளெலாந்தீர்க்கும்பரன்காதைத்தெள்ளமுதை
யுய்யவினிதாயருந்தியும்பர்வீடெய்துதியால்.

(இ - புரை.) கத்திரிக்கும் கழுத்துமயிரினையுடைய குதிரையாற்புரியும் அசுவமேதயாகம் ஒருகோடிசெய்தாலும்,அவைகள் சிவசரித்திரம் அருளிச்செய்யப்பெறும் பேறுகளைக்கொடுக்குமோ? துன்பங்களையெல்லாம் நீக்கத்தக்க சிவகதையாகிய தெளிவுள்ள அமிர்தத்தை நீ உய்யும்படி இனிதாக உண்டு மேலான மோக்ஷத்தை அடைவாயாக எ - று. (௯௩)

முற்றோகையோடுவிரதந்தவமுயலப்
பெற்றோர்மனவிருளைநீக்கப்பெறலின்றாற்
சற்றேதக்கேட்டவருஞ்சாரூபமாவரெனக்
கற்றோர்புகழ்கதையாற்காலங்கழிப்பாயே.

(இ - புரை.) நிறைந்த சந்தோஷத்துடன் விரதங்கள் தவங்கள் செய்யப்பெற்றவர்கள் மனவிருளை நீக்குந்தன்மை பெறுதலில்லை, கொஞ்சங்கேட்டவர்களும் சாரூபம் பெறுவார்களென்று கற்றவர்கள் சொல்லத்தக்க சிவகதையால் உன்காலத்தைக் கழிப்பாயாக. எ - று. (௯௪)

உண்டுதலைநாளிற்சாமளனென்றோதுபெயர்
கொண்டபெரும்பாவியவன்வாளுள்குறுகியநா
ளண்டர்பிரானுமம்புகன்றழியாவீடடைந்தான்
பண்டுபழங்காதைதனிற்கேட்டிலையோவபர்தொடியே.

(இ-புரை.) முற்காலத்தில் சாமளனென்று சொல்லும் பெயர்பெற்ற பெரும்பாவி ஒருவனுண்டு, அவன் மரணகாலத்தில் தேவர்பிரானாகிய பரமேச்சுரனுடைய திருநாமங்களைச்சொல்லி அழியாதமோக்ஷத்தை அடைந்தான். மாதே! நீ அதைப்புராதனமான புராணசரித்திரத்தில் முன்கேட்டதில்லையோ. எ-று.

ஆங்கவனைப்போலுனக்குஞ்சாக்காடணித்தான
தோங்குசிவநாமநாவினாலுச்சரித்துப்
பாங்குபெறுகாதைதனைக்கேட்கிற்பழவினையாந்
தீங்ககலுநீயுஞ்சிவபதத்திற்சேர்வாயே.

(இ-புரை.) அவனுக்கு வந்ததுபோல உனக்கும் மரணகாலம் சமீபித்திருக்கின்றது, மேன்மைதங்கிய சிவநாமங்களை நாவினாலுச்சரித்து நன்மைபெற்ற சிவகதையைக் கேட்பாயாகில் உன்பாவங்கள் நீங்கும். நீயும் சிவபதஞ்சேர்வாய். எ-று. ஏ-தேற்றப்பொருள். (௬௬)

பொய்யென்றுகொள்ளாதரன்கதையிற்புந்திவைப்பார்
மெய்யென்றவனாமங்கேட்டுவியந்துரைப்பார்
வையம்புகழச்சிவபதத்தில்வாழ்ந்திருப்ப
ரையன்றிருவாணைசத்தியமீதாமென்றான்

(இ-புரை.) அவநம்பிக்கை கொள்ளாமல் சிவசரிதத்தில் மனத்தைப் பதிக்கின்றவர்களும், இது உண்மையென்று சிவநாமங்களைக் காதினாற்கேட்டு மகிழ்ச்சியுடன் துதிக்கின்றவர்களும், இவ்வுலகத்தார் புகழும்படி சிவபதத்தில் வாழ்வார்கள், அப்பெருமானாணை, இது மெய்யென்றுகூறினார். எ-று. (௬௭)

என்னமறைபோனியம்புமதுகேட்டுருகிக்
கன்னன்மொழிவஞ்சுளையுங்காவிவிழிநீர்ததும்ப
வன்னவழியேநின்னடியனேனின்னருளான்
மன்னுபிறவியெனுமாக்கடலைநீந்தியே.

(இ-புரை.) இவ்வாறு முனிவர்சொல்லியதைக்கேட்டுக் கரும்பைப்போல மதுரிக்குஞ் சொல்லினையுடைய வஞ்சுளையானவள் மனமுருகி, நீலோற்பலம் போன்ற தன்கண்களில் நீர்ததும்பநின்று, சுவாமிகளே! தேவரீர்கிருபையினால் அவ்வாறே அடியேன் சிவகதைகேட்டும் சிவநாமங்களைச்சொல்லியும் என்னுடைய அளவற்ற ஜெனனசாகரத்தை நீந்தி. எ-று. (௬௮)

சென்றேசிவபதத்திற்சேர்ந்திருக்குமாறுகுணக்
குன்றேதிருவுளத்திலெண்ணிக்குறைமுடிய
வின்றேவிளங்குமிரவுத்திரியமுற்றுவித்து
நன்றேதருகாதைநாளுநவிலென்றாள்.

(இ - புரை.) சிவபதத்திற்சென்று சேர்ந்திருக்கும்வண்ணம் மலைபோல அசையா நிலைமைபெற்ற குணமுள்ளசுவாமிகளே! தேவரீர் திருவுளத்திற்கருதி அடியேன்குறைதீர இப்போதே தீக்ஷைசெய்து நன்மைதருஞ் சிவகதையை நாள்தோறுஞ்சொல்லி யருளுமென்றாள். எ - று. (௬௯)

மாதவனுமன்பின்மனம்பொருந்திவண்கரத்தாற்
பூதிதனைவாங்கிப்புனிதமுறமெய்பூசிக்
காதினதுமூலத்திற்கண்ணுதன்மூலங்கொடுத்துத்
தீதில்கதையோதியவள்சிந்தைதெளிவித்தானே.

(இ - புரை.) அவர் மனதிலன்புடையவராய்த்தம்முடைய திருக்கரத்தினால் விபூதியெடுத்துப் பரிசுத்தமாகும்படி அவள் சரீரமுழுவதிலும்பூசி, காதுக்குள் பஞ்சாக்ஷர மூலந்தை யுபதேசித்துக் குற்றமில்லாத சிவகதைசொல்லி அவள்மனந் தெளியச்செய்தார். எ - று. (௭௦)

சைவநெறிபூண்டதவக்கொடியுமக்கதையின்
மெய்யுணர்வின்சிந்தையவாநாடோறுமீதூர
மையமருங்கண்டன்றிருத்தாள்வழிபடலா
லைவரையுமைவிடயத்தேகாதடக்கினாள்.

(இ-புரை.) சைவநெறிபொருந்தியதவமுள்ள வஞ்சுளையானவள், அந்தச் சிவகதையில் உண்மையறிவுடன் மனத்திலுண்டான ஆசை நாளுக்குநாள் அதிகரிக்கக்கொண்டு, காளகண்டத்தையுடைய பரமசிவன் திருவடிகளை ஆராதிப்பதனால் பஞ்சேந்திரியங்களை அவைகளுக்குரிய விஷயங்களிற் செல்லாதவண்ணம் அடக்கினாள். எ - று. (௭௧)

பத்திநெறிநின்றுபல்விழைவுதான்றவிர்ந்து
முத்திமுனிவரர்போன்மும்போதுநீர்மூழ்கிச்
சுத்தமரவுரியேதூசாமருங்குடுத்து
வித்தகனக்கமணிவெண்ணீறினிதணிந்தாள்.

(இ - புரை.) பத்திநெறியில்நின்று பலவாகிய இச்சைகளை நீக்கி, முத்தியடையும்முனிவர்கள்போல மூன்றுகாலத்திலும் ஸ்நாநஞ்செய்து,பரிசுத்தமுள்ள மரவுரியே வஸ்திரமாக அரையிலுடுத்து, உருத்திராக்ஷமும்விபூதியும் இனிமையாகத் தரித்துக்கொண்டாள். எ - று. (௭௨)

வேறு.

கையார்மழுவெம்படையாய்சரணங்கருணைக்கடலேசரணஞ்சரணம்
பையாடரவத்தணியாய்சரணம்படர்செஞ்சடையாய்சரணஞ்சரண
மையார்கலிவெந்திறனொந்திடவான்மழைமஞ்செனவேவருநஞ்சயிலு
மையாசரணஞ்சரணம்மெனையாளமலாவிமலாசரணஞ்சரணம்.

(இ - புரை.) திருக்கரத்திலமைந்த மழுவாளனே சரணம், கிருபாசமுத்திரமே சரணஞ்சரணம், படங்களையுடைய சர்ப்பாபரணங்க ளணிந்தவனே சரணம், பரந்த செஞ்சடைக்கடவுளே சரணஞ்சரணம், கருங்கடல் வெந்துவற்றவும், தேவர்வருந்தவும் மேகம்போலவந்த விஷமுண்ட ஐயனே சரணஞ்சரணம், அடியேனையாட்கொண்ட நிமலனே விமலனே சரணம் சரணம், எ - று. (எ௩)

தொத்தாரிதழித்தொடையாய்சரணஞ்சுருதிப்பொருளேசரணஞ்சர
சத்தாகியசிற்குணனேசரணஞ்சமனுக்கொருவெஞ்சமனேசரண[ணஞ்
முத்தாரிளவெண்ணகையம்பிகைதன்முடிகுந்தவசிந்தனைகண்டருளு
மத்தாசரணஞ்சரணம்மெனையாளமலாவிமலாசரணஞ்சரணம்.

(இ - புரை.) கொத்தாகப்பொருந்திய கொன்றைமாலையணிந்த சடாமகுடக்கடவுளே சரணம், வேதப்பொருளே சரணம் சரணம், சத்தாயிருக்கும் ஞானகுணமூர்த்தியேசரணம், காலனுக்குக்காலனாகிய ஐயனேசரணம், முத்துக்கள்போன்ற வெண்ணகையுள்ள பார்வதிதேவியாருடைய உறுதியான தவசிந்தையைக்கண்டருளிய அத்தனே சரணம் சரணம், அடியேனையாட்கொண்ட அமலனே விமலனே சரணம் சரணம். எ - று. (எச)

கமலாலயனுக்கருள்வோய்சரணங்கயிலைக்கிரியாய்சரணஞ்சரண
நிமலாகமதற்பரனேசரணநெடுமாலறியாய்சரணஞ்சரணஞ் [கொண்
சமராடினர்முப்புரமுங்கடிதிற்றழன்மண்டிடவெண்ணகைவெங்கனல்
டமராடியவாசரணம்மெனையாளமலாவிமலாசரணஞ்சரணம்.

(இ - புரை.) பிரமதேவனுக்குப் படைப்புத்தொழில் அருள்செய்தவனே சரணம், கயிலாசநாதனே சரணஞ்சரணம், நிர்மலஆகமங்கள் அருளியநாதனே சரணம், மாயவனுங்காணவொண்ணாதவனே சரணஞ் சரணம், தேவர்களுடன் போர்செய்துகொண்டிருந்த முப்புரங்களும் விரைவில் தீபொருந்துமாறு வெண்ணகைத் தீயினால் போர்செய்த புராந்தகனே சரணம், அடியேனையாட்கொண்ட அமலனே விமலனே சரணம் சரணம். எ - று. (எரு)

வேறு.

என்றுபலபலவுமேத்தியிலங்கிழையா
டொண்டுபடுசைவத்துறையின்முறைபேணி
நின்றுசிவகதையாநிகரில்லாத்தெள்ளமுத
மொன்றுபடச்செவியாலுண்டுசிலநாட்கழித்தாள்.

(இ-புரை.) வஞ்சுளையானவ ளிவ்வண்ணம் பலவகையாகத் துதிசெய்து பழமையாகிய சைவநெறியில் நின்று, சிவகதையாகிய ஒப்பற்றதெளிவுள்ள அமிர்தத்தை மனம் ஒருவழிப்படச் செவியாலுண்டு சிலநாள் கழித்தாள், எ - று.()

ஊழின்முறையாலுறுதவத்தாள்பொன்றுதலுந்
தாழுஞ்சடையான்றருகணங்கள்வந்தெய்தி
வீழுங்கனகவிமானமிசையேற்றி
வாழுஞ்சிவபதத்தில்வஞ்சுளையைக்கொண்டடைந்தார்.

(இ-புரை.) விதியின்வயத்தளாய்த் தவநெறியுள்ள வஞ்சுளையானவள் மரணமடைந்தபோது, தாழ்ந்தசடையுள்ள பரமசிவன் கட்டளையிட்டருளச் சிவகணங்கள்வந்து விரும்பத்தக்க சுவர்ணமய விமானத்திலேற்றி, அழியாமல் வாழ்ந்துகொண்டிருக்கத்தக்க சிவலோகத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்ந்தார்கள். எ - று. (௭௭)

மூன்றுசுடருமழுங்கமுதிரொளியா
லான்றசிவலோகத்தவிர்கனகமண்டபத்தி
லேன்றயன்மால்விண்ணோரிருபாலுநின்றேத்த
வூன்றுமணிக்கோல்பிடித்துநந்தியொருபாலுலவ.

(இ - புரை.) சூரியன், சந்திரன், அக்கினி யென்னு முச்சுடர்களுமமுழுங்கும்படி மிகுந்த ஒளியினால் விளங்கும் சிவலோகத்திலுள்ள பிரகாசிக்கின்ற பொன்மண்டபத்தில், பிரமனும், மாயவனும், விண்ணவர்களும், இருபக்கத்திலும் நின்று துதிக்கவும், ஊன்றும் வெள்ளிப்பிரம்பு பிடித்தவண்ணமாக நந்திதேவர் ஒருபுறத்திலுலாவவும், எ - று. (௭௮)

தக்கன்றலையரிந்தவீரனொருசாரணுகத்
தொக்ககணநாதரெல்லாமெம்மருங்குஞ்சூழ்போத
முக்கணுறுமைந்துமுகமுன்னோனினிதமர்ந்த
மிக்கதிருச்சபையின்மெல்லியலைத்தான்விடுத்தார்.

(இ - புரை.) தக்கனுடைய தலையையரிந்த வீரபத்திரர் ஒருபுறத்தில் வந்திருக்கவும், கூட்டமாகிய கணநாதர்களனைவரும் எந்தப்பக்கத்திலுஞ் சூழ்ந்திருக்கவும், திரிநேத்திரங்கள் பொருந்திய ஐந்து திருமுகங்களையுடைய பரமசிவன் இனிதாக வீற்றிருக்கும் மேன்மையமைந்த திருச்சபையில் மிருதுவான தேகத்தையுடைய வஞ்சுளையைக் கொண்டுபோய் விட்டார்கள். எ - று. (௭௯)

அன்னவளுமீசனடித்தாமரைபரவி
யென்னதவப்பயனிங்கெய்தியதென்றேம்பலுற்றுக்
கன்னன்மொழிமாதுமையைக்கண்ணுதலையுங்கண்டு
துன்னியவானந்தவாரிச்சுழிப்பட்டாள்.

(இ - புரை.) அப்படிக்கொண்டுபோய் விடப்பட்டவளும் பரமேச்சுரனுடைய திருவடித்தாமரைமலர்களைத் துதித்து, எத்தன்மையான தவப்பயன்

என்னை இவ்விடத்திற் கொண்டுவந்ததென்று சந்தோஷமடைந்து, கரும்பின் மதுரம்போன்ற மொழியையுடைய பார்வதிதேவியாரையும் பரமேச்சுரனையும் தரிசித்து அப்போதுதோன்றியஆனந்தவெள்ளச்சுழியிலகப்பட்டுக்கொண்டாள்.

காவலவுணர்புரங்கட்டழித்தகண்ணுதலோன்
பாவைமதிமுகத்தையன்பினொடுபார்த்தருளிப்
பூவைமிமயப்பொலங்கொடிக்குநாடோறு
மேவல்புரிதியெனப்பணித்தானின்னுரையால்.

(இ-புரை.) காவலையுடைய அவுணர்கள் முப்புரத்தின் வலியைக்கெடுத்த பரமசிவன், வஞ்சுளையின் சந்திரன்போன்றமுகத்தைக் கிருபையுடன்பார்த்தருளி, மலையரையன்புத்திரியாகிய உமாதேவிக்கு நீ தினந்தோறும் பணிவிடை செய்துகொண்டிருவென்று, இனியதிருவார்த்தையாற் கட்டளையிட்டருளினர்.

ஆரணங்குபோல்வாரைரன்பணிப்பவெற்புதவுங்
காரணிக்கங்கேவல்புரிந்தொழுகுங்காலத்தில்
நாரணனுநான்முகனுமேத்துநவையில்லாப்
பூரணியேகேட்டியெனப்போற்றிப்பணிந்துரைத்தாள்.

(இ-புரை.) தெய்வமகளிரையொத்த வஞ்சுளையானவள் பரமசிவன்கட்டளையிட்டருளியபடி, பர்வதராசன்பெற்ற எல்லாவுலகங்களுக்குங் காரணியாகிய பரமேஸ்வரிக்குப் பணிவிடை செய்துகொண்டிருக்குங்காலத்தில், (வஞ்சுளையானவள் உமையவளைப்பார்த்து,) பிர்ம்ம விஷ்ணுக்கள் போற்றிசெய்கின்ற பரிபூரணியே என்று துதிசெய்து, அடியேன் சொல்லும் விண்ணப்பத்தைக்கேட்டருளவேண்டுமென்று பணிந்து கூறினள், எ - று. (அஉ)

பாதவஞ்சூழ்சாரற்பனிவரையின்பாங்கர்தொறு
மேதமின்றிப்பன்னாளிருந்துதவம்புரிந்த
மாதவத்தினோர்க்கும்வழங்காப்பெரும்பதவி
போதமிலேற்கின்றருளாலீந்தபுராதனியே.

(இ - புரை.) விருக்ஷங்கள் சூழ்ந்திருக்கும் சாரலையுடைய குளிர்ந்தமலைகளின்பக்கங்களிலெல்லாம் குற்றமில்லாமல் பலநாளிருந்து மகத்தாகியதவங்கள் செய்த முனிவர்களுக்குங்கொடாத பெரியபதவியை, ஞானமில்லாத எனக்குக் கிருபையினலருளிச்செய்த புராதனியே! எ - று. (அ௩)

யானிப்பதத்திலினிதிருக்கவென்கணவன்
றூனெப்பரிசினறுயெவ்விடத்திற்சார்ந்தானே
பானற்கருணைவிழிப்பைந்தொடியேகூறுகென
கானக்குழலுமையாள்சற்றேநகைத்துரைத்தாள்.

(இ புரை.) அடியேன் இந்தப்பதவியிலிருப்ப, என்கணவன் எத்தன்மையுடையவனாய் எவ்விடத்திலிருக்கின்றானோ? நீலோற்பல மலர்போன்ற கிருபாநோக்கத்தையுடைய தாயே! சொல்லியருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தவளவில், மயிர்ச்சாந்தூட்டும் அளகத்தையுடைய உமாதேவியார் புன்னகைபுரிந்து திருவாய்மலர்கின்றார். எ - று. (அ௪)

சந்தார்களபமுலைத்தார்க்குழலே நின் கணவன்
சிந்தாகுலமயலாற்றீவினையைச்செய்திறந்து
நந்தாததீவாய்நரகனைத்துஞ்சேர்ந்தேறி
விந்தாடவியிலலகையாய்மேவிகின்றான்.

(இ-புரை.) சந்தனக்குழம்பணிந்த தனங்களையும் பூமாலையணிந்த அளகத்தையுமுடையவளே! உன்கணவன் மனோவியாகுல முண்டாகத்தக்க விரகத்தினாற் பாவங்களையே செய்துகொண்டிருந்து, பின்பு இறந்து ஒருக்காலுங்கெடாத அக்கினிமயமாகிய நரகங்களிலெல்லாஞ்சேர்ந்து,அவைகளைவிட்டேறி விந்தாடவியென்னும் வனத்தில் பேயாய்த்தங்கியிருக்கின்றான். எ - று. (அரு)

வேறு.

என்னுமுன்னமடவாளிமவான்மகளைத்தொழுதே
யன்னேவன்னேநின்னருளலடியேனிவ்வாறெழுக
முன்னேயெனையாள்கணவன்பேயாய்முட்கானகத்திற்
பொன்னேயனையாய்திரிதறகவோவென்னப்புகன்றாள்.

(இ-புரை.) இவ்வாறு சொல்வதற்குமுன்னமே வஞ்சுளையானவள் பார்வதியைத் தொழுது பொன்போல யாவருக்குங் கிடைப்பதற்கரியதாயே! உன்னருளால் அடியேனிவ்வாறிருப்ப, முன்னம் எனையாண்டகணவன் பேயாகிமுட்களையுடைய வனத்தில் திரிவது தகுதியோவென்றுசொன்னாள். எ - று. அன்னே - இரக்கச்சொல். (அசு)

கல்லார்மணிப்பூணுமையாள்கருணைகெழுமநோக்கி
யெல்லாத்துயரமுழுதுமொழிவாயொழிவாயென்றே
நல்லாயுனதுகணவனெண்ணுமலகையுருவும்
பொல்லாவினையுங்கழித்துப்புகுதப்புரப்பன்காண்டி.

(இ-புரை.) இரத்தினங்கள் நிறைந்த ஆபரணங்களணிந்துகொண்டிருக்கும் பார்வதிதேவியார் வஞ்சுளையைக் கிருபைபொருந்தப்பார்த்து, உன்கணவன் இப்போதடைந்திருக்கின்ற பேயுருவத்தையும் பொல்லாத பாவங்களையும்போக்கி இவ்விடத்திற்கு வரும்படி இரட்சிக்கின்றேன், அதை நீ பார்க்கப்போகின்றாய், ஆதலால் உனதுதுக்கங்கள் யாவையும் முழுவதும் நீங்குவாய் நீங்குவாயென்று திருவாய்மலர்ந்தனர். எ - று.

வாசங்கமழுங்குழலாய்மகிணன்பானீபோகென்
றீசன்றேவிபின்னுமியறேர்வீணைக்கிழவ

ஞசொன்றில்லாவிஞ்சையறிதும்புருவையழையா
நீசென்றிவளோடந்தநெடுங்கானகத்தைச்சேர்ந்தே,

(இ - புரை.) வாசனை கமழ்ந்துகொண்டிருக்கும் அளகத்தையுடையவளே? உன்கணவனிடத்துக்கு நீபோவாயாகவென்றருளிச்செய்து, பின்னும் பார்வதிதேயார் இசையின்கிரமத்தையறிந்து தேர்ந்த வீணைக்குரியவராகிய குற்றமற்ற கலையுணர்ந்ததும்புருஎன்னும்முனிவரையழைத்து நீ இவளுடன்சென்று அந்தப்பெரியகாட்டிற் சேர்ந்து. எ - று. (அஅ)

சந்தமறையின்றலைவனிசையையிசையாற்சாற்றி
யிந்தமடவாள்கணவனிருங்கானகத்திற்பேயாய்ப்
பந்தவினையாலுழலும்பாவவுருவநீக்கி
நந்தமுலகிற்கொடுவாவென்றுநங்கைநவின்றாள்.

(இ - புரை.) அழகிய வேதத்தின்முதல்வனுகிய பரமசிவனுடைய புகழை இசையினற்பாடி, இவள் கணவன் அந்தப்பெரியகாட்டிற் பேயாய்ப் பந்தப்பட்ட முன்வினையினுலுழலும் பாவவுருவத்தை நீக்கி, நம்முடைய உலகத்திற் கொண்டுவாவென்று பார்வதிதேவியார் கட்டளையிட்டனர். எ - று. (அகூ)

நல்னித்திலவாண்முறுவனங்கைநவின்றபணியை
முன்னித்தலைமேற்கொண்டே முகமன்கூறியிறைஞ்சி
மின்னிற்றிகழுமணிதோய்விமானமீதினேறிப்
பொன்னிற்பொலியுமேனிப்பூவையோடும்போனன்.

(இ - புரை.) நல்ல முத்துக்களையொத்த வெள்ளிய தந்தங்களையுடைய பார்வதிதேவியாரிட்ட கட்டளையை (நமக்கிநதப்பாக்கியங் கிடைத்ததென்கிறதாகத்) தம்மனதில், கருதிச் சிரசாகவகித்துக்கொண்டு, உபசாரவார்த்தைகள் சொல்லிப்பணிந்து, மின்னலைப்போற் பிரகாசியாநின்ற இரத்தினங்கள் பொருந்திய விமானத்தில், பொன்போன்ற தேகத்தையுடைய வஞ்சுளை யென்பவளையேற்றித் தாமுமேறிக்கொண்டு தும்புருமுனிவர்போனர். எ - று. (கூ0)

சிந்தைக்கிணையாய்ப்படரும்விமானஞ்செலுத்திச்சென்றான்
விந்தத்தடவிநடுவணடைந்தானடைந்தவேலைப்
பந்தப்பந்தீவினையிற்பேயாய்ப்படர்நஞ்சுருவோ
னிந்துப்பிளவின்றுணைபோலிணைகொண்டிலகுமெயிற்றோன்.

(இ - புரை.) மனோவேகத்தையொத்துச் செல்லும் விமானத்தைச்செலுத்திக்கொண்டுபோய் விந்தாடவியினடுவில் அடைந்தார். அடைந்தவளவில் பந்தமாகிய பாவத்தினல் பேயாய்த்திரிந்துகொண்டிருக்கிற விஷம்போன்ற கொடிதாகிய உருவத்தையும் இருபிறைபோலப் பிரகாசியாநின்ற இரண்டு கோரதந்தங்களையுமுடையவனும். எ - று. (கூக)

தீயைப்பொருவுங்கண்ணன்சினங்கொண்டுரறியழுவன்
வாயைப்பிளப்பனகைப்பன்மலையைக்கடந்துமறிவன்
வேயைக்கரும்பிற்கறிப்பன்விழுவனெழுவன்றனது
காயத்திடையேபுடைப்பன்கதறிக்கறங்கிற்சுழல்வன்.

(இ - புரை.) தீயொத்த சிவந்த கண்களை யுடையவனும், தனக்குத்தானே கோபங்கொண்டுசீறி அழுகின்றவனும், வாயை ஆவென்றுதிறப்பவனும், நகைப்பவனும், மலையைத்தாண்டி விழுகின்றவனும், மூங்கில்களைக் கரும்புபோற் கடிப்பவனும், விழுந்து விழுந்து எழுகின்றவனும், தன்சரீரத்திலடித்துக்கொள்கின்றவனும், கதறிக்கொண்டு காற்றாடிபோற் சுழல்கின்றவனுமா யிருக்கின்றான். எ - று. (௯௨)

அன்னோன்றன்னை நோக்கியந்தோவந்தோவிவன்றான்
முன்னாண்முயன்றவினையான்முடிந்தவினைகளெல்லாம்
பொன்னேகாண்டியென்னப்புகன்றுபாசம்வீசிப்
பின்னாவவனைப்பிணித்துப்பேய்வலனுருவந்தீர்ப்பான்.

(இ-புரை.) இவ்வாறிருப்பவனைப்பார்த்து ஐயையோ! இவன்முன்னாள்செய்த பாவத்தினால்நேரிட்ட செய்கையையெல்லாம் வஞ்சுளையே! பாரென்று சொல்லி, ஞானமாகிய, கயிற்றைவீசிப் பின்னாகக்கட்டி வலியபேயுருவந் தீர்க்கும்பொருட்டு. எ-று. (௯௩)

வலத்திற்பேர்யாழ்வாங்கிவலித்துநரம்பைவீக்கிப்
புலத்தோடமைந்ததவத்தோர்புகழ்தும்புருமாமுனிவன்
குலத்தோடிறப்புமிறப்புமில்லாக்குழகன்புகழைத்
தலத்தோர்வானோர்வியப்பச்சதியிற்பாடாநின்றான்.

(இ - புரை.) வலப்புறத்தில் பேரியாழையெடுத்து நரம்பினை வலித்துக் கட்டி ஞானத்துடன் பொருந்திய தவசீலராற் புகழப்பெற்ற தும்புரு முனிவர், குலமும் பிறப்பு மிறப்பு மில்லாத பரமேச்சுரனுடைய புகழைப் பூலோகத்தாருந் தேவலோகத்தாரும் அதிசயிக்கும் தாளக்கிரமத்துடன் பாடுகின்றார். எ-று.

வேறு.

நஞ்சமிருக்குமணிமிடற்றோய்நெடுமால்சாத்துநயனமலர்க்
கஞ்சமிருக்கும்பதயுகத்தோயடியாரிதயக்கடிக்கமலத்
தஞ்சமிருக்குமொருபுறத்தோயமுதமதியினலர்கிரணப்
புஞ்சமிருக்குந்திருச்சடையோய்கயிலைவாழும்புகழோனே.

(இ - புரை.) விஷம்பொருந்தி யிருக்குங் காளகண்ட மூர்த்தியே! மாயவன் சாத்திய கண்ணாகிய தாமரைமலரிருக்கும் பதயுகள மூர்த்தியே! அடியார்களிதயதாமரையில் வீற்றிருக்கின்ற அன்னம்போன்ற பார்வதிதேவியார் அமர்ந்திருக்கும் இடப்பாகத்தையுடைய கடவுளே! அமுர்தம் நிறைந்துள்ள பிறையினது விளங்கும் கிரணக்கூட்டமிருக்குஞ் செஞ்சடையை யுடையாரதரே கயிலாசகிரியில் வீற்றிருக்கும் புகழோரே! எ - று. (௯௪)

மூரியிருக்குந்துவசத்தோய்முனியாதன் பார்க்கருளவருண்
மாரியிருக்கும்விழிக்கடையோய்மதுரொன்றுமுகுமலரிதழி
வேரியிருக்குஞ்சடைமுடியோய்வெகுண்டமறலியுரங்குதித்த
சோரியிருக்குங்குரைகழலோய்கயிலைவாழுந்தொல்லோனே.

(இ - புரை) இடபம்பொருந்திய கொடியுள்ளவரே! முனியாமல் அடியார்க்கருள்செய்யும்பொருட்டு அருள்மழை நிறைந்திருக்கும் கடைக்கண்ணுளரே! தேன் ஆறுபோலப்பெருகும் கொன்றைமாலையின் வாசனைதங்கிய சடைமுடியோரே! கோபங்கொண்டுவந்த நமனையுதைந்த காலத்தில் அவன் மார்பிலிருந்துண்டாகிய உதிரமிருக்கும் வீரகழலையணிந்த திருவடியையுடையவரே! கயிலாசகிரியில் வீற்றிருக்கும் புராதனரே! எ - று. குரை - ஒலி.

வேதமிருக்குங்கபாலத்தோய்விழையுமிடையோர்மகளிர்நவ
நீதமிருக்குஞ்சாயகத்தோயிமவான்டயந்தகோரிழைதன்
பாதமிருக்குமபுரிசடையோய்பதங்கூர்சுருதிவியாகரண
நாதமிருக்கும்பரிபுரத்தோய்கயிலைவாழுநம்பரனே.

(இ - புரை.) வேதங்கள்பொருந்திய கபாலத்தையுடையவரே! ஆய்ச்சியர் எடுக்கும் வெண்ணெயுண்டதிருமாலாகிய அம்புடையவரே! மலையரையன் புத்திரியாகிய பார்வதியார் திருவடிதங்கிய திருமுடியாளரே! பதக்கிரமங்களையுடைய வேதவியாகரண நாதம நிறைந்துள்ள சிலம்பணிந்தவரே! கயிலாயகிரியில் வாழும் நம்பரே. எ - று. (கஎ)

தேயாதிலகுமொருசுடரேதேவரேத்துமுழுமுதலே
தாயாயுலகமுழுதீன்றுபுரந்துதுடைக்குந்தகவோனே
வாயான்மறையோனுரைத்தருணின்சரிதைகேட்டமடவரற்காப்
பேயாய்விந்தத்தடைந்தோனைப்புரவாதிருந்தாற்பிழையுண்டோ.

(இ - புரை) குறையாமலெந்நாளுமொரேதன்மையாயிருக்கும் ஒப்பற்ற சோதிசொரூபமே! தேவர்கள் துதிக்கும் பரிபூரணகாரணரே! தாயாகியுலகமுழுவதையுந் தந்திரக்ஷித்துச் சங்கரிக்குந் தகுதியையுடையவரே! ஒருபிராமணன் தனவாக்கினாற் சொல்லிய உன்சரித்திரத்தைக் கேட்ட இம்மாதின் பொருட்டு விந்தாடவியிற் பேயாய்த்திரியுமிவனை இரக்ஷியாமலிருந்தால் உனக்குக்குற்றஞ்சம்பவிக்குமோ? எ - று. (கஅ)

என்றுங்கிசையானேத்ததலுமீசன்புகழான்மனநெகிழ்ந்து
நின்றானுள்ளந்தேறுரைக்கநீத்தந்தெளிவதெனத்தெளிந்து
முன்றான்புரிந்ததீவினைகண்முழுதுநினைந்துமிகவெருவித்
தன்றாழ்வுரையாழ்த்துமபுருவுங்கேட்கவிதனைச்சாற்றினான்.

(இ - புரை.) இவ்வாறு யாழிசையினால் துதிசெய்தவளவில், பரமசிவன் புகழினால் மனம் நெகிழ்ந்து நின்றவனுள்ளமானது தேற்றாங்கொட்டையையுரைத்தமாத்திரத்தில் நீர்தெளிவதுபோலத்தெளிந்து, முன் தான்செய்தபாவங்களையெல்லாம் நினைந்து மிகுதியாகப்பயந்து, யாழ்வாசிக்குந் தும்புருவுந் தன் வருத்தமுள்ள சொல்லைக்கேட்கச் சொல்லுகின்றான். எ - று. (கக)

உமைபாணெதிர்ந்கதிறத்தாலுமூரேவானிசைகேட்டதனுலு
மமையாதிழைத்தபாவமெல்லாமகற்றித்துயாக்கடல்கடந்தே
னிமையாமுக்கட்கொழுங்கனியையிமயமயிலோடேத்துகின்றேன்
கமையாலுயர்ந்தோயெனவுரைத்துக்கயிலைநாதற்பாடினுன்.

(இ - புரை.) உம்மை நான்தரிசித்த தன்மையினாலும், பரமனு டைய புகழைக் கேட்டதினாலும், மிகுதியாக நான்செய்த பாவமெல்லாம் நீங் கித் துன்பக்கடலையுங் கடந்தேன், இமையாத முக்கணுடைய செழுமையுள்ள கனியாகிய பரமசிவனையும உமாதேவியையும் துதிசெய்கின்றேன், நோன்பினு லுயர்ந்த முனிவரே! என்று சொல்லிக் கயிலாயநாதரைப்பாடினுன். எ - று.()

செக்கச்சிவந்தசெழும்பாகேதேனேபாலேதெள்ளமுதே
முக்கட்கரும்பேயைந்துமுகக்கனியேவேதமுழுமுதலே
மிக்கதருமம்பகர்காதைகேட்டவெனதுவிளங்கிழைக்காத்
துக்கத்துழல்வென்றனைப்புரவாதிருந்தாலுனக்குததுகளுண்டோ.

(இ - புரை.) செக்கச் சிவந்ததாய்ச் செழுமையுள்ள வெல்லப்பாகே! தேனே! பாலே! தெளிவுள்ள அமுதமே! முக்கண்களுள்ளகரும்பே! ஐந்து திரு முகங்களையுடைய கனியே! வேதத்தின் முழுமுதலே! மிகுந்த சிவதருமசரித்தி ரத்தைக்கேட்ட என்மனைவியின்பொருட்டுத் துக்கத்திலுழலுகின்ற வென்னைக் காவாதிருந்தால், உமக்குக் குற்றமுண்டோ. எ - று. (௧0௧)

பச்சைவல்லிபடர்ந்தேறும்பவளக்குன்றேபழமறையி
னுச்சிமிசைவேரோட்டியென்றுமுலவாச்சாகையொருதருவே
விச்சைமறையோனின்கதையைவிளம்பக்கேட்டமெலலியற்காக்
கொச்சையலகையானேனையாளாதொழிந்தாற்குறையுண்டோ.

(இ - புரை.) உமாதேவியாரென்னும் பச்சைக்கொடிபடர்ந்தேறும் பவள மலைபோன்ற சிவபெருமானே! பழமையாகிய வேதங்களினுச்சியில்வேர்விட்டு எக்காலமுங் கெடாதசாகைகளையுடைய ஒப்பற்ற தருவே! ஞானவானுகிய பிரா மணன் சொல்லிய உன் சரித்திரத்தைக்கேட்ட என்மனைவியின் பொருட்டு, அறிவில் இளைத்தபேயாயிருந்த என்னை யாட்கொள்ளாவிட்டாலுமக்குக் குற்ற முண்டோ? எ - று. (௧0௨)

அ

அன்னமேனமாலயனுமுடிXமுடியுமடியிணையு
முன்னியறிதற்கரிதாயபொருளேமூவாமுழுமுதலே
பன்னுமறையோனின்சரிதம்பகரக்கேட்டபாப்பனிக்கா
மன்னுமலகையானேனையாளாதொழிந்தால்வசையுண்டோ.

(இ - புரை.) பிரமன் அன்னமாகித் திருமுடியைத் தேடியும், விஷ்ணு பன்றியாகி எவற்றிற்குமுடிவாகியதிருவடிகளைத்தேடியுங்காணுதற்கரியதாயிருந்த பொருளே! மூப்பில்லாத முழுமுதலே, வேதங்களோதி யுணர்ந்தபிராமணன் சொல்லிய உன்சரித்திரத்தைச் சொல்லக்கேட்ட பிராமணத்திக்காகப் பொருந் திய பேயாகியஎன்னையாளாதிருந்தால் உமக்கு வசையுண்டோ? எ - று. (௧0௩)

என்றான்மகிழ்ந்தானதிசயித்தானின்புற்றங்கமயிர்சிலிர்ப்ப
நின்றான்மலர்க்கணானந்தநீராலகலிறைசதயர்ந்தான்
கன்றாவென்னவுளஞ்சிறந்தான்களித்தான்பாடியாடினான்
பொன்றாவாழ்வுதந்தளிததாலெங்கோனென்னப்புலம்பினான்.

(இ - புரை) என்று துதிசெய்து மகிழ்ச்சியும், ஆச்சரியமுங்கொண்டு, இன்பமுற்று மயிர்பொடிப்ப நின்று தாமரைமலர்போன்ற கண்களில் ஆநந்த வெள்ளம் பெருகப் பரவசத்தனாகிக் கன்றினையுடைய பசுவைப்போல உள்ளங் கசிந்து களித்தவனாகிப் பாடியாடினான் கெடாத நித்தியவாழ்வை எம்மிறைவன் கிருபைசெய்தானென்று புலம்பினான். எ - று. (கo௪)

இந்தப்படியோரேழுதினமிறைவன்றிருத்தாள்புகழ்ந்தேத்தி
முந்தையலகையுருநீங்கிமுயலாதமராருருக்கொண்டு
புந்திமகிழ்ந்துசித்திநிலைபொருந்திவிமானம்புகுந்தேறிச்
சந்தமுலையாளடிபரவச்சிவனார்பதத்தைச்சார்ந்தானே.

(இ - புரை.) இவ்வாறு ஏழுநாள் பரமேச்சுரனுடைய திருவடிகளைப் புகழ்ந்து துதிசெய்து, முன்னிருந்த பேயுருவம் நீங்கி ஒருமுயற்சியு மில்லாமல் தேவருருவம்பெற்று மனமகிழ்ந்துசித்திநிலைபொருந்தி விமானத்திலேறித் தன் மனைவி யடிபரவச் சிவபதத்தைச்சார்ந்தான். எ - று. (கoரு)

சென்றார்மீளாப்பெரும்பதத்தைச்சேர்ந்துசிவனுமிடப்பாகத்
தொன்றாநின்றபெண்ணணங்குமுவப்பக்கணங்கள்பணிசேட்ப
மின்றாழ்வயிரங்குயின்றசெம்பொன்விமானமவிளங்கவீற்றிருந்து
துன்றாநின்றசிவபோகந்துய்த்துத்தணவாதிருந்தாரே.

(இ - புரை.) இவ்வாறு சென்றவர்கள் மீளாத பெரும்பதவியைச்சேர்ந்து பரமசிவனும் இடப்பாகத்திலிருக்கும் பார்வதிதேவியாருஞ் சந்தோஷிக்கவும், சிவகணங்கள் ஏவல்செய்யவும் ஒளிதங்கிய வயிரங்கள் பதிக்கப்பட்ட செம்பொன்விமானத்தில் விளங்கும்படி வீற்றிருந்து அழியாத சிவபோகத்தை யனுபவித்துக்கொண்டு, நீங்காமலிருந்தார்கள். எ - று. (கoசு)

வேறு.

ஆதலாற்பரமன்சரிதமேகேட்கவழிவிலாப்பெரும்பதம்வேட்டோ
ரீதலால்வேறுபெருந்தவமுண்டோவியம்புதற்கிம்பரிலென்னாச்
சூதமாமுனிவன்வியந்தினிதுரைத்தான்சுருதியாமுனிவரர்கேட்டுக்
காதலாலுருகியரகரவென்னாக்கரங்கடஞ்சென்னியிற்குவித்தார்.

(இ - புரை.) ஆகையால் அழிவில்லாத பெரும்பதவியை விரும்பினவர்கள் பரமசிவன்சரித்திரத்தையேகேட்கக்கடவர்கள், இவ்வுலகத்தில் இதையன்றிச்சொல்லுவதற்கு வேறுதவமுண்டோவென்று சூதமுனிவர் சந்தோஷத்துடன் சொன்னார், வேதமுணர்ந்த நைமிசாரணியவாசிகளாகிய முனிவர்கள்

கேட்டு அன்பினால் மனமுருகி அரகரா வென்று சொல்லித் தங்கள் கைகளைச் சிரசின்மேல்குவித்து வைத்துக்கொண்டு தொழுதார்கள். எ - று. (௧௦௭)

தேவர்தம்பெருமான்சிறந்தவஞ்செழுத்தின் சீர்புகழ்மாக்கதைமுதலாப், பாவமின்றகற்றும்புராணநூல்கேட்போர்பலன்பெறல்மொழிகதையீறு, மேவுபலபுகன்றசிவசரிதைமுழுதுமவிழைவுடன்கேட்குநரவர்தாம், யாவர்மற்றேனுமாலயன்முதலோரெய்தருஞ்சிவபதமடைவார்.

(இ - புரை.) தேவர்பெருமானாகிய பரமசிவனுடைய சிறந்தபஞ்சாக்ஷரத்தின் மகிமையைப் புகழாநின்ற சரிதமுதலாகச் சிவபுராணங்களைக் கேட்பவர்கள் பலன் பெறுதலைச்சொல்லுகின்ற சரித்திரம் அந்தமாக விருப்பமுறச் சொல்லிய சிவசரித்திர முழுதுங்கேட்பவர்கள் எவர்களாயினும் அரிபிரமாதிகளடைவதற்கரிய சிவபதம் அடைவார்கள். எ - று. (௧௦௮)

ஞாலமோங்குக நான்மறைநீடுக
சீலமன்னவர்செங்கோல்விளங்குக
காலமாமழைமன்னுக காதலாற்
சாலவீசனடியார்தழைகவே.

(இ-புரை) இவ்வுலகம்வாழக்கடவது நான்குவேதங்களும் வாழக்கடவன நீதிவழுவாத மன்னவர் செங்கோல்வாழக்கடவது காலந்தப்பாமல் மழைபெய்யக்கடவது அன்புடன் சிவனடியார்கள் [illegible] மேலும் வாழக்கடவார்கள். எ-று.

இருபத்து[illegible]டாவது
வஞ்சுளைமுத்திபெற்றஅத்தியாயம் முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் ௧௩௨௩.

---

## பிரமோத்தரகாண்டம்
முற்றுப்பெற்றது.



# அட்டவணை.



அத்தியாயம் ௨௨-க்குத் திருவிருத்தம்-௧௩௧0.

கடவுள்வாழ்த்து-௧௩

ஆ. திருவிருத்தம்-௧௩௨௩.